



# வளர்ச்சிப் பாதையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்




பதிப்பாசிரியர்

முனைவர் கோ. விசயராகவன்

முனைவர் மு. வளர்மதி

முனைவர் அன்னிதாமசு





உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# வளர்ச்சிப் பாதையில்
# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

பதிப்பாசிரியர்

முனைவர் கோ. விசயராகவன்
முனைவர் மு. வளர்மதி
முனைவர் அன்னிதாமசு



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
**International Institute of Tamil Studies**
இரண்டாம் முதன்மைச்சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

# நூல் விவரக்குறிப்பு

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | **வளர்ச்சிப் பாதையில்**<br>**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்** |
| பதிப்பாசிரியர் | : | **முனைவர் கோ. விசயராகவன்**<br>**இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**<br>**சென்னை - 600 113**<br><br>**முனைவர் மு. வளர்மதி**<br>**இணைப் பேராசிரியர், அயல்நாட்டுத் தமிழர் புலம்**<br>**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**<br>**சென்னை - 600 113**<br><br>**முனைவர் அன்னிதாமசு**<br>**பேராசிரியர் (பணிநிறைவு)**<br>**சமூகவியல் (ம) கலை, பண்பாட்டுப் புலம்**<br>**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**<br>**சென்னை - 600 113** |
| வெளியீட்டாளரும்<br>பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை 600 113 |
| வெளியீட்டு எண் | : | 500 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2014 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டி.என்.பி.எல். வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 |
| எழுத்தின் அளவு | : | 10 புள்ளிகள் |
| பக்க எண்ணிக்கை | : | 448 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ. 200/- (ரூபாய் இருநூறு மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீசரவணா அச்சகம்<br>எண். 144, தம்புச்செட்டி தெரு,<br>சென்னை - 600 001 |
| பொருள் | : | வரலாறு |

"பிரான்சு நாட்டிலுள்ள பிரெஞ்சு மொழிக் கலைக்கழகத்தைப் போன்ற நிலையில் நாம் ஒரு கலைக்கழகத்தை உருவாக்க வேண்டும். அக் கலைக்கழகத்தின் அடிப்படைகளையும் நெறிமுறை களையும் பின்பற்றி இங்குத் தமிழாராய்ச்சி நிறுவனத்தை அமைப்போமானால், சிறப்புமிகு, "இந்திய கலைக்கழகத்தை" அல்லது "தமிழ்க் கலைக்கழகத்தை" நாம் உருவாக்க இயலும். அப்பொழுதுதான், நமது தமிழ்மொழி ஆராய்ச்சிக் கழகம் உலகளாவிய நிலையில் வீறுடன் விளங்க இயலும்."

**- பேரறிஞர் அண்ணா**

*இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டு உரை (1968)*

*சென்னை.*

முனைவர் **கோ. விசயராகவன்,** எம்.ஏ., எம்.ஃபில், பி.எட்., பிஎச்.டி.
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113

# அணிந்துரை

1968ஆம் ஆண்டு சென்னையில் நடைபெற்ற இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டில் பேரறிஞர் அண்ணா தமிழுக்கென்று தனித்து செயல் படக்கூடிய ஆய்வு நிறுவனம் ஒன்று உருவாக்கப்பட வேண்டும் என்ற கருத்தினை முன்வைத்தார். இக்கருத்து செயலாக்கம் பெறும் வகையில் தவத்திரு தனிநாயகம் அடிகள் முயற்சியால் 1970ஆம் ஆண்டு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தோற்றம் பெற்றது. 43 ஆண்டுகள் கடந்த நிலையில் நிறுவனத்தின் தமிழ்ப் பணிகளை அனைவரும் அறிந்து கொள்ள ஏதுவாக ஒரு நூலை வெளியிட வேண்டும் என்று முயற்சி மேற்கொள்ளப்பட்டது.

நிறுவனத்தில் பணியாற்றுகின்ற துறை சார்ந்த பேராசிரியர்கள் நிறுவனத்தில் நடைபெற்ற நிகழ்வுகளை முழுவதுமாகத் திரட்டி ஒரு நூலாக உருவெடுக்க வழி வகுத்தார்கள். பேரா. முனைவர் அன்னிதாமசு அவர்களைப் (2009) பதிப்பாசிரியராகக் கொண்டு நூலாக வெளியிட திட்டமிடப்பட்டது. தற்போது நிறுவனத்தில் அயல்நாட்டுத் தமிழர் புலத்தில் இணைப் பேராசிரியராகப் பணியாற்றி வரும் முனைவர் மு.வளர்மதி அவர்கள் இப்பணியை ஒரு திட்டப்பணியாக மேற்கொண்டு அண்மைக் காலம் (2013) வரை நடைபெற்ற நிறுவன நிகழ்வுகளைத் திரட்டி உரிய முறையில் இந்நூலை வழங்கியுள்ளார்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தமிழின் மேன்மையை, தமிழ் இலக்கியத்தின் ஓங்கு புகழை உலகெலாம் பரவச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்தில் பல்வேறு பணிகளைத் தொடர்ச்சியாக மேற்கொண்டு தமிழர்களின் சிறப்பை அறியும் வகையில் இதுவரை 800 நூல்களை வெளியிட்டுள்ளது.

நிறுவனத்தின் பணிகள் தமிழ் ஆர்வலர்களுக்கும், ஆய்வாளர் களுக்கும், பிற நாட்டாருக்கும் பெரிதும் உறுதுணையாக அமைந்துள்ளது. நிறுவனத்தில் நடைபெற்ற திட்டப் பணிகள், தமிழறிஞர்களின் தமிழாய்வுகள், பல்வேறு கருத்தரங்குகள், சிறப்புச் சொற்பொழிவுகள், பயிலரங்குகள் மற்றும் தமிழியல் இதழ் வெளியிடுதல், ஆய்வியல்

நிறைஞர், முனைவர்பட்ட ஆய்வுகளை மேற்கொள்ளுதல், தமிழுக்கென்று சிறந்த ஒரு நூலகத்தை உருவாக்குதல், பிறமொழியினருக்கு, பிற நாட்டாருக்குத் தமிழ் கற்பித்தல், அதற்குத் தேவையானக் கருவி நூல்களை வெளியிடுதல், பிறநாட்டு ஆய்வாளர்களை வருகைதரு பேராசிரியர்களாகக் கொண்டு பணிகளை மேற்கொள்ளுதல், பிற கல்லூரி, பல்கலைக்கழகங்களுடன் இணைந்து தமிழ்ப் பணிகளை மேற்கொள்ளுதல் என நிறுவனப் பணிகளின் பட்டியல் நீண்டதாகும்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இதுவரை மேற்கொண்ட இப்பணிகளையும் கடந்து வந்த பாதையையும் அறிய அரியதொரு நூலாக, இந்நூல் வெளியிடப்படுகிறது. இந்நிறுவன வரலாற்றை அறிய இந்நூல் ஒரு ஆவணமாகத் திகழும் என்பதில் ஐயமில்லை.

இந்நூலாக்கத்திற்கு உறுதுணையாக விளங்கிய நிறுவனப் பேராசிரியர்கள் அனைவருக்கும் எனது உளமார்ந்த நன்றி. வளர்ச்சிப் பாதையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் நடைபோடுகிறது என்ற கருத்தாக்கத்திற்குச் சான்றாகத் தகவல்களைத் தேடித் திரட்டி, முறைப்படுத்தி இந்நூலை வழங்கியுள்ள இணைப்பேராசிரியர், அயல்நாட்டுத் தமிழர்புலம் முனைவர் மு. வளர்மதி அவர்களுக்கு வாழ்த்துகளையும், பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் பணிகளை உலகறியச் செய்யும் வகையில் **மாண்புமிகு முதலமைச்சர் புரட்சித்தலைவி அம்மா** அவர்கள் பல்வேறு வளர்ச்சித் திட்டங்களை நிறுவனத்திற்கு வழங்கியுள்ளார். நிறுவனத்திற்கு அனைத்து வசதிகளோடு புதிய நிறுவனக் கட்டடம் கட்டுவதற்கு ரூ.4.16 கோடி வழங்கி அரிய சாதனை நிகழ்த்தியுள்ளார். தமிழ் வளர்ச்சிக்காக பேரறிஞர் அண்ணாவின் கருத்தாக்கத்தில் உருவாக்கப்பட்ட இந்நிறுவனத்திற்கு அவருடைய நினைவைப் போற்றும் வகையில் அறிஞர் அண்ணா தமிழ் மேம்பாடு அறக்கட்டளையினை நிறுவ ரூ. 10 இலட்சத்தை 2004இல் வழங்கியவர். மூன்றாம் முறையாக முத்தமிழ் நாட்டை ஆளுகின்ற நம் முதல்வர் மாண்புமிகு புரட்சித்தலைவி அம்மா அவர்கள் தமிழ் ஆய்வியலை வளர்த்தெடுக்கும் வண்ணம் தமிழின் தொன்மையைப் பறைசாற்றும் தொல்காப்பியத்தின் சிறப்பைப் போற்றும் வகையில் **தொல்காப்பிய இருக்கை** ஒன்றை நிறுவ ரூ. 50 இலட்சம் வழங்கியுள்ளார். உலகப் பொதுமறையாம் திருக்குறளைச் சிறப்பிக்கும் வகையில் **திருக்குறள் காட்சிக்கூடம்** ஒன்றை நிறுவ ரூ. 10 இலட்சம் வழங்கியுள்ளார். தமிழகத்திற்கு வருகை தரும் தமிழ் அறிஞர்களை வரவேற்று

சிறப்பிக்கும் வகையில் உலகத் தமிழர் பண்பாட்டு வரவேற்பு (ம) தகவல் மையம் ஒன்றை நிறுவ ரூ.10 இலட்சம் வழங்கியுள்ளார். தொடர்ந்து நிறுவனத்தின் வளர்ச்சியை மேம்படுத்தும் வகையில் அயராது பணியாற்றி எங்களையும் ஊக்குவித்தும் வருகிறார்.

தமிழும், தமிழ்நாடும் வாழ்ந்திட, அல்லும் பகலும் அயராது உழைத்து வரும் தமிழ்நாடு மாண்புமிகு முதலமைச்சர் புரட்சித்தலைவி அம்மா அவர்களுக்கு இதயம் கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ் மொழி வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் அளித்துவரும் மாண்புமிகு பள்ளிக் கல்வி மற்றும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தலைவர் அமைச்சர் கே.சி. வீரமணி அவர்களுக்கும், என்னை ஆற்றுப்படுத்தி நெறிப்படுத்தி வரும் தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் செய்தித்துறை அரசுச் செயலாளர் முனைவர் மூ. இராசாராம் இ.ஆ.ப. அவர்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த ஸ்ரீசரவணா அச்சகத்தார்க்கு பாராட்டுகள்.

இயக்குநர்

# நன்றி

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், உயர்தனிச் செம்மொழியான தமிழ் மொழி வளர்ச்சியை மையப்படுத்தி பல்கலைக் கழகம் போன்று தமிழாய்வுப் பணிகளை மேற்கொண்டு பணியாற்றி வருகின்றது

1970ஆம் ஆண்டு முதல் அண்மைக் காலம் வரை நிறுவனம் ஆற்றிவரும் பணிகளை ஒருங்கிணைத்து ஒரு நூலாக வெளிவர வேண்டுமென்பது நிறுவனப் பணிகளில் ஈடுபட்ட அனைவரின் ஒருமித்த கருத்தாக இருந்தது.

இப்பணியில் பதிப்புப் பணி மேற்கொண்டு பங்களிப்பு நல்கிய பேராசிரியர் முனைவர் அன்னிதாமசு அவர்களுக்கு என்னுடைய இதயங்கனிந்த நன்றி.

இந்நூலை வெளியிடுவதற்குப் பெரும் ஆக்கத் துணையாக இருந்த நிறுவன இயக்குநர் கோ. விசயராகவன் அவர்களுக்கு என்னுடைய நெஞ்சார்ந்த நன்றி.

துறை சார்ந்து ஆண்டுதோறும் நடைபெற்ற பணிகளை, குறித்த தலைப்புகளில் ஒன்றிணைத்து வழங்கிய பேரா. முனைவர் ச. சிவகாமி, பேரா. முனைவர் ஜீன் லாறன்ஸ், பேரா. முனைவர் கு. பகவதி, பேரா. முனைவர் ரங்கநாதன், இணைப் பேராசிரியர் முனைவர் கு. சுப்பையா பிள்ளை, இணைப் பேராசிரியர் முனைவர் தி. மகாலட்சுமி, இணைப் பேராசிரியர் முனைவர் சு. நிர்மலாதேவி, நூலகர் இரா. பார்வதி, நூலகர் திரு. க. பெருமாள்சாமி மற்றும் துணை இயக்குநர் (நிருவாகம்) திரு. க.ந. வீரபாகு சுப்பிரமணியம் ஆகியோருக்கு என்னுடைய மனமார்ந்த நன்றி. இந்நூலுக்குரிய முக்கிய தகவல்களைச் சேகரித்து வழங்கி உதவிய இயக்குநரின் நேர்முக உதவியாளர் திரு. குணசீலன் அவர்களுக்கு உளமார்ந்த நன்றி.

பேராசிரியர் பலரும் பணி நிறைவு பெற்ற பிறகு ஒவ்வொரு தலைப்புகளின் கீழ் நடைபெற்ற நிகழ்வுகளைத் தேடித் திரட்டுவதில்

பெரும் சிக்கலும், தொய்வும் ஏற்பட்டபோது எனக்கு செய்திகளைத் திரட்டுவதற்கு உறுதுணையாகவும், ஊக்கப்படுத்தி, செயல்படுவதற்குத் துணையாக நின்ற முனைவர் பட்ட ஆய்வு மாணவர்கள் திருமதி க. புஷ்பாவதி, திருமதி ச. பிரியா, திரு. பொ. வேல்முருகன், திரு. க. பகலவன், திருமதி ச. யோகேஸ்வரி, திரு. கோ. கணேஷ், செல்வி சீ. கோகிலா, திருமதி வே. விஜி, செல்வி மீ. அபிதகுஜாம்பாள் மற்றும் செல்வி ல. தீபிகா ஆகியோருக்கு என்னுடைய உளமார்ந்த நன்றி.

இந்நிறுவனத்தின் வளர்ச்சியை இலட்சியமாகக் கொண்டு ஓயாமல் உழைத்து வரும் நிறுவனத்தார் அனைவருக்கும் எமது உளமார்ந்த நன்றி.

இந்நூல் ஒளி அச்சுப் பணிக்கு உழைத்த அருமைச் சகோதரி திருமதி கா. இந்திரா காந்தி அவர்களுக்கு எமது இதயங்கனிந்த நன்றி.

இந்நூலை அச்சிட்டு வழங்கிய ஸ்ரீசரவணா அச்சகத்தார்க்கு நன்றி.

*பதிப்பாசிரியர்*

மு. வளர்மதி

# பொருளடக்கம்

## Hon'ble C.N. Annadurai

*Chief Minister, Tamil Nadu, (1968).*

Mr. Chairman, delegates to the International Seminar of Tamil Studies and friends,

As one unconnected with research on any topic, especially in Tamil literature or Tamil language, I plead my inability to offer you any new suggestion either for acceptance or rejection, because always in a seminar, one should not come with a determined view that his view presented before the seminar is bound to be accepted. For the very nature of a seminar precludes such an impression being created in the minds of either the speaker or the listener.

The very purpose of a seminar is to collect one's thoughts, present them in a cogent manner before an audience equally well equipped, find out the areas of agreement, reserve points of disagreement for further discussion, and present a solidified view to the people who are very anxiously awaiting the outcome of such seminars. I am sure that in this seminar, that has been taking place for the past few days, discussion has been carried on in such a lofty and noble manner and the outcome of the seminar is bound to enthuse millions and millions of people who are not merely interested in Tamil research but also in seeing to it that the Tamil language is kept in its pristine purity and that its efficacy is realised by more and more people from various countries. I think that some of the papers that have been presented before this seminar and the discussion that followed were of a very high order, making people think along new lines and attempting to find out truth from new angles.

As far as that is concerned, I think the seminar has registered a success of no mean importance. As far as a layman like myself is concerned, we are perfectly conscious of the fact that the Tamil language has got a vitality, a fertility, an adaptability, and a versatility, all its own, like many other languages. And we who have met here, most of us - there may be one or two illustrious exceptions - are not

the custodians nor are we the originators of the fertility, vitality, adaptability, and versatility of this ancient language.

People who have preceded us years and years ago, and centuries ago, have left us a language that is not in need of much rectification or perfection, though from time to time some-one comes forward to say that here and there is need for rectification.

**We are the inheritors of a very rich legacy of a very vital language that is backed up by a literature of a very high standard, and research scholars are to-day interesting themselves not in enriching Tamil language or bringing out new grammar or new vitality or new fertility, but are interested in finding out the age of the origin of the Tamil language. Some are interested in finding out how the Tamil language has influenced various other languages. Some others are interested in finding out how the Tamil language can be made the vehicle of expression not only here but elsewhere, not only for the day to day activity but also for the different types of scholarly intercourse between one country and another.** If we keep these broad objectives before us, even in a seminar like this, we would be conferring benefits of a very high standard on the people at large who want to see that their language is not varied from time to time either by people interested in other languages or by people who are antagonistic to their own language.

I think that the guidelines that have come out of the seminar will stand in good stead for many, many years to come and the research that you are now interested in will yield very good results.

There is this difficulty. Our language is ancient, and everything ancient is bound to be interspersed with certain interpolations or importation of something foreign into it, something akin to it, something antagonistic to it, and something which is needed by it. When a language is ancient—like a palace or a fort to be found all over the world—and when anything in the various countries is ancient, whether it is an idea, or a mansion, or a system, or a sphere, it is

bound to arrive at a particular stage, wherein the original and the imported get themselves blended, and then it becomes a task for many research scholars to find out what is the original and what is the importation. By this I do not say that all importation is injurious. Nor do I say that all importation is beneficial. There may be many good things, but there may be bad things also. We should be aware of the basic fact of what is the original and what is the imported thing. Even in the original we should find out through hard research: how it has been arrived at, how it is constructed, what are the different suggestions of others, and who are all the people, and what is the language that stood in good stead after these different standards. I think these are the methods or these are the formula that should guide the research scholars and the linguistic scholars who are interested in finding out the truth, the whole truth and nothing but the truth. Truth itself is very elusive even in ordinary parlance, and to find out the whole truth, teams and teams of research scholars are needed to devote years and years of work. What is stated in a court of law is truth, the whole truth, and nothing but the truth, and the third takes us to what I have said earlier, namely, that we should find out what is really ours and what is the imported, adapted, and taken into our own system.

I find many papers more interesting than ordinary scholarly discourses. Therefore I am thankful to the research scholars in Tamil who have come from various parts of the world to confer with one another, to compare notes, to discuss points, and to arrive at conclusions, however tentative they may be. One conclusion to which they have come is this, that the Tamil language is not only ancient but it compares well with all the modern languages.

We find the Tamil language is capable of being the vehicle of expression for the most intricate form of human thought including science. But how are we to establish this fact so that it is accepted by their people in this country and elsewhere?

It can only be found and established by constant trial and error, by constant experimentation and adaptation and not by being obstinate, by being catholic, by adopting the views of others. That .ought to be and that I think has formed the guide-lines of seminars of this kind.

There is a feeling that the Seminar is far, far removed from the people and people have a right to express their discontent—I do not want to screen it from you because it is not necessary—but we have only to educate them and tell them that there is a vast difference between a seminar and a conference, between a seminar and a congregation. But there is this thing, the attachment of the people to Tamil is so deep, so insistent and intimate that they are filled with a desire to meet scholars coming from various countries interested in the Tamil language, those who have done yeoman service to Tamil language in the field of research and study. The people are anxious to meet you and to say to you " Hello " and to shake hands with you, talk to you, just have a glimpse of you so that they can carry the rich impression in their minds when they go back to every nook and corner of Tamil-land and tell people who have not attended the conference: "I have met a scholar in Tamil coming from France, another scholar who hailed from Austria. I have met another scholar who came from Poland; met them and conversed with them." When the people carry that impression to every nook and corner of Tamil-land; imagine what a thrill will be created in the hearts of the millions and millions of people in the Tamil country. That is why we have arranged along with the Seminar a very big Conference also, where even on a very conservative estimate, a million people have gathered just to hear the Tamil poet sing, the Tamil scholar speak, about the ancient glory of Tamil and applaud them with their full heart. In the same manner all the scholars who have witnessed the conference can carry back along with them the rich remembrance of the intimate affection that our people have got for their language.

It is because of this there is a lurking fear in their minds that so rich a language like Tamil is being menaced not by an equally rich or richer

language, but a language which has not yet established its claim to come into the comity of languages of the world, and somehow they are amazed to find millions and millions of people gathering for the Conference which is being convened not for furthering any political ideology or social reformation, not for any ethical purpose, but just for the purpose of purely and simply propagating the efficacy of the Tamil language.

When you find millions and millions of people gather, you can very well imagine and find out what is in their minds, what is at the back of their minds. There is this intimate affection on the one side and there is also the lurking fear, the apprehension that so rich a language as Tamil is menaced by the onslaught—I need not use the word onslaught—but an attempted onslaught by some other language in this part of the country. Please do not be afraid that we are importing a political quarrel here, because we have enough forum to talk plain politics and need not take this forum anyway and ask the delegates to come along with us into the political area. **I am here only pointing out the affection they have for their language in their minds, in the minds of millions and millions of people. They are there to safe-guard the fertility, and the vitality of the ancient language and they are there to ward off any menace that can come up against their language.** So you can return to your country confirmed in the thought that the Tamil language is held in very high esteem and affection by the millions and millions of people who occupy Tamil Nadu. And had you been given an opportunity of meeting some of our Tamil professors, some of our Tamil poets—there are hundreds of them every where, the replica of the older poets that this country can boast of—if we had found some time for those to meet our modern scholars, modern poets, writers, you would have gained something which you would not have wished to miss. But let us take another opportunity wherein there can be a union of interests between the people who work for Tamil and people who do research in Tamil.

I am sure, that the next conference, or the conference after that, will see to it that the people who are actively interested in furthering the cause of Tamil language through writing, through prose and poetry, through drama, through creating new classics in the Tamil language, you will meet scholars and discuss things with them. They may not be in a position to discuss with you whether this vowel or this syntactic structure was imported in the third century or the fourth century. They are not in a position to express any opinion on that because (1) they are not interested in it; (2) they are not well equipped for it; and (3) they find it too dull for them. But! Do not say that dull things ought to be avoided. Perhaps dull things are very necessary to build up the base so that the base becomes stronger and stronger. That is why research scholars study and experiment in the laboratory, spending hours and hours daily for years and years in a life which will be considered by others as dull and drab. For instance, if some of the papers that were presented at the Seminar were presented to the ordinary layman, he will look into it and say: "Why discuss such matters? What do I get by finding out the connection between the Tamil alphabet and an alphabet in some other language in some other country ? What is the benefit we get by finding out the distant connection between the ancient Tamil language and Madagascar? What is it that we gain by finding out that there are two or three words borrowed even from the Hebrew and so many words taken from Tamil into the Hebrew language ? "He will wonder at that not out of ignorance but out of innocence, not out of animosity but because of the deep affection for his language. Therefore we should make very large allowances for the innocent and take them into our confidence.

I think that people like myself should delve into the papers presented before the Seminar and find out what ought to be taken out of them and propagated among the people at large. I remember in this connection what the great poet Rabindranath Tagore said to Bankim Chandra Chatterjee. Bankim Chandra Chatterjee's novels were so popular at that time, that every edition of his novel ran into

thousands of copies whereas Rabindranath Tagore's works were not running even into hundreds. At that time a friend of Chatterjee after a meeting between the great poet and the novelist asked Chatterjee: "Well, Mr. Chatterjee, why is it that the world proclaims Rabindranath Tagore in such laudable terms when most of his books do not run into thousands whereas each one of your novels runs to millions and you are not held in such high esteem as Rabindranath Tagore?" But the reply came from Bankim Chandra Chatterjee and he said: " Tagore writes for men like us and we write for men like you; that is why I am more popular than Tagore. " Every scholar taking part in this Seminar ought to keep this in the back of his mind. You have read the papers for the benefit of men like us. You have not written those papers for ordinary men, the masses. But each one of us has a role to perform, the one not inferior to the other, not antagonistic to the other, but complementary and supplementary to one another.

What is the use of research, if it is not taken to the very door of the people ? What is the use of research, if you have not something to give them ? . Therefore there should be a hand-to-hand comradeship between the research scholar and the man who works for Tamil in his own humble way. It was with that view that the ancient Tamil Sangam was constituted. There were discussions on compositions, inaugurations, festivals, as well as the publication of new poems and new classics, and because of that intimate partnership between the research scholars and the day-to-day poet and the day-to-day prose writers our Tamil language has kept its rarity along with its fertility, its ancient nature along with the modern terms. And perhaps we are to carry on along those lines and see to it that the Tamil language is accepted as one of the richest languages to be found in our world and at the present time.

**To that end Mr. Katre has presented a scheme for an Institute to be started. That takes me into dabbling in the English language. There are two or three English words with which you ought to be conversant. Something is constituted, something is instituted and something is**

**substituted. If the institute is to be a substitute for something that is already in existence, you are doing something for which you will be spending some time which could be spent for a more profitable purpose. If you want to constitute a body of scholars and research workers, I am the first man to welcome that idea.** And from a cursory glance of the scheme, I find that this institute is to be a centre for the award of degrees. Well, I must very respectfully plead with you to resist that temptation, not because I am pleading for the prerogative of the University for conferring degrees but because—believe me when I say it—degrees today have a discounted value. People do not say: "So and so got a degree," They go to the extent of saying, "So and so bought a degree." Please don't fall into the line of givers of degrees. For what better degree can you expect for the scholar than the one that his theory is now accepted by people who were previously not accepting that theory? That is the highest degree to which you should aim at and if without making it a stereotyped degree—manufacturing institution **you base it on the lines of the French Academy and establish it in Tamil-land** and see to it that it does not become too officialised and see to it also that it does not get into the hands of this group or that group, **then you would be setting up a very fertile body which will grow into the Indian Academy or Tamil Academy based on lines identical or similar to the French Academy.**

Apart from that, a budget has been presented at the end of this paper. The budget has become necessary because we have started with the idea that it should be a degree-giving institute. If we do not consider this to be a degree-yielding institute, the budget will have to be reshaped and reformed in a radical way. Whatever may be the reshaping of the budget, **I assure you on behalf of the Government of Tamil Nadu that my Government will contribute its mite towards the expenditure of any such institute, not for degree-giving but for carrying on constant, constructive and purposeful research.**

Friends, why it is that I do not want this institute to be a degree-giving institute needs further explanation. I am not prejudiced against

degrees, nor do I think that the scholars who are going to man this institute will distribute degrees, according to their whims and fancies. I am not at all doubtful about that. But what I am doubtful about is this. The mind of the people will not be such as to give all genuineness to these degrees, to the recipients and to the giver.

I remember an anecdote—not an anecdote properly-speaking, but an incident that took place in my home town years and years ago. Scholars in my home town will always be on the lookout to find out what the mentality of the District Collector is and in what he is interested. When we get a District Collector interested in the Ramayana, all our scholars will dabble in Ramayana. If along with a District Collector interested in the Ramayana, we get an Income-tax Officer interested in Tirukkural, they will talk about Tirukkural also. If a Muslim or Christian not interested in Ramayana or Tirukkural were to become the District Collector or Income-tax Officer, all these discourses on Ramayana and Tirukkural will disappear, and some of the scholars will go to the extent of even saying that, after all, the Ramayana is an imaginary story and none can believe all the paradoxes in it. That is the mentality of the people. Because of that I am apprehensive of the outcome of their judgment about an institute which will give degrees. If the President of the Institute is interested in establishing that after all most of the literature in the Tamil language is not original but is only an adaptation of the Sanskrit literature, how many scholars will come forward boldly to refute that statement and then get the degrees ? There is a long-standing talk—I call it only a talk and not even on opinion—that even Tirukkural is an adaptation of sukraniti. Suppose a scholar holding that view comes to preside over that institute and a scholar or research worker presents a paper to that institute establish that Tirukkural is original and not an adaptation, especially not an Adaptation of sukraniti, what will be the mood of that president ? Even if you get a president who will not be influenced by petty prejudices, what will be the opinion that will be formed of his judgment by the people at large ? You may be caught

between two great menaces if you think about this institute as a degree-giving institute.

As various points of view have been expressed in the Seminar, I have presented my point of view. I do not say that, that is the final view. I am making this point with all goodwill towards you, with all respect to you and with the intention of seeing to it that the institute should become purposeful and fruitful. Please reconsider your idea about it.

I would request scholars interested in the Tamil language who have come to this seminar to come to Tamil-nadu as often as possible. This is the one place where you can find a sort of comradeship which you cannot find in an equal measure in any other part of the world. Two days ago I met the President of the I.A.T.R., a French scholar, at a dinner party and he took one betel nut, which is called " pansupari " in the North. I think some of you will be more conversant with the term "pansupari." He went on munching it. I found his lips so ruby-like that I thought in my mind that, when he returns to France, he should take along with him this natural lipstick, tell his wife—I am sure be is married—and other members of his family and the entire French community that we have found out a method like this. While the French took so much pain to adorn themselves with lipstick, they had to be admired standing from a distance. It is to be seen and not to be communed with.

The ruby like colour that you get from our, betelnut or "pansupari" is so natural and so sweet. I saw the President enjoying "pansupari" so well that, even when he was asked to speak, he did not spit it out but went on munching. I would request him and others coming from foreign countries to visit Tamil Nadu from time to time. You need not come only for a seminar; you can come here for a chit-chat, for a tete-a-tete, for an intimate talk. Come to our universities, look at the libraries, sit and discuss along with our poets and prose-writers, see some of the Tamil films, hear the music of Tamil Nadu and compare it with Western music and carry along with you vivid memories which you might have had no time togather this time.

I would request those who have come here and also those who have not come here this time to come to us as often as possible, because **we have got a very poor country but a very rich heart. We welcome people from foreign countries and distant places. That has been our habit or, to use the Tamil word, our *marapu* for thousands of years. We have gone to distant Java, Sumatra, Borneo and Malaysia. Wherever we went, we carried not the banner of conquest but the banner of our culture. Wherever we settled, we settled there to import our culture and not to establish aggression.** I do not find a single instance, as far as I understand Tamil history, of our people, our poets, our linguists asking or pleading or appealing or imposing our language on an unwilling people. We were so sure about the richness of our language that we were waiting at the threshold to welcome those who wanted to learn Tamil, unlike people interested in some other languages, who are selling them very cheap at the market places but find that there are not enough buyers. We are proud of our language; we are rightfully proud of our language but not to the detriment of other languages, not to the detriment of debasing the affection that other people have got for their own language. We only plead for a place in the comity of languages for this rich and ancient Tamil language. Scholars who have attended this Seminar will carry this request, which I am sending through you, to foreign countries, and tell the people of those countries, that here is a country rich in language and literature, here are people who are catholic in outlook and who are prepared to do research in any language including Tamil. "Every country is my country and all humanity is my kinsman." Carry with you this message which has been given two thousand years ago and reliterated now, and make others understand that here are people who are affectionate, who are delightful to move with, who are always prepared to give their best, but who are always vigilant and watchful to see that their language and way of life is not disturbed, is not menanced, and who, when they realise that there is a real menace to their language will get into—God forbid—a fury of a very great order before which no power on earth can stand.

## APPENDIX

[During the two years that have passed since the Conference-Seminar was held, there has been some progress towards the establishment of the Institute in Dr. Katre's paper. There follows a brief account of this supplied by Mr. A. Subbiah, the I.A.T. R. Delegate to the projected Institute.]

During the discussion on Dr. Katre's paper at the final plenary session, the idea of organizing an International Institute of Tamil Studies was strongly supported by the representatives present of Universities in Tamil Nadu as well as by the late Chief Minister and the Education Minister of the Government of Tamil Nadu.

A report on the proceedings of the Conference was thereafter submitted to and considered by the Tamil Nadu Unesco Committee on January 31, 1968. Noting the consensus at the Conference-Seminar and the need and urgency for creating the International Institute of Tamil Studies (I.I.T.S.), the Madras State Unesco Committee accepted in principle the establishment at Madras of the I.I.T.S. and appointed a Drafting Committee consisting of the following members to draft a detailed project covering a period of 10 years:

1. THE HON'BLE Thiru V. R. NEDUNCHEZHIYAN (Chairman), Chairman, Tamil Nadu Unesco Committee, and Minister for Education, Tamil Nadu, INDIA.

2. PROF. J. FILLIOZAT, President, International Association of Tamil Research, College de France, Paris, FRANCE.

3. PROF. XAVIER S. THANI NAYAGAM, Secretary-General, I.A.T.R., University of Malaya, Kuala Lumpur, MALAYSIA.

4. D. KAMIL ZVELEBIL, Secretary-General, I.A.T.R., Oriental Institute, Prague, CZECHOSLOVAK/A.

5. PROF. V. CHELVANAYAGANI, Head of the Department of Tamil, University of Ceylon, Peradeniya, CEYLON.

6. The President or his representative of the Academy of Sciences, U.S.S.R.

7. The Director or his representative of the American Institute of Indian Studies, Poona, INDIA.

8. PROF. S. M. KATRE, Director, Deccan College Post-Graduate and Research Institute, Poona, INDIA.

9. PROF. SUNITI KUMAR CHATTER 11, National Professor of Humanities, Calcutta, INDIA.

10. PROF. M. VARADARMAN, Head of the Department of Tamil, University of Madras, Madras, INDIA.

11. PROF. G. SUBRAMANIA PILLAI, Head of the Department of Tamil (Arts), Annamalai University, Annamalainagar, INDIA.

12. PROF. M. A. DORAIRANGASWAMY, Head of the Department of Tamil, Madurai University, Madurai, INDIA.

13. The Secretary-General, Indian National Commission for Co-operation with Unesco, and Secretary, Ministry of Education, Government of India, New Delhi, INDIA.

14. PROF. V. I. SUBRAMANIAM (Secretary) Secretary-General, I.A.T.R., University of Kerala, Trivandrum, INDIA. The following members were co-opted.

15. PROF. K. K. PILLAY, History Professor of Social Sciences, University of Madras, Madras, INDIA.

16. PROF. H. D. SANICALIA, Professor of Archeology, Deccan College Post-graduate and Research Institute, Poona, INDIA.

17. PROF. M. N. SRINIVAS, Department of Sociology, Delhi School of Economics, New Delhi, INDIA.

18. PROF. R. N. DANDEICAR, Bhandarkar Oriental Research Institute, Poona, INDIA.

19. MR. V. S. TYAGARAJA MUDALIAR, Industrialist, 14, Sterling Road, Madras, INDIA.

The Detailed Project as finally approved by the Drafting Committee was submitted to Unesco at its 15th General Conference in Paris during October-November 1968 by the Government of India who moved the following resolution:

The General Conference

Taking note of the important conclusions for the promotion of cultural understanding and oriental scholarship reached at the second international conference seminar on Tamil Studies held in Madras on 3-10 January, 1968;

Having received a report on the proposal arising from the Conference for the creation of an International Institute of Tamil Studies;

Authorises the Director-General to assist India and other interested member States in the creation of the above Institute in Madras, India;

Invites the Member States to associate themselves in the creation and membership of the Institute, including the mutual assistance and co-operation required.

On the basis of the following note by the Director-General of Unesco:

The second international conference of Tamil studies held in Madras in January' 1968, with support from unesco given at the request of the Indian Government, has stressed the need and importance of promoting research in an area which corresponds, in many ways, to the leading principles of the cultural studies programme of Unesco, i.e. such areas as:

(i) study in depth of a specific culture, of interest to a whole region;

(ii) insufficiently studied up to now at the international level, and

(iii) requiring interdisciplinary co-ordination.

These criteria being applicable to the Indian request, it is proposed to use the same procedure as the one followed in the case of similar institutions, like the Colegio de Mexico, and of other area studies projects which have proved efficient, like the Balkan Studies programme, namely:

1. to provide advisory or staff assistance to the project using the funds in project 3.32;

2. to help, by strengthening implantation at the national level, with assistance under the participation programme. The Madras Conference indicated that such aid as research fellowships to the personnel of the Institute or the granting of books to establish a documentation centre might be among the first needs;

3. when such structures are firmly established, and taking into account the first scholarly results, to consider for 16 C/5 the possibility of a coordinated programme involving various disciplines, similar in character if not in extent, to the Central Asian. project, or to the Buddhist art project, which have at present priority under 15 C/5 as a result of methodical preparation during a period of two years, the General Conference unanimously adopted the resolution.

A Managing Committee consisting of

Chairman ... The Chairman, Tamil Nadu Unesco Committee (and Minister of Education, Tamil Nadu), Madras

Member ... The Secretary-General, Indian National Commission for Unesco, New Delhi

Member ... The Representative, International
Secretary ... Association of Tamil Research

was entrusted with the follow-up work on the Project. With a view to establishing a network of collaboration with foreign universities and other institutions, Mr. A. Subbiah, the Member-Secretary, undertook an extensive visiting mission to about fourteen countries and submitted a detailed report to Unesco which sponsored the mission. Based on this Report, a Detailed Programme for the Institute for 1971-74 will be drawn up by an internationally representative committee consisting of the following members and submitted to Unesco for approval at its 16th General Conference in October 1970:

AUSTRALIA: DR. H. F. OWEN,
Director, Center for Asian Studies,
The University of Western Australia,
Nedlands, Western Australia 6009

CANADA: DR. BRENDA E. F. BECK,
Department of Anthropology,
University of British Columbia,
Vancouver 8, Canada.

CEYLON: PROF. XAVIER S. THANI NAYAGAM,
8, Ramanathan Avenue,
Dehiwala, Ceylon.

CZECHOSLOVAKIA: DR. KAMIL ZVELEBIL,
Chicago University,
South Asia Language and Area Center,
Foster Hall, 1130 East 59th Street,
Chicago, Illinois 60637, U.S.A.

DENMARK: DR. ASKO PARPOLA,
Scandinavian Institute of Asian Studies,
Kejsergade, 1155 DK, Copenhagen K.

FINLAND: PROF. DR. PENTTI AALTO,
University of Helsinki, Hollantilaisantie
1, Helsinki 33, Finland.

GERMANY: PROF. Dr. K. L. JANERT,
Institute of Ideology,
University of Cologne,
Albertus-Magnus-Platz,
5 Köln-Lindenthal, West Germany.

INDIA: PROF. V. I. SUBRAMANIAM,
Professor and Head of the
Department of Linguistics,
University of Kerala, Trivandrum,
South India.

ISRAEL: PROF. CHAIM RABIN,
Professor of Hebrew Language,
Hebrew University, P.B. No. 7158,
Jerusalem, Israel.

ITALY: PROF. ALEXANDER BALTSANI,
Professor and Head of the Department
of Persian, Naples University, Via Dei
Carpazi 26 (EUR), Roma

JAPAN: Dr. NOBORU KARASHIMA,
Government University, Instructor at the
Department of Oriental History, The
University of Tokyo, 33 Jomyoji,
Kamakura-shi, Japan.

MALAYSIA: Mr. S. SINGARAVELU, Ag. Head,
Department of Indian Studies,
University of Malaya, Kuala Lumpur,

NETHERLANDS: PROF. F. B. J. KUIPER, Kern Institute, 1
Binnenvestgracht 33, Leiden,
Netherlands.

PHILIPPINES: PROF. JUAN R. FRANCISCO,
Asian Center,
University of the Philipr incs,
Quezon City, Philippines.

| | |
|---|---|
| ROUMANIA: | PROF. ALEXANDRU ROSETTI,<br>Central de fontetica si dialectologie at Academiei, Calea Victoriei 194, Bucuresti 22, Roumania. |
| SINGAPORE: | Dr. R. SUNDERALINGAM,<br>Department of History, University of Singapore, Singapore. |
| SWEDEN: | PROF. DR. SIEGFRIED LIENHARD,<br>Kommendorsgatan 28, S-114, 48, Stockholm, Sweden. |
| U.K.: | Dr. R. E. ASHER,<br>Department of Linguistics, University of Edinburgh, Edinburgh 8. |
| U.S.A.: | PROF. M. B. EMENEAU,<br>Department of Linguistics, University of California, Berkeley, Cal. 94720, U.S.A. |
| U.S.S.R.: | Dr. M. ANDRONOV,<br>Head of the Indian Languages Department, Institute of Oriental Studies, Arrnianski 2, Moscow, U.S.S.R. |
| Honorary Consultants: | Mr. JUSTICE S. MAHARAJAN,<br>Judge, Madras High Court, Madras 1, S. India. |
| | Mr. N. D. SUNDARAVADIVELU,<br>Vice-Chancellor, Madras University, Madras 5, South India. |
| | Mr. V. S. TYAGARAJAN,<br>14, Sterling Road, Madras 34, South India. |

Convener: Mr. A. SUBBIAH,
Secretary, Managing Committee,
I.I.T.S., Thamilakam, Sterling Road,
Madras 34, South India.

Chairman: PROF. JEAN FILLIOZAT,
College de France, Paris 5, France.

*Proceedings of the Second International Conference Seminar of Tamil Studies*

*- Madras, India, January 1968*

*Comments on the proposed International Institute of Tamil Studies - C.N. Annadurai,*

*Page 152 to 164*

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

**தவத்திரு அமுதன் அடிகள்**

தமிழ் மொழியியல், இலக்கியம், தொன்மையியல், பண்பாட்டியல், சமூக மானுடவியல் எனப் பல துறைகளைப் பற்றி ஆய்வு மேற்கொள்ளவும், ஆய்வுக் கல்வியை வழங்கவும், பட்டங்கள் வழங்கவும் தகுதி மிக்க உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அமைப்பதைப் பற்றிச் சென்னைத் தமிழ் மாநாட்டின்போது (1968) விவாதிக்கப்பட்டது. பூனாவிலுள்ள தக்காணக் கல்லூரியின் பட்ட மேற்கல்வியியல் மற்றும் ஆராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநராகிய முனைவர் எஸ்.எம். காத்ரே, 'உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் அமைப்புக் கூறுகள்' என்னும் தலைப்பில் மாநாட்டுக்காக எழுதிய கட்டுரை, அவர் மாநாட்டில் கலந்து கொள்ளாததால், முனைவர் பி.எஸ். பிலிகிரி அவர்களால் மாநாட்டில் படிக்கப்பட்டது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் மொழியியல், இலக்கியமும் பிரதி ஆய்வியலும், தொன்மையியலும் பண்பாடும், சமூக - மானுடவியல் என்னும் நான்கு துறைகளைக் கொண்டு, ஒவ்வொரு துறைக்கும் பேராசிரியர், இணைப் பேராசிரியர், விரிவுரையாளர்கள் எனப் பல நிலைகளில் அமைந்த ஆசிரியர் குழாத்தினை உடையதாக அமைந்து செயல்பட வேண்டுமென்பதும், முதுகலைப் பட்ட வகுப்புகளும் முனைவர் பட்ட ஆய்வுகளும் நிறுவனத்தில் இடம் பெற வேண்டுமென்பதும் முனைவர் காத்ரே தம் கட்டுரையில் வழங்கிய கருத்துகளாகும். வெளியிலிருந்து பகுதி நேரப் பேராசிரியர்களும், ஆராய்ச்சியாளர்களும் வந்து நிறுவனப் பணிகளிலும் ஆய்வுகளிலும் கலந்து கொள்ளவும் அக்கட்டுரை வழிகாட்டியது. தொன்மையியல், மொழியியல், மானுடவியல் பகுதிகளுக்குத் தேவையான ஆய்வுக் கூடங்களும், தரமான நூலகமும் நிறுவனத்தில் இடம்பெற வேண்டுமென்றும் கட்டுரை சுட்டிக்காட்டியது.[1]

தமிழ்நாட்டில் அமைக்கப்படவிருக்கும் இந்நிறுவனத்தின் வளர்ச்சிக்குத் தமிழக அரசு ஆதரவு வழங்குமெனினும் பிறநாடுகளி

லிருந்தும் நிதியுதவி பெறலாம் என்பதையும் அக்கட்டுரை கோடிட்டுக் காட்டியது. நிதியுதவி வழங்கும் எல்லா அமைப்பு களுக்கும் பிரதிநிதித்துவம் வழங்குவதாக நிறுவனத்தின் ஆட்சிக் குழு அமைய வேண்டுமென்பதை அக்கட்டுரை வலியுறுத்தியது. ஆசிரியர்களாக 32 பேரும், ஆராய்ச்சியாளர்களாக 78 பேரும், நிர்வாகத் துறையில் 32 பேரும் பணிபுரியக் கூடிய நிறுவனமாக அமைந்தால் தான் அது முறையாகப் பணியாற்ற முடியும் என்பது முனைவர் காத்ரேயின் கருத்து.

இக்கட்டுரை படிக்கப்பட்ட பின் தமிழக முதல்வர் மாண்புமிகு சி.என். அண்ணாதுரை, கல்வியமைச்சர் மாண்புமிகு இரா. நெடுஞ் செழியன், ராஜா சர் முத்தையா செட்டியார், பேரா. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார், யுனெஸ்கோ இந்தியத் தேசிய ஆணையத்தின் சார்பாகத் திரு. கே. சுப்பிரமணியம் ஆகியோர் கருத்துத் தெரிவித்தனர்.[2]

இந்நிறுவனம் பயிற்சிக்கும் ஆராய்ச்சிக்குமுரிய நிறுவனமாக இருக்க வேண்டுமேயன்றிப் பட்டம் வழங்கும் நிறுவனமாக இருக்கக் கூடாதென்று முத்தையா செட்டியார் வலியுறுத்தினார்.

இந்நிறுவனம் எல்லாத் திராவிட மொழிகளைப் பற்றியும் அவற்றின் கிளை மொழிகளைப் பற்றியும் ஆய்வு மேற்கொள்ள வேண்டுமென்றும், நிறுவனத்தின் எல்லாத் துறைகளும் தொடக்கத்திலிருந்தே அமைக்கப்படாமல் உலகின் பல நாடுகளிலும் நடைபெறும் தமிழ் ஆய்வுகளை ஒருங்கிணைக்கும் ஒரு மைய அமைப்பாகத் தொடக்கத்தில் அமைந்து, பின் தேவைக்கேற்ப விரிவுபடுத்திப் பெறுதல் நலமென்றும் பேரா. தெ.பொ. மீனாட்சி சுந்தரனார் கருத்துத் தெரிவித்தார்.

நிறுவனம் ஜெனீவாவில் அல்லது பாரிசில் அமைக்கப்பட வேண்டுமென்று வற்புறுத்திய திரு. கே. சுப்பிரமணியம், யுனெஸ்கோ போன்ற பன்னாட்டு அமைப்புக்களுடனும் உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றத்துடனும் தொடர்பு கொண்டு செயல்பட அது உறுதுணையாக இருக்கும் என்று தெளிவுபடுத்தினார்.

நிறுவனம் சென்னையிலேயே நிறுவப்பட வேண்டுமென்றும், அதனால் தமிழகத்தின் மூன்று பல்கலைக்கழகங்களுடனும் அந்நிறுவனம் இணைந்து செயல்பட இயலுமென்றும் கூறிய மாண்புமிகு இரா. நெடுஞ்செழியன் பிரெஞ்சு அக்காதெமியைப்

போல ஒரு தமிழ்ச் சங்கம் அமைக்கப்பட வேண்டுமென்றும் வலியுறுத்தினார்.

இந்நிறுவனம் "பட்டங்கள் வழங்கும்" கல்வி நிலையமாக அமையக் கூடாதென்று தெளிவாகக் கூறிய தமிழக முதல்வர் மாண்புமிகு அண்ணாதுரை, தமிழக அரசு இத்திட்டத்திற்கு உதவி செய்யத் தயங்காதென்றும் எடுத்துரைத்தார்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அமைக்கப்பட வேண்டு மென்பதே மாநாட்டின் ஒத்த முடிவு என்பதால் யுனெஸ்கோவின் சென்னை மாநில ஆணையம் இதுபற்றிய பத்தாண்டுத் திட்டம் ஒன்றினை வரைவதற்காக 19 பேர் கொண்ட குழுவை அமைத்தது. இக்குழுவில் தனிநாயகம் அடிகளாரும் உறுப்பினராக இடம்பெற்றார்.[3]

இக்குழு வரைந்த விரிவான திட்டத்தை இந்திய அரசு ஒரு தீர்மானமாக யுனெஸ்கோ பொதுப் பேரவைக்குச் சமர்ப்பித்தது. இத்தீர்மானம் யுனெஸ்கோ பொதுப் பேரவையில் விவாதிக்கப்படும் போது இதனை ஆதரிக்க வேண்டுமென்று அடிகளார் மலேசியக் கல்வி அமைச்சர் மாண்புமிகு இஞ்ச்செ முகமது கீர் ஜொஹாரி, சிங்கப்பூர்க் கல்வி அமைச்சர் மாண்புமிகு ஓங் பாங் பூன் ஆகியோருக்கு எழுதி அவர்களின் உதவியைப் பெறும் முயற்சிகளை மேற்கொண்டார்[4] என்பது குறிப்பிடத்தக்கது. இத்தீர்மானம் நிறைவேறிய பின், யுனெஸ்கோ வழங்கிய நிதியுதவியோடு திரு. அ. சுப்பையா பதினான்கு நாடுகளில் சுற்றுப்பயணம் மேற்கொண்டு, அங்குப் பல்கலைக் கழகங்களோடும் நிறுவனங்களோடும் தொடர்பு கொண்டு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஆற்றக் கூடிய பணிகளைப் பற்றியும் அவற்றுக்கு எத்தகைய வரவேற்பு உண்டு என்பதைப் பற்றியும் ஆராய்ந்து யுனெஸ்கோவுக்கு ஓர் ஆய்வு அறிக்கை வழங்கினார்.[5]

அதன்பின் மூன்றாண்டுக்குரிய விரிவான திட்டத்தை வரைவதற் காக யுனெஸ்கோ நியமித்த பன்னாட்டுப் பிரதிநிதிகள் குழுவிலும் அடிகளார் இடம் பெற்றார். இக்குழுவின் தலைவராகப் பேரா. ஃபீலியோசாவும், ஒருங்கிணைப்பாளராகத் திரு. ஏ. சுப்பையாவும் நியமிக்கப்பட்டனர்.

இதற்கிடையில் உலகத் தமிழாராய்ச்சி மன்றத்தின் மேலாண்மைக் குழுவுக்கும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்துக்குமிடையில் தொடர்பினை எளிதாக்கும் முறையில் பேரா. ஃபீலியோசா, பேரா. கே.கே. பிள்ளை, தனிநாயகம் அடிகளார், பேரா. வி.அய்.

சுப்பிரமணியம், திரு. ஏ. சுப்பையா ஆகிய ஐவரைக் கொண்ட குழுவை மன்றம் நியமித்தது.[6]

பாரீஸ் மாநாட்டில் தொடக்கவுரையாற்றிய யுனெஸ்கோ மேலாண்மை இயக்குநர் (பொறுப்பு), முனைவர் மால்கம் ஆதிசேஷையா தம் உரையின்போது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பற்றியும் குறிப்பிட்டார்.[7]

பாரீஸ் மாநாட்டின் இறுதி அமர்வுக்குத் தலைமை தாங்கிய அடிகளார் அதுபோது ஒரு வேண்டுகோள் விடுத்தார். 1971ஆம் ஆண்டில் யுனெஸ்கோ பொதுப் பேரவை நடைபெறும்போது, சென்னையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஏற்படுத்தும் தீர்மானத்தை இந்தியா முன் மொழிய, அதைப் பிரான்சு ஆதரித்து வழிமொழிய வேண்டும் எனப் பிரெஞ்சு தேசிய ஆணையத்துக்குப் பரிந்துரைக்கும் தீர்மானத்தை அவையினர் ஒருமனதாக நிறைவேற்ற வேண்டுமென்னும் வேண்டுகோள் அது.[8] அவ்வாறே அத்தீர்மானம் அவையினரால் ஒருமனதாக நிறைவேற்றப்பட்டது.

நான்காவது மாநாடு யாழ்ப்பாணத்தில் நடந்தபோது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் அமைக்கப்பட்டுச் செயல்படத் தொடங்கி விட்டது. யாழ்ப்பாணம் மாநாட்டின் தொடக்கவுரையில்,

> "உலக அளவில் தமிழ் ஆய்வுகளைத் தொடர்ந்து மேற்கொள்வதற்காகவே யுனெஸ்கோ நிதியுதவியுடன் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தைச் சென்னையில் ஏற்படுத்த உலகத் தமிழாராய்ச்சி மன்றம் ஆதரவு நல்கியது. இத்திட்டத்துக்குத் தமிழக அரசும் யுனெஸ்கோ இந்தியத் தேசிய ஆணையமும் உதவி புரிந்தன. இந்நிறுவனம் சீரிய அளவில் தன் பணியைத் தொடங்கியுள்ளது. எனினும் இது உலக நிறுவனமாக வளரும் என்னும் நம்பிக்கை எமக்கு உண்டு. வெளிநாட்டு அறிஞர்கள் அதிகமாகத் தேடும் வாய்ப்புகளை இத்தகைய நிறுவனங்கள் மூலமாகவே நாம் வழங்க இயலும். பல்கலைக்கழகங்கள், பட்டங்களை வழங்குவதில் கவனம் செலுத்திக் கொண்டு, ஆராய்ச்சியைப் பட்ட மேற்கல்வி நிறுவனங்களில் விட்டுவிடும். ஆகவேதான் இந்த நிறுவனம் உண்மையில் உலகளாவிய நிறுவனமாக அமைய வேண்டுமென ஆவல் கொண்டுள்ளோம்"[9]

என்று தெரிவித்தார்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தமிழோடு தொடர்புள்ள பல்வேறு துறைகளிலும் உயர் ஆய்வுகளை மேற்கொண்டு உலக அறிஞர்களால் ஏற்று மதிக்கப்படுவதாக அமைய வேண்டுமென்பதே அடிகளாரின் வேணவா என்பதில் ஐயமில்லை. உலகத் தமிழ் ஆய்வுத் துறையில் அடிகளார் தம் உலகப் பயணங்கள், தொடர்புகள், கட்டுரைகள், விரிவுரைகள், நூல்கள், முத்திங்கள் இதழ், அரையாண்டு இதழ் என்று பலவகையிலும் தொடர்ந்து ஆற்றி வந்த பணிகளே உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமாக வடிவம் பெற்றன என்பார் பேரா. வேலுப்பிள்ளை.

> "அடிகளாரே உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் முதல் இயக்குநராக நியமிக்கப்பட்டிருக்க வேண்டும் என்பது பல அறிஞர்கள் எண்ணம். உலக அளவில் நிறுவனத்துக்குத் தேவையான செல்வாக்கை அடிகளார் பெற்றுத் தந்திருப்பார்"[10]

என்பது வேலுப்பிள்ளையின் கருத்து. ஆனால் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தொடங்கப் பெற்ற பின், அடிகளார்க்கு அதில் எத்தகைய பொறுப்பும் வழங்கப்படவில்லை என்பது வருந்தற்குரியதாகும்.

*நன்றி : தனிநாயகம் அடிகளார்,*
*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,*
*ஜூலை 1993, ப. 118-122.*

1. Proceedings of the Second International Conference Seminar of Tamil Studies; R.E. Asher (ed.), pp 139-146.
2. Ibid, pp. 146-164.
3. Ibid, p. 160.
4. வே. *அந்தனிஜான் அழகரசன்; முன்சுட்டியது; பக். 95-98.*
5. Journal of Tamil Studies, Vol 1, No. 2, part II, 1969. pp. 7-38.
6. Ibid, p. 2.
7. Proceedings of the Third Internatínal Conference Seminar, pp. 5-6.
8. Ibid, p. 257.
9. Proceedings of the Fourth International Conference Seminar of Tamil Studies, S. Vithianandan (Ed.) Jaffna, 1980, p. xx.
10. Velupillai, A., 'His Impact on Dravidian Studies', Tamilaram, p. 49.

# ஆளுகைக் குழு

**தலைவர்**

**மாண்புமிகு பள்ளிக்கல்வி, தமிழ் வளர்ச்சி மற்றும் தமிழ்ப் பண்பாட்டுத்துறை அமைச்சர்**

தமிழ்நாடு அரசு

துணைத்தலைவர்கள்

1. அரசுச் செயலாளர்
   தமிழ் வளர்ச்சி மற்றும் செய்தித்துறை
2. துணைவேந்தர்
   சென்னைப் பல்கலைக்கழகம், சென்னை
3. துணைவேந்தர்
   அண்ணாமலைப் பல்கலைக்கழகம், சென்னை
4. துணைவேந்தர்
   தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்
5. துணை வேந்தர்
   மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை
6. ஐ.ஏ.டி.ஆர்.பிரதிநிதி

உறுப்பினர்

1. முதன்மை நிதிச் செயலாளர்
   தமிழ்நாடு அரசு
2. இயக்குநர்
   இந்திய மொழிகள் நடுவண் நிறுவனம்
   மானசகங்கோத்திரி, மைசூர் - 570 006
3. டாக்டர் எப். க்ரோ (Dr.F.Gros)
   இயக்குநர் (ஓய்வு) French Institute of Indology, Pondicherry

உறுப்பினர் - செயலர்

இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

## இயக்குநர்

*முனைவர்* **கோ. விசயராகவன்**

## கல்விப் பணியாளர்

### 1. தமிழ் இலக்கியம் மற்றும் சுவடியியல் புலம்
**Faculty of Tamil Literature and Manuscriptology**

1. முனைவர் அ. சதீஷ், இணைப் பேராசிரியர்
2. முனைவர் கோ. பன்னீர்செல்வம், முதுநிலை ஆராய்ச்சியாளர்
3. முனைவர் சு. தாமரைப்பாண்டியன், முதுநிலை ஆராய்ச்சியாளர்

### 2. தமிழ் மொழி மற்றும் மொழியியல் புலம்
**Faculty of Tamil Language and Linguistics**

1. முனைவர் பெ. செல்வக்குமார், இணைப் பேராசிரியர்
2. முனைவர் க. சுசீலா, முதுநிலை ஆராய்ச்சியாளர்
3. முனைவர் நா. சுலோசனா, முதுநிலை ஆராய்ச்சியாளர்

### 3. சமூகவியல், கலை மற்றும் பண்பாட்டுப் புலம்
**Faculty of Sociology, Art and Culture**

1. முனைவர் ஆ. மணவழகன், இணைப் பேராசிரியர்
2. முனைவர் கா. காமராஜ், முதுநிலை ஆராய்ச்சியாளர்
3. முனைவர் வி.இரா. பவித்ரா, முதுநிலை ஆராய்ச்சியாளர்

## 4. அயல்நாட்டுத் தமிழர் புலம்
**Faculty of Overseas Tamils**

1. முனைவர் மு. வளர்மதி, இணைப் பேராசிரியர்
2. முனைவர் கு. சிதம்பரம், முதுநிலை ஆராய்ச்சியாளர்
3. முனைவர் து. ஜானகி, முதுநிலை ஆராய்ச்சியாளர்

## நிருவாகப் பணியாளர்

1. திரு. இரா. இராஜா
   கண்காணிப்பாளர்
2. திரு. ஸ். கோபிநாத்
   உதவியாளர்
3. திருமதி பா. கௌசல்யா
   இளநிலை உதவியாளர் (ம) தட்டச்சர்
4. திரு. சு. கண்ணன்
   இளநிலை உதவியாளர் (ம) தட்டச்சர்
5. திருமதி எ.ம. லட்சுமி
   இளநிலை உதவியாளர் (ம) தட்டச்சர்
6. திரு. இரா. பெருமாள்சாமி
   நூலகர் நிலை II
7. திருமதி பி. கவிதா
   நூலகர் நிலை II
8. திருமதி தி. சாந்தி
   இளநிலை உதவியாளர் (ம) தட்டச்சர்
9. திரு. க. சிவா
   நூலகர் நிலை III

10. திரு. கோ. இராஜமாணிக்கம்
ஓட்டுநர்

11. திரு. பா. பொற்செழியன்
சிற்றெழுத்தர்

12. திரு. கு. செல்வக்குமார்
அலுவலக உதவியாளர்

13. திரு. வ. பொன்னையா
அலுவலக உதவியாளர்

14. திரு. எ. தியாகராஜன்
தோட்டப் பணியாளர்

15. திரு. மு. நந்தகோபால்
அலுவலக உதவியாளர்

16. திருமதி. மு. சுலோச்சனா
துப்புரவுப் பணியாளர்

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் முதன்மை நோக்கங்கள்

- தமிழில் உயராய்வினை வளப்படுத்துவது
- உயர் தமிழாய்வினை ஊக்குவிக்கும் கல்விச் சூழலை உருவாக்குவது
- தமிழரல்லாதார்க்கும் தமிழ்மொழியைப் பயிற்றுவிப்பது
- பேராசிரியர்கள் வழி ஆய்ந்து நூல்களைக் கொணர்வது
- ஆய்வுக்குகந்த தரமான நூலகம் பேணுவது
- பல்துறை ஆராய்ச்சியாளர்களுக்குப் பயிற்சியளிப்பது
- பிறநாட்டுத் தமிழறிஞர்களுடன் ஆய்வுத் தகவல்களைப் பகிர்ந்து கொள்வது
- நிறுவனக் கல்விச்சூழல் வளம்பெற அயலகத் தொடர்புகளை மேம்படுத்துவது

# நிறுவனத்தின் நான்கு புலங்களும் அதன் பணிகளும்

## தமிழ் மொழி மற்றும் மொழியியல் புலம்

- பொது மொழியியல் மற்றும் பயனாக்க மொழியியல் பொருண்மைகளில் தேசிய / பன்னாட்டு அளவிலான கருத்தரங்கம் / பயிலரங்கம் நடத்தி நூலாக்கம் செய்தல்.
- தமிழல்லாத பிற மொழிகளைத் தாய்மொழியாகக் கொண்டோர்க்குத் தமிழ்க் கற்பித்தல்.
- மொழித் தொடர்புத் திறன், மொழி ஆய்வு, நெறிமுறை தொடர்பான ஆய்வுகளை மேற்கொள்ளுதல்.
- மொழிபெயர்ப்பியல் பட்டய வகுப்பு நடத்துதல்.
- மொழியியல் குறித்த குறுந்திட்டங்களை மேற்கொள்ளுதல்.
- அரசு கோரும் தமிழ் தொடர்பான தரவுகளைத் திரட்டி வழங்குதல்.
- இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம் மற்றும் பிற பல்கலைக் கழகங்களோடும் மொழி ஆய்வு நிறுவனங்களோடும் ஒருங்கிணைந்து ஆய்வு நிகழ்த்துதல்.

## சமூகவியல், கலை மற்றும் பண்பாட்டுப் புலம்

- கருத்தரங்குகள், சிறப்புச் சொற்பொழிவுகள், பயிலரங்குகள் நடத்தி அவற்றில் விளம்பப் பெறும் கருத்துகளை நூலாக்கம் செய்து வெளியிடல்.

- தமிழகத்தில் நிலவுகின்ற கலை மரபுகளை ஆவணப்படுத்துதல் மற்றும் ஆய்வுக்கு உட்படுத்துதல்.

- தமிழ் இலக்கியங்கள், கலைகள், பண்பாடு ஆகியன குறித்துச் சமூகவியல் நோக்கில் ஆய்வு செய்தல்.

- தமிழ்ச் செவ்வியல் மற்றும் நாட்டார் கலைகள் குறித்து மரபுக் கலைஞர்களைக் கொண்டு பயிற்சி அளித்தல் மற்றும் பயிலரங்குகள் நடத்துதல்.

- தமிழகக் கலை மரபுகளை மின் ஊடகத்தின்வழி ஆவணப்படுத்தித் ‘தரவுத் தளத்தை’ உருவாக்குதல்.

- தமிழ்க் கலை மற்றும் பண்பாட்டு மரபுகளைத் தென்னிந்திய மற்றும் பிற மரபுகளுடன் இணைத்து ஆய்வு செய்தல்.

# தமிழ் இலக்கியம் மற்றும் சுவடியியல் புலம்

- இலக்கியம், இலக்கணம், மருத்துவம், சோதிடம், வரலாறு முதலிய பொருண்மை உடைய தமிழ்ச் சுவடிகளைப் படியெடுத்தல் / பாதுகாத்தல் மற்றும் நூலாக்கம் செய்து வெளியிடல்.

- நூலகத்தில் உள்ள **600** ஓலைச்சுவடிக் கட்டுகளில் **1100** நூல்கள் உள்ளன.

- மாணவர் பிற துறைகள் சார்ந்த ஆர்வலர்க்குச் சுவடிகளைப் படிக்க, எழுத, பதிப்பிக்கப் பயிலரங்குகள் பட்டய வகுப்புகள் நடத்திப் பயிற்றுவித்தல்.

- சுவடிகள் தொடர்பான கருத்தரங்குகள் நடத்துதல்.

- சுவடிகள் குறித்த விழிப்புணர்வு ஏற்படுத்துதல்.

# அயல்நாட்டுத் தமிழர் புலம்

- கருத்தரங்குகள், சிறப்புச் சொற்பொழிவுகள், பயிலரங்குகள் நடத்தி அவற்றில் விளம்பப் பெறும் கருத்துகளை நூலாக்கம் செய்தல்.

- அயலகத் தமிழர் வரலாறு, மொழி, பண்பாடு, கலை, சமூக (ம) இலக்கிய அமைப்புகள் தொடர்பான ஆய்வுப் பணிகளை மேற்கொள்ளுதல்.

- அயலகத் தமிழர் தொடர்பான அனைத்துத் தகவல்களையும் உள்ளடக்கிய தரவுத் தளத்தை உருவாக்குதல்.

- அயலகத் தமிழ் அறிஞர்களுடன் தொடர்புகொண்டு அவர்களின் ஆய்வுப் பணிகளைத் தமிழ் மொழி மற்றும் பண்பாட்டு வளர்ச்சிக்குப் பயன்படுத்துதல்.

- அயலகத் தமிழர்களின் வரலாறு, மொழி, பண்பாடு, கலை மற்றும் படைப்பிலக்கியம் தொடர்பானவற்றை ஆய்வுக்குப் பரிமாற்றம் செய்தல்.

- தமிழியல் (Journal of Tamil Studies) பருவ ஆய்விதழை வெளியிடுதல்.

- மொழிபெயர்ப்பு (ம) மொழிபெயர்ப்புத் தொடர்பான ஆய்வுகளை மேற்கொள்ளுதல்.

- அயலகத் தமிழ் அறிஞர்களை வருகைதரு பேராசிரியர்களாக அழைத்தல்.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர்கள்

முனைவர் ச. சிவகாமி
பேராசிரியர்
தமிழ் இலக்கியம் மற்றும் சுவடியியல் புலம்

*தமிழ்த்தாய்க்குத் தலைமகவாய்
தமிழாய்வு நாளும் தழைத்தோங்க
தமிழோசை உலகமெலாம் முழங்க
தமிழர் புகழ் தரணி இசைக்க
தமிழார்வலர் அகங்கனிந்து வாழ்த்த
தமிழ்த் தொண்டே தன் நோக்காய்
தமிழ் ஞாயிற்று ஒளியில்
தமிழ்த்தேன் சிந்தும் தாமரைகள்
தளர்வறியா தமிழ்ப்பணியில்
தமிழ்உலா காணத் தூதுவிடும்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்*

## தோற்றம்

தேமதுரத் தமிழோசை உலகமெங்கும் ஒலிக்கும் வகையில் தமிழுக்கென்று தனித்ததொரு நிறுவனம் பிரெஞ்சு அகாதெமி போன்று உருவாக்கப்படவேண்டும் என்ற வேணவா தமிழறிஞரிடையே கனன்று கொண்டிருந்தது. இவ்வுணர்வுக்கனல் 1968 இல் சென்னையில் நடைபெற்ற இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டின் போது அன்றைய தமிழக முதல்வர் பேரறிஞர் அண்ணா அவர்கள் வழி கருத்துருவாக்கம் செய்யப்பட்டது. அக்கருத்தரங்கில், தக்கணக் கல்லூரி முதுகலை ஆராய்ச்சி நிறுவன (பூனே) இயக்குநர் டாக்டர். கத்ரே, இதற்கான முன் வரைவுத் திட்டத்தினை வழங்கினார்.

அதன்படி 'உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்' தோன்றி செயல் படுவதற்கான உதவியை யுனெஸ்கோவிடம் தமிழறிஞர் நாடினர்.

1970 சூலைத் திங்களில் மூன்றாம் உலகத் தமிழ் மாநாடு பாரிஸில் நடைபெற்றது. அம்மாநாட்டைத் தொடங்கி வைத்த, அன்று யுனெஸ்கோவின் டைரக்டர் ஜெனரல் பொறுப்பிலிருந்த டாக்டர் மால்கம் ஆதிசேஷையா அவர்கள், 1968 நவம்பரில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் நிறுவுவது பற்றி யுனெஸ்கோ நிறைவேற்றிய தீர்மானத்தை எடுத்துவைத்தார். அம்மாநாட்டில், 'உலகத் தமிழாராய்ச்சி நிறுவன'க் கட்டமைப்புப் பற்றிய திட்டமும் அறிவிக்கப்பட்டது. பதிவு பெற்ற ஒரு சங்கமாக நிறுவுவது பற்றியும் முடிவு செய்யப்பட்டது. அதன்படி 1970 அக்டோபர் 21ஆம் நாள் சங்கங்கள் பதிவுச் சட்டத்தின்படி பதிவு செய்யப்பெற்றது. சென்னை, ஸ்டெர்லிங் ரோடு, 'தமிழகம்' இல்லத்தில் தற்காலிகமாக இயங்கி, 1972 முதல் சென்னை, மைய பல்தொழில் நுட்பக் கல்லூரி வளாகத்தில் உயிர்ப்புப் பெற்று நாளும் தமிழ் மணம் பரப்பிக் கொண்டுள்ளது.

### நோக்கம்

தமிழ்க் கல்வியில் உயராய்வினை வளப்படுத்துதல், தமிழாய் வாளருக்குத் தேவையான ஆவணங்களை உருவாக்குதல், தமிழ், தமிழர், இலக்கியம், வரலாறு, மருத்துவம், கல்வி, கலை, சமுதாயம், பண்பாடு, அறிவியல் எனத் துறைதோறும் தமிழாய்வை மேம்படுத்துதல், தமிழின் பெருமையை அயலவருக்குச் சிறப்பாக எடுத்துரைத்தல், உலகத் தமிழறிஞரிடையே தொடர்பு கொண்டு அவரும், நிறுவனமும் பயன்கொளும் நிலையில் தமிழாய்வினை வளர்த்தல் என்பன இவ் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் அடிப்படை இலக்காக, தலையாய நோக்கமாக அமைகின்றன.

தமிழைத் தாய்மொழியாகக் கொள்ளாத பிற இந்திய மொழி யினருக்கும் பிற நாட்டினருக்கும் கற்பித்தல் என்பது பிறிதொரு நோக்கமாகும். இவற்றின் அடிப்படையில் நிறுவனம் பல்வேறு திட்டங்களின் வழிச் செயலாற்றி வருகிறது.

### தமிழ்ப்பணி

நிறுவனத்தின் தமிழ்ப்பணி என்பது அவ்வவ் கால இயக்குநரின் திட்டங்களை, செயற்பாட்டைப் பொறுத்தமைகிறது.

எனவே இக்கட்டுரை அந்தந்தக்கால இயக்குநரின் பதவிக்கால அடிப்படையில் அணுகப்பட்டுள்ளது. நிறுவனத்தின் வளர்ச்சிப் போக்கினை வரலாற்றடிப்படையில் காண்பதற்கு இந்நெறியே சிறந்தது என்பதும் எண்ணம்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தோன்றிய பொழுது அது தாய் நிறுவனமான உலகத் தமிழாராய்ச்சிக் கழகத்தின் (International Association of Tamil Research - IATR) அரவணைப்பில் அமைந்தது. முனைவர் மு. வரதராசனாரை மதிப்புறு இயக்குநராகவும், முனைவர் கா. மீனாட்சி சுந்தரனாரை முதன்மை ஆட்சி அலுவலராகவும் நியமனம் செய்த பின்பு தனித்து இயங்கத் தொடங்கியது. தமிழ்ப் பணியும் விதைக்கப்பட்டு முளைவிடத் தொடங்கியது. நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து இன்று நாற்றிசையும் புகழ்மணம் பரப்பி வருகிறது. இவ் வளர்ச்சி கீழ்க்கண்டவாறு பகுத்துரைக்கப் படுகிறது.

1. 15.09.1971 - 20.06.1974 - முனைவர் கா. மீனாட்சி சுந்தரம்

   21.06.1974 - 29.10.1974 - முனைவர் க.த. திருநாவுக்கரசு

2. 30.10.1974 - 21.08.1986 - முனைவர் ச.வே. சுப்பிரமணியன்

3. 22.08.1986 - 31.12.1987 - முனைவர் அ.நா. பெருமாள்

4. 01.01.1987 - 05.05.1989 - முனைவர் க.த. திருநாவுக்கரசு

   09.5.1989 - 17.08.1989 - முனைவர் அன்னிதாமசு (பொறுப்பு)

5. 18.08.1989 - 12.02.1991 - முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன்

6. 13.02.1991 - 16.10.1994 - முனைவர் அன்னிதாமசு (பொறுப்பு)

7. 17.10.1994 - 30.01.2002 - முனைவர் ச.சு. இராமர் இளங்கோ

8. 31.01.2002 - 31.01.2006 - முனைவர் சா. கிருட்டினமூர்த்தி

9. 01.02.2006 - 17.06.2008 - முனைவர் ம. இராசேந்திரன் (பொறுப்பு)

10. 18.06.2008-19.08.2008 - முனைவர் செ. ஜீன்லாறன்ஸ்

11. 20.08.2008 - 19.08.2011 - முனைவர் கரு.அழ. குணசேகரன்

12. 20.08.2011 - 30.09.2011 - முனைவர் கூ.வ. எழிலரசு

13. 01.10.2011 - 22.11.2012 - முனைவர் கா.மு. சேகர் (பொறுப்பு)

14. 23.11.2012 - - முனைவர் கோ. விசயராகவன்

## 1. முனைவர் கா. மீனாட்சி சுந்தரம் (15.9.1971 – 20.6.1974) (முதன்மை ஆட்சி அலுவலர்)

### நிறுவனப் பணிகள்

நிறுவனம், யுனெஸ்கோவின் பேராதரவுடன் தன் நோக்கச் சிகரங்களை நோக்கி அடியெடுத்து வைத்தது. தமிழ் மற்றும் ஆங்கிலம் எனும் இருமொழியினதாகத் தமிழியல் (Journal of Tamil Studies - Jots) எனும் அரையாண்டிதழ் புதுப்பொலிவுடன், உலகத் தமிழாராய்ச்சிக் கழகத்தினின்றும் (IATR) பிரிந்து புதிய எண் குறியீடுடன் ஐந்து தொகுதிகள் வெளிவந்துள்ளன. வெளிநாட்டுத் தமிழறிஞர் ஆர்வத்துடன் பங்கேற்க இவை வெளியீட்டிற்கான முழுச் செலவினையும் யுனெஸ்கோ சிப்ஸ் (Cipsh) நிறுவன உதவியுடன் ஏற்றுக்கொண்டது.

தமிழ் தாய்மொழியாக அமையாத பிற மொழியினருக்குத் தமிழை அறிவியல் துணையுடன் எளிதாகக் கற்பிப்பதற்காக யுனெஸ்கோ பத்து இருக்கைகள் கொண்ட மொழி பயிற்சிக் கூடத்தை உரிய கருவிகளுடன், குளிரூட்டும் வாய்ப்புடன் அமைத்துக் கொடுத்தது இக்காலத்தின் குறிப்பிடத்தக்க சாதனையாகும். 1973இல் தொடங்கிய இப்பணி 1974இல் நிறைவுற்று அயல்நாட்டவர் தமிழ்க்கல்விக்கு அடித்தளம் இடப்பட்டது. அறிமுக நிலை, உயர்நிலை (Elementary and Advanced) எனும் இருவகைகளில் இக் கல்வி தொடங்கப்பட்டது.

தமிழாய்விற்கு இன்றியமையாத நூலகம் ஒன்றும் ஏற்படுத்தப் பட்டு யுனெஸ்கோ மற்றும் சிப்ஸ் நல்கிய நிதி ஆதரவுடன் சுமார் 1500 நூல்கள் நன்கொடையாகப் பெறப்பட்டன.

தமிழ் ஆராய்ச்சியின் மேம்பாட்டிற்காக மூவரை யுனெஸ்கோ அமெரிக்கா அனுப்பி வைத்ததும் கூறத்தக்கது. நிறுவன முதுநிலை ஆராய்ச்சியாளராகப் பணிபுரிந்த முனைவர் வ.அய். சுப்பிரமணியம்

*(1969-70)* 'மொழி பயிற்றுவித்தல் - குறிப்பாகத் தமிழ்' எனும் திட்டத்திலும், முனைவர் பொன். கோதண்டராமன், முனைவர் சு. பாலசந்திரன் *(1972)* ஆகியோர் 'இலக்கியத் திறனாய்வு'க் கல்விக்காகவும் சென்றவர்களாவர்.

நிறுவனக் கல்விப் பணியாளர் வெளிநாடு சென்று வந்ததுடன் பன்னாட்டுத் தமிழறிஞர் பலரும் நிறுவனத்திற்கு வருகை தந்துள்ளனர். இங்ஙனம் வருகை புரிந்த பதினெழுவரில் சிலர் பிரிட்டிஷ் கவுன்சில் முதலான பிற நிறுவனங்களின் துணையுடன் சிறப்புச் சொற்பொழிவும் நிகழ்த்தியுள்ளனர்.

தமிழாய்வினை நெறிப்படுத்தும் கருத்தரங்கு, நூல் வெளியீடு என்பனவற்றிற்கும் இக்காலத்தில் கால்கோள் இடப்பட்டுள்ளது. ஆராய்ச்சி நெறிமுறைகள் *(1974)* கருத்தரங்கம் இப்பகுதியில் திட்டமிடப்பட்டது. ஆங்கிலத்தில் வெளிவந்த தமிழ், தமிழர் பற்றிய ஆய்வுகளைத் தொகுத்து, இந்திய, அயல்நாட்டு மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டுள்ள தமிழ் நூல்கள் மற்றும் பிற மொழிகளிலிருந்து தமிழுக்கு மொழிபெயர்க்கப்பட்ட நூல்கள் பற்றிய தொகுப்புடன் வெளியிடும் திட்டம் அறிவிக்கப்பட்டது. மற்றும் சில ஆய்வுகள் தொடக்கத்துடன் நின்றுவிட்டன.

யுனெஸ்கோவின் நிதியுதவியுடன் 'A Course in Modern Standard Tamil' நூலாக்கத்திற்கும் வித்திடப்பட்டது.

இவ்வாறு நிறுவனத்தின் தொடக்க காலம், தமிழ்ப் பணிகள் சிலவற்றின் தொடக்கமாகவும் சிறப்புற்றுள்ளது. இக்காலத்தில் முதன்மை ஆட்சி அலுவலராக விளங்கிய முனைவர் கா. மீனாட்சி சுந்தரம் ஓய்வு பெற்றபின் 4 திங்களுக்கு மட்டும் *(21.6.74 - 29.10.74)* முனைவர் க.த. திருநாவுக்கரசு அப்பொறுப்பில் செயல்பட்டார்.

இக்காலக்கட்டத்துடன் யுனெஸ்கோவின் பலவகை நிதியுதவிகளும் முற்றுப்பெற்றன எனலாம். தமிழக அரசின் நிதிநல்கையுடன் நிறுவனத்தின் அனைத்துச் செயற்பாடுகளும் இதன்பின் தொடர்ந்தன.

## 2. முனைவர் ச.வே. சுப்பிரமணியன் (30.10.1974 – 21.8.1986)

### நிறுவனப் பணிகள்

நிறுவனத்தின் முதன்மை ஆட்சி அலுவலராகப் பொறுப்பேற்ற முனைவர் ச.வே. சுப்பிரமணியன் சனவரி 1976இல் நிரந்தர

இயக்குநரானார். நிறுவன வரலாற்றில் இப்பகுதி பலவகைகளாலும் தனிச்சிறப்புடன் பொலிவுற்ற காலமாகும். நிறுவனத்தின் பன்முக வளர்ச்சிகளுக்கு இங்கு வலுவான அடித்தளம் இடப்பெற்றது. தம் முதற் பணியாக இவர் பலவகைக் கருத்தரங்குகளைச் செயல் படுத்தினார். அவை கீழ்க்கண்டவாறு அமைகின்றன.

**தமிழரங்குகள்**

**1. வெள்ளிக்கிழமை (வாரக்) கருத்தரங்கம் :** நிறுவன ஆய்வு அலுவலர்களுக்காக 1974 நவம்பர் முதல் வாரத்தில் தொடங்கப்பட்ட இக்கருத்தரங்கில், ஆய்வாளர் (ஆய்வு மாணாக்கர்) வருகையால் பின் அவரும் பங்கேற்றனர். முதல் இரண்டாண்டுக்காலம் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் மாலை 3.00 மணியளவில் ஆய்வலுவலர் இருவர் நூன்மதிப்புரை வழங்கினர். பின் இது ஒருவர் ஆய்வுக் கட்டுரை வாசித்தளிக்கவும் அவையோரின் வினாக்களுக்கும் ஐயங்களுக்கும் விடையளிக்கவும் ஆகச் சிறந்த திறனாய்வரங்கமாக வளர்ந்தது.

கட்டுரையாளர் தத்தம் ஆய்வுப் பொருள், ஆய்வுத்துறை தொடர்பான கட்டுரை வழங்குதல் என்ற நிலை 1980இல் மாற்றங் கண்டது. அனைவரும் ஒரே பொருள் / துறை தொடர்பான கட்டுரைகள் பன்முக நோக்கில் படைக்கப்பட்டன. இலக்கியத்தில் நிறம், கற்பனை, உவமை, பாரதியார், பொருளாதாரம், உளவியல், சமூகவியல் என அவை தொடர்ந்தன. நிறுவன ஆய்வுப் பணியாளரும் ஆய்வாளரும் பல்துறை அறிவு பெறவும், தம் ஆய்வுகளை மேம்படுத்தவும் இது பெரிதும் துணையாயிற்று.

**2. திங்கள் கருத்தரங்கம் :** சென்னை மாநகரின் தமிழார்வலர், ஆய்வாளர் ஆகியோரும் நிறுவனப் பணியில் பங்கேற்பதற்கு வாய்ப்பாகத் திங்கள் கருத்தரங்கம் 1974 நவம்பரில் தொடங்கப் பட்டது. தமிழாய்வை வளப்படுத்த வேண்டும்; புதுமை காண வேண்டும்; உயராய்விற்குத் துணைநிற்க வேண்டும்; தமிழின் பெருமையை உலகிற்கு அறிவிப்பதாய் அமைய வேண்டும் எனும் நிறுவனத்தின் நோக்கம் நிறைவேறும் வகையில் இக்கருத்தரங்குத் திட்டமிடப்பட்டது. ஆகவே இதன் பொதுப் பொருளாய்த் '**தமிழ் இலக்கியக் கொள்கை**' வரையறுக்கப்பட்டது.

முதல் ஒன்பது ஆண்டுகளில் படைப்போன், படைப்பு, பாடு பொருள், வகைமையடிப்படையில் இது நிகழ்ந்தது. தமிழுக்கென்று

தனித்த கொள்கை உண்டு என்பதை இக்கருத்தரங்குகள் உறுதி செய்ததுடன், தமிழின் பெருமையைப் பலவிதத்திலும் புரிந்து கொள்ள உதவியதன் காரணமாக இவை பெரும் வரவேற்பைப் பெற்றன. இதன்பின் இரண்டாண்டுகள் இலக்கியக் கொள்கையானது இலக்கியங்களின் 'நோக்கமும் பயனும்' காண்பதாக மாற்றப்பட்டது. இலக்கியப் படைப்பின் அடிப்படையை இனங்காண்பதாகவும், பெற்ற வெற்றியை அளவிடுதல்ாகவும் இது சிறப்புற்றது.

**3. ஆண்டுக் கருத்தரங்கம்** : தமிழகம் மட்டுமன்றி இந்தியா முழுமையிலும் உள்ள தமிழறிஞரைப் பயன்கொள்ளுதல், அவரது தமிழறிவையும் வெளிக்கொணர்தல் என்ற நிலையில், பலருக்கும் வாய்ப்பளிக்கும் தன்மையினதாக 1975 முதல் ஆண்டுக் கருத்தரங்கம் மூன்றுநாட்கள் தொடர்ந்து நிகழக் கூடியதாகத் தொடங்கப்பட்டது. முன் திட்டப்படி பல்துறை அறிஞர் பங்கேற்க, ஆய்வின் அடிப்படையை அறிவுறுத்தும் ஆராய்ச்சி நெறிமுறைகள், இவ்வகையில் முதலாவதாக நிறைவேறியது. திருக்குறள் (1976), நாட்டுப் புறவியல் (1977) என்பன தொடர்ந்தன.

ஆய்வில் புதிய பாதை, பார்வை, தமிழ்ச் சமூகத் தேவையை நிறைவேற்றல், தமிழின் பெருமையை வெளிநாட்டவர் தெளிவாக, ஐயமற உணர்தல் என்ற ஆழ்நோக்கில் **'தமிழர் மரபுச் செல்வம்'** எனும் ஆண்டுதோறும் தொடரும் தமிழ்ப்புரட்சிக் கருத்தரங்கம் 1978 முதல் மலர்ந்தது. பிற மொழியினருக்கு, நாட்டினருக்குத் தெரிவித்தல் என்ற நோக்கத்தின் காரணமாக, **'Heritage of the Tamils'** என ஆங்கிலத்தில் இது தொடர்ந்தது. இம்மரபுச் செல்வத் தொகுதிகள் இலக்கியம், இலக்கணம், தத்துவம், கலை, கட்டிடக் கலை, பண்டைய வரலாறு, கோயிற்கலை, சித்த மருத்துவம், கல்வியும் தொழிலும் எனப் பல்துறை அவாவி நிற்கின்றன.

**4. ஆய்வுமன்றக் கருத்தரங்கம்** : இளம் ஆய்வாளரின் நலன் நாடி அவருக்குத் துணை செய்யும் பொருட்டு இது தோற்றுவிக்கப் பெற்றது. நிறுவனத்தின் முழுநேர, பகுதிநேர ஆய்வாளர் இதில் பங்கேற்றனர். கட்டுரைப் படைக்கும் திறனை அவர் வளர்த்துக் கொள்ளவும், ஆய்வில் ஏற்படும் இடர்ப்பாடுகளையும் ஐயங்களை யும் களைவதற்கும் இது உதவியது. அவ்வவரின் ஆய்வுத் தலைப்பினை ஒட்டியே எழுத்துரைகள் அமைந்தன. இக்கருத்தரங்கம் தொடக்க காலத்தில் ஒரு முழு நாள் கருத்தரங்காக, சென்னை நகரக் கல்லூரி ஒவ்வொன்றிலாக நடத்தப்பட்டது. பின் நிறுவனத்திலேயே இரண்டு அல்லது மூன்று கட்டுரைகளுடன் நடத்தப்பட்டது.

## இக்கருத்தரங்குகளின் தனிச்சிறப்புகள்

வாரக் கருத்தரங்கம் முதல் நிறுவனம் நடத்தும் எந்தக் கருத்தரங்கிலும் அதில் படிக்கப்படும் கட்டுரைகளை முன் கூட்டியே பெற்று அவையோருக்கு உருளச்சு (Cyclostyle)செய்து கொடுத்ததால் ஆய்வரங்கின் பயன் கூடியதுடன் ஆய்வாளருக்கு இதனால் புத்துணர்வுத் தோன்றியதும் உண்மை. அவை நிறுவன நூலகத்துள் வைத்துப் பேணப்பட்டுள்ளமையால் நிறுவனத்திற்குப் புறத்தே உள்ள பிற ஆய்வாளரும் பயன் கொள்கின்றனர்.

இலக்கியக் கொள்கை கருத்தரங்கில் படிக்கப்பட்ட கட்டுரைகள் பின்னாளில் நூலாக விரிவடைந்ததும் குறிப்பிடத் தக்கது. சித்திரகவி, தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம், ஊஞ்சல் இலக்கியம் போல்வன சான்றுகள்.

1983ஆம் ஆண்டு முதல் ஆண்டுக் கருத்தரங்கக் (Heritage of the Tamils) கட்டுரைத் தொகுப்பினைக் கருத்தரங்கின் போதே நூலாக வெளியிட்டது தமிழ் ஆய்வுலகில் புதுமையும் மறுமலர்ச்சியும் தோன்ற வழிவகுத்தது.

## நூலகம்

ஆய்வாளர் தம் ஆய்வுப்பணியை இடரின்றிச் செவ்வனே தொடர நூலகம் இன்றியமையாதது. இதனால் நிறுவன ஆய்வாளர் தேவை குறித்துப் பிற நூலகங்களுக்குச் செல்வது மிகுதியும் குறைந்து அவரது வேலைநேரம் வீணாகாமல் பாதுகாக்கப்படுகிறது. 1974இல் சுமார் 2000 நூல்களுடன் இருந்த நிறுவன நூலகம் தீவிர கவனம் செலுத்தப்பட்டு ஆண்டுதோறும் நூல்கள் வாங்குவதற்கெனப் பெருந்தொகை செலவிடப்பட்டது. புதிய நூல்களை வாங்குதல், பழைய நூல்களைக் கொடையாளரிடமிருந்து அன்பளிப்பாகப் பெறுதல், அல்லது விலை கொடுத்து வாங்குதல் எனும் முறையில் நூல்களின் எண்ணிக்கை 26,365 ஆகப் பெருகியது. கொடையாளர் பட்டியல் - **எழுத்தாளர் அகிலன், டாக்டர் மு.வ., திருமதி. பார்வதி சுப்பிரமணியம், ஆர்ச் பிஷப் அருளப்பா, திரு. மு.கோ. இராமன், திரு.வே.சு. உமாபதி, திருமதி. அம்புஜம் தாமஸ்** என நீண்டதாகும். பிற நூலகங்களில் காணக் கிடைக்காத இருநூற்றுக்கும் மேற்பட்ட பல்வகை ஆய்வேடுகளின் தொகுப்பு இதன் தனிச் சிறப்பாகும்.

இதழ்களின் தொகுப்பும் இங்கு முதன்மை பெறுகின்றது. நூல்களை விலைக்கு வாங்குதல், அன்பளிப்பாகப் பெறுதல், நிறுவன இதழுக்கு (தமிழியல் - Journal of Tamil Studies) மாற்று என அவை அமைகின்றன. செய்தித் தாள்களும், தமிழ் இதழ்கள் பலவும் எதிர்காலத்திலும் ஆய்வாளருக்குப் பயன்படும் வகையில் புத்தகக்கட்டு (Binding) செய்யப் பெற்று பாதுகாத்தல் இக்காலத்தே தொடங்கப்பெற்றது.

இவற்றால் எண்ணற்ற புறநிலை ஆய்வாளர் நாள்தோறும் நிறுவன நூலகத்தைப் பயன்படுத்துகின்றனர். தமிழாய்வாளருக்கு ஒரு வேடந்தாங்கலாக நிறுவன நூலகத்தை உருவாக்கிய பெருமை இவரைச் சாரும். (நூலகம் பற்றி தனித் தலைப்பில் இடம் பெற்றுள்ளது.)

## தமிழ்க்கல்வி

தமிழ் துறைதோறும் பொலிவுற வேண்டும்; பாரதி விழைந்தபடி மேனாட்டார் அதனை வணக்கம் செய்தல் வேண்டும் எனும் தொலைநோக்கில் செயற்படுத்தப்பட்ட திட்டங்களில் நிறுவனத்தை ஆய்வு மையமாக்கியமையும் புதிய பட்டயக் கல்வி களை உருவாக்கியமையும் முன்னிற்கின்றன.

## ஆய்வு மையம்

அரிதின் முயன்று நிறுவனத்தை 23.10.1975இல் சென்னைப் பல்கலைக் கழகத்தின் அனுமதி பெற்ற ஆய்வு நிறுவனமாக்கினார். இதனால் முழுநேர மற்றும் பகுதிநேர ஆய்வாளர் நிறுவனத்துடன் இணைந்தனர். நிறுவன ஆய்வுப் பணியாளர் ஆய்வு நெறியாளராக வும் உயர்ந்தனர். இவர் காலப்பகுதியில் 25 முழுநேர ஆய்வாளரும் 10 பகுதிநேர ஆய்வாளரும் முனைவர் பட்டம் பெற்றனர். முழு நேர ஆய்வாளர் ஐவருக்கு உதவித்தொகை வழங்கும் திட்டத்தையும் செயல்படுத்தினார்.

பட்டய வகுப்புகள் இரண்டு 1979இல் தொடங்கப் பெற்றன. இவை தமிழகத்தில் பிற நிறுவனங்களிலோ, பல்கலைக் கழகங் களிலோ இடம்பெறாதனவாகும். பத்து மாத கால எல்லையுடைய வையாகும். இவற்றுள் சுவடியியல் துறை ஓலைச் சுவடிகளைப் படிக்கவும், புரிந்து கொள்ளவும், பதிப்பிக்கவும் மாணாக்கர்க்குக் கற்பித்தது. தமிழரின் பழந்தமிழ்க் கொடையை அழியாது

பாதுகாத்தலுடன் புத்துயிர் ஊட்டலும் இதன் நோக்கமாகும். இதன் காரணமாகப் பலர் உதவியுடன் சுவடித்தொகுப்பும் பாதுகாப்பும் நிறுவனத்தில் கால்கொண்டது.

தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கும், ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கும் சிறப்பாக மொழிபெயர்க்கும் வன்மை பெறும் கல்வியை மொழிபெயர்ப்பியல் பட்டய வகுப்பு மாணவர்க்கு அளித்தது.

இவ்விதப் பட்டய வகுப்புகள் ஒவ்வொன்றிலும் பயிற்சி பெறும் மாணாக்கர் ஐவருக்கு ஊக்கமளிக்க உதவித்தொகையும் வழங்கப்பட்டது. பயிற்சி நிறைவில் முதலாவதாகத் தேறிய மாணாக்கர் சிலர் நிறுவனத்தில் பணிபுரியும் வாய்ப்பும் பெற்றனர்.

இவற்றின் காரணமாகச் சுவடிப்பயிற்சிக் கையேடு (மு.கோ. இராமன்); மொழிபெயர்ப்பியல் (சு. சண்முக வேலாயுதம்) எனும் பாட நூல்கள் உருவாக்கப்பட்டன. பயிற்சியை நிறைவு செய்ய மாணாக்கரால் ஒப்படைக்கப்பட்ட தரமான பல சுவடிப் பதிப்புகள் நூலாக்கமும் கண்டன. தொடர்ந்து நிகழும் சுவடிப்பதிப்பு நூல்களுக்கு இப்பட்டயம் பெருந்துணையாகின்றது.

**தமிழ் கற்பித்தல்:** நிறுவனத்தின் முதன்மை நோக்கங்களுள் ஒன்றான பிறமொழியினருக்குத் தமிழ் கற்பித்தல் தோற்றம் முதல் செயல்பட்டு வருகிறது. இதற்கான முன் முயற்சியான **'A Course in Modern Standard Tamil'** நூலாக்கம் கண்டது. நிறுவனத்திற்கு வந்து 'தமிழ் படிக்க இயலாதவர்களை கருத்தில் கொண்டு, தங்கள் இல்லங்களிலிருந்தே கற்றுக் கொள்ள வசதியாக, ஒலிப்பதிவு நாடாக்களில் தமிழ் ஒலிப்புமுறை கொண்டுவரப்பட்டது. 'தமிழ் - தன் பயிற்றுத் திட்டம்' எனத் தமிழக அரசின் வேண்டுகோளுக்கிணங்க இத்திட்டம் செயற்படுத்தப்பட்டது. பிஜி, மொரிசியசு, ரியூனியன் தென்னாப்பிரிக்கா, சிங்கப்பூர் போன்ற வெளிநாடுகளில் குடியேற்றம் பெற்றுள்ள தமிழ்க் குடும்பத்தினரின் சந்ததியினர் தமிழ் மொழியினைத் தங்கள் இல்லத்திலிருந்தே கற்றுக்கொள்ள வாய்ப்பாக இப்பெருந்திட்டம் அமைகின்றது. 20 தமிழ்ப் பாடங்கள் 6 பதிவு நாடாக்களாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன. உலகத் தமிழரிடையே பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளது. இத்திட்டம் நிறுவனம் தமிழுக்குச் செய்துள்ள பெருந் தொண்டாகும்.

இத்திட்டத்தின் அடிப்படையில் பாடங்கள் சுற்றுச்சூழல் சார்ந்த பேச்சு வழக்கில் தமிழ் என்பதை மையமாகக் கொண்டு

தயாரிக்கப்பட்டு அந்தப் பாடங்கள் எல்லாம் ஒலிப்பதிவு நாடாக் களில் தேர்ந்த குரல் வளமிக்கவர்களின் உதவியுடன் ஒலிப்பதிவுச் செய்யப்பட்டுள்ளன. இருபது பாடங்கள் பேச்சுத் தமிழ் - இரண்டு ஒலிப்பதிவு நாடாக்களிலும், அதே இருபது பாடங்கள் 'இலக்கியத் தமிழ்' நடையிலும் ஒலிப்பதிவுச் செய்யப்பட்டுள்ளன. பிறிதொரு ஒலிப்பதிவு நாடாவில் முன் சொல்லியுள்ள பாடப்பகுதிகளில் கண்டுள்ள பயிற்சிகளின் தொகுப்பினையும் 6ஆவது ஒலிப்பதிவு நாடாவில் தமிழ் ஒலிகள் பற்றியும் வேறுபாடுகள் பற்றியும் கேட்டுணரும் திறனுக்கும் சொல்லிப் பழகுதலுக்குமான பகுதிகள் ஒலிப்பதிவுச் செய்யப்பட்டுள்ளன. இவற்றின் ஒலிப்பு நேரம் 360 மணித் துளிகளாகும். ஒலிப்பதிவாகியுள்ள பகுதிகள் அச்சில் படங்களுடன் பாட நூலாகவும் தயாரிக்கப்பட்டுள்ளன.

### அறக்கட்டளை

நிறுவன, தமிழ் வளர்ச்சியின் மற்றொரு பரிமாணமாக அறக்கட்டளைகளின் தோற்றம் அமைகின்றது. 1983இல் பன்னிரண்டு, 1984இல் இரண்டு என மொத்தம் பதினான்கு அறக்கட்டளைகள் இக்காலத்தில் எழுந்தன. தனி மனிதர் கொடை அல்லது பலரது முயற்சி என்ற நிலையில் இவை நிறுவப்பட்டுள்ளன.

ஒவ்வொரு அறக்கட்டளையின் சார்பிலும், ஆண்டு தோறும் ஒரு பேராசிரியரைத் தேர்ந்து, இரு நாட்களுக்குத் தலா ஒரு மணி நேரச் சொற்பொழிவாற்றச் செய்து, கலந்துரையாடலுக்கும் இடமளித்து, பொழிவின் போதே நூலாக, நிறுவன வெளியீடாகச் சிறப்பித்தல் அறக்கட்டளைகளின் கோட்பாடாக வலியுறுத்தப்பட்டது. அறக் கட்டளைப் பெயராளரின் பிறந்தநாளில் நடத்தவும் முடிவெடுக்கப் பட்டது. இக்காலப் பகுதியில் 8 அறக் கட்டளைகளின் சார்பில் 14 சொற்பொழிவுகள் திட்டமிட்டபடி நூலாக்கத்துடன் நிறைவேறின. இதன் காரணமாக அறக்கட்டளை, அவற்றின் சொற்பொழிவு, நூலாக்கம் என்பன பின்வரும் ஆண்டுகளில் பெருகியமை. இத்திட்டம் பெற்ற வெற்றியை நவிலும்.

### ஆய்வுத் திட்டங்கள்

திங்கள் (இலக்கியக் கொள்கை), ஆண்டு (தமிழர் பண்பாட்டு மரபுச்செல்வம்) என்று கருத்தரங்குகளுக்குத் திட்டமிட்ட தலைப்புகள் அமைந்தது போல் ஆய்வுப் பணியாளருக்கும் ஆய்வு மாணாக்கருக்கும் எனத் திட்டப்பணிகள் உருவாக்கப்பட்டன.

அவற்றுள் குறிக்கத்தக்கனவற்றுள் தொல்காப்பிய உரைவளம் முதன்மை பெறுகிறது. இவருடைய காலத்தில் சிறப்புப்பாயிரம் முதல் ஒவ்வொரு இயலுக்கும் ஒன்றாக 18 தொகுதிகளை நூலாக்கம் வரை நிறைவேற்றிய இதன் பொறுப்பாளர் ஆ. சிவலிங்கனார் தொடரும் காலங்களில் முழுமையாக இப்பணியை நிறைவேற்றியுள்ளார் என்பதும் அறியத்தக்கது.

'தமிழக ஊர்ப்பெயர்கள்' அடுத்த நிலையில் எண்ணத் தக்கதாகும். தமிழ் இலக்கியம், கல்வெட்டு ஆகியவற்றுடன் களப்பணி மூலம் தமிழக ஊர்ப்பெயர்களனைத்தையும் மாவட்ட வாரியாகத் தொகுத்துத் தனித்தனித் தொகுதிகளாக வெளியிடும் திட்டம் இக்காலப் பகுதியில் மிகுந்த முன்னேற்றம் அடைந்தது. இலக்கியத்தில் ஊர்ப் பெயர்கள் என இருதொகுதிகள், கல்வெட்டில் ஊர்ப் பெயர்கள், செங்கைமாவட்ட ஊர்ப் பெயர்கள், தஞ்சை மாவட்ட ஊர்ப் பெயர்கள் என ஐந்து தொகுதிகளாக வெளி வந்தமை இத்திட்ட வெற்றியைக் காட்டும். பிறகு மற்றிரு தொகுதிகளும் நிறைவு செய்யப்பட்டன.

ஆண்டுதோறுமாகத் தமிழ் மொழிப் பெற்றுள்ள வளர்ச்சியை அறுதியிடும் நோக்கோடு அந்தந்த ஆண்டுகளில் தமிழ் திட்டமிடப் பட்டு, நிறுவன ஆய்வாளரும் பிறரும் பங்கேற்க வகை செய்யப் பட்டது. 1980ஆம் ஆண்டு தொடங்கி 1984 வரை 5 தொகுதிகள் வெளிவந்தன. புதுமையானதும் பயனுடையதுமான இத்திட்டம் தமிழுலகில் மிகுந்த வரவேற்பைப் பெற்றதாகும்.

நிறுவன வெளியீடுகளில் தவறாது இடம் பெற்று குறிப் பிடத்தக்க இடம்பெற்றுள்ள சுவடிப்பதிப்பும் இவண் கூறத் தக்கதாகும். இலக்கியம், இலக்கணம் தொடர்பான சுவடிகள் பதிப்பிக்கப் படுவதுடன், மருத்துவச் சுவடிகளையும் பதிப்பித்தல் இவரால் மிகுதியாக ஊக்குவிக்கப் பெற்றது. 1980இல் தொடங்கப் பட்ட இப்பணியில், இவர் கால எல்லையில் இலக்கியம் (12), இலக்கணம் (2), அறிவியல் (2), மருத்துவம் (5) என இருபத்தொரு நூல்கள் வெளியாயின. மற்ற ஐந்து நூல்கள் அச்சுக்குத் தயார் நிலையிலும் இருந்தன. கூவநூல், மனைநூல், கண் மருத்துவம், மருந்து செய்முறைகள், வெள்ளைக்காரன் கதை, சின்ன மகிபன் குளுவ நாடகம், சிந்து இலக்கியம், மெய்க்கீர்த்திகள் என இவற்றுள் பெரும்பான்மை நூல்கள் மிகுந்த வரவேற்பைப் பெற்றதும் குறிக்கத்தக்கது.

தமிழிலிருந்து ஆங்கிலத்திற்கு மொழிபெயர்த்து வெளியிடும் மொழிபெயர்ப்புத் திட்டமும் தொல்காப்பிய, சங்க இலக்கிய மொழிபெயர்ப்புகளுடன் நடைபயின்றது. தமிழ், தமிழர், தமிழிலக்கியம், தமிழ்நாடு என்பன பற்றி உலகோர்க்கு அறிவிக்கும் நிலையில் ஆங்கிலத்தில் சிறுசிறு நூல்கள் வெளியிடும் திட்டம் தொடங்கப்பட்டது. தமக்கெனத் தனித்த சிறந்த பண்பாடுடைய தமிழர் தன்மையைப் பன்முக நோக்கில் ஆய்ந்து காட்டும் திட்டப்பணியும் எண்ணற்பாலது. தமிழர் அளவைகள், மனம், தோற்கருவிகள் என்பன ஒரு சில சான்றுகள். இவற்றுடன் நிறுவன ஆய்வாளரின் ஆய்வேடுகளை அவற்றின் சிறப்பும், பயனும், தேவையும் பற்றி வெளியிடும் திட்டமும் நடைமுறைப்படுத்தப் பட்டது.

## வெளிநாட்டார் தொடர்பு

நிறுவனம் பல நிலைகளிலும் உலகத் தமிழ் அறிஞரிடையே தொடர்பு கொண்டமைந்து, உலகளாவிய பண்பு பெற்றுள்ளது. வெளிநாட்டுத் தமிழறிஞர் அழைப்பின் பேரில் நிறுவனத்திற்கு வந்து ஆராய்ச்சியில் ஈடுபடல் இதில் ஒரு கூறாகும். ஆண்டுதோறும் ஒரு வெளிநாட்டுத் தமிழறிஞரைச் சிறப்புப் பேராசிரியராக நிறுவனத்தில் மூன்று மாத காலம் நியமித்து ஆய்வு செய்யவும், ஆறு சொற்பொழிவுகள் நிகழ்த்தவும் திட்டம் வகுக்கப்பெற்றது. அவ்வகையில் முனைவர் கமில் சுவெலபில் (1981), முனைவர் ஆ. வேலுப்பிள்ளை (1980) ஆகியோர் வந்து ஆய்வு நூலும் பொழிவும் வழங்கினர்.

தமிழார்வமுடைய வெளிநாட்டினர் நிறுவனத்திற்கு வந்து குறுகிய காலம் சிறப்புதவித் தொகை பெற்று ஆய்வு நிகழ்த்தி யமையும் செல்வி தனுதா (போலந்து), திரு. கிரிகரி ஜேம்ஸ் (இங்கிலாந்து) போன்றவரால் அமைந்தது. மேலும், பல வெளிநாட்டுத் தமிழறிஞர் வாய்ப்பேற்பட்ட போது நிறுவனம் வந்து ஆய்வலுவலருடன் கலந்துரையாடியும் சொற்பொழிவாற்றியும் தொடர்பு கொண்டுள்ளனர். ருஷ்ய அறிஞர் அலெக்சாண்டர் டுபியான்ஸ்கி, முனைவர் பூர்ணிகா போன்றோர் சான்றாவர்.

பண்பாட்டுப் பரிமாற்றத் திட்டமும் இக்காலத்தில் வெற்றி கரமாகச் செயல்படுத்தப்பட்டதும் குறிப்பிட வேண்டியதாகும். பல்கலைக் கழக மானியக்குழு, இந்திய அரசாங்கம் ஆகியவற்றின் கலாச்சாரப் பரிவர்த்தனைத் திட்டப்படி, 'பிற நாட்டு மாணவர்க்குச்

சங்க இலக்கியப் பாடம்' உருவானது. இதனை இவர் மூன்று மாத காலம் செக்கோசுலோவேகியாவிலும், அங்கிருந்து முனைவர் வாசக் இங்கு வந்து இணைந்து செயலாற்றி நிறைவேற்றினர்.

உலக மாநாடுகளில் நிறுவனக் கல்விசார் அலுவலர் பங்கேற்றலும் நிறுவன வெளியுலகத் தொடர்பை அதிகரிக்கச் செய்ய காணலாம். மதுரை, உலகத் தமிழ் மாநாடு (1981), வாரணாசி சமஸ்கிருத மாநாடு (1982), திருவனந்தபுரம் உலக மலையாள மாநாடு (1976), மொரீஷியஸ் அனைத்துலகத் தமிழ்ப் பண்பாட்டியக்கக் கருத்தரங்கு (1980), சப்பான் மனித அறிவியல் கருத்தரங்கு (1983), இலங்கை அனைத்துலக இந்து மாநாடு (1982), அகில உலக இசுலாமிய மாநாடு (1978) என இப்பட்டியல் நீளும். இதனால் நிறுவனத்தைப் பற்றியும், நிறுவன ஆய்வுப் பணியாளர் பற்றியும் அறிந்துகொள்ள பெருந்துணையாகின்றது.

நிறுவன ஆய்வு அலுவலர், பிற நிறுவனங்கள் நடத்தும் பொதுக் கருத்தரங்குகள், தேசியக் கருத்தரங்குகள் ஆகியவற்றில் பங்கேற்றுத் தம் திறனை வெளிப்படுத்துவதுடன் நிறுவனத்திற்கும் பெருமை சேர்க்கும் நிலை பெரிதும் ஊக்குவிக்கப்பட்டது. இது ஆய்வாளருக்கு ஆய்வு நாட்டத்தைத் தூண்டுவதுடன் புதிய போக்குகளை அறிந்துகொள்ளவும் வழிவகுக்கிறது. இயன்றவிட மெங்கும் நிறுவன ஆய்வாளர் எழுத்துரையுடன் கலந்து கொள்ள வேண்டுமென்பதை வலியுறுத்தி வழிகாட்டினார். இதனால் நிறுவன ஆய்வாளர், தமிழாய்வு உலகில் நன்மதிப்பு பெற்றது குறிக்கத் தக்கது.

## நூல் வெளியீடு

ஆய்வுத் திட்டங்களின் வெற்றி அவற்றின் வெளியீட்டில் அமைகின்றது. 1975இல் **தமிழில் விடுகதைகள், ஆராய்ச்சி நெறி முறைகள், A Course in Modern Standard Tamil** முதலான ஆறு நூல்களுடன் நூல் வெளியீட்டு வரலாறு தொடங்குகிறது. தொடர்ந்து தமிழாய்வில் ஒரு புதுவேகமும், புத்துணர்ச்சியும் எழுந்த வேலையில் பல பார்வை நூல்களைத் தந்து ஆய்வாளருக்கு வழிகாட்டியது. 126 நூல்கள் இக்காலத்தில் வெளிப்போந்து நிறுவனத்திற்கு ஆய்வுலகில் தனிப்பெரும் அங்கீகாரத்தைப் பெற்றுத்தந்தது. நிறுவன ஊழியரின் ஊதியத்திற்கே தடுமாறிக் கொண்டிருந்த நிலையில் இவ்வெண் ணிக்கை மிகப்பெரிய சாதனையாகும். தமிழ் ஆய்வாளர் தம் ஆய்வுத்துணைகளில் நிறுவன வெளியீட்டிற்கு சிறப்பளித்தல்

அவற்றின் தரத்திற்கு, தேவைக்குக் கிடைத்த மதிப்பேற்பை உணர்த்துகிறது. புதிய புதிய துறைகளும் பார்வைகளுமே இதற்குக் காரணமாகும்.

நாட்டுப்புறவியல் பண்பாட்டியல், கலையியல், வரலாற்றியல், திறனாய்வியல், இலக்கியவியல், ஒப்பியல், இலக்கியக் கொள்கை, ஆண்டுகளில் தமிழ், பாடநூல்கள், தமிழர் பண்பாட்டு மரபுச் செல்வம், தொல்காப்பிய உரைவளம், அறக்கட்டளைச் சொற்பொழிவுகள், ஊர்ப்பெயராய்வு, சுவடிப் பதிப்புகள், நூற்றொகைகள் என்பனவாக இந்நூல்கள் அமைகின்றன.

நிறுவனக் கல்விப்பணியாளர், நிறுவன முழுநேர, பகுதிநேர ஆய்வாளர், சுவடிப்பட்டய மாணாக்கர் ஆகியோரே நூலாசிரியராக இருத்தல் குறிப்பிடத்தக்கது. கருத்தரங்கக் கட்டுரைத் தொகுப்புகளின் பதிப்பாசிரியரும் நிறுவனத்தாரே.

நிறுவன ஆய்வு மாணாக்கர் தம் ஆய்வுப் பொருளோடு தொடர்புடைய தலைப்புகள் அல்லது நிறுவனம் அளித்த திட்டப்பணி என்ற வகையில் நூல் படைத்தனர். தமிழர் நாட்டு விளையாட்டுகள், தமிழர் உணவு, தமிழர் கூத்துகள் என்பன முன்னதற்கும் கண் மருத்துவம், தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள், செங்கை மாவட்ட ஊர்ப் பெயர்கள் என்பன பின்னதற்கும் சான்று. நிறுவன வரலாற்றின் ஒரு பொற்காலமாக இது மலர்ந்தமைக்கு இந்நிலை பெருங் காரணமாகும். மொழிபெயர்ப்பு நூற்றொகை, தமிழக அரசின் விருப்ப நிறைவேற்றமாகும்.

அவ்வப்போது நிறுவன நூல்களுக்கு மதிப்பீட்டு அரங்குகளும் ஏற்பாடு செய்யப்பட்டு அவற்றிற்கான திறனாய்வுகள் நிகழ்ந்தன. திங்கள் கருத்தரங்குகளில் நிறுவனத்தின் புதிய வெளியீடுகள் அறிமுகம் செய்யப்பட்டன.

126 நூல்களில், 10, 1980-84 ஆண்டுகளின் தமிழக அரசின் பரிசுகளைப் பெற்ற பெருமைக்குரியனவாகும்.

இவற்றுள் தமிழில் விடுகதைகள், ஆராய்ச்சி நெறி முறைகள் எனும் இவ்விரு நூல்கள் மறுபதிப்புகளைப் பெற்றன. பொருள் வறுமையால் இவற்றின் பின் முதன்மை பதிப்புகள் மட்டுமே நிகழ்ந்தன. மறுபதிப்புகள் புதிய வெளியீடுகளுக்குப் பொருளாதாரத் தடை ஏற்படுத்தல் கூடாது என்பது காரணம்.

ஐந்தாம் உலகத் தமிழ்மாநாடும், பாரதி நூற்றாண்டும் நிறுவன நூல் வெளியீட்டை அதிகரித்தன.

நிறுவன வெளியீடான இருமொழி அரையாண்டிதழான தமிழியல் தொடர்ந்து ஆறாம் தொகுதி முதல் 28 வரையிலாக வெளிப் போந்துள்ளது. 22ஆம் தொகுதி (Dec. 1982)பாரதி சிறப்பிதழாக மலர்ந்தது.

## 3. முனைவர் அ.நா. பெருமாள் (22.8.1986 – 31.12.1987)

### நிறுவனப் பணிகள்

நிறுவன ஆளுநர் குழுவின் (13.8.86) முடிவிற்கேற்ப நிரந்தர இயக்குநர் பதவி சுழற்சி இயக்குநர் என மாற்றம் செய்யப் பட்டதற்கிணங்க, அடுத்து முதுநிலையில் இருந்த முனைவர் அ.நா. பெருமாள் இயக்குநரானார். நிறுவனத்தின் தமிழ்ப்பணிகள் பழைய வழித்தடத்திலேயே நடைபயின்றது.

வாரக்கருத்தரங்கு, 'திறனாய்வு அணுகுமுறைகள்' எனும் பொதுத் தலைப்பிலும், திங்கள் கருத்தரங்கு 'தமிழர் கலைச் செல்வங்கள்' என்பதாகவும் தொடர்ந்தன. ஆய்வாளரின் ஆய்வு மன்றமும், நிறுவனத்தில் புதிய நூல்களின் அறிமுகமும் தொடர்ந்தன.

புதியனவாக இரு அறக்கட்டளைகள் உருவாக்கப்பட்ட போதிலும் மூன்று அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் நிகழ்ந்தன. அவற்றுள் இரண்டு முன்பகுதிச் செயற்பாட்டின் தொடர்ச்சியாகும்.

நிறுவனச் செயற்பாடுகளை உணர்த்தும் வகையில் 'செய்திக் கதிர்' இதழ் இரண்டு திங்கள்களுக்கொரு முறையென உருவாக்கப் பட்டது புதிய செயலாகும்.

உலகில் வாழும் தமிழர் பற்றிய தகவலறிய 'பாரெல்லாம் பரந்த தமிழர்' எனும் நூலாக்க முயற்சி மேற்கொள்ளப்பட்டது. இதழியலின் 29ஆம் தொகுதி வெளிவந்தது. இக்காலப் பகுதியில் வெளியிடப்பட்ட பத்து நூல்களுள் முன் பகுதியில் நிறைவு செய்யப் பட்டிருந்த 'Tamil verse in Translation' என வெளிவந்தது குறிப்பிடத் தக்கது. இது சங்கப்பாக்கள் 120 இன் ஆங்கில மொழிபெயர்ப்பாகும்.

## 4. முனைவர் க.த. திருநாவுக்கரசு (1.1.1987 – 5.5.1989)

### நிறுவனப் பணிகள்

*சென்னைப் பல்கலைக்கழகத்தில் திருக்குறள் ஆய்வு மையத்தில் பொறுப்பாளராகப் பணியாற்றியவர். நிறுவனத்தில் உதவிப் பேராசிரியராகவும், பேராசிரியராகவும் பணியாற்றி வந்தார். இவர் நிறுவன இயக்குநராகப் பொறுப்பேற்ற பின் தமிழ் ஆய்விற்கு உறுதுணையாக அமையும் கருத்தரங்குகள் நடத்தத் திட்டமிடப் பட்டன. கல்விப் பணியாளரின் கருத்தரங்கம் அவரவர் ஆய்வுத் தொடர்பாக அவரவர் விருப்பத்திற்கு மாற்றப் பெற்றது.*

*'தமிழாராய்ச்சிச் சிக்கல்கள்' எனும் தலைப்பில் திங்கள் கருத்தரங்கம் நடைபெற்றது.* 'The contribution of Tamils to Indian Culture' *எனும் தேசியக் கருத்தரங்கம் நிகழ்ந்தது. ஆய்வு மன்றக் கருத்தரங்கம் தொடர்ந்தது.*

*தமிழ் எழுத்தாளர்கள் பங்கேற்ற 'தமிழ் ஆராய்ச்சியும் வளர்ச்சியும்; எழுத்தாளர் பங்கு' குறிப்பிடத்தக்கதொரு செயற் பாடாகும். டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணனின் நூற்றாண்டு விழாவை முன்னிட்டு 30.9.88 அன்று சிறப்புக் கருத்தரங்கம் ஒன்றும் நடைபெற்றது.*

*இவர் எழுதிய 'தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு' (டிச. 1987) வெளியிடப்பட்டது.* 'Histroical Heritage of the Tamil (1983), *இலக்கியக் கொள்கை (1987) ஆகிய நூல்களைப் பதிப்பித்துள்ளார்.*

*தமிழியல் 30, 31, 32ஆம் தொகுதிகள் வெளியாயின. இவரின் திடீர் மறைவால் முனைவர் அன்னிதாமசு மூன்று திங்கள்களுக்கு இயக்குநர் பொறுப்பில் இருந்தார்.*

## 5. முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன் (18.8.1889 – 12.2.1991)

### நிறுவனப் பணிகள்

*வாரக் கருத்தரங்கமும், ஆய்வு மன்றக் கருத்தரங்கமும் தொடர்ந்தன. திங்கள் கருத்தரங்கம் பாரதிதாசனைப் பிறமொழி, நாட்டுப் புலவர்களுடன் ஒப்பிட்டுக் காணும் பாங்கில் 'பாரதிதாசன்' படைப்புகள் மையப் பொருண்மையாகக் கொண்டு கருத்தரங்குகள் நடைபெற்றன.*

அறக்கட்டளை நிறுவியோரின் எண்ணம் நிறைவேறும் வண்ணம் அவற்றிற்குப் புத்துயிர் ஊட்டப்பட்டது. சொற்பொழிவின் போதே நூலாக்கம் என்ற நிலை எப்படியேனும் அவை நிகழ்ந்தாக வேண்டும் என்ற கருத்தில் சொற்பொழிவின் எழுத்துரு பெறப்பட்ட வுடன் நடைபெற்றது. நூலாக்கம் பின் தொடர்ந்தது.

ஆய்வாளரின் ஆய்வுக்குத் துணை செய்யும் முறையில் ஒவ்வொரு ஆய்வாளரின் பொருண்மைக்கேற்ப அவரது முயற்சியில் ஒருநாள் கருத்தரங்கம் நடத்துவதற்கு ஆதரவு அளிக்கப்பட்டது.

ஆய்வு அலுவலர் தம் துறை சார்ந்த கருத்தரங்குகளை நடத்துதல் பயிலரங்குகளைத் தொடங்குதல் எனப் புதிய முயற்சிகளும் ஏற்பட்டன.

இப்பகுதியில் நிகழ்ந்த அறக்கட்டளைச் சொற்பொழிவுகளில் 6 நூலாக்கம் பெற்றமை குறிப்பிடற்பாலது.

## 6. முனைவர் அன்னிதாமசு (13.2.1991 – 17.10.1994)

### நிறுவனப் பணிகள்

பல்கலைக் கழக நல்கைக் குழுவின் விதிமுறைக்குட்பட்ட திட்டங்களுக்கு உதவி பெறுகிற நிறுவனமாக, அதனால் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஆராய்ச்சி நிறுவனமாக, பல்கலைக்கழக நல்கைக் குழுக் கூட்டம் 1956 பிரிவு 12(ன்) இன்படி ஏற்கப்பட்டமை இக்காலப் பகுதியின் பெருமையாகும். இதனால் இதன் நிதியுதவி பெறும் ஆய்வாளர் நிறுவனத்திலும் ஆய்வு மேற்கொள்ளலாம்.

முன்பகுதிகளில் விடுபட்ட 'தமிழர் மரபுச் செல்வம்' ஆண்டுக் கருத்தரங்கம் பொருளியல், சமூகவியல், சட்டவியல் என மீண்டும் எழுச்சி கண்டது. ஆய்வாளர்க்குத் துணை செய்யும் எண்ணத்தில் தமிழில் உள்ள ஆய்வுக் களங்களைத் துறைதோறும் வெளிப்படுத்திய சிறப்புக் கருத்தரங்கமாக 'தமிழாய்வுக் களங்கள்' நடத்தப்பட்டது. இதன் கட்டுரைத் தொகுப்பும் வெளியானது.

காலத்தையொட்டித் தமிழாய்வை வளர்ப்பதிலும், தேவையறிந்து கருத்தரங்குகளைத் தருவதிலும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் என்றும் தனித்தியங்கும் என்பதை உறுதிப்படுத்துவதாகத் திங்கள் கருத்தரங்கம் பெண்ணியப் பார்வையில் **'தமிழக மகளிர்'** என்பதாக மாற்றம் பெற்றது. இது அன்னை தெரசா மகளிர் பல்கலைக்கழகத்துடன் இணைந்து செயல்பட்டது.

வாரக் கருத்தரங்கு மற்றும் ஆய்வு மன்றக் கருத்தரங்குகள் வழக்கம் போல் தொடர்ந்தன.

புதிய அறக்கட்டளைகள் இரண்டு இணைய அறக் கட்டளைச் சொற்பொழிவுகள் புதியவீறுடன் பொலிவுற்றன. இக்காலப் பகுதியில் அறக்கட்டளைச் சொற்பொழிவுகளும் அவற்றின் நூலாக்கமும் இடையறாது அமைந்து அறக்கட்டளைகளின் பொற்காலமானது.

பாரதிதாசனின் நூற்றாண்டு வரவு நிறுவனத்திற்கு மற்றொரு புதிய பரிமாணத்தைக் கொணர்ந்தது. தென்னகப் பண்பாட்டு மைய நிதி உதவியால் பாரதிதாசனின் நூற்றாண்டு விழா, திருப்பதி, பெங்களூர், திருவனந்தபுரம் எனப் பிற மாநில நகரங்களிலும் கொண்டாடப்பட்டது.

பாரதிதாசனின் 100 பாடல்கள் தேர்ந்து எடுக்கப்பட்டு ஆங்கிலம், மலையாளம், கன்னடம், தெலுங்கு ஆகிய மொழிகளில் மொழிபெயர்க்கப்பட்டன. நூலாக்கமும் பெற்றன.

தமிழியல் தொகுதி 39, பாரதிதாசன் நூற்றாண்டு இதழாகவும்; தொகுதி 40, அப்புசுவாமி நூற்றாண்டு இதழாகவும்; தொகுதி 41, வையாபுரிப் பிள்ளை நூற்றாண்டிதழாகவும் மலர்ந்தன.

மொழிபெயர்ப்பியல் தொடர்பாக இரு பயிலரங்கங்களும், ஆய்வாளருக்கான இதழியல் கருத்தரங்கொன்றும் நடத்தப்பட்டன.

## 7. முனைவர் ச.சு. இராமர் இளங்கோ (17.10.1994 – 30.1.2002)

### நிறுவனப் பணிகள்

முனைவர் ச.வே. சுப்பிரமணியன் காலத் தலைமையின் பின் இவரே நீண்டகாலத்திற்குப் பொறுப்பேற்றுள்ளார். தமிழக அரசின் நிதியுதவி பெருமளவு அதிகரித்தது; புறநிலையிலும் வெகுவாக நிதியுதவிகளுடன், கணினி போன்ற பொருள் உதவிகளும் நிறுவனத்திற்குப் பெறுவதில் இவரின் முயற்சி பெற்ற வெற்றி நிறுவனப் பணிகளுக்குப் புதியதொரு பரிமாணத்தை அளித்தது.

எட்டாம் உலகத் தமிழ்மாநாடு, நிறுவன வெள்ளிவிழா, கல்கி, தெ.பொ.மீ., மயிலை சீனி. வேங்கடசாமி நூற்றாண்டு விழா போல்வன நிறுவன ஆய்வுப் பணியைத் தூண்டின. தேசியளவில்

நிகழ்ந்த கருத்தரங்குகள் உலகளாவிய நிலையை இக்காலத்தில் பெற்றன.

அவ்வப்போது பிற நிறுவனங்களுடன் தொடர்பு கொண்டு கருத்தரங்குகளை நடத்துதல் என்ற நிலைமாறி சென்னைப் பல்கலைக்கழகம், இந்திய மொழிகள் நடுவண் நிறுவனம், தென்னகப் பண்பாட்டு மையம், மனித வள மேம்பாட்டு அமைச்சகம், சாகித்திய அகாதெமி, பல்கலைக்கழக மான்யக்குழு, மா. இராசமாணிக்கனார் இதழியல் ஆய்வு மன்றம், திருவனந்தபுரம் திராவிட பன்னாட்டு மொழிகள் நிறுவனம் போன்றவற்றுடன் இணைந்து நடத்துதல் மரபானது. மிகச்சிலவே நிறுவனத்தின் தனிப் பொறுப்பானது.

நிறுவன வெள்ளிவிழாவை முன்னிட்டு நிகழ்ந்த இருநூறுக் கும் மேற்பட்டோர் கலந்துகொண்ட 'உலகத் தமிழாராய்ச்சிக் கருத்தரங்கம்' *(1997)*, 'சங்க இலக்கியம் - கவிதையியல்நோக்கு - சிந்தனைப் பின்புல மதிப்பீடு' *(1998)*, 'அயலகத் தமிழ்க் கலை இலக்கியச் சமகாலச் செல்நெறிகள்' *(1999)* என்பன உலகளாவிய கருத்தரங்குகளாக, இலங்கை, சிங்கப்பூர், மலேசிய தமிழறிஞர் ஆய்வுகளுடன் நடத்தப்பட்டனவாகும். முதல் கருத்தரங்கின்போது நிறுவன நூல்களின் மதிப்பீடும் இடம்பெற்றது.

இதில் மூன்றாம் கருத்தரங்கு, தமிழக அரசை **'உலகத் தமிழ் இலக்கிய வரலாறு'** படைக்கும் திட்டத்தை நிறுவனத்திற்கு அளிக்கச் செய்தது குறிப்பிடத்தக்கதாகும். இதற்கான பணியவை யொன்றும் நிகழ்ந்தது.

**'தாய்நாட்டிலும் மேலை நாடுகளிலும் தமிழியல் ஆய்வு'** *(1996)*, **'சுவடியியல் தேசியக் கருத்தரங்கம்'** *(1996)*, **'தொல் காப்பிய இலக்கியக் கோட்பாடுகள்'** *(1997)*, **'மொழிபெயர்ப் பியல் கருத்தரங்கம்'** *(1999)* என்பன தேசிய அளவில் நிகழ்ந்தன. இக் கருத்தரங்குகளில் துறைசார்ந்த வல்லுநர் பாராட்டப் பெற்றனர்.

கருத்தரங்குகள் பல நடந்தனவற்றுள் இதழியல் தொடர்பாகத் தொடர்ந்து நடந்த பத்து கருத்தரங்குகள், **'தொண்டை மண்டல வரலாற்றுக் கருத்தரங்கம்'**, **'தமிழ்வழிக் கல்வி மருத்துவம்'**, **'பொறியியல் - சிக்கல்களும் தீர்வுகளும்"**, **'தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள்'**, **'தமிழ் நாடகம் - நேற்றும் இன்றும்'** நிறுவனத் துணைத்தலைவர் முனைவர் வ.செ. குழந்தைசாமியின்

படைப்புகளைத் திறனாய்ந்த 'குலோத்துங்கன் கவிதைகள் ஆய்வரங்கம்', இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள் என்பன குறிக்கத்தக்கன. திராவிட இயக்க இதழ்கள், பொதுவுடைமை இயக்க இதழ்கள் எனும் தலைப்பில் நடைபெற்ற கருத்தரங்குகள் குறிப்பிடத்தக்கன.

துறைசார்ந்த நிலையிலும் பொதுவாகவும் பயிலரங்குகள் பல நடைபெற்றன. சுவடிப்பயிலரங்கு (1995, 98), நாடகப் பயிலரங்கு (1995, 96, 98), தமிழ் ஒலிப்புப் பயிற்சிப் பயிலரங்கு (1997), கல்வெட்டுப் பயிற்சிப் பட்டறை (1999), அகராதியியல் பயிலரங்கு (1999), கவிதைப் பயிலரங்கு (1999) உயர்நிலைப் பள்ளி ஆசிரியர் களுக்கான கணினிப் பயன்பாட்டுப் பயிலரங்கம், மொழிபெயர்ப்புப் பயிலரங்கம் என்பன அவற்றுள் சுட்டத் தக்கன. 1995 இல் தேசிய நாடகப் பள்ளி (நடுவணரசு நிறுவனம்) துணையுடன் நடத்திய 40 நாட்கள் பயிலரங்கில் நாடகமலர் வெளியிடப்பட்டதும், கவிதைப் பயிலரங்கு 'பயிலரங்கக் கவிதைகள்' தந்ததும் நவிலற்பாலன.

எட்டாம் உலகத் தமிழ் மாநாட்டையொட்டி, நிறுவனத்தின் வெள்ளிவிழா ஆண்டும் தொடங்கப்பட்டது. இதனால் மாநாட்டிற்கு வருகைபுரிந்த வெளிநாட்டுத் தமிழறிஞர் பலர் நிறுவனத்தில் சிறப்புச் சொற்பொழிவாற்றினர். அவற்றின் சுருக்கம் நூலாக்கம் கண்டது. 1999இல் இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்ற 30ஆம் கருத்தரங்கைத் தமிழக அரசு நிதி நல்கையுடன் நடத்தியது.

தேவநேயப் பாவாணர் மாவட்ட மைய நூலகக் கருத்தரங்க அறையில் திங்கள் தோறும் இரண்டாம் புதன்கிழமை மாலை 6.00 மணிக்கு நிகழும் என்று வரையறுக்கப்பட்டிருந்த திங்கள் கருத்தரங்கம் முற்றிலும் மாற்றம் கண்டது. சென்னை மாநகர கல்லூரிகள் அல்லது ஆய்வு நிறுவனங்களில் வாய்ப்பிற்கேற்ப நிகழ்ந்தது. முதலில் 'நானும் என் கவிதையும்' எனக் கவிஞர் பங்கேற்க, கதையிலக்கியப் படைப்பாளர் பங்கேற்பதாகப் பின் மாற்றங்கண்டது.

ஆய்வாளர் அவரவர் விருப்பிற்கேற்ப கட்டுரை வழங்கிய வாரக்கருத்தரங்கு 18.12.98 உடன் நிறுத்தப்பட்டது. ஆய்வாளரும் அருகியமை காரணமாக ஆய்வு மன்றக் கருத்தரங்கும் நிகழ வாய்ப்பில்லை.

4 புதிய அறக்கட்டளைகள் நிறுவப்பட்டுள்ள போதிலும் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் ஒருநாள் பொழிவு என மாற்றமடைந்துள்ளன. 12 அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் நிகழ்ந்துள்ளன. பல்கலைக்கழக நிதிநல்கைக் குழுவின் உதவியுடன் 'A Companion to Religion and Philosophy - Tevaram and Tivviyappirapantam' திட்டம் நிறைவுற்றுள்ளது.

நிறுவன நூலக நூல்களை இணையம் மூலம் உலகிற்கு அறிவிக்கும் பணி மைய அரசின் உதவியுடன் புது தில்லி, டெல்நெட் (Delnet) உடன் இணைந்து முடிக்கப்பட்டுள்ளமை நிறுவனத்தின் குறிப்பிடத்தக்க வளர்ச்சிப் பணியாகும்.

இலங்கை அரசுடன் இணைந்து தமிழ்க் கலைச்சொற்களை நெறிப்படுத்தி, 'கலைச்சொற்கோவை'யை உருவாக்கும் பணி, தமிழில் ஆவணம், உலகத் தமிழ் இலக்கிய வரலாறு, சிங்கப்பூர், தேசியப் பல்கலையுடன் இணைந்து தொலை இணையத்தில் (Internet) சங்க இலக்கியங்கள் என்பன பிற சிறப்பான திட்டப் பணிகளாகும். இவை தவிர அவ்வப்போது தற்காலப் படைப்பாளருடன் இலக்கியச் சந்திப்புகள் நிகழ்வதும் கூறத்தக்கது.

இக்காலத்தில் சுமார் 120 நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன. அவற்றுள் 64 நூல்கள் மட்டுமே நிறுவனக் கல்விப் பணியாளர் பெயரில் வெளியாகியுள்ளன. இவற்றுள்ளும் 36 நூல்கள் முன்காலப் பகுதிகளில் நிறைவேறியவையாகும். எஞ்சியவற்றுள் சுவடி விவர அட்டவணைகள் 8 அமைவது நவிலத்தக்கது. Indian Epistemology, Literary Criticism in Tamil and Sanskrit, Studies in Tamil Prosody & Poetics, தமிழர் சமூகவியல் சில பார்வைகள் என ஒரு சில நூல்கள் திறனாய்வு நூல்களாக அமைகின்றன. நிறுவன ஆய்வுப் பணியாளருடையதாக அல்லாது வெளிவந்துள்ள நூல்கள் நூற்றுக்குமேல் அமைவது எண்ணத்தக்கது. இவற்றுள் 38 நூல்கள் தமிழக அரசின் அரிய நூல் வெளியீட்டுத் திட்டம் மற்றும் நிதியுதவியுடன் வெளி வந்துள்ளன. இத்தகையன உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் போன்றவற்றால் மட்டும் இயலக்கூடிய தொன்று என்ற நிலையில் வரவேற்கத் தக்கனவாம். இதனால் நிறுவனம் சிறந்த ஆய்வுக் காப்பகமாகவும் விளங்குகின்றது.

இதழியல் கருத்தரங்கத் தொகுதிகள் போல்வன சில நிறுவனப் பொருட்செலவில் பிறரைப் பதிப்பாசிரியராகக் கொண்டு வெளிவந்துள்ளமை நோக்கத்தக்கதாம். தனியார் மற்றும் பிற

நிறுவனங்களின் நூல்களும் இதனுள் மிகுதியாகக் காணப் படுகின்றன.

இக்காலப் பகுதியில் புதிதாக உருவாக்கப்பட்ட பதிப்புக் குழுவும் இங்குச் சுட்டப்பட வேண்டியதாகும். 'தமிழ் உலகம்' எனக் கணினி வழித் தமிழ் கற்கக் குறுவட்டு தயாரிக்கப்பட்டதும் குறிப்பிடத்தக்க செயலாகும்.

நிறுவனக் கருத்தரங்குகளைப் பிற நிறுவனங்களுடன் இணைந்து நடத்தும் பொழுது நிறுவனச் செயற்பாடுகள் பலருடன் பரவலாக்கப்படுதல், நிறுவன வெளித் தொடர்பும் அறிமுகமும் விரிதல் என்பன பயனாகின்றன. அயலக, தமிழக வருகை தரு பேராசிரியர் இக்காலப் பகுதியில் மீண்டும் சிறப்புப் பெற்றுள்ளனர்.

பொருட்பற்றாக்குறையால் நிறுவன இதழான தமிழியலின் வெளியீடு தடுமாறிக் கொண்டிருந்த வேளையில் இக்காலகட்டத்தில் தமிழக அரசு இதற்கென நிலையான நிதியினை வழங்கியுள்ளதால் அவ்விதழ் முழுமையாகப் பின் தங்கலின்றி இன்று வரையிலுமாக 56 தொகுதிகள் வரை வெளிவந்துள்ளதும் குறிப்பிடத்தக்க சிறப்பாகும்.

தமிழக அரசு மட்டுமின்றி நிறுவன வெளியீட்டிற்குத் தனியார் மற்றும் பிற நிறுவனங்களும் நிதியுதவி அளித்துள்ளன. மூலிகைமணி சு. வேங்கடேசன் 'சித்த மருத்துவ மணிகள்' நூலுக்குத் தேவையான நிதியை முழுமையாக நல்கியுள்ளார். நடுவண் அரசு ஆவணக் காப்பகம், நிறுவனச் சுவடிகளின் விளக்க அட்டவணைக்குப் பொருளளித்துள்ளது.

## 8. முனைவர் சா. கிருட்டினமூர்த்தி (31.1.2002 – 31.01.2006)

### நிறுவனப் பணிகள்

பல்கலைக்கழக நல்கைக் குழு, **1. தமிழில் சிறுவர் இலக்கியம் நூற்றொகை 2. தமிழ் இலக்கியத்தில் குறியீடுகள் அகராதி 3. கம்பன் களஞ்சியம் 4. தமிழர் பண்பாட்டுக் கலைச்சொற் கோவை 5. Multimedia Package for Learning Spoken Tamil** எனும் ஐந்து பெருந் திட்டங்களுக்கு நிதி வழங்கி நிறுவன ஆய்வுப் பணிகளைப் பெருமைப்படுத்தியுள்ளது குறிப்பிடத் தக்கதாகும்.

புதிதாக ஐந்து அறக்கட்டளைகள் இணைய மொத்தம் 27 அறக்கட்டளைகளாக உயர்ந்தன. மேனாள் இயக்குநர் முனைவர்

ச.வே. சுப்பிரமணியன் அவர்கள் பெயரில் நிறுவனக் கல்விப் பணியாளர் முனைவர் கு. பகவதி அறக்கட்டளையைத் தோற்று வித்திருப்பதும் அறியத்தக்கது. இதன் தொடக்ககால நெறிமுறைப் படி நூலாக்கத்துடன் தற்போதைய அறக்கட்டளைச் சொற் பொழிவுகள் நிகழ்வது குறிக்கத்தக்கது.

வாரக் கருத்தரங்குகள் 'மனித நேயம்' எனும் பொதுத் தலைப்பில் ஓராண்டு நிகழ்ந்தது. பின் இக்காலக் கவிஞர்களில் ஒருவரை அறிமுகப்படுத்துவதாகத் தொடர்கிறது. மீண்டும் ஆய்வாளர் வருகையால் ஆய்வு மன்றக் கருத்தரங்கும் திங்கள் தோறும் நடைபெற்றது. வழக்கமான திங்கள் கருத்தரங்கம், 'தமிழரின் வரிசை'யென தொடர் ஆய்வரங்காக மாற்றம் கண்டுள்ளதும் சிறப்பாகும். தமிழாய்வுப் பணியால் தலைநின்ற தமிழ்ப் பேரறிஞர் ஒருவர் பற்றிய வாழ்வும் பணியாய்வுமாகப் பலர் பங்கேற்க இது நிகழ்ந்தது. இதில் இடம்பெறும் கட்டுரைகளும் நூலாக்கம் பெற்றன.

இவை தவிர பிற நிறுவனங்களுடன் இணைந்து நடத்தும் கருத்தரங்குகளும் தொடர்ந்தன. புதுதில்லி, மனிதவள மேம்பாட்டுத் துறையுடன் இணைந்து நடத்திய 'A Critical Survey of Dravidian Poetry' விஞ்ஞான் பிரசார் உடன் நடத்திய தென்னிந்திய மொழிகளில் அறிவியல் பரப்புதல், சாகித்திய அக்காதெமியுடன் கவிதை இலக்கிய கொள்கைகள் என்பனவும் அண்ணா பல்கலைக்கழகத்துடன் இணைந்து, 'பன்னாட்டுத் திருக்குறள் கருத்தரங்கம்', தாம்பரம் கிறித்தவக் கல்லூரியுடன் இணைந்து நடத்திய 'வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரி நினைவு நூற்றாண்டுக் கருத்தரங்கம்' சுட்டத் தக்கன. 'பெ.நா. அப்புசுவாமி அறிவியல் தமிழ்க் கருத்தரங்கம்' என நிறுவனம் தனித்தும் செயல்பட்டுள்ளது.

நிறுவனப் பணியாளர் ஆய்வுகள், பதிப்புகள், அரசு நிதியுதவியுடனான அரிய நூல்களின் மறுபதிப்புகள், நிறுவன நூல்களின் மறுபதிப்புகள் என நூல்வெளியீடுகளும், நிறுவன இதழான 'தமிழியல்' வெளியீடும் தொடர்ந்தன.

பாதிப்புக்குள்ளாகியிருந்த நிறுவன நூலகத்தைத் தமிழக அரசு செப்பனிட்டுத் தந்துள்ளதும், அதற்கு இணைப்புக் கட்டிடம் ஒன்றினைத் தினந்தந்தி ஆசிரியர் சிவந்தி ஆதித்தனார் அவர்கள் கட்டித்தந்துள்ளதும் குறிக்கத்தக்கதாம்.

தமிழக அரசுக்காகச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் இரு தொகுதிகள் நிறைவு செய்தளிக்கப் பட்டுள்ளன. முதுகலை, ஆய்வியல் நிறைஞர் பட்ட வகுப்புகள் தொடங்குவதற்கானப் பணிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளதும் சுட்டத்தக்கது.

### 9. முனைவர் ம. இராசேந்திரன் (01.02.2006 – 17.06.2008)

#### நிறுவனப் பணிகள்

மொழிபெயர்ப்புத் துறையின் இயக்குநராக மூன்று ஆண்டுகள் (1996-99) பணியாற்றினார். தமிழ் வளர்ச்சித் துறையில் 9 ஆண்டுகள் இயக்குநராகப் பணியாற்றினார். 2006ஆம் ஆண்டு முதல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் முழுக்கூடுதல் பொறுப்பில் இரண்டரை ஆண்டுகள் பணியாற்றினார். இவருடைய பணிக் காலத்தில் நிறுவனத்தில் 33 நூல்கள் வெளியிடப்பட்டன. 13 அறக்கட்டளை நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டு நூல்கள் வெளியிடப்பட்டன. சங்க இலக்கியம் கவிதையும் கருத்தும் (முனைவர் க. சிவத்தம்பி, இலங்கை) எனும் தலைப்பில் தொடர் பொழிவு 12 நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டன. 80க்கும் மேற்பட்ட ஆய்வு மன்றம் மற்றும் வெள்ளிக்கிழமை கருத்தரங்கள் நடத்தப்பட்டன.

நிறுவனத்தில் இவர் பணியாற்றிய காலத்தில் முதுகலைப் பட்டம் பெற்றவர் 76 மாணவர்கள், ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றவர் 76 மாணவர்கள், முனைவர் பட்டம் பெற்றவர் 5 மாணவர்கள். பல ஆண்டுகள் நிறுவனத்தில் தொகுப்பூதியப் பணியாளராகப் பணியாற்றிய நூலகர், கணினி ஒளியச்சுப் பணியாளர்கள், ஓட்டுநர், தோட்டப் பணியாளர் ஆகிய ஏழு பேரை பணி நிரந்தரம் செய்து ஆணை வழங்கினார். ஆராய்ச்சி உதவியாளர்களாக 15 ஆண்டுகளுக்கு மேல் பணியாற்றிய மூவரை முதுநிலை ஆராய்ச்சியாளராகப் பணி நியமனம் செய்து ஆணை வழங்கினார். மேலும் நிறுவனப் பணியாளர்கள் அரசுப் பணியாளர்கள் போல ஓய்வூதியம் பெறும் வாய்ப்பு இல்லாமல் இருந்த நிலையை அகற்றி பெருமுயற்சி செய்து நிறுவன ஊழியர்கள் ஓய்வூதியம் பெறும் நிலையை உருவாக்கி அதற்குரிய அரசாணையை நிறுவனத்திற்கு வழங்கினார். நிறுவனத்தில் பணியாற்றும் நிறுவனப் பணியாளர்கள் அனைவரும் பயன்பெறும் வகையில் இந்நடவடிக்கைகளை மேற்கொண்டார்.

பேராசிரியர், இணைப் பேராசிரியர், முதுநிலை ஆராய்ச்சியாளர் பதவிகளுக்குரிய காலி பணியிடங்கள் நிரப்புவதற்கான ஆட்சிக்குழு ஒப்புதலைப் பெற்றார். 2008ஆம் ஆண்டு தமிழ்ப் பல்கலைக்கழக துணைவேந்தராகப் பொறுப்பேற்றார்.

## 10. முனைவர் செ. ஜீன்லாறன்ஸ் (18.06.2008 – 19.08.2008)

### நிறுவனப் பணிகள்

*18.06.2008ஆம் நாளன்று நிறுவனத்தில் மொழியியல் துறைப் பேராசிரியராக முனைவர் செ. ஜீன் லாறன்ஸ் இயக்குநர் (கூடுதல் பொறுப்பு) பணியேற்றார். 'தமிழியியல்' தொகுதிகள் 43, 44, 45, 46, 69, 70, 71, 72 ஆகிய இதழ்களுக்கு இணைப் பதிப்பாசிரியராக இருந்து வெளியிட்டுள்ளார். 19.08.2011 வரை ஒரு மாதம் மட்டுமே இயக்குநர் கூடுதல் பொறுப்பாகப் பணியாற்றினார். 'தமிழ் உலகம்' என்ற தமிழ்க் கற்பித்தலுக்கான குறுந்தகட்டை வெளியிட்டுள்ளார்.*

## 11. முனைவர் கரு.அழ. குணசேகரன் (20.08.2008 – 19.08.2011)

### நிறுவனப் பணிகள்

*புதுவைப் பல்கலைக்கழகத்தில் நாடகத் துறையில் பேராசிரியராகப் பணியாற்றிய முனைவர் கரு.அழ. குணசேகரன் 20.08.2008ஆம் நாள் முதல் 19.08.2011 வரை நிறுவனத்தின் இயக்குநராகப் பணிபுரிந்தார். இவர் பணியாற்றிய காலத்தில் தமிழக மகளிர் தேசியக் கருத்தரங்கம், தொல்காப்பிய சங்க இலக்கியம் பதிப்பும் பதிப்பாளரும், தமிழரின் நிகழ் கலை மரபுச் செல்வங்கள், படைப்பு நெறிமுறைகள் ஆகிய நான்கு தேசியக் கருத்தரங்குகள் நடத்தப் பட்டன.*

*74 அறக்கட்டளைப் பொழிவு நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டு நூல்கள் வெளியிடப்பட்டன. பேரறிஞர் அண்ணா, தமிழ் மேம்பாட்டுக் கருத்தரங்குகள் மற்றும் பேரறிஞர் அண்ணா நூற்றாண்டு விழா (2008) தொடர் கருத்தரங்குகள், பன்னிரெண்டு நிகழ்ச்சிகள் நடத்தப்பட்டன. 2009ஆம் ஆண்டு செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்துடன் இணைந்து சுவடிப் பயிலரங்கம் இணைந்து நடத்தப்பட்டன.*

*சிலப்பதிகார இலக்கியக் கட்டமைப்புப் பயிலரங்கு, தமிழ் சிற்றிலக்கியங்கள் (புத்தொளிப் பயிற்சி, பல்கலைக் கழக நிதி நல்கையுடன் 22 நாட்கள்) ஆகிய பயிலரங்குகள் நடத்தப்பட்டன. இவருடைய பணிக் காலத்தில் 154 நூல்கள் நிறுவனத்தில்*

வெளியிடப்பட்டன. பேராசிரியர், இணைப் பேராசிரியர், முதுநிலை ஆராய்ச்சியாளர் பதவிகளுக்குரிய காலிப் பணியிடங்களை நிரப்பி பணி நியமனம் செய்யும் பெரு முயற்சியை இவர் மேற்கொண்டார். இவருடைய பணிக் காலத்தில் முனைவர் பட்டம் பெற்றோர் 24 பேர், ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றோர் 86 பேர். 19.8.2011 அன்று முதல் மீண்டும் புதுவைப் பல்கலைக்கழக நாடகத் துறையில் பணியாற்றி வருகின்றார்.

## 12. முனைவர் கூ.வ. எழிலரசு (20.8.2011 – 30.09.2011)

### நிறுவனப் பணிகள்

தமிழ் வளர்ச்சி இயக்குநராக முனைவர் கூ.வ. எழிலரசு பணியாற்றி வந்தார். 20.8.2011 அன்று இயக்குநர் கூடுதல் பொறுப்பாகப் பணியாற்றினார். இவருடைய பணிக் காலத்தில் (40 நாட்கள் மட்டும்) 'பொதுவுடைமை இயக்க இதழ்கள்' எனும் நூல் வெளியிடப்பட்டது. அவர் 30.09.2011 அன்று பணியிலிருந்து ஓய்வு பெற்றார்.

## 13. முனைவர் கா.மு. சேகர் (01.10.2011 – 22.11.2012)

### நிறுவனப் பணிகள்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநராக முனைவர் கா.மு. சேகர் 1.10.2011ஆம் நாள் முதல் இயக்குநர் பொறுப்பில் பணியாற்றி வந்தார். மாண்புமிகு தமிழக முதலமைச்சர் டாக்டர் ஜெ. ஜெயலலிதா அறக்கட்டளைச் சொற்பொழிவும் நூல் வெளியிடும் நிகழ்ச்சி நடைபெற்றது. 'தமிழக நிகழ்த்துக்கலை மரபுகளும் எடுத்துரைப்பியலும்' (கருத்தரங்கம்), நிறுவனத்தின் சமூகவியல், கலை மற்றும் பண்பாட்டுப் புலம் நடத்திய நிகழ்ச்சியில் நாடகம் மற்றும் கூத்துக் கலைநிகழ்ச்சிகள் நடைபெற்றன. ஓலைச்சுவடிகள் சான்றிதழ் பயிற்சிப் பட்டறை 1.3.2012 முதல் 30.3.2012 வரை ஒரு மாத காலம் நடைபெற்ற நிகழ்வில் 60க்கும் மேற்பட்டோர் கலந்து கொண்டு பயனடைந்தனர். மேலும் வேதாத்திரி மகரிஷி, உ.வே.சா., தந்தை பெரியார், பேரறிஞர் அண்ணா ஆகியோர் பெயரால் அமைந்த 4 அறக்கட்டளைச் சொற்பொழிவு நிகழ்வுகளும், நூல் வெளியீடுகளும் நடைபெற்றன. 'தமிழ்க் கலைச்சொல்லாக்கம்' குறித்த தேசியக் கருத்தரங்கம் நிறுவனத்தின் மொழியியல் புலத்தின் மூலம் நடைபெற்றது.

## 14. முனைவர் கோ. விசயராகவன் (23.11.2012 முதல் தற்போது வரை)

### நிறுவனப் பணிகள்

இவர் தமிழ் வளர்ச்சித் துறையின் துணை இயக்குநராகப் பணியாற்றினார். உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநராகப் பதவியேற்ற பின் நிறுவனத்தின் உள் கட்டமைப்பு வசதிகள், சுற்றுப்புறக் கட்டடம் மற்றும் சுகாதாரச் சூழல், புதிய கட்டடங்களைக் கட்டுதல், நூலக விரிவாக்கம், ஏற்கனவே கட்டி முடிக்கப்பட்ட வகுப்பறைகளை பயன்படுத்துதல், நிறுவனத்தில் காலி பணியிடங்களை நிரப்புதல், நிறுவனச் செயல்பாடுகளை விரைவுபடுத்துதல், புதிய திட்டங்களை உருவாக்குதல் எனப் பல்வேறு பணிகளை மேற்கொண்டு வருகிறார். நிறுவனத்தில் உள்ள 4 புலங்களின் பேராசிரியர்கள் மூலம் தேசியக் கருத்தரங்குகள், பன்னாட்டுக் கருத்தரங்குகள், அறக்கட்டளைச் சொற்பொழிவுகள், நூல் வெளியீடுகள், பயிலரங்குகள் ஆகியனத் தொடர்ந்து நடைபெற்று வருகின்றன.

மாண்புமிகு தமிழக முதலமைச்சர் புரட்சித்தலைவி அம்மா அவர்களின் பிறந்த நாளை முன்னிட்டு 2013,2014 ஆம் ஆண்டுகளில் இந்நிறுவனத்தில் தேசியக் கருத்தரங்கு, கவியரங்கு, பயிலரங்கு ஆகியன பிப்ரவரித் திங்கள் முழுவதும் சிறப்புற நடத்தி வருகிறார். தனித்தமிழ்க் காவலர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அறக் கட்டளை, பெருந்தலைவர் காமராசர் அறக்கட்டளை ஆகிய இரு அறக்கட்டளைகள் நிறுவியுள்ளார்.

தொல்காப்பிய இருக்கை (ரூ. 50 இலட்சம்), உலகத் தமிழர் பண்பாட்டு வரவேற்பு மற்றும் தகவல் மையம் (ரூ. 10 இலட்சம்), திருக்குறள் காட்சிக் கூடம் (ரூ. 10 இலட்சம்) ஆகியன நிறுவனத்தில் இடம் பெறச் செய்துள்ளார்.

தேவநேயப் பாவாணர், இராமலிங்கம் அபிராமி, டாக்டர் மு.வ., டாக்டர் சிவந்தி ஆதித்தனார், உ.வே.சா., வ.உ.சி., சி.ம. துரையரசு, பெருந்தலைவர் காமராசர், டி.என். சேசாசலம், மு. தமிழ்க்குடிமகன், டாக்டர் ஜெ. ஜெயலலிதா, அன்னை நாகம்மையார் ஆகியோர் பெயரால் அமைந்த அறக்கட்டளைச் சொற்பொழிவுகளும், நூல் வெளியீடுகளுடன் நடைபெற்றன.

அண்மையில் இலண்டன் மாநகரில் 14.8.2013 முதல் 20.8.2013 வரை நடைபெற்ற தமிழியல் மாநாட்டில் பங்கேற்றுச் சிறப்பித் துள்ளார்.

# வருகை ஆய்வறிஞர்

முனைவர் அன்னிதாமசு
பேராசிரியர்
சமூகவியல் (ம) கலை, பண்பாட்டுப் புலம்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தை உருவாக்குவது பற்றிய குறிப்புகள் (Notes)[1] 1969இல் வெளியிட்டபோது, வெளிநாட்டினரை நிறுவனத்தில் ஆய்வுப்பணி செய்ய ஈர்க்கும் திட்டம் தீட்டப்பட்டது. இது, ஒன்று முதல் மூன்று ஆண்டுகள் வரை நிறுவனத்திற்கு வந்து செல்லக் கூடிய வெளிநாட்டினரான வருகைப்பேராசிரியர் (Visiting Professors) பற்றிய திட்டக் குறிப்பாகும்.[2] மேலும், நிறுவனத்தில் அமையக் கூடிய கல்வியலுவலர் (Academic Staff) பற்றிய வரைவிலும், ஒவ்வொரு துறைக்கும், உலகளாவிய தகுதி அமைய, வல்லுநரான வெளி நாட்டறிஞர் ஒருவரைப் பேராசிரியராகக் கொள்ளத் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது.[3] இவர், துறையின் பிற பேராசிரியரையும் மாணாக்கரையும், நூல்கள், இதழ்கள் தொடர்பானக் குறிப்பு வழங்கித் திறமையான நெறிமுறையில் வழிப்படுத்த வல்லவராக அமைய வேண்டும் என்ற எதிர்பார்ப்பும் காணப்படுகிறது. மேலும், நிறுவனம் முழுமையாகச் செயற்படத் தொடங்கும் கால இடைவெளியில், தகுதியும் திறமையும் துறையறிவும் வாய்ந்த

1. Journal of Tamil Stuides, IATR, Vol.No.1 - April 1969, Part II, p.39

2. This raises the question as to how foreign scholars, who are remunerated at much higher levels than is the case in India are to be attracted to the Institute.. . They could make suitable arrangements with the Government and / or the centres of higher learning in their respective countries to loan the service of visiting professors for a period of 1 to 3 years - Ibid.

3. Having regard to the dearth of trained Tamil scholars in some fields such as liguistics, Archeacology, Sociology and Anthropology and in order to maintain international character of the Institute, it is desirable to have atleast one Visiting Professor from a foreign University in each Faculty - Ibid, p.47.

வெளிநாட்டு அறிஞரை ஆறு திங்கள் முதல் ஓராண்டுவரை இங்குத் தமிழகத்தில் தங்கி நிறுவனத்தில் பணி புரியும் முன்னனுபவமும் பின்புல அறிவும் பெற அழைக்கலாம் எனவும் திட்டம் வகுக்கப் பெற்றிருந்தது.[4]

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1970இல் சங்கங்கள் பதிவுச் சட்டத்தின் கீழ் பதிவுசெய்யப்பெற்று நடைமுறை விதிகள் வகுக்கப் பெற்ற போதும் இத்தகு வருகை ஆய்வறிஞர் பற்றிய எண்ணத் தொடர்ச்சி காணப்பெறுகின்றது. நிறுவனத்தின் நோக்கங்களாகத் தரப் பெற்றனவற்றுள், 'விருப்புள்ள உலகளாவிய அறிஞருடன் இணைந்து, தமிழாய்வின் எல்லாத் துறைகளிலும் தொடர்புடைய களங்களிலும் ஈடுபட்டு முன்னேற்றம் காண்பது' என்பதும் ஒரு அடிப் படையாக அமைகின்றது.[5] தொடரும் செயன்மை பற்றிய இரண்டாம் குறிப்பில், "பல்வேறு வெளிநாடுகளில் வாழும் பல்துறை வல்லு நரோடு நெருங்கிய தொடர்பு கொள்ளவும் விருப்புள்ள துறை பற்றிய அறிவுப் பரவலுக்கு வழிவகுக்கவும் இடன் அமைக்கப்பட் டுள்ளது."[6]

1972-இல், ஆய்வு அலுவலர் / கல்விப் பணியாளர் தொகுப் புடன் நிறுவனம் செயற்படத் தொடங்கியபோது, வெளிநாட்டு முதுநிலை ஆய்வாளர் ஒருவர் (International Senior Fellowship), வெளிநாட்டு இளநிலை ஆய்வாளர் இருவருக்கான (International Junior Fellowship) உதவித் தொகையுடன் கூடிய பணியிடம், நிறுவனத் துணை விதிகளின்படி அமைக்கப் பெற்றிருந்தது. 1978இன் திருத்தம் பெற்ற துணைவிதியிலும் இப்பாங்கு இடம்பெற்றிருந்தது.[7] இவ்விதியின்

---

4. . . . invite competent foreign scholars in the field and enable them to acquire the back-ground knowledge and experience needed for working in the Institute by a stay in Tamilnadu of say six to twelve months. . .Ibid, p.48

5. The principal object for which the Institute is established is to promote in all possible ways research in all aspects of Tamil studies and allied fields with the active cooperation of International scholars interested in such studies - Memorandum of Association, p.2

6. Activities (ii) ensure intimate contact between specialists in the fields in which the Institute is interested living in different countries of the world and to co ordinate the dissemination of information in these fields. Ibid.

7. Bye laws (25-1-1978), p.6

உட்பகுப்பு எண் 14-இன்படி, துறைவல்லுநரை அழைத்து நிறுவனப் பணியில் பயன்கொள்ள நிறுவன இயக்குநருக்கு உரிமை (அதிகாரம்) வழங்கப் பெற்றுள்ளது. இதே விதியின் உட்பகுப்பு எண்15இன்படி, குறுகிய காலப் பணிக்காக, மைய, மாநில அரசிலிருந்தோ, பல்கலைக் கழகம் அல்லது பிற நிறுவனங்களிலிருந்தோ விருப்பமுடையவர் ஓராண்டு வரை நிறுவனத்திற்கு வந்து பணிபுரியவும் வாய்ப்பு அமைந்தது. இவ்வாறு, வெளிநாட்டு, உள்நாட்டு வருகை ஆய்வறிஞர் பற்றி வரைவுகள் அமைந்தபோதும், சில ஆண்டு இடைவெளிக்குப் பின்பே இத்தகையோர் நிறுவனத்திற்கு வந்து பணியாற்றியமை அறியமுடிகிறது.

1990இன் நிறுவனப் பணி விதிகளும், திட்டப்பணியாளருடன், வருகைதரும் ஆய்வு அலுவலர் பற்றித் தெரிவிக்கின்றது.[8] குறிப்பிட்ட காலப் பகுதிக்கு, உலகளாவிய நிலையில் அறியப் பட்ட பல துறை சார்ந்த வருகை தரு ஆய்வறிஞர் நிறுவனத்திற்கு வந்து (Visiting Scholars) தேர்ந்தெடுத்த திட்டப்பணியொன்றைத் தத்தம் துறைக்கேற்ப வகுத்துக் கொண்டு தமிழாய்வுக்கு வளஞ்சேர்த்தல் இதில் உட்படும். அழைப்பு அடிப்படையிலோ, விண்ணப்பம் செய்பவரில் தக்காரைத் தேர்ந்தெடுக்கும் அடிப்படையிலோ இவர்கள் நியமனம் பெறல் அமையும். இளந் தலைமுறையினரைப் பல்துறைத் தமிழாய்வில் வல்லுநராகப் பயிற்சி பெறச் செய்வது இவ்வருகை ஆய்வறிஞர் திட்ட நோக்கமாகும்.

வருகை ஆய்வறிஞரின் நிறுவனப் பணியிணைவுக் காலத்தை மூன்று கட்டமாகக் கணிக்கலாம். எண்பதுகளின் தொடக்கப் பகுதியிலமைவது தொடக்கக்கட்டம். இதில் வெளி நாட்டினர் வந்து சென்றனர். எண்பதுகளின் பிறபகுதியில் இள நிலையாய்வாளர் வெளிநாட்டிலிருந்தும், மூதறிஞர் உள்நாட்டிலிருந்தும் வந்து ஆய்வுப் பணியாற்றினர். மிக நீண்ட இடை வெளிக்குப் பின் வந்த மூன்றாவது காலக்கட்டமான 1996-97 முதல் 1999-2000 வரையிலான பகுதியில், பணியிலிருப்போர் மட்டுமன்றி ஓய்வுபெற்ற உள்நாட்டு வெளிநாட்டுப் பேராசிரியர் பெரு மக்களும் வருகை தந்தனர்.

---

8. Service Rules, 1990, p. 65 (g)

வருகை ஆய்வறிஞரின் ஆய்வுப் பணியினையும் மூன்று விதமாகக் காணலாம். தொடக்கக் காலத்தினர், தம் ஆய்வுப் பொருண்மை தொடர்பாக, பொதுமன்றத்தில் பிற ஆய்வறிஞர்க்கு ஆறு சொற்பொழிவுகளை வழங்கினர். பின்பு அவை நிறுவனத்தால் நூலாக்கம் பெற்றன. இளநிலை ஆய்வாளர் வருகை, சென்னைப் பல்கலைக்கழக முனைவர்பட்ட ஆய்வாளராக நிறுவனத்தில் முழுநேர ஆய்வில் ஈடுபடுவதைக் கொண்டது. மூன்றாம் வகையில் ஆய்வுத் திட்டம் நிறைவு செய்யப்படுதலும், செய்யப்படாமையும் அமைந்ததுடன், நிறைவு செய்யப்பட்டனவற்றுள் சில மட்டுமே நூலாக்கம் பெறுதல் என்ற பாங்கும் காணப்படுகின்றது.

வருகை ஆய்வர் நிறுவனத்திலிணைந்து செயற்படும் காலப் பகுதியிலும் வகைமை உண்டு. மூன்று திங்களாகத் தம் வருகையை வரையறுத்துக் கொண்டமையும், ஓராண்டளவுக்கு விரிந்த காலப் பகுதியை ஏற்றுக் கொண்டமையும் காணப்படுகின்றது. நாடோறும் தொடர்ச்சியான வருகை வலியுறுத்தப் படாமை என்பது ஒருபாலும், திட்டப்பணி நிறைவேற்றமே வேண்டப்படல் என்பது மறுபாலும் தென்படுகின்றன. இதனால், நிறுவன ஆய்வலுவலர்க்கும், வருகை ஆய்வறிஞர்க்குமிடையே கருத்துப் பரிமாற்றத்திற்கும், கலந்துரைக்கும் வாய்ப்பில்லாமலாகின்றது.

மேலும், அழைப்புப் பெற்ற சில ஆய்வறிஞர், தத்தம் சூழல் காரணங்களால் வரவியலாமை ஏற்பட்டது, இப்போக்கிலான நிறுவனப் பரிணாமத்திற்கு வாய்ப்பின்மையாயிற்று. ஆஷர், ஆந்த்ர னோவ், இ. அண்ணாமலை, நெபுரு கரசிமா போன்றோர் சான்று. அன்றியும், கல்வியுலா நோக்கில் சென்னை வந்த வெளிநாட்டறிஞர் பலர், நிறுவனத்திற்கும் வருகை தந்து நிறுவன ஆய்வறிஞருடன் உரையாடியும், நிறுவனத்தில் சொற்பொழிவாற்றியும் தம் துறையறிவைப் பரப்பியதை கிரிகரி ஜேம்ஸ், ஃபூர்ணிகா போன்ற பலரிடம் காணமுடிந்தது. இந்திய அரசின் மனிதவள மேம்பாட்டுத் துறையின் ஆய்வறிஞர் பரிமாற்றத் திட்டத்தின்படி, செக்கோஸ் லோவேக்கிய வார்சா நகர சாள்ஸ் பல்கலைக் கழகத்திலிருந்து ஜெரஸ்லவ் வாசக் நிறுவனம் வந்தமையும், வெளிநாட்டினருக்கான சங்கஇலக்கியப் பாடநூலை இணைந்து தயாரித்தமையும் இங்கே குறிப்பிடத்தக்கதாகும்.

வருகை ஆய்வறிஞரால் இரண்டு விதமான பயன் ஏற்பட்டுள்ளன. நிறுவனத்திற்கு வெளிநாட்டுத் தொடர்பு அமைதல் என்பதும் அவ்வெளிநாட்டினரின் அறிவு அனுபவங்கள் பகரப் பெற்றமை என்பதும் ஒன்று. உள்நாட்டு - வெளிநாட்டு வருகை ஆய்வறிஞரால் நிறுவன நூல் வெளியீட்டுத் தொகுப்பில் புதிய பார்வையும் பாதையும் புலப்படுத்தும் நூல்கள் இணைந்தமை மற்றொன்று. ஆய்வறிஞர் வருகையும், வருகைக் கால ஆய்வுகளும் இடையறாதுவரின் நிறுவனம் மேலும் பயன்பெறுவதுடன், உலகத் தரத்திற்கு உயரவும் இயலும்.

## பட்டியல் - வருகை ஆய்வறிஞர்

| | பெயர் | ஆண்டு | தலைப்பு | நூலாகி யிருப்பின் |
|---|---|---|---|---|
| 1. | கமில் ஸ்வெலபில் (செக்கோஸ்லோவாகியா) | 1980 | Tirumurukan | ஆம் |
| 2. | ஆ. வேலுப்பிள்ளை (இலங்கை) | 1980 | Epigraphical Evidences for Tamil Studies | ஆம் |
| 3. | தனுதா பெசிக் வெசிக் (போலந்து) | 1981 | தமிழ்ப் பண்பாட்டு வளர்ச்சியில் முருக வழிபாட்டின் பங்கு | இல்லை |
| 4. | பொன். கோதண்டராமன் (தமிழ்நாடு) | 1975 | A Course in Modern Standard Tamil | ஆம் |
| 5. | அலெக்சாண்டர் டுபியான்ஸ்கி (ரஷ்யா) | 1997-1998 | Russian Translations & Cankam Literature | இல்லை |
| 6. | அ.அ. மணவாளன் (தமிழ்நாடு) | 1997-1998 | தொல்காப்பியப் பொருளதிகார ஆங்கில மொழிபெயர்ப்பு - அகத்திணை, புறத்திணை இயல்கள் | ஆம்<br>ஆம் |
| 7. | கு. மீனாட்சி (மகாராட்டிரம்-புனே) | 1997-1998 | Tolkappiyam and Astadyayi | ஆம் |
| 8. | ஓனோ தோரோ (ஜப்பான்) | 1997-1998 | Ramayana - Comparative study | ஆம் |
| 9. | சோ.நா. கந்தசாமி (தமிழ்நாடு) | 1998-1999 | Indian Epistamology as expounded in Tamil Classics | ஆம் |
| 10. | கா. சிவத்தம்பி (இலங்கை) | 1998-1999 | பத்துப்பாட்டின் கவிதையியல் | இல்லை |
| 11. | ஜோன்னா குசியோ (போலந்து) | 5.2.99-30.4.99 | Tradition of Fortune telling | இல்லை |
| 12. | செ.வை. சண்முகம் (தமிழ்நாடு) | 2000-2001 | தொல்காப்பியத் தொடரியல் கோட்பாடு | இல்லை |
| 13. | ச. அகத்தியலிங்கம் (தமிழ்நாடு) | 2000-2001 | இன்றைய தமிழ் இலக்கணம் | இல்லை |
| 14. | முரசு நெடுமாறன் (மலேசியா) | 2000-2001 | மலேசியத் தமிழரும் தமிழும் | ஆம் |
| 15. | அய்யாதுரை தாமோதரன் (ஜெர்மன்) | 2001-2002 | சங்கர நமச்சிவாயர் வரலாறும் உரைத் திறனும் | ஆம் |

# தமிழ் மொழி – கற்பித்தல்

முனைவர் செ. ஜீன்லாறன்ஸ்
பேராசிரியர்
தமிழ் மொழி (ம) மொழியியல் புலம்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ் மொழி மற்றும் மொழியியல் புலம் பிற மொழி பேசும் மக்களுக்கு (வெளி நாட்டினர், உள் நாட்டினர்) தமிழ் மொழி கற்பித்தலை முதன்மைப் பணியாகச் செய்துவருகிறது. அமெரிக்கா, ஆஸ்திரேலியா, இங்கிலாந்து, கனடா, தென் கொரியா, சீனா, தென் ஆப்பிரிக்கா, பிரான்ஸ், ஜெர்மனி, ஸ்வீடன், ஜப்பான் போன்ற நாட்டினர் மற்றும் இந்தியாவின் பிற மாநிலத்தவர்களுமாக 250க்கும் மேற்பட்டோர் இங்கு வந்து தமிழ் மொழி கற்றுள்ளனர்.

இங்கு தமிழ் கற்பித்தல் பணி 1977ஆம் ஆண்டு முதல் நடைபெற்று வருகிறது. முனைவர் பொன். கோதண்டராமன், முனைவர் அ.அ. மணவாளன், முனைவர் ஜான் சாமுவேல், முனைவர் கே.எம். இருளப்பன், முனைவர் ந. தெய்வசுந்தரம், முனைவர் அ. கோபால் மற்றும் முனைவர் ந. கடிகாசலம் ஆகியோர் தமிழ் கற்றுக்கொடுத்து வந்துள்ளனர். நிறுவனத்தில் மொழியியல் துறை நிறுவிய பின்னர் முனைவர் செ. ஜீன்லாறன்ஸ், முனைவர் தா. ரெங்கநாதன் மற்றும் முனைவர் கு. சுப்பையா பிள்ளை ஆகியோர் இப்பணியைச் செய்து வந்தனர்.

நிறுவனத்தில் தமிழ் மொழி இரு நிலைகளில் பயிற்று விக்கப்படுகிறது. அவை, 1. அறிமுக நிலை வகுப்பு (Introductory Course), 2. உயர் நிலை வகுப்பு (Advanced Course)

*அறிமுக நிலை வகுப்பு :* ஆங்கிலம் வழியாகத் தமிழ் மொழி கற்றுக்கொடுக்கப்படும் இப்பயிற்சி மூன்று திங்கள் கால எல்லையினைக் கொண்டது. இதற்குப் பயிற்சிக் கட்டணமாக உள்நாட்டினர்க்கு ரூ.750/-, வெளிநாட்டினர்க்கு அமெரிக்க டாலர் 75/

- வகுப்புகள் வாரத்தில் மூன்று நாட்கள் (திங்கள், புதன், வெள்ளி) ஒவ்வொரு நாளும் மூன்று மணி நேரம் (முற்பகல் 10 மணி முதல் மதியம் 1 மணி வரை அல்லது பிற்பகல் 2 மணி முதல் 5 மணி வரை) நடைபெறும். அறிமுக நிலை வகுப்பு ஓர் ஆண்டில் மூன்று முறை (ஜனவரி, ஜுன், செப்டம்பர்) நடத்தப் படுகிறது.

அறிமுகநிலை வகுப்பு, துரிதநிலை வகுப்பாகவும் (Intensive Course) நடத்தப்படுகிறது. இவ்வகுப்பு ஏப்ரல் திங்களில் நடைபெறும். ஒவ்வொரு நாளும் ஐந்து மணி நேரம் நடத்தப்படும். முன்னர் குறிப்பிட்டுள்ள பயிற்சிக் கட்டணமே இதற்கும் அமையும்.

அறிமுகநிலை வகுப்பில் தமிழ் ஒலிகள் மற்றும் இவ் ஒலிகளுக்குரிய வரிவடிவங்களைக் கற்றுக் கொள்வதோடு தமிழ் மொழியின் அடிப்படை இலக்கணக் கூறுகளைப் பல்வேறு சூழல்களில் அமைந்த உரையாடல் பாடங்கள் மற்றும் இப்பாடங்கள் அடிப்படையில் அமைந்த பயிற்சிகளின் மூலம் கற்றுத் தமிழ் மொழியில் ஓரளவு பேசவும், படிக்கவும், எழுதவும், பயிற்சிப் பெறுகின்றனர்.

தமிழ் மொழி, பேச்சு வழக்கு, இலக்கிய வழக்கு என இரு வழக்குகளைக் கொண்ட இரட்டை வழக்கு மொழி. அறிமுக நிலை வகுப்பில் இவ்இரு வழக்குகளும் கற்றுக்கொடுக்கப் படுகின்றன.

**உயர்நிலை வகுப்பு**

இது ஆறு திங்கள் கால எல்லையினைக் கொண்டது. இதற்கு உள்நாட்டினரிடம் ரூ.1500/-, வெளிநாட்டினரிடம் அமெரிக்க டாலர் 150/- பயிற்சிக் கட்டணமாகப் பெறப்படுகிறது. இவ்வகுப்பு அறிமுக நிலை வகுப்பினைப் போன்று வாரத்தில் மூன்று நாட்கள், மூன்று மணி நேரம் நடைபெறும். உயர் நிலை வகுப்பில் தமிழ் மொழியின் அனைத்து இலக்கணக் கூறுகளையும் கற்று, மொழி கற்றலின் அனைத்துக் கூறுகளிலும் புலமை பெறுவர். கட்டுரை எழுதுதல், கடிதம் எழுதுதல் மொழிபெயர்ப்பு (தமிழ் - ஆங்கிலம்) போன்றனவற்றிலும் பயிற்சி பெறுவர்.

**மொழிப் பயிற்சிக் கூடம்**

இங்குப் பத்து அலகுகளைக் கொண்ட மொழிப் பயிற்சிக் கூடம் யுனெஸ்கோ நிதி உதவியுடன் நிறுவப்பட்டுள்ளது. இது தமிழ்

மொழி அறிமுகநிலை மாணவர் தங்கள் கேட்டுணரும் திறனையும் சொல்லிப் பழகும் திறனையும் வளர்த்துக் கொள்ள உதவுகின்றது.

**தேர்வு**

அறிமுகநிலை மற்றும் உயர்நிலை வகுப்புப் பயிற்சி முடிந்தவுடன் பயில்வோர் கல்வித்திறனை மதிப்பிட தேர்வு நடத்தப்படுகின்றது. தேர்வில் வெற்றிபெறுவோருக்குச் சான்றிதழ் வழங்கப்படுகின்றது.

இங்குத் தமிழ் கற்பித்தல் பணியினை மேற்கொண்ட/ மேற்கொண்டுவரும் கல்விசார் அலுவலர்கள் கற்பித்தல் பணியோடு, தமிழ்மொழி கற்பித்தலுக்குரிய நூல்கள், ஒலி நாடாக்கள் மற்றும் கணினி குறுவட்டுகளையும் தயாரித்துள்ளனர்.

**அ. நூல்கள்**

1. **A Course in Modern Standard Tamil**
   **Dr. P. Kothandaramn (1975)**

தமிழ் மொழியைக் கற்பித்தல் / கற்றலுக்குரிய இந்நூல் அறிமுக நிலை, உயர் நிலை என இரு பகுதிகளைக் கொண்டது.

அறிமுகநிலை பிரிவில் தமிழ் ஒலிகளுக்குரிய விளக்கங்கள் முதலில் கொடுக்கப்பட்டுள்ளன. பின்னர் பேச்சு வழக்கினைக் கற்றுக் கொள்ள பல்வேறு சூழல்களில் அமைந்த 9 உரையாடல் பாடங்களும் 3 உரைநடை பாடங்களும் இடம் பெற்றுள்ளன. பாடங்கள் ரோமன் எழுத்துக்களில் (ஒலிபெயர்ப்பு) கொடுக்கப் பட்டுள்ளன.

பேச்சுத் தமிழைக் கற்று ஓரளவு புலமை பெற்ற பின்னர் இலக்கியத் தமிழைக் கற்றல் எளிது என்ற நிலையில் ரோமன் எழுத்துகளில் உள்ள இப்பாடங்கள் தமிழ் மொழி எழுத்துகளில் இலக்கிய வழக்கில் கொடுக்கப்பட்டுள்ளன. இப்பாடங்களுக்கு முன்னர் தமிழ் எழுத்துகளில் பயிற்சி பெற தமிழ் எழுத்துகள் தனிப் பகுதியாகக் கொடுக்கப்பட்டுள்ளன.

ஒவ்வொரு பாடத்திற்கும் ஆங்கில மொழிபெயர்ப்பும், கற்ற பாடங்களில் புலமை பெற பயிற்சிகளும் கொடுக்கப் பட்டுள்ளன.

உயர்நிலைப் பிரிவு பாடங்கள் இலக்கிய வழக்கில் கொடுக்கப் பட்டுள்ளன. இதில் இடம்பெற்றுள்ள பாடங்கள் பல்வேறு சூழல்களில் அமைந்த உரையாடல்கள் கட்டுரைகள், வானொலி

சிற்றுரைகள், மடல்கள், கதைகள், கருத்தரங்கம், பாடல்கள் என அமைந்துள்ளன. இப்பாடங்கள் தமிழ்மொழி, தமிழர் பண்பாடு போன்றனவற்றை வெளிப்படுத்துவனவாக உள்ளன. இதில் இடம்பெற்றுள்ள பாடல்கள் வாழ்க்கைப் பூங்கா என்ற நூலிலிருந்து பெறப்பட்டவை.

2. **Tamil, An Auto. Instructional Course, TEXT**
**Dr. N. Deivasundaram**
**Dr. A. Gopal (1984)**

இது தமிழ் மொழியினைத் தற்பயிற்சி மூலம் கற்பதற்கு உருவாக்கப்பட்ட பாடநூல். இதில் ஒரேகுடும்பத்தினர் பங்கு பெறும் பல்வேறு சூழல்களில் அமைந்த 20 உரையாடல் பாடங்கள் இடம்பெற்றுள்ளன. இப்பாடங்கள் முதலில் பொது பேச்சு வழக்கிலும் (ரோமன் எழுத்துகளில்) பின்னர் (இதே பாடங்கள்) இலக்கிய வழக்கிலும் கொடுக்கப்பட்டுள்ளன.

இதில் இடம் பெற்றுள்ள ஒவ்வொரு பாடமும் மூன்று பகுதிகளைக் கொண்டது. முதற் பகுதியில், அப்பாடத்தின் முக்கிய நிகழ்ச்சியினைக் குறிப்பிடும் உரை உள்ளது. இரண்டாம் பகுதியில் குறிப்பிட்ட நிகழ்ச்சித் தொடர்பான உரையாடல்கள் இடம் பெற்றுள்ளன. மூன்றாம் பகுதியில் இரண்டாம் பகுதியில் இடம் பெற்றுள்ள நிகழ்ச்சியினை ஒத்த உரையாடல்கள் பயிற்சிக்காகக் கொடுக்கப்பட்டுள்ளன.

தமிழ் ஒலிப்பு வேறுபாடுகள் பற்றிய விளக்கங்களும் எடுத்துக்காட்டுகளுடன் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

ஒலிப்புப் பயிற்சிகளும் பேசிப் பழகுவதற்கான வாய்ப்பு களும் இதில் உள்ளன. இவை கற்போர் தமிழ் ஒலிப்பு முறையினைச் சரியாகக் கற்றுக் கொள்ளவும், தமிழில் பேசிப் பழகவும் உதவும் நிலையில் தயாரிக்கப்பட்டுள்ளன.

3. **Hand Book - Tamil An Auto Instructional Course**
**Dr. S. Jean Lawrence**
**Dr. D. Renganathan**

இது Tamil An Auto Instructional Course - Text-க்குரிய கையேடு, இப்பாடநூலில் கொடுக்கப்பட்டுள்ள 20 பேச்சு வழக்கு மற்றும் இலக்கிய வழக்குப் பாடங்களுக்கும் சொல் மற்றும் சொற்றொடர்

மொழிபெயர்ப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. மேலும் பாடங்களில் இடம்பெற்றுள்ள இலக்கணக் கூறுகளின் விளக்கம், உருவாக்கம் மற்றும் பயன்பாடும் கொடுக்கப்பட்டுள்ளன. பண்பாட்டு விளக்கங்களும் இடம் பெற்றுள்ளன.

4. **Work Book - Written Tamil**
**Tamil Auto Instructional Course**
**S. Jean Lawrence (1996)**

இது Tamil Auto Instructional Course Text இலக்கிய வழக்கிற்குரிய பயிற்சி ஏடு. மாணவர் ஒவ்வொரு பாடத்தினையும் கற்றபின் அப்பாடத்தில் கற்ற இலக்கணக் கூறுகள் மற்றும் சொற்றொடர்கள் உருவாக்கத்தில் புலமை பெறும் நிலையில் பல்வேறு பயிற்சிகள் கொடுக்கப்பட்டுள்ளன. இறுதியில் மொழிபெயர்ப்புடன் கூடிய சொற்பட்டியல் மற்றும் பயிற்சிகளுக்கான விடைகள் இடம் பெற்றுள்ளன.

5. **Work Book - Spoken Tamil**
**Tamil - An Auto Instructonal Course**
**Dr. D. Renganathan (2002)**

இது Tail An Auto Instructional Course Text பேச்சு வழக்கிற்குரிய பயிற்சி ஏடு. இது இலக்கிய வழக்குப் பயிற்சி ஏட்டின் அடிப்படையில் தயாரிக்கப்பட்டுள்ளது. மாணவர் பேச்சு வழக்கில் புலமை பெற பல்வேறு இலக்கணக் கூறுகள் மற்றும் சொற்றொடர் பயிற்சிகள் கொடுக்கப்பட்டுள்ளன. இறுதியில் இலக்கிய வழக்கிலிருந்து பேச்சு வழக்கிற்கு மாறும் மொழி மாற்றங்கள் இடம்பெற்றுள்ளன. இது மாணவர் இலக்கியத் தமிழுக்கும் பேச்சுத் தமிழுக்குமிடையே காணப்படும் வேறுபாடுகளை அறிந்து கொள்ள உதவும்.

6. **Tamil Scripts - Work Book**
**S. Jean Lawrence (2002)**

தமிழ்மொழி எழுத்துக்களைப் பிறர் உதவியின்றி தானே எழுதிப் பழக உதவும் நூல். உயிரெழுத்துகள் மற்றும் மெய்யெழுத்துகள் எழுதிப்பழக வாய்ப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. உயிரெழுத்து களுக்குரிய துணை வரிவடிவங்கள் தனியாக விளக்கப்பட்டுள்ள தோடு அவை மெய்யெழுத்துக்களோடு இணைந்து வரும் நிலையும் விளக்கப்பட்டுள்ளது. மேலும் பயிற்சி பெற்ற எழுத்துக்களை உள்ளடக்கிய சொற்களும் எழுதிப் பழகக் கொடுக்கப்பட்டுள்ளன.

### ஆ. ஒலிநாடாக்கள் – 1984

தமிழ்மொழி தற்பயிற்சிக்கென உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம் ஆறு ஒலி நாடாக்களை வெளியிட்டுள்ளது. இவற்றுள் முதல் நான்கு ஒலிநாடாக்களிலும் Tamil An Auto-Instructional Course Text-இல் கொடுக்கப்பட்டுள்ள இலக்கியத் தமிழ்ப் பாடங்கள் இடம்பெற்றுள்ளன. 5, 6 ஒலி நாடாக்களில் இந்நூலில் இடம் பெற்றுள்ள ஒலிப்புப் பயிற்சிப் பகுதியும், ஒவ்வொரு பாடங் களிலும் இடம்பெற்றுள்ள மூன்றாம் பகுதியும் பயிற்சிக்காகக் கொடுக்கப்பட்டுள்ளன. மேலும் பேச்சுத் தமிழைக் கேட்டுணரும் திறனை வளர்த்துக்கொள்ள ஒரு தமிழ் நாடகமும், இலக்கியத் தமிழ் கேட்டுணரும் திறனை வளர்த்துக் கொள்ள A Course in Modern standard Tamil - இன் ஒரு பகுதியும் கொடுக்கப் பட்டுள்ளன. இத்துடன் தமிழக அரசின் மேனாள் கல்வி அமைச்சர் மற்றும் இந்நிறுவனத்தின் மேனாள் ஆளுகைக் குழுத் தலைவர் திருமிகு அரங்கநாயகம் அவர்களின் ஒரு சிறு உரையும் இதில் இடம்பெற்றுள்ளது.

### இ. கணினி குறுவட்டு – 2001

தமிழ் உலகம் (Tamil Ulagam) உலகத் தமிழாராய்ச்சி நிறுவன ஆளுகைக்குழு, தமிழ் மொழி அறியாதவர் / பிற மொழியினர் கணினி வழித் தமிழ்மொழி கற்றுக்கொள்வதற்குரிய பல்வழித் தமிழ் பயிற்றுப் பேழையினை (Multimedia Package) முனைவர் வ. ஞானசுந்தரம் (பேராசிரியர், இந்திய மொழியின் நடுவண் நிறுவனம்) அவர்கள் ஆலோசனையுடன் தயாரிக்கும் திட்டப்பணி யினை முனைவர் செ. ஜீன்லாறன்ஸ் அவர்களிடம் கொடுத்து இத்திட்டத்தின் வெளிப்பாடே 'தமிழ் உலகம்' எனும் குறுவட்டு.

இது தற்கால பயனாக்க மொழியியல் கோட்பாடுகளின் அடிப்படையில் கற்போர் தாம் விரும்பியதை விரும்பிய நேரத்தில் கற்க உதவும் நிலையில் வடிவமைக்கப்பட்டுள்ளது. இதில்,

**தமிழ் ஒலிகள்**

தமிழ் ஒலிகளின் ஒலிப்பு முறை விளக்கங்கள்

தமிழ் மொழி எழுத்துகளை எழுதும் முறை (அசைவுகளுடன்)

எளிமையிலிருந்து கடினம் என வடிவமைக்கப்பட்ட பல்வேறு சூழல்களில் அமைந்த 20 பேச்சுத் தமிழ் மற்றும் இலக்கியத்

தமிழ்ப் பாடங்கள், உரைநடை பாடங்கள், பத்திரிகைச் செய்திகள், பாடல்கள் இவைகளின் ஆங்கில மொழிபெயர்ப்பில் பாடங்களாக இடம்பெற்றுள்ளன. இவற்றின் இலக்கணக் கூறுகளுக்குரிய விளக்கங்கள், அவைகளை உருவாக்கும் முறைகள், புணர்ச்சி விதிகள், இலக்கணக் கூறுகள், சொற்றொடர் பயிற்சிகள், மொழி விளையாட்டுகள், சொற்களின் பண்பாட்டுக் கூறுகள், சொற்களஞ்சியம் (மொழிபெயர்ப்பு மற்றும் இலக்கணக் குறிப்புகளைக் கொண்டது) இடம்பெற்றுள்ளன. இவை முனைவர் வ. ஞானசுந்தரம் அவர்களின் கருத்துகளுக்கு ஏற்ப முனைவர் செ.ஜீன்லாறன்ஸ் அவர்களின் பாடத்திட்ட வரைவிற்கிணங்க இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனத்தில் பணிபுரியும் முனைவர் சா. மோகன்லால், முனைவர் பொன். சுப்பையா (பாடங்கள் மட்டும்), முனைவர் ந. நடராச பிள்ளை மற்றும் அண்ணாமலைப் பல்கலைக்கழக மொழியியல் துறையில் பணிபுரியும் முனைவர் எம்.கணேசன் ஆகியோரால் தயாரிக்கப்பட்டு முனைவர் வ.ஞானசுந்தரம் மற்றும் முனைவர் செ. ஜீன் லாறன்ஸ் ஆகியோரால் சீர்மை செய்யப்பட்டு திரு. அன்பரசன் (ஆப்பிள் சாப்ட் நிறுவனம், பங்களூர்) அவர்களால் கணினி குறுவட்டில் பதிவுச் செய்யப் பட்டுள்ளன.

### ஈ. Multimedia package for Learning Spoken Tamil

கணினி மூலம் பிற மொழியினர்/வெளிநாட்டினர் பேச்சுத் தமிழ் கற்றுக் கொள்வதற்கான இத்திட்டப்பணி பல்கலைக்கழக நல்கைக்குழு நிதிஉதவியுடன் நடைபெற்றது. இத்திட்டப் பணியின் முதன்மை நோக்காளர் (Principal Investigator) முனைவர் செ.ஜீன்லாறன்ஸ் அவர்களும் இதன் திட்டக்கல்வியர் (Project Fellow)முனைவர் மு. பெரியசாமியும் இதற்குரிய பாடங்களைத் தயாரித்து வழங்கியுள்ளனர்.

# தமிழ்மொழி கற்ற வெளிநாட்டினர்

நாடு வாரியாக 1977 முதல் 2011 வரை

| வ. எண். | நாடு | தமிழ் மொழி கற்றவர்கள் எண்ணிக்கை |
|---|---|---|
| 1. | அமெரிக்கா | 54 |
| 2. | கொரியா | 32 |
| 3. | இங்கிலாந்து | 23 |
| 4. | கனடா | 18 |
| 5. | ஜெர்மனி | 21 |
| 6. | ஜப்பான் | 23 |
| 7. | சுவீடன் | 10 |
| 8. | தென் ஆப்பிரிக்கா | 14 |
| 9. | பிரான்ஸ் | 11 |
| 10. | டச்சு | 7 |
| 11. | நியூசிலாந்து | 2 |
| 12. | மொரீசியஸ் | 3 |
| 13. | போலந்து | 3 |
| 14. | மலேசியா | 1 |
| 15. | ஸ்பெயின் | 1 |
| 16. | ஆஸ்திலேலியா | 2 |
| 17. | பெல்ஜியம் | 3 |
| 18. | அஸ்திரியா | 2 |
| 19. | சைனா | 3 |
| 20. | டென்மார்க் | 1 |
| 21. | மெக்சிகோ | 1 |
| 22. | நெதர்லாந்து | 1 |
| 23. | இஸ்ரேல் | 1 |
| 24. | நைஜீரியா | 1 |
| 25. | ரீயூனியன் | 1 |
| 26. | தாய்லாந்து | 2 |
| 27. | ருமேனியா | 5 |
| 28. | சிங்கப்பூர் | 4 |

மொத்தம் - : 250 வெளிநாட்டினர்

# தமிழ் கற்ற வெளிநாட்டினர்

## 1. அமெரிக்கா

1) Mr.B.JohnEdger
2) Mr.Ananda Radha Ap Felliazum
3) Mr.Denpra Tjeagarakam
4) Mr.Merlinda Skow Fournier
5) Ms. Micki Trilomi
6) Mr.Theodore W.Mayer
7) Mr.Gendin
8) Mr.Gathyspagnoti
9) Dr.RichardM.Bradfield
10) Mr. Steven Canddyallen
11) Ms. Shirley Dar Lene Allen
12) Mr. Sshirly
13) Mr. Steven Ccomdy Allen
14) Ms.Valeric Bluch
15) Mr. John Randolport
16) Ms.Elizabeth Nelson
17) Ms. Elizabeth Macmillan
18) Ms. Debbie
19) Mr. Tray David
20) Mr. Dan Robinson
21) Mr.Nichie Ni Colos
22) Mr. Tom Poppord
23) Mr. Xirresman role
24) Mr. John Khutho
25) Mr.Margaret Mayon
26) Mr.Bernard John Michelt
27) Mr. John L Bushey
28) Mr.Kenneth Channy

29) Mr. Rams Chugani
30) Ms. SherrilSiehold
31) Mr.John W. Siehold
32) Group Teaching to 12 Americans
44) Mr. K.Chaney
45) Mrs.PhakeShaila
46) Mr. James Robert Sasse
47) Mr.David Allen Koehn
48) Mr. Jeffery B.Wood
49) Mr.Jonathan Turner Macon
50) Ms.Laureen De Shazer
51) Mr.Jimothy Paul Svoboda
52) Ms.Wright
53) Mr. Wright
54) Ms. Elizabeth Anne Avery

## 2. கொரியா

1. Ms. Kim Young Ja
2. Mr. Young Ja
3. Mr. David Boolim
4. Ms.Kim Young Ja
5. Mr. Lee Yung Bum
6. Ms.Lee
7. Mr. Lee Yung Bum
8. Mr. Lee
9. Ms.Youn Woo Kim Lee
10. Mr. Kim Young Am
11. Mr. MoomKyu Song
12. Ms.Hee-Jtn Lee Song
13. Ms. Youn Woo Kim Lee
14. Mr. Oh Duk Kwon
15. Mr. Moom-Kyu Song
16. Ms. Hee-Jin,Lee Song
17. Ms. Lee Hee Jin
18. Ms. Tae Sook Kim

19. Mr.Song.M.K.
20. Ms. Tae Sook Kim
21. Mr. Oh Duk Kwon
22. Mr.Yoonsik Lee
23. Mr. Bae Young chul
24. Ms.Choi
25. Ms. Kim Jung
26. Ms.L.Seong-Hef
27. Ms.Inav Young
28. Ms. Lee Jihyoun
29. Mr.Jun Yong il
30. Mr.Yu Yun Jong
31. Mr. Wi Chedlseung
32. Ms.Ahn Tae Yeong

## 3. இங்கிலாந்து

1. Dr.Redurt Wilfred
2. Ms.P.J.Aspdeor
3. Mr.P.Merchant
4. Dr.Brand Field
5. Mr.Prain
6. Ms.Prain
7. Mr.Gillian Marshall
8. Mr.Neil Scott
9. Ms.Hazel J.K.Khandly
10. Ms.E.A.Sterling
11. Mr. Alam Malay
12. Ms.Hart
13. Mr. P.B.Seabright
14. Mrs. Seabright
15. Ms.Penny Vera sanso
16. Mr. John Richard Stedman
17. Ms.Mlanie Suntgharalingam
18. Ms.Sharanya Mohini
19. Ms.Sharanya Mohini
20. Mr.S.R. Day
21. Ms.Susan Tapply

22. Ms. Madurika
23. Ms.Natasha Taylor Bryson Sep. 2011

## 4. கனடா

1. Mr. Kloster Maier
2. Ms. Johnson
3. Ms. Johnson
4. Master Johnson
5. Mr. Dennis H. Johnsons
6. Mr. Robbert J. Zydenbom
7. Ms. S. Macireen Sandersam
8. Mr. Johnson Herman
9. Mr. Richard Macphail
10. Mr. Heman D. Johnson
11. Mr. Virgil Wiebe
12. Mr. Delma Wieba
13. Mr. Jan Draper
14. Mr. Raghunathom Krishnan
15. Mr. Herman D. Johnson
16. Ms. Mathilda Bertrelworth
17. Mrs. Monika Kusmitak
18. Mr. Nadja

## 5. ஜெர்மனி

1. Mr. Horing Wgang
2. Mr. Frank Heidelemann
3. Mr. Loth
4. Ms. Oisela Platte
5. Ms. Kerstin Frick
6. Mr.Hans Jorg Trub
7. Mr. PharrmahTheere Pantba
8. Mr. Ebevhard Weber
9. Ms. Christine Schneider
10. Mr.Stukenberg Thomas
11. Ms. Barbara Schuler
12. Ms. Stache.D
13. Ms. Bettina Weiz
14. Ms.dazsmar Shorny
15. Mr. Michar Sheidl

16. Ms. Stache.D
17. Mr. Thomas Murr
18. Ms. WSeidmann
19. Mr.Jakob
20. Mr.Annika Mayer
21. Ms.Theresa Wilke

## 6. ஜப்பான்

1. Mr. Sho Hikisaka
2. Mr. Haaruo Korate
3. Mr. Shu Hikasaka
4. Mr. Hideu Kirkae
5. Mr. Yabe
6. Mr. Nakashima
7. Mr. Yabe
8. Mr. Yoshihir Onakashima
9. Ms. Ishikawa Kishiko
10. Ms. Ishikawa Kishiko
11. Ms. Yuko Nichidura
12. Mr. Kenichiro Onodera
13. Mr. Takayuki Jujitani
14. Ms. C. Onodera
15. Miss. Sanaki Naakamu
16. Mr. Shin Song Yun
17. Ms. Judith Scmidt
18. Mr. Choo Sook Ping
19. Daunch Punyapra Bhasara
20. Husain T. Hararwala
21. Ms. Takeko Hirakawa
22. Mr. Masakazu Kono
23. Mr. Masakazu Kono

## 7. சுவீடன்

1. Ms.Bulgitia Guranson
2. Mr. Ivo.A. Iliste
3. Ms. Stine Vasu
4. Mr. Lass Rune Adrian Norbger
5. Mr. Chister-Norstorm

6. Ms.Jennifer Erica Duyne
7. Mr.Kjell Evik Wallin
8. Mr.Christer Norstrom
9. Ms.Widlund
10. Mr. Dassnayake

## 8. தென் ஆப்பிரிக்கா

1. Ms. Valasunthree Subbiah
2. Mr.Valasunthary Subbiah
3. Mr. Parakasm Naidoo
4. Ms. Sunthrodayam Naidoo
5. Mr. L.K.Gounder
6. Dr.Jayandra Soni
7. Dr. Jayandra Soni
8. Ms. Shamilla Naidoo
9. Mr.M.Sivaraman
10. Ms. Pillay
11. Ms. Mary Joan Ramiah
12. Ms. Carien
13. Ms. Lorette
14. Mr. Morgan

## 9. பிரான்ஸ்

1. Mr.Jean Paul Poiriur
2. Mr.Roland Lordinois
3. Ms. Roorgoo Lawrence
4. Ms.Ballo
5. Mr.Richard
6. Mr.Badania
7. Mr.Jallut Xavier
8. Ms. Brighitte Huron
9. Ms.Martine Bozoyan
10. Ms.Christine Aubert
11. Ms.Amelle June 2009

## 10. டச்சு

1. Mr. Steen Ann Belinda
2. Mr. J.L.Ruijters
3. Mr. Joe De Wit
4. Ms.Willekens
5. Ms.Nel Mahadevan Renooy
6. Ms. Renata Ranchor
7. Ms.Meyer

## 11. நியூசிலாந்து

1. Mr.David Stuart Moore
2. Ms. Susan Jane

## 12. மொரிசியஸ்

1. Mr. Meinaolvi Naagasingham
2. Mr. J.Pareemanam
3. Mr.Demen Ccheellam

## 13. போலந்து

1. Ms.Natalia Swioziko
2. Ms.Iwonu Uzdoncka
3. Ms.Yoanna Kusio

## 14. மலேசியா

1. Mr.G.Sivanathan

## 15. ஸ்பெயின்

1. Ms.Rosamaria Orihuels

## 16. ஆஸ்திரேலியா

1. Mr.A. Georgiou
2. Ms. S.Meredith

## 17. பெல்ஜியம்

1. Mr. Geenens Philippe
2. Ms. Christian Vanderlinden
3. Ms.Farruggia

## 18. அஸ்திரியா

1. Ms.Dr.Luidgard Soni
2. Dr. (Mrs)Soni Lingard

## 19. சைனா

1. Mr. Ma. Hong
2. Mr. Zhue Zhonghua
3. Ms.Shui Bing

## 20. டென்மார்க்

1. Ms. Hellee Lykke Pedersen

## 21. மெக்சிகோ

1. Ms. Prinz

## 22. நெதர்லாந்து

1. Mr. Ton Van Burgsteden

## 23. இஸ்ரேல்

1. Ms. Miriam Itsikas

## 24. நைஜீரியா

1. Mr. Stanlei D'Silva-29-

## 25. ரீயூனியன்

1. Mr.Karoum Bata

## 26. தாய்லாந்து

1. Mr. Suwan
2. Mr. Danuch

## 27. ருமேனியா

1. Ms. Chia Yi Ling,Hilda
2. Ms. Lee Chin Yong
3. Ms. Janet Tan Mui Wah
4. Ms. Ho Chew Yen
5. Mr. Iancu Cristian

## 28. சிங்கப்பூர்

1. Ms. Chia Yi Ling,Hilda
2. Ms. Lee Chin Yong
3. Ms. Janet Tan Mui Wah
4. Ms. Ho Chew Yen

# மொழிபெயர்ப்பு முயற்சிகள்

முனைவர் மு. வளர்மதி
இணைப் பேராசிரியர்
அயல்நாட்டுத் தமிழர் புலம்

1972ஆம் ஆண்டு முதல் மொழிபெயர்ப்பு எனும் தளத்தில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பல்வேறு பணிகளைச் செய்து வருகின்றது. நிறுவன வெளியீடான தமிழியல் இதழில் மொழிபெயர்ப்பு, மொழிபெயர்ப்புத் தொடர்பானக் கட்டுரைகளை வெளியிடுதல், மொழிபெயர்ப்புப் பட்டய வகுப்பு நடத்துதல், கருத்தரங்குகள், தொடர் சொற்பொழிவுகள், பயிற்சிப்பட்டறை ஆகியவற்றை நடத்துதல், திட்டப் பணிகள், சிறந்த மொழிபெயர்ப்பு நூல்களை மறு பதிப்பில் வெளியிடுதல் என மொழிபெயர்ப்புத் தொடர்பான பல பணிகளை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் செய்து வருகின்றது.

## தமிழியல்

தமிழியல் இதழில் கமில்சுவலபிலின் தொல்காப்பியப் பகுதி (எழுத்து, சொல்) ஆங்கில மொழிபெயர்ப்பு (தமிழியல் 1972-1985), ★ திருமுருகாற்றுப்படையின் ஆங்கில மொழிபெயர்ப்பு (தமிழியல் 1976 - 1977) ★ ஆகியன வெளியிடப்பட்டுள்ளன. மொழிபெயர்ப்புப் பற்றிய கட்டுரைகளும் தமிழியல் இதழில் அவ்வப்போது இடம் பெற்று வந்துள்ளன. போப்பின் திருவாசகப் பெயர்ப்பு, பாரதியார், பெ.நா. அப்புசுவாமி ஆகியோரின் மொழிபெயர்ப்புகள், ஷேக்ஸ் பியரின் தமிழ் மொழிபெயர்ப்புகள் ஆகியன தமிழியல் இதழில் வெளியிடப்பட்டுள்ளன. 'விளம்பர மொழிபெயர்ப்பில் சொல் லாட்சி', 'தமிழ் இலக்கியத்தில் மொழிபெயர்ப்பு வழி மில்டன் பனியன் ஆகியோரின் தாக்கம்', 'மொழிபெயர்ப்புக் கல்வியின் குறிக்கோள்', 'அறிவியல் தமிழ்க் கலைச் சொல்லாக்கம், Translating

---

★ இணைப்பு 1

★ இணைப்பு 2

Medieval Tamil Poetry into English' எனும் தலைப்புகளில் நிறுவனத்தினரும் வெளியாரும் எழுதிய கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

**கருத்தரங்கம்**

*13-3-1990*இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் ஒருநாள் மொழிபெயர்ப்புக் கருத்தரங்கு நடத்தப்பட்டது. அதில் 'அகராதி மொழிபெயர்ப்பு', 'அரசுத் துறையில் மொழிபெயர்ப்புச் சிக்கல்கள்', 'அறிவியல் நூல் மொழிபெயர்ப்பில் ஏற்படும் சிக்கல்கள்', 'கலைச் சொல்லாக்கம்', 'சங்க இலக்கிய மொழிபெயர்ப்பு', 'நாடக மொழி பெயர்ப்பு', 'வரலாற்றுத் துறையில் மொழிபெயர்ப்புச் சிக்கல்கள்', 'வானொலியில் மொழிபெயர்ப்பு', 'வானொலி மொழியில் மொழியாக்கச் சிக்கல்கள்' எனும் பல கட்டுரைகள் கருத்தரங்கில் இடம்பெற்றன.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பல்கலைக்கழக நிதி நல்கைக் குழுவின் நிதி உதவியுடன் *24,25,26-2-99* ஆகிய மூன்று நாட்கள் மொழிபெயர்ப்புக் கருத்தரங்கினை நடத்தியது. இதில் Translation of Literature, Scientific Translation, Problems and Techniques of Translation ஆகிய மூன்று பிரிவுகளின் கீழ் 39 கட்டுரைகள் ஆங்கிலத்திலும் தமிழிலுமாக இடம் பெற்றன. இந்தியாவின் பல்வேறு இடங்களி லிருந்து அறிஞர்கள் வந்து இக்கருத்தரங்கில் கலந்து கொண்டு இலக்கிய மொழிபெயர்ப்புகள் முதல் அறிவியல் கணினித் தமிழாக்கம் வரை பயனுள்ள பல கட்டுரைகளை வழங்கினர். இக்கட்டுரைகள் யாவும் தொகுத்து 'On Translation' (M. Valarmathi) எனும் தலைப்பில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 1999 ஆம் ஆண்டு நூலாக வெளியிட்டுள்ளது.

**பயிற்சிப் பட்டறை**

மொழிபெயர்ப்பில் பலரும் ஈடுபடும் வகையிலும், பயிற்சிப் பெறும் வகையிலும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் மூன்று மொழிபெயர்ப்புப் பயிற்சிப் பட்டறைகளை நடத்தியுள்ளது. முதல் பயிற்சிப் பட்டறையில் *(21-1-92 - 1-2-91)* பல கல்லூரிகளிலிருந்து ஆசிரியர்களும், மாணவர்களுமாக எழுபது பேர் கலந்து கொண்டனர். அறிவியல் மொழிபெயர்ப்பு, அறிவியல் கலைச் சொல்லாக்கம், தமிழ் இந்தி மொழிபெயர்ப்பு, செய்தி மொழிபெயர்ப்பு,

மொழிபெயர்ப்புச் சிக்கல்கள், மொழிபெயர்ப்பு உத்திகள் குறித்து அறிஞர்களால் எடுத்துரைக்கப்பட்டன. இரண்டாவதாக (16-9-91 - 27-9-91) நடந்த பயிற்சிப் பட்டறையில் எழுபத்தைந்து பேர் கலந்து கொண்டனர். இயற்பியல், வேதியியல் துறை சார்ந்த மொழி பெயர்ப்பு, கலைச்சொல்லாக்கம், கட்டிடக் கலைச்சொற்கள், வங்கிக் கலைச்சொற்கள், திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்புகள், கவிதை மொழிபெயர்ப்பு, கிறித்துவ இசைப்பாடல் மொழிபெயர்ப்பு, ஷேக்ஸ்பியர் நாடக மொழி பெயர்ப்பு, மொழிபெயர்ப்புச் சிக்கல்கள் குறித்து இப்பயிற்சிப் பட்டறையில் அறிஞர்கள் பொழிவுரை வழங்கினர். உரை மொழிபெயர்ப்பு பயிற்சியும் இப்பட்டறையில் அளிக்கப்பட்டது. மூன்றாவதாக (7-12-99 - 11-12-99) நடந்த பயிற்சிப் பட்டறையில் நாற்பது பேர் கலந்து கொண்டு பயிற்சிப் பெற்றமை குறிப்பிடத் தக்கதாகும். இப்பயிற்சிப் பட்டறை மாநில ஆங்கில மொழி நிறுவனமும் (State Institute of English) உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் இணைந்து (5 நாட்களில்) நடத்தியதாகும். இதில் கலந்துகொண்டு சொற்பொழிவு மற்றும் பயிற்சி வகுப்புகள் நடத்திய பேராசிரியர்களின் 10 கட்டுரைகளைத் தொகுத்து ஒரு நூலாக Translation - Theory and Application (M. Valarmathi) எனும் தலைப்பில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 2001ஆம் ஆண்டு வெளியிட்டுள்ளது. இம் மூன்று பயிற்சிப் பட்டறைகளிலும் இத்துறை வல்லுநர்களான பேராசிரியர்கள் பலர் கலந்துகொண்டு மொழிபெயர்ப்பு உத்திகள், கோட்பாடுகள், நெறிமுறைகள், சிக்கல்கள் எனப் பல்வேறு தலைப்புகளில் சொற்பொழிவுகள் நடத்தி சிறப்பித்தனர்.

## தொடர் சொற்பொழிவுகள்

1990-91 ஆம் ஆண்டுகளில் மொழிபெயர்ப்புப் பற்றிய சிந்தனைகளைக் கருத்துகளை அறிந்து கொள்ள, மற்றவர்களுடன் பரிமாறிக் கொள்ள வாய்ப்பாக ஏழு தொடர் சொற்பொழிவுகள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நடைபெற்றன.

வி. முருகன் (Translation - Theory and Application), த. பெரியாண்டவன் (ஆட்சி மொழிச் செயலாக்கத்தில் மொழி பெயர்ப்பின் பங்கு 24.10.90), மா. இராசேந்திரன் (எங்கும் தமிழ் - எதிலும் தமிழ்; மொழிபெயர்ப்புச் சிக்கல்கள் 28.11.90)

வீ. சந்திரன் (சட்டவியல் தமிழ் வரைவுகள் - சில நெறிமுறைகள் 9.12.90), கு. சிவஞானம் (இலக்கிய மொழிபெயர்ப்பு

- செய்யுள் மொழிபெயர்ப்பு 23.1.91), சு. சமுத்திரம் (வானொலி செய்தி மொழிபெயர்ப்பு) ஔவை சம்பந்தன் (மொழிபெயர்ப்பியல் அணுகு முறைகள் - 27.2.91) ஆகியோர் உரையாற்றினர். பல்வேறு துறைகளில் மொழிபெயர்ப்பின் பயன்பாடும் முக்கியத்துவமும் வெளிப்படுத்தும் வகையில் இச்சொற்பொழிவுகள் அமைந்தன.

**மொழிபெயர்ப்புத் திட்டப் பணிகள்**

இலக்கண, இலக்கிய ஆய்வு மொழிபெயர்ப்புகள், மொழி பெயர்ப்புப் பற்றியன என இருமுறைகளில் திட்டப் பணிகள் நடைபெற்று வந்துள்ளன. சித்தாந்த தீபிகை முதல் தமிழ் கல்சர் (Tamil Culture) வரையிலான பழைய 'தமிழியல்' இதழ்களையும், JOTS (IITS) இன் முதலிரு இதழ்களையும் அடிப்படையாகக் கொண்ட முனைவர் அ.அ. மணவாளனின் நூற்றொகையில் Translation என்ற தலைப்பில் (பக். 103 - 120) சங்க இலக்கியம் முதல் பாரதி வரை பல பகுதிகள் பலரால் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. ஜெர்மன் - தமிழ் மொழிபெயர்ப்புப் பட்டியல், மொழிபெயர்ப்புத் தொடர்பானக் கட்டுரைகள் பற்றிய தகவல்கள் 'தமிழியல்' இதழில் இடம் பெற்றுள்ளன. இதில் உள்ள இலக்கிய மொழிபெயர்ப்புப் பகுதிகள் சில, பின்பு தொகுத்து நூலாக்கம் பெற்றுள்ளன. ஜி.யு.போப்பின் புறம், புறப்பொருள் வெண்பா மாலை ஆங்கில மொழி பெயர்ப்புகள், பின்பு 'Tamil Heroic Poems' எனும் தலைப்பில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் நூலாக வெளியிட்டுள்ளது. இத் தொகுப்பு தற்போது நிறுவனத்தில் மறுபதிப்பு செய்து வெளியிடப்பட்டுள்ளது.

தமிழில் 1983ஆம் ஆண்டு வரையில் தமிழில் வெளியிடப் பட்ட மொழிபெயர்ப்பு நூல்களுக்கானப் பட்டியல் - தமிழிலிருந்து ஆங்கிலத்திலும் பிறமொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்ட நூல்களுக்கானப் பட்டியல் தயாரிக்கப்பட்டு Bibliography on Translation (ச. சிவகாமி) எனும் தலைப்பில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 1983 ஆம் ஆண்டு நூலாக வெளியிட்டுள்ளது. தமிழ் மொழிக்கும் பிற மொழிகளுக்குமிடையே உள்ள உயர்ந்த எண்ணப் பரிமாற்றத்திற்கு வாய்ப்பாகத் தமிழக அரசின் மொழிபெயர்ப்புக் குழு அமைத்த திட்டத்தின் முதற் படியாக இந்நூற்றொகை தமிழுக்கு வந்த 4234 நூல்கள் பற்றிய பட்டியலும், தமிழிலிருந்து சென்ற 730 நூல் பற்றிய பட்டியலும் இந்நூலில் இடம் பெற்றுள்ளது குறிப்பிடத்தக்கது.

முனைவர் அ.அ. மணவாளன் அவர்களின் 'Tamil Research Through Journals' என்ற நூலில் 'Translation' என்ற பகுதி இவ்வகையில்

சில் ஆராய்ச்சி இதழ்களில் வந்த மொழிபெயர்ப்புகள் பற்றிய விவரங்கள் இடம்பெற்றுள்ளன.

1985 இல் சு. சண்முகவேலாயுதம் திட்டப்பணியாக 'மொழி பெயர்ப்பியல்' எனும் பாடநூலைத் தயாரித்து வழங்கியுள்ளார். நிறுவன வெளியீடுகளான 'எண்பதில் தமிழ்' (1982; மொழி பெயர்ப்பு நூல்கள் ந. கடிகாசலம்), 'எண்பத்தொன்றில் தமிழ்' (1983; மொழிபெயர்ப்பு நூல்கள், ந. கடிகாசலம்) 'எண்பத் திரண்டில் தமிழ்' (1985; மொழிபெயர்ப்பு நூல்கள் - சு. சண்முக வேலாயுதம், 'தமிழ் இலக்கியக் கொள்கை' (தொகுதி 9, சு. சண்முக வேலாயுதம் - மொழிபெயர்ப்பு இலக்கியம்) ஆகியன அவ்வப்போது மேற் கொள்ளப்படும் மொழிபெயர்ப்புத் துறை பற்றிய முயற்சிகளைக் காட்டுகின்றன.

தமிழக நாட்டுப்புறக் கலைகள் (1980 - அ.நா. பெருமாள்) என்பதன் ஆங்கில வடிவமானFolk Arts of the Tamils (1983) Tolkappiyam - Morphologies & Phonology - An English Translaiton (தெ. ஆல்பர்ட்) தொல்காப்பியப் பொருளதிகாரம் (அக, புறத்திணையியல்கள் மட்டும்) கருத்துரையும் ஆங்கில மொழிபெயர்ப்பும் (Porulatikaram of Tolkappiyam - Akattinai and Purattinai An English version, 1998, - A.A.Manavalan) ஆகியன திட்டப் பணியாக மேற்கொள்ளப்பட்டு வெளியிடப்பட்ட நூல்களாகும். நிறுவன வருகைதரு பேராசிரியரின் திட்டப் பணியாக கு. மீனாட்சியின் 'அஷ்டத்யாயி' - தமிழ் மொழிபெயர்ப்பு (1998) மூன்று தொகுதிகளாக வெளியிடப்பட்டது நிறுவன மொழிபெயர்ப்பு முயற்சியில் குறிப்பிடத்தக்கதாகும். இவையாவும் இலக்கண மொழிபெயர்ப்பு எனும் நோக்கில் வெளியிடப்பட்டனவாகும்.

120 சங்க இலக்கியப் பாடல்களின் மொழிபெயர்ப்பாக அமைந்தது Tamil verse in Translation (1987) (P.N. Appuswamy). நிறுவனத்தின் முன்னாள் இயக்குநர் ச.வே. சுப்பிரமணியன், ஜே. வாசக் இணைந்து செய்த A Tamil Reader - Introducing Sangam Literature முதல் தொகுதியில் 35 சங்கப் பாடல்களின் பெயர்ப்பையும் வழங்குகிறது. தற்பொழுது முனைவர் கு. சிதம்பரம் (உதவிப் பேராசிரியர், அயல்நாட்டுத் தமிழர் புலம்) 'தேவதைகள்' சீனக் கவிதைத் தொகுப்பைத் தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டுள்ளார்.

## பிறமொழிகளில் பாவேந்தர் பாடல்கள்

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் பாடல்களில் தெரிந்தெடுக்கப் பட்ட நூறு பாடல்களை ஆங்கிலம் மற்றும் திராவிட மொழிகளான தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் மொழிபெயர்த்து வெளியிட உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் முனைந்தது. தக்காரை வைத்து இம்மொழிபெயர்ப்புப்பணி மேற்கொள்ளப்பட்டது. இப்பணி Selected poems of Bharatidhasan எனும் தலைப்பில் வி.முருகன் (ஆங்கிலம்) பி. பத்மநாபன் தம்பி & டி. ராமகிருஷ்ணன் (மலையாளம்) வி. பசுமலை அரசு (கன்னடம்) சி.ஆர். சர்மா (தெலுங்கு) ஆகியோரின் மொழிபெயர்ப்பில் 1994ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

## மறுபதிப்பாக வெளிவந்த மொழிபெயர்ப்பு நூல்கள்

தமிழக அரசின் அரிய நூல் வெளியீட்டுத் திட்டத்தின்கீழ் நிதியுதவிப் பெற்று 1997ஆம் ஆண்டு 10 நூல்களும், 1998ஆம் ஆண்டு 3 நூல்களும் மறுபதிப்பாக வெளியிடப்பட்டன.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தமிழ் இலக்கியம், பிறமொழி இலக்கியங்கள், இலக்கியம் தொடர்பான மொழிபெயர்ப்பு நூல்களை மறுபதிப்பு செய்து வருகின்றது. அவ்வகையில் Kuruntokai, Kurincippattu, Muttollayiram, Six Long poems from Sangam Tamil, Cilappatikaram, Tamil Heroic poems, Nalavenba, Temple chimes, Dedicaton, Tanippacurattokai, காதம்பரி ஆகிய மொழிபெயர்ப்பு நூல்கள் 1997 ஆம் ஆண்டு மறுபதிப்பாக வெளியிடப்பட்டுள்ளன.

உத்தமராம சரிதம், தில்லைக்கோவிந்தன், பாஸமகாகவியின் இரட்டை நாடகங்கள் ஆகிய மொழிபெயர்ப்பு நூல்களை மறுபதிப்பாக 1998ஆம் ஆண்டு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்டுள்ளது.

'திருக்குறள்' பூரணலிங்கம்பிள்ளை ஆங்கில மொழி பெயர்ப்புடன் (பதி. இ. சுந்தரமூர்த்தி), பிரதிமா ஸ்வப்ன வாசவ தத்தம் (ஜி. ஹரிஹர சாஸ்திரியார்) ஆகிய மொழிபெயர்ப்புகள் 1999ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளன.

Four long poems from Sangam Tamil, Manimekalai (Madhaviah), நாலடியார் மூலமும் உரையும் (அனவரத விநாயகம் பிள்ளை) ஆங்கில மொழிபெயர்ப்புடன், முத்ராராக்ஷஸம் (இ.கே. நடேச

சர்மா) ஆகிய மொழிபெயர்ப்பு நூல்கள் 2000ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டன. முனைவர் மனோன்மணி சண்முகதாஸ் எழுதிய 'ஜப்பானியக் காதல் பாடல்கள்' எனும் நூலும் இவ்வாண்டில் வெளியிடப்பட்டது.

Tiruvacakam Tamil text and English Translation (T.N. Ramachandran), On Translating Tirukkural (Dr. V. Ramasamy) Narrinai Four Hundred (Dr. Dakshinamurthy) ஆகியன 2001 ஆம் ஆண்டில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்ட மொழிபெயர்ப்புகளாகும்.

பழமொழி நானூறு (தெலுங்கு மொழிபெயர்ப்பு - வித்துவான் புல்லூரி முனிரத்தினம்) மாளவிகாக்னிமித்திரம் (எஸ்.எஸ். தேசிகன்) மிருச்சகடிகம் (எஸ்.ஏ. பாலசுப்பிரமணிய ஐயர்) ஆகியன 2002 ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட மொழிபெயர்ப்புகளாகும்.

சீன, ஆங்கில, செர்மானிய, பிரெஞ்சு, அமெரிக்கா, உருசிய, கொரிய, ஸ்பெயின், துருக்கிய நாடுகளின் கவிஞர்களின் பாடல்களை தி.வ. தெய்வசிகாமணி (தெசிணி) தமிழாக்கம் செய்துள்ளார். இப்பாடல்களின் தொகுப்பாக 'தெசிணி-யின் தமிழாக்கப் பாடல் திரட்டு' எனும் தலைப்பில் 2003ஆம் ஆண்டில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்டுள்ளது.

நாச்சியார் - திருமொழி தெலுங்கில் முனைவர் பி. உமா அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டு 2003ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டுள்ளது. கார் நாற்பது, களவழி நாற்பது, இன்னா நாற்பது, இனியவை நாற்பது, நன்னெறி ஆகியவற்றை ஆங்கில மொழிபெயர்ப்புடன் ஒரு தொகுப்பாக 2004 ஆம் ஆண்டில் 'Naa Narpathu and Nanneri' எனும் தலைப்பில் இந்நிறுவனம் வெளியிட்டுள்ளது. இம்மொழிபெயர்ப்பை கவிஞர் தெசிணி வழங்கியுள்ளார்.

Tamil Poetry today, by K.S. Subramanian தெரிந்தெடுக்கப்பட்ட 106 புதுக்கவிதைகளை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து 2007ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ளது.

Bibliography on Translation (2008) மொழிபெயர்ப்பியல் (2009) மறுபதிப்பு வெளியிடப்பட்டன.

'தமிழ் மொழிபெயர்ப்பு முன்னோடிகள்' எனும் தலைப்பில் முனைவர் மு. வளர்மதி மேற்கொண்ட திட்டப்பணி 2010ஆம் ஆண்டு நூலாக வெளியிடப்பட்டுள்ளது.

'தமிழ் மொழிபெயர்ப்பில் வரலாற்று நூல்கள்' எனும் தலைப்பில் மு. வளர்மதியின் முனைவர் பட்ட ஆய்வேடு இந்நிறுவனத்தில் மேற்கொண்ட ஆய்வாக அமைந்துள்ளது.

'தொல்காப்பிய உரைவளம்' என்ற நூல் வரிசையில் இடம் பெற்ற கமில் ஸ்வெலபில், இலக்குவனார், ஆல்பர்ட் ஆகியோரின் தொல்காப்பிய மொழிபெயர்ப்புகள் ஆங்கிலத்தில் இடம் பெற்றுள்ளன.

மொழிபெயர்ப்பு ஒரு கவின்கலை (2010) எனும் தலைப்பில் வீ. சந்திரன் நிகழ்த்திய அறக்கட்டளைச் சொற்பொழிவு நூலாக்கம் பெற்றுள்ளது. மொழிபெயர்ப்பிற்கான கொள்கைகள், வகைகள், கலைச்சொல்லாக்கம் ஆகிய பொருண்மைகளில் விரிவாக்கப் பட்டுள்ளது. *(நூல் எண் 668)*

கடற் பொறியியற் கலைச்சொற்கள் (குறுங்கலைக் களஞ்சியம்) எனும் தலைப்பில் இரா. இராமசாமி, சுப. சுப்பிரமணியன், இரா.சுந்தரவடிவேலு ஆகிய கடல் அறிவியல் துறை சார்ந்த அறிஞர்களின் பணி நூலாக வெளியிடப்பட்டுள்ளது. மொழி பெயர்ப்பின் உயிர்ப்பாக அமைகின்ற கலைச்சொற்கள் ஆங்கில மொழியிலிருந்து தமிழில் பெயர்த்தும், மொழியாக்கமாகவும் அமைந்துள்ளது இந்நூல். *(நூல் எண் 683)*

'மொழிபெயர்ப்பு' எனும் துறைக்கு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இவ்வாறு ஆண்டுதோறும் நூல்களை வெளியிட்டுத் தன்னுடைய பங்களிப்பைச் செலுத்தி வருகின்றது.

## மொழிபெயர்ப்புப் பட்டய வகுப்பு

தமிழ் வளர்ச்சிக்கு மொழிபெயர்ப்பு ஒரு இன்றியமையாதத் தளமாக அமைந்துள்ளது. ஆகையால் மொழிபெயர்ப்புப் பணியில் பலரும் ஈடுபடும்படிச் செய்து அவர்களை இத்துறையில் ஊக்கு விக்கும் நோக்கத்துடன் மொழிபெயர்ப்பியல் முதுநிலை பட்டய வகுப்பு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 1979ஆம் ஆண்டு முதல் தொடங்கப்பட்டது. மாணவர் சேர்க்கை குறைந்தமையால் 2000ஆண்டுக்குப் பிறகு நிறுத்தம் செய்யப்பட்டுள்ளது. கடந்த 22ஆண்டுகளாக நடத்தப்பட்டு வரும் இப்பட்டய வகுப்பில் 60க்கும்

மேற்பட்ட மாணவர்கள் பயின்று பயிற்சிப் பெற்றுள்ளனர். இப்பட்டய வகுப்பில் மாணவர் சேர்க்கைக்கான அறிவிப்பு ஆண்டுதோறும் முக்கிய தமிழ், ஆங்கில நாளேடுகளில் வெளியிடப் பட்டன. அதன்படி ஜீலை மாதம் மாணவர்கள் சேர்க்கப்பட்டு வகுப்புகள் தொடங்கப்பட்டன. பயிற்சி வகுப்பின் காலம் ஓர் ஆண்டு ஆகும். மாணவர்கள் சேர்க்கைக் கட்டணமாக ரூ.300 செலுத்த வேண்டும் என்பன விதிமுறைகளாக இருந்தன.

மொழிபெயர்ப்பியல் பட்டய வகுப்பில் மொழி பெயர்ப்பைப் பற்றிய அறிவைப் பெறும் வகையில் பாடத் திட்டங்கள் அமைக்கப்பட்டன. இதில் மொழிபெயர்ப்பின் தேவை, பயன், மொழிபெயர்ப்பு வரலாறு, சிக்கல்கள், இலக்கிய மொழிபெயர்ப்பு, அறிவியல் மொழிபெயர்ப்பு, தகவல் தொடர்பு சாதனங்களில் மொழிபெயர்ப்பு, ஆட்சித்துறையில் மொழி பெயர்ப்பு, சட்ட மொழிபெயர்ப்பு, கலைச்சொல்லாக்கம் ஆகிய பல்வேறு தலைப்புகளில் பாடத்திட்டம் அமைத்து மொழி பெயர்ப்புப் பற்றிய பயிற்சி மாணவர்களுக்கு வழங்கப்பட்டது.

இவையல்லாமல் வகுப்புகளில் மாணவர்களுக்குத் தமிழி லிருந்து ஆங்கிலத்திலும், ஆங்கிலத்திலிருந்து தமிழிலும் மொழி பெயர்க்கப் பயிற்சி மேற்கொள்ளப்படுகிறது. இதன் விளைவாக ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கு 50 பக்க அளவிலும், தமிழிலிருந்து ஆங்கிலத்தில் 50 பக்க அளவிலும் மொழிபெயர்த்து திட்டப்பணி ஏடு ஒன்றினை மாணவர்கள் பட்டய வகுப்பு இறுதியில் வழங்க வேண்டும். இத் திட்டப்பணி மாணவர்களின் பயிற்சியையும் முயற்சியையும் வெளிப்படுத்துவதாக உள்ளன. மாணவர்கள் தங்களுடைய முயற்சிக்கும், திறமைக்கும் ஏற்ப மொழிபெயர்க்க வேண்டிய நூல்களைத் தேர்வு செய்து மொழிபெயர்த்து இத்திட்ட ஏடுகளை தயாரித்து அளிக்கின்றனர். சங்க இலக்கியம் முதல் தற்கால இலக்கியம் வரை ஆங்கில மொழிபெயர்ப்புக்காகத் தேர்ந்தெடுத் துள்ளனர். இதுவரை பட்டய வகுப்பு மாணவர்கள் வழங்கிய 56 திட்ட ஏடுகள் யாவும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகத்தில் இடம் பெற்றுள்ளன. (இணைப்பில் இப்பட்டியலைக் காண்க)

இம்மொழிபெயர்ப்பு பயிற்சி வகுப்பில் சேரும் மாணவர்களில் 5 பேருக்கு மாதம் ரூ.300 வீதம் உதவித்தொகை வழங்கப்பட்டன.

மொழிபெயர்ப்புப் பட்டய வகுப்பு பயிற்சியின் முடிவில் நடைபெறும் தேர்வில் மூன்று தேர்வுத்தாள்கள் இடம் பெற்றன.

| | | |
|---|---|---|
| Paper I | : | Principles and History of Translation |
| Paper II | : | Translation of Aesthetic, Scientific and Technological literature |
| paper III | : | Translation of passages / texts from English to Tamil and Vice - Versa |
| Project work | : | a) Translation of Tamil work into English |
| | | b) Translation of English work into Tamil |

நிறுவனத் தலைவர் கல்வி அமைச்சர் அவர்களால் கையொப்பமிடப்பட்டு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இத்தேர்வுச் சான்றிதழை வழங்கியது.

மொழிபெயர்ப்புப்பற்றி பல்வேறு தளங்களில் அறிந்து கொள்ள இப்பட்டய வகுப்பு பெரிதும் பயனுடையதாகும். பிற துறைகளுடன் ஒப்பிடும் பொழுது, இத்துறையில் பயிற்சி பெறுபவர்கள் குறைவு எனலாம். தற்பொழுது முதுகலைத் தமிழ் வகுப்பில் மொழிபெயர்ப்புப் பாடம் ஒரு தாளாக இடம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது.

**துணை நூற்பட்டியல்**

1. *தமிழியல், 1972-1985, 1976-1977, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 113*

2. *வெளியீடுகள் - விலைப்பட்டியல், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 113, 2004*

3. On Translation, Ed. M. Valarmathi, *(கட்) உலகத் தமிழாராய்ச்சி நிறுவன மொழிபெயர்ப்புப் பணி, அன்னிதாமசு,* International Institute of Tamil Stuides, Chennai - 113, Ed. Nov.1999, *பக்.191-210*

4. Bibliography on Translation, *ச, சிவகாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113, பதி, 1983.*

5. Diploma Course in Translation Syllabus, International Institute of Tamil Studies, Chennai - 113, 2001-2002.

# இணைப்பு – 1

## 1. தமிழியல்

| எண் | ஆண்டு | பக். | பொருள் | பெயர்ப்பாளர் |
|---|---|---|---|---|
| 1 | 1972 | 43-60 | தொல்காப்பியம் எழுத்து 1-103 | கமில் சுவலபில் |
| 2 | 1972 | 13-20 | தொல்காப்பியம் எழுத்து 104-203 | கமில் சுவலபில் |
| 3 | 1973 | 17-27 | தொல்காப்பியம் எழுத்து 204-296 | கமில் சுவலபில் |
| 4 | 1973 | 13-23 | தொல்காப்பியம் எழுத்து 297-406 | கமில் சுவலபில் |
| 5 | 1974 | 34-36 | தொல்காப்பியம் எழுத்து 407-420 | கமில் சுவலபில் |
| 7 | 1975 | 62-66 | தொல்காப்பியம் எழுத்து 421-462 | கமில் சுவலபில் |
| 8 | 1975 | 8-11 | தொல்காப்பியம் எழுத்து 463-483 | கமில் சுவலபில் |
| 13 | 1978 | 79-86 | தொல்காப்பியம் சொல் 1-30 | கமில் சுவலபில் |
| 20 | 1981 | 5-14 | தொல்காப்பியம் சொல் 31-61 | கமில் சுவலபில் |
| 21 | 1982 | 9-19 | தொல்காப்பியம் சொல் 62-83 | கமில் சுவலபில் |
| 28 | 1985 | 67-80 | தொல்காப்பியம் சொல் 84-117 | கமில் சுவலபில் |
| 9 | 1976 | 1-22 | திருமுருகாற்றுப்படை அறிமுகம் | கமில் சுவலபில் |
| 10 | 1976 | 40-55 | திருமுருகாற்றுப்படை, வரி 455 | கமில் சுவலபில் |
| 11 | 1977 | 82-105 | திருமுருகாற்றுப்படை 456-628 குறிப்பு இணைப்பு முதலியன | கமில் சுவலபில் |

- On Translation (கட்.) உலகத் தமிழாராய்ச்சி நிறுவன மொழிபெயர்ப்புப்பணி
- முனைவர் அன்னிதாமசு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், பதி. நவ. 1999, ப.204

## 2 வெளியீடுகள்

| எண் | தலைப்பு | ஆய்வறிஞர் | ஆண்டு | குறிப்பு |
|---|---|---|---|---|
| 1. | Tamil Reseach through journals - Translations | A. A. Manavalan | 1975 | Bibilography |
| 2. | தொல்காப்பியம்-சிறப்புப் பாயிரம் முதல் மரபியல் வரை | ஆ. சிவலிங்கனார் கு. பகவதி | 1980-1998 | இணைப்பு |
| 3. | எண்பதில் தமிழ்-மொழிபெயர்ப்பு நூல்கள் | ந. கடிகாசலம் | 1982 | தகவலும் திறனாய்வும் |
| 4. | எண்பத்தொன்றில் தமிழ் மொழிபெயர்ப்பு நூல்கள் | ந. கடிகாசலம் | 1983 | தகவலும் திறனாய்வும் |
| 5. | எண்பத்திரண்டில் தமிழ் மொழிபெயர்ப்பு நூல்கள் | சு. சண்முகவேலாயுதம் | 1985 | தகவலும் திறனாய்வும் |
| 6. | Bibliography on Translations | S. Sivakami | 1983 | Bibliography |
| 7. | Folk arts of the Tamils | A.N. Perumal | 1983 | ஆய்வு |
| 8. | தமிழ் இலக்கியக் கொள்கை 9 மொழி பெயர்ப்பு இலக்கியம் | சு. சண்முகவேலாயுதம் | 1984 | ஆய்வு |
| 9. | மொழிபெயர்ப்பியல் | சு.சண்முகவேலாயுதம் | 1985 | Text Book (பாடநூல்) |
| 10. | Tolkappiyam-Phonology and Morphoogy | D. Albert | 1986 | இலக்கணம் |
| 11. | Tamil Verse in Translation | P.N. Appuswamy | 1987 | இலக்கியம் |
| 12. | A Tamil Reader-Vol i & ii | J. Vacek, S.V. Subramanian | 1989 | இலக்கியம் |
| 13. | Selected Poems of Bharathidasan | | 1994 | இலக்கியம் |
| | i. English | V. Murugan | | |
| | ii. Malayalam | P. Padmanaban Thambi & D. Rama Krishnan | 1994 | இலக்கியம் |
| | iii. Kannadam | V. PasumalaiArasu | 1994 | இலக்கியம் |
| | iv. Telugu | C. R. Sarma | 1994 | இலக்கியம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 14. | பாணினியின் அஷ்டாத்யாயி | கு. மீனாட்சி | 1998 | இலக்கணம் |
| 15. | தொல்காப்பியம் - பொருளதிகாரம் கருத்துரையும் ஆங்கில மொழிபெயர்ப்பும் (அகத்திணையியல், புறத்திணையியல்) | அ.அ. மணவாளன் | 1998 | இலக்கணம் |
| 16. | திருக்குறள் ஆங்கில மொழிபெயர்ப்புடன் | பூரணலிங்கம்பிள்ளை (பதி) இசுந்தரமூர்த்தி | 1999 | இலக்கியம் |
| 17. | Four long poems from Sangam Tamil | - | 2000 | இலக்கியம் |
| 18. | ஜப்பானியக் காதல் பாடல்கள் | மனோன்மணி சண்முகதாஸ் | 2000 | இலக்கியம் |
| 19. | Translation Theory and Application | (Ed) M. Valarmathi N. Murugan, Syed Abdur Raheem | 2001 | ஆய்வு |
| 20. | Narrinai Four Hundred | Dakshinamurthy | 2001 | இலக்கியம் |
| 21. | Tiruvachakam | T.N. Ramachandran | 2001 | இலக்கியம் |
| 22. | On Translating | V. Ramasamy Tirukkural | 2001 | இலக்கியம் |
| 23. | பழமொழி நானூறு | பி. உமா (தெலுங்கில்) | 2001 | இலக்கியம் |
| 24. | தெசிணியின் தமிழாக்கப் பாடல் திரட்டு | தெசிணி | 2003 | இலக்கியம் |
| 25. | நாச்சியார் திருமொழி | பி. உமா (தெலுங்கில்) | 2003 | இலக்கியம் |
| 26. | கார் நாற்பது, களவழி நாற்பது, இன்னா நாற்பது நன்னெறி - ஆங்கில மொழிபெயர்ப்புடன் | தெசிணி | 2003 | இலக்கியம் |

மறு அச்சு

| எண் | தலைப்பு | பெயர்ப்பாளர் | ஆண்டு | முன் / முதற் பதிப்பு | குறிப்பு |
|---|---|---|---|---|---|
| 1. | Kuruntokai | M. Shanmugam Pillai<br>David E. Ludden | 1997 | - | |
| 2. | Kurincippattu | P.N. Appuswami<br>Muttollayiram | 1997 | - | |
| 3. | Six Long poems | N. Raguanathan<br>from Sangam Tamil | 1997 | - | |
| 4. | Tamil Heroic | G.U. Pope<br>poems | 1997 | - | |
| 5. | Nalavenba | M.C. Langton | 1997 | 1948 | |
| 6. | Temple Chimes | Spy Surendranath | 1997 | - | தாயுமானவர் |
| 7. | Dedication | Spy Surendranath<br>Voegeli-Arya | 1997 | 1933 | பட்டினத்தார் |
| 8. | Tanippacurattokai | G.U. Pope | 1997 | 1901<br>1963 | V.K. Surya Narayana Sastri |
| 9. | காதம்பரி | வாழவந்த பெருமாள்<br>வசனம்: பி.ஆர்.கிருஷ்ண-மாச்சாரியார்<br>குரு சுப்பிரமணிய ஐயர் | 1997 | 1912 | பாணபட்டர் |
| 10. | Cilappatikaram | V.R. Ramachandra Dikshitar | 1997<br>1977 | 1939 | - |
| 11. | உத்தரராமசரிதம் | சு. சந்தானம் | 1998 | - | பவபூதி |
| 12. | தில்லைக்கோவிந்தன் | வே. நாராயணன் | 1998 | - | அ.மாதவையர் |
| 13. | பாஸ மகாகவியின் இரட்டை நாடகங்கள் | - | 1998 | - | பாஸன் |
| 14. | பிரதிமா ஸ்வப்ன வாசவதத்தம் | ஜி. ஹரிஹரசாஸ்திரியார் | 1999-<br>1946 | - | - |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 15. | Manimekalai | A. Madhaviah | 2000-<br>1922 | - | - |
| 16. | நாலடியார், மூலமும் உரையும் | எஸ்.அனவரத விநாயகம் பிள்ளை | 2000<br>1903<br>1930 | - | - |
| 17. | முத்ரா ராக்ஷஸம் | இ.கே. நடேசசர்மா | 2000,<br>1950 | - | - |
| 18. | மாளவிகாக்னி மித்திரம் | எஸ்.எஸ். தேசிகன் | 2002,<br>1938 | - | - |
| 19. | மிருச்சகடிகம் | எஸ்.ஏ.பாலசுப்பிரமணிய ஐயர் | 2002,<br>1909 | - | - |
| 20. | Bibliography on Translation | S. Sivakami | 2000 | | |
| 21. | மொழிபெயர்ப்பியல் | சு. சண்முகவேலாயுதம் | 2004 | | |
| 22. | தொல்காப்பியப் பொருளதிகாரம் (அகம், புறம்) ஆங்கில மொழிபெயர்ப்பு | அ.அ.மணவாளன் | 2005 | | |

## 4. மொழிபெயர்ப்பியல் பட்டய ஆய்வேடுகள் விவரம்

| எண் | மாணவர் | | தலைப்பு | ஆண்டு |
|---|---|---|---|---|
| 1. | R. Poundurai | பட்டயம் | இதயகீதம் Selected Tamil New Verses | 1980 |
| 2. | P. Venkatachalam | பட்டயம் | எள்ளும் மலரும் - இரஸ்கின் டாக்டர் மூவவின் பொன் மொழிகள் | 1980 |
| 3. | G. Rosinaidu | பட்டயம் | Experiments in Poetry translation | 1981 |
| 4. | S. Sivasankar | பட்டயம் | பூத்திருக்கும் சோலையிலே, Short Stories of India | 1981 |
| 5. | S. Rajarajan | பட்டயம் | மனிதனும் இயற்கையும் குறித்து, தோரோ, Crows and Parrots | 1982 |
| 6. | B. Socretis | பட்டயம் | Did Jesus really exist, Awaiting | 1982 |
| 7. | M. Valarmathi | பட்டயம் | பாரதியின் வசன கவிதை The Liberty of Man, women and children | 1982 |
| 8. | Ta.M. Subramaniam | பட்டயம் | கலித்தொகை - குறிஞ்சி | 1983 |
| 9. | S. ShanmugaVelayutham | பட்டயம் | முல்லைக் கலியும் தொடர் உருவகமும் | 1983 |
| 10. | S. Sridhar Gandhi | பட்டயம் | Bharathida'sans Smile of Beauty, ஆங்கிலத்தில் இந்தியக் கவிதைகள் | 1984 |
| 11. | M. Vasuki | பட்டயம் | King Thirumalai, உலக மதங்கள் ஒரு தத்துவப் பார்வை | 1984 |
| 12. | V. Annamalai | பட்டயம் | நாடும் மக்களும் 1,2 Purananuru | 1985 |

| | | | | |
|---|---|---|---|---|
| 13. | V. Chandrasekaran | பட்டயம் | நிலமும் மக்களும், 7, புறநானூறு | 1985 |
| 14. | T. Mahalakshmi | பட்டயம் | நிலமும் மக்களும், Purananuru | 1985 |
| 15. | V. Perumal | பட்டயம் | Purananuru, மக்களிடையே நிலவுகின்ற மூட நம்பிக்கைகள் | 1985 |
| 16. | S.R. Prasanna | பட்டயம் | நிலமும் மக்களும் 5,6 புறநானூறு | 1985 |
| 17. | R. Suganthi Ganambal | பட்டயம் | புறநானூறு, நாடும் மக்களும் | 1985 |
| 18. | K.P. Arivanantham | பட்டயம் | Narrinai, மாவீரன் அலெக்சாண்டர் | 1986 |
| 19. | T.C. Balu | பட்டயம் | Henry David Thorou I. நற்றிணை | 1985 |
| 20. | C. Jayaraj | பட்டயம் | மாவீரன் அலெக்ஸாண்டர், Narrinai | 1986 |
| 21. | K. Venkatesan | பட்டயம் | Henry David Thorou II, நற்றிணை | 1986 |
| 22. | K. Ananthan Subramanian | பட்டயம் | The Czechoslovak Educational System, Patirruppattu | 1987 |
| 23. | R. Chittibabu | பட்டயம் | Great Shrort Stories, Patirrupattu | 1987 |
| 24. | Radha Subramanian | பட்டயம் | The human side of the human beings, Patirruppattu | 1987 |
| 25. | B. Anbazhagan | பட்டயம் | Indian Folklore அதிசய குகை | 1988 |
| 26. | M. Lakshmanan | பட்டயம் | The story of our rivers II இரு நண்பர்கள் | 1988 |
| 27. | D. Selvaraj | பட்டயம் | Step to the Stars கிளிமூக்கு மாங்காய் | 1988 |

| | | | | |
|---|---|---|---|---|
| 28. | G. Mary Glory | பட்டயம் | வேலூர் கோட்டையின் வரலாறு Verapandya Kattabommu | 1989 |
| 29. | E. Sridharan | பட்டயம் | நாகார்ச்சுன மலை, Marudhu Brothers | 1989 |
| 30. | S. Thilagavathy | பட்டயம் | பொற்கோயில், Umaithurai | 1989 |
| 31. | R. Mani | பட்டயம் | நட்பு Kannadasan's Stories | 1990 |
| 32. | G. Murugan | பட்டயம் | ராபர்ட் ப்ரௌனிங் கவிதைகள் Hindu religion | 1990 |
| 33. | P. SanthoshKumar | பட்டயம் | ரசூலின் கவிதைகள், O Mango | 1990 |
| 34. | S.P. Seethalakshmi | பட்டயம் | கவிதை மலர்கள், Hindu religion | 1990 |
| 35. | M.C. Soundararajan | பட்டயம் | மாபெரும் சிறுகதைகள், Hindu religion | 1990 |
| 36. | R. Chakravarthi | பட்டயம் | கவிதைக் கொத்து, Dreams | 1990 |
| 37. | G. Kala | பட்டயம் | கவிதைக் களஞ்சியம் Stories of Annadurai | 1991 |
| 38. | M. Muthualagu | பட்டயம் | ஸ்டீவி ஸ்மித் கவிதைகள் Mother | 1991 |
| 39. | S. Narasimhan | பட்டயம் | ஆப்பிரிக்க நாட்டுக் கவிதைகள், Stories of children | 1991 |
| 40. | C.V. Prema | பட்டயம் | நட்சத்திரப் பூக்கள், Folk tales | 1991 |
| 41. | D. Jessie Premila | பட்டயம் | சமூகவியல், Angel | 1992 |
| 42. | M. Johnson Soundra Prabagar | பட்டயம் | தகவல் தொடர்பு, Mother | 1992 |
| 43. | T. Balakrishnan | பட்டயம் | கல்வி வளர்ச்சிக்கான ஒரு வழிமுறை, A day before time | 1993 |

| | | | | |
|---|---|---|---|---|
| 44. | D. Gunasekar | பட்டயம் | துணிவான விண்வெளிப் பயணம் Garden days | 1993 |
| 45. | I. Nandakumar | பட்டயம் | A voice from the woumb காலநேரப் பயணிகள் | 1993 |
| 46. | R.S. Saravanan | பட்டயம் | 21-ஆம் நூற்றாண்டைக் கடந்து வளர்ந்துவரும் அறிவியல் தொழில் நுட்பப் புரட்சி, Apple Dream | 1993 |
| 47. | A. Vijayakumar | பட்டயம் | அறிவியல் நமக்கு உற்ற நண்பன். Rolling dice in the Bharatha | 1993 |
| 48. | P. Subramanian | பட்டயம் | ஆங்கில சிறந்த சிறுகதைகள் ஐந்து, Seashore | 1994 |
| 49. | R. Janaki | பட்டயம் | விடிவெள்ளி, Green Flowers | 1995 |
| 50. | K. Pannerselvam | பட்டயம் | நினைவில் நின்றவர்கள் Crescent Moon | 1995 |
| 51. | B. Thamizh Selvi | பட்டயம் | விமர்சிக்கப்பட்ட விமர்சனம் Tearful flowers | 1995 |
| 52. | K. Thirumal | பட்டயம் | தன்னம்பிக்கை, Court of Justice | 1996 |
| 53. | K. Kalaiyarasi | பட்டயம் | பூச்சரம், New Era | 1996 |
| 54. | S. Murali | பட்டயம் | கவிதையின் சமுதாயச் செயற்பாடு, Nature and function of reviewing Damaged | 1996 |
| 55. | K. Dilli | பட்டயம் | நகைச்சுவை & நீதிக்கதைகள் Ministories | 2000 |
| 56. | H. Parameswary | பட்டயம் | The Folk Tales of Tamilnadu & காதல் கதைகள் | 2000 |

# தமிழியல் (Journal of Tamil Studies)

முனைவர் தா. ரெங்கநாதன்
பேராசிரியர்
தமிழ் மொழி (ம) மொழியியல் புலம்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் பல்வேறு பணிகளுள் ஒன்றாக தமிழியல் என்ற இதழ் வெளியிடப்பட்டு வருகிறது. இந்த இதழ் ஆண்டுக்கு இருமுறை வெளியிடப்படுகிறது. இதில் ஆராய்ச்சிக் கட்டுரைகள், நூல் மதிப்புரைகள், நிறுவன வெளியீடு களின் அறிமுகம் ஆகியவை இடம் பெறுகின்றன.

உலகத் தமிழ் ஆய்வு மன்றத்தினர் (International Association of Tamil Research) 1969 ஏப்ரல் திங்கள் Journal of Tamil Studies (JOTS) என்ற இதழைத் தொடங்கினர். இது இரு தொகுதிகளாக 4 இதழ்கள் வெளிவந்தன. பின்னர் அதனைத் தொடர்ந்து வெளியிடவியலா நிலை ஏற்பட்டதால் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கு அளித்தனர். எனவே இது நிறுவனத்தின் சார்பில் 1972 செப்டம்பர் திங்கள் முதல் வெளியிடப்பட்டு வருகிறது. முதலில் ஆங்கிலத்தில் மட்டுமே கட்டுரைகள் வெளியிடப்பட்டன.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் நிருவாகத்திற்கு வந்த பின்னர் இந்த இதழில் (1972 டிசம்பர்) தமிழ் மொழியிலும் கட்டுரை வெளியிடப்பட்டு இரு மொழி இதழாயிற்று. பின்னர் 1973 டிசம்பர் திங்கள் முதல் "தமிழியல்' என்ற தலைப்பையும் தாங்கி வெளிவரத் தொடங்கியது. பேராசிரியர் கா. மீனாட்சி சுந்தரம் முதன்மை ஆட்சி அலுவலராக இருந்தபோது இம்முறை நடைமுறைக்கு வந்தது. அன்று முதல் இவ்விதழ் ஆண்டுக்கு இருமுறை வெளிவந்து கொண்டிருக்கிறது.

ஆசிரியர் குழு (Editorial Board)

உலகத் தமிழ் ஆய்வு மன்றத்தினரின் நிருவாகத்தில் இருந்த போது தமிழியலின் ஆசிரியர் குழு பின்வருமாறு அமைந்திருந்தது.

எம். ஆன்ட்ரனோவ் (யு.எஸ்.எஸ்.ஆர். அறிவியல் அக்காதமி), ஆர்.இ.அஷர் (எடின்பரோ பல்கலைக்கழகம்), ஆல்பர்ட்.பி. பிராங்ளின் (கன்சாஸ் மாநிலப் பல்கலைக்கழகம்), கே.எல். ஜனர்ட் (கொலோன் பல்கலைக்கழகம்), எ.ஜெயரத்னம், கோலோன் பல்கலைக்கழகம், கமில் சுவலபில் (சார்லஸ் பல்கலைக்கழகம்), சேவியர்தனிநாயகம், மலாய் பல்கலைக்கழகம், வ.அய்.சுப்பிரமணியம் (கேரளப் பல்கலைக்கழகம்), எ. சுப்பையா (உலகத் தமிழ் ஆய்வு மன்ற உறுப்பினர்).

1972 செப்டம்பர் திங்கள் நிறுவனம் தமிழியலை வெளியிடும் போது பேராசிரியர்கள் மு. வரதராசன், ஆர்.இ. ஆஷர், ச. அகத்திய லிங்கம், கா. மீனாட்சி சுந்தரம் ஆகியோர் பதிப்பாசிரியர் குழுவில் இருந்தனர். பின்னர் முனைவர் எப். கிராஸ், முனைவர் கமில் சுவலபில், முனைவர் ஜி.எல். ஹார்ட், முனைவர் ச. அகத்திய லிங்கம், முனைவர் எ. வேலுப்பிள்ளை ஆகியோர் பதிப்பாசிரியர் குழுவினர் பொறுப்பில் இருந்தனர்.

முனைவர் எப். கிராஸ், முனைவர் ஜி.எல். ஹார்ட், முனைவர் ஏ. வேலுப்பிள்ளை, முனைவர் எஸ்.என். கந்தசாமி, முனைவர் பொன். கோதண்டராமன் ஆகியோர் பதிப்பாசிரியர் குழுவினர் பொறுப்பிலிருந்து வருகின்றனர்.

கட்டணம்

தமிழியலின் ஆண்டுக்கட்டணம் 20 ரூபாயில் தொடங்கி நூறு ரூபாயாக உயர்ந்துள்ளது. இப்போது ஆயுள் சந்தா ஆயிரம் ரூபாய் எனவும், நிறுவனச் சந்தா ரூ.1500/- எனவும் நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது.

இதழ் ஆசிரியர்கள்

| இதழ் எண் | முதன்மை ஆசிரியர் | இணை ஆசிரியர் |
|---|---|---|
| தொகுதி 1 இதழ் 1 | சேவியர் எஸ். தனிநாயகம் | வ.அய். சுப்பிர மணியம் |
| தொகுதி 1 இதழ் 2 | " | " |
| தொகுதி 2 | " | " |

| | | |
|---|---|---|
| இதழ் 1 | | |
| தொகுதி 2 | ” | ” |
| இதழ் 2 | | |
| 1. | கா. மீனாட்சி சுந்தரம் | - - |
| 2. | ” | - - |
| 3. | கா. மீனாட்சி சுந்தரம் | - - |
| 4. | ” | - - |
| 5. | ” | - - |
| 6. | ச.வே. சுப்பிரமணியம் | - - |
| 7. | ” | - - |
| 8. | ” | க.த.. திருநாவுக்கரசு |
| 9. | ” | ” |
| 10. | ” | ” |
| 11. | ” | ” |
| 12. | ” | ” |
| 13. | ” | ” |
| 14. | ” | ” |
| 15. | ” | ” |
| 16. | ” | ” |
| 17. | ” | ” |
| 18. | ” | ” |
| 19. | ” | ” |
| 20. | ” | ” |
| 21. | ” | ” |
| 22. | ” | - - |
| 23. | ” | ர. விசயலட்சுமி |

| | | |
|---|---|---|
| 24. | ” | ” |
| 25. | ” | ” |
| 26. | ” | ” |
| 27. | ச.வே. சுப்பிரமணியம் | ர. விசயலட்சுமி |
| 28. | ” | ர. விசயலட்சுமி & கு. சுப்பையாபிள்ளை |
| 29. | அ.நா. பெருமாள் | கு. சுப்பையாபிள்ளை |
| 30. | ” | ” |
| 31. | ” | ” |
| 32. | ” | ” |
| 33. | க.த. திருநாவுக்கரசு | ” |
| 34. | ” | ” |
| 35. | ” | ” |
| 36. | சு. செல்லப்பன் | ” |
| 37. | சு. செல்லப்பன் | ” |
| 38. | அன்னிதாமசு | - - |
| 39. | அன்னிதாமசு | - - |
| 40. | ” | - - |
| 41. | ” | - - |
| 42. | ” | - - |
| 43 & 44 | ” | செ. ஜீன்லாறன்ஸ் |
| 45. | ” | ” |
| 46. | ச.சு. இராமர் இளங்கோ | ” |
| 47 & 48 | ” | ” |
| 49 & 50 | ” | கு. பகவதி |

| | | |
|---|---|---|
| *51 & 52* | " | " |
| *53 & 54* | " | ச. சிவகாமி |
| *55 & 56* | " | ச. சிவகாமி |
| *57 & 58* | " | அன்னிதாமசு |
| *59* | " | " |
| *60.* | " | " |
| *61.* | ச. கிருட்டிணமூர்த்தி | தா. ரெங்கநாதன் |
| *62.* | " | " |
| *63.* | " | " |
| *64.* | " | " |
| *65.* | ம. இராசேந்திரன் | " |
| *66.* | " | " |
| *67.* | " | " |
| *68.* | " | " |
| *69.* | " | " |
| *70.* | " | " |
| *71.* | கரு.அழ. குணசேகரன் | " |
| *72.* | " | " |
| *73.* | " | " |
| *74.* | " | " |
| *75.* | " | " |
| *76.* | " | " |
| *77.* | கா.மு. சேகர் | " |
| *78.* | " | பெ. செல்வகுமார் |
| *79-80* | " | " |
| *81.* | முனைவர் கோ. விசயராகவன் | " |
| *82.* | " | " |

## கட்டுரையாளர்கள்

தமிழியல் இதழில் வெளிநாட்டுப் பேராசிரியர்கள் இந்திய நாட்டுப் பேராசிரியர்கள் எனப் பல்வேறு அறிஞர்கள் கட்டுரை எழுதி யுள்ளனர். அவர்களுள் எம்.பி. எமினோ, ராபர்ட் எல்.கார்டுகிரேவ், கே.கே. பிள்ளை, அர்னே லெஃமன், ஏ.கே.இராமானுஜம், கே.கைலாசபதி, ஆன்ட்ரனோவ், ஹெச்.டி. சங்காலியா, செயின்வன் ஹெச். தாமஸ், ஆர்லின் ஆர்.கே. ஜிட், ஓய்.வி. நொரசோவ், அஸ்கோ. பர்போல, டி.பர்ரோ, ஐ. மகாதேவன், என்.வி. குரோவ், ஹெரால்ட் சிப்மன், டேவிட் ஹோவர்ட் டே, கே. இந்திரபாலா, மால்கம் ஆதிசேஷையா, சோமலே, கே.சி. கமலையா, என்.வானமாமலை, தெ.பொ. மீனாட்சிசுந்தரம், வ.அய். சுப்பிர மணியன், ச. அகத்தியலிங்கம், சுசுமோ ஓனோ, வேலுப்பிள்ளை, வாசக், என். குமாரசாமி ராஜா, மயிலை சீனி. வேங்கடசாமி, முத்து சண்முகம் பிள்ளை, கிரிகரி ஜேம்ஸ், நிர்மல் சென்குப்தா, எஸ்.என்.கந்தசாமி, சுசீந்திரராஜா, கே.வி.இராமன், க.த.திருநாவுக்கரசு, அ.நா.பெருமாள், செ.வை. சண்முகம், இ.அண்ணாமலை, பி.எல். சாமி, க. செல்லப்பன், கே. பரமசிவம் ஆகியோர் குறிப்பிடத்தக்க அறிஞர்களாவர்.

## கட்டுரைகள்

தமிழியல் தொடங்கப்பட்ட காலத்தில் ஆங்கிலக் கட்டுரைகள் மட்டுமே வெளிவந்தன. இவற்றுள் பன்னாட்டு அறிஞர்கள் பலரின் ஆய்வுக் கட்டுரைகளும் உள்ளன. உலக அளவில் செல்லும் இதழாக இருந்தமையால் ஆங்கிலக் கட்டுரைகள் மிகுதியாகவும் பின்னர் இரண்டாம் இதழிலிருந்து (டிசம்பர் 1972) தமிழ்க் கட்டுரைகளும் இடம்பெறத் தொடங்கின. இக்கட்டுரைகள் தமிழ்மொழி, இலக்கியம், மொழியியல், கலை, பண்பாடு, வரலாறு, நாட்டுப் புறவியல், தொல்லியல் எனப் பல்வேறு தலைப்புகளில் அமைந்தன.

சில இதழ்கள் குறிப்பிட்டத் தலைப்பிலமைந்த சிறப்பிதழாக வெளிவந்தன. சான்றாக, சிந்து சமவெளி எழுத்துச் சிறப்பிதழ், டாக்டர் மு.வ. நினைவு சிறப்பிதழ், பாரதியார் நூற்றாண்டு விழா சிறப்பிதழ், பாரதிதாசன் நூற்றாண்டு விழா சிறப்பிதழ், பெ.நா.அப்புசுவாமி நினைவு சிறப்பிதழ் ஆகியவற்றைக் குறிப்பிடலாம். டிசம்பர் 2003 வரை ஐ.ஐ.டி.ஆர் வெளியிட்ட நான்கு இதழ்களும், நிறுவனம் வெளியிட்ட 64 இதழ்களும் வெளி வந்துள்ளன.

நிறுவனமும், ஐ.எ.டி.ஆரும் வெளியிட்டுள்ள இதழ்களில் வெளிவந்துள்ள மொத்த ஆய்வுக் கட்டுரைகள் 563. இவற்றுள் ஆங்கிலக் கட்டுரைகள் மிகுதியாகவும், தமிழ்க் கட்டுரைகள் சற்று குறைவாகவும் உள்ளன. ஆங்கிலக் கட்டுரைகளின் எண்ணிக்கை 418. பன்னாட்டு அறிஞர்களின் கட்டுரைகளும் இதில் அடங்கி யுள்ளன. தமிழ்க் கட்டுரைகள் 145.

நிறுவன வெளியீடுகளும் தமிழியலில் வெளியிடப் பட்டுள்ளன.

## நூல் மதிப்புரைகள்

சில இதழ்கள் தவிர்த்து அனைத்து இதழ்களிலும் நூல் மதிப்புரைகள் இடம் பெற்றுள்ளன. ஆங்கிலம், தமிழ் ஆகிய இருமொழி நூல்களின் மதிப்புரைகள் அந்தந்த மொழிகளில் வெளியிடப்பட்டுள்ளன. இவற்றைப் பெரும்பாலும் நிறுவனம் சார்ந்த பேராசிரியர்களும், பிற நிறுவனங்களில் பணியாற்றும் பேராசிரியர்களும் எழுதியுள்ளனர். இதுவரை 166 நூல் மதிப்புரைகள் வெளியிடப்பட்டுள்ளன. இது மட்டுமன்றி பாரதிதாசன் நூற்றாண் டையொட்டி வெளியிடப்பட்ட சிறப்பிதழில் பாரதிதாசனைப் பற்றிய 37 நூல்களின் மதிப்புரைகள் வெளியிடப் பட்டுள்ளன. இவற்றையும் சேர்த்துக் கணக்கிடும்போது நூல் மதிப்புரைகளின் மொத்த எண்ணிக்கை 203 ஆக உள்ளது.

ஆண்டுக்கு இருமுறை வெளிவரும் 'தமிழியல்' கடந்த 32 ஆண்டுகளாக வெளிவந்துகொண்டிருக்கிறது. பல்கலைக்கழகங்கள் கூட ஆய்விதழ்களைத் தொடர்ந்து வெளியிடவியலாத நிலை யிலிருக்கும் போது, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தமிழியலை வெளியிட்டுக் கொண்டிருப்பது ஆய்வுலகிற்கும், ஆய்வாளருக்கும் கிடைத்த பெரும்பேறாக உள்ளது. 2013ஆம் ஆண்டு வரை தமிழியல் 83 இதழ்கள் வெளியிடப்பட்டுள்ளன.

# சுவடிப்புலம்

முனைவர் தி. மகாலட்சுமி
இணைப் பேராசிரியர்
தமிழ் இலக்கியம் (ம) சுவடிப்புலம்

## சுவடிப்பிரிவின் தோற்றமும் செயற்பாடுகளும்

நம் முன்னோர் தம் அறிவுக் கருவூலமாக விளங்கும் சுவடிகளைத் திரட்டிப் பாதுகாக்கும் கடமைகளைப் பல அமைப்புகள் மேற்கொண்டுள்ளன. அவ்வகையில் தற்போதுள்ள இந்நிறுவனச் சுவடிப்புலத்திற்கு முதன்முதலில் கால்கோளிட்டவர் இந்நிறுவனத்தின் மேனாள் இயக்குநர் ச.வே. சுப்பிரமணியன் அவர்கள்.

தமிழ்ச் சுவடிகள் குறித்தும் அவற்றைப் பாதுகாத்தலின் இன்றியமையாமை, அவற்றைப் படித்துப் பிரதி செய்யப் பயிற்சி அளித்தலின் உடனடித் தேவை பற்றியும் உ.வே.சாமிநாதய்யர் நூலகக் காப்பாளராக இருந்த திரு.மு.கோ. இராமன் அவர்கள் அரசுக்கு விரிவான அறிக்கை அளித்ததையொட்டி அப்போதைய கல்வி அமைச்சர் அவர்கள் இந்நிறுவன இயக்குநராக இருந்த முனைவர் ச.வே. சுப்பிரமணியம் அவர்களிடம் சுவடிப் பிரிவைத் தொடங்கிச் சுவடியியற் பணிகளை மேற்கொள்ளக் கூறினார்.

அதனையொட்டி 1979 அக்டோபர் ஆறாம் தேதி முதல் முழுநேரச் சுவடியியற் பட்ட மேற்படிப்புப் பட்டய வகுப்பு நடைபெறத் தொடங்கி ஆண்டுதோறும் நடந்து வருகிறது.

பட்டய வகுப்பு, பயிலரங்குகள் வழி மாணவர்களுக்கும் பிறருக்கும் சுவடிப் பயிற்சி அளித்தல், அச்சில் வெளிவராத சுவடி நூல்களைப் பதிப்பித்து அச்சிடல், சுவடிப் பதிப்பு வரலாறு அறிதல், சுவடிகளுக்கு விளக்க அட்டவணை தயாரித்து வெளியிடுதல், சுவடிப் பதிப்பு ஆய்வுகளை நூல் கட்டுரைகளின் வழி மேற்கொள்ளல் முதலான பணிகளை மேற்கொண்டு வருகிறது.

இலக்கியத் துறையுடன் இணைந்து இருந்த சுவடியியல் தன் பணிகளின் வளர்ச்சியினால் 1996 முதல் தனிப்புலமாக அதாவது இலக்கியம் மற்றும் சுவடிப்புலமாக உருவாகியது.

**சுவடிப் பட்டய வகுப்பு**

டாக்டர் உ.வே.சா.வுக்குப் பிறகு சுவடிகளைப் படித்துப் பதிப்பித்து வெளியிடுகின்ற ஆற்றல் உடையவர்கள் குறைந்து விட்டனர் என்ற சிந்தனையைக் களைய வேண்டி இந்நிறுவனத்தில் 1979 முதல் தொடங்கப்பெற்ற சுவடிப் பட்டய வகுப்பு 2004 வரை நடைபெற்று வந்தது. 2013-2014ஆம் கல்வியாண்டு முதல் இது மீண்டும் தொடர்ந்து நடத்தப் பெறவுள்ளது.

இப்பட்டய வகுப்பில் சேரப்பட்டப் படிப்புத் தேறியிருத்தல் நுழைவுத் தகுதியாக ஏற்கப்படுகிறது. இப்பட்டயப் பயிற்சி பயிலும் ஐந்து மாணவருக்கு மாதமொன்றிற்குத் தொடக்க காலத்தில் இருநூறும், 1983 முதல் 2004 வரை முன்னூறும் உதவித்தொகை வழங்கப்பட்டது. இதுவரை ஏறக்குறைய நூறு மாணவர்கள் இப்பட்டய வகுப்பில் சேர்ந்து பயின்றுள்ளனர். 88 மாணவர்கள் பட்டயம் பெற்றுள்ளனர்.

பயிற்சிக் காலம் ஓராண்டு. பயிற்சியின் போது தமிழில் உள்ள ஓலைச்சுவடிகளை நன்கு படிக்கவும், அவற்றைப் படி யெடுக்கவும், நூலாக வெளியிடவும் முழுப்பயிற்சி அளிக்கப்படுகிறது. மேலும் சுவடிகளின் தோற்றமும் வளர்ச்சியும், சுவடிகளின் இன்றைய நிலை, சுவடிகளைத் திரட்டும் முறை, படியெடுக்குங்கால் ஏற்படும் சிக்கல்கள், அவற்றைப் போக்கி முழுமை செய்யும் முறைகள், மூலபாடத் திறனாய்வுவழி பாடத்தை உறுதி செய்தல், பாட வேறுபாடுகள், பிழைகள் காணுதல், பாட்டு நடைகளை அமைக்கும் வழிகள், அச்சுப்படி தயாரிக்கும் முறை, அச்சுப்படி திருத்தும் முறை, பதிப்பு வரலாறு, யாப்புபாட்டியல் அறிதல் போன்றவை போதிக்கப் படுகின்றன.

பட்டய மாணவர் தேர்வுகளை எழுதுவதோடு மட்டுமன்றி ஆண்டிறுதியில், இதுவரை அச்சில் வராத ஒரு சுவடி நூலைப் பிரதிசெய்து குறிப்புரை, முன்னுரை, பதிப்புரை, சொற்பொருள் அகராதியுடன் அச்சிற் பதிக்கத்தக்க வகையில் செம்பதிப்பு ஆய்வேடாக அளிக்கவேண்டும். இங்ஙனம் அளிக்கப்பட்டவை 89 தட்டச்சு செய்யப்பட்ட ஆய்வேடுகள் உள்ளன.

நிறுவனத்திலுள்ள 32 சுவடிகள் ஆய்வேடுகளாக உருப் பெற்றுள்ளன. அவற்றுள் 15 ஆய்வேடுகள் நூல்களாக வெளி வந்துள்ளன.

ஆண்டுதோறும் சுவடிப்பட்டயத் தேர்வில் முதல் வகுப்பும், முதலிடமும் பெறும் மாணாக்கரை ஊக்குவிக்கும் வகையில் அவரின் பதிப்பாய்வேடு அச்சிடப்பட்டது. அத்துடன் அவருக்குக் குறுகிய கால ஆய்வுப்பணி நியமனமும் அளித்தது. இம்முறையில் முனைவர் சூ. நிர்மலாதேவி, முனைவர் இரா. மாதவன், முனைவர் மா.சத்தியபாமா முதலானோர் பணி வாய்ப்புப் பெற்றனர்.

சுவடியியல் பட்டயக் கல்வி நிகழ்த்தி அதன் பகுதியாகச் சுவடிப்பதிப்பு ஏடுகளை உருவாக்கி, அவற்றுள் சிலவற்றை அச்சிடுதல் இந்நிறுவனத்திற்கு மட்டுமே உரிய தனிச்சிறப்பு ஆகும்.

## சித்த மருத்துவர்

முழுநேரப் பட்டய வகுப்பினை நடத்தி வரும் இந்நிறுவனம் ஒருமுறை பகுதிநேரச் சுவடிப் பட்டய வகுப்பினை (1989-1991) நடத்தியது. இதன்வழி பட்டயம் பெற்ற மூவரும் சித்தமருத்துவர் என்பது குறிப்பிடத்தக்கது.

மேலும் பகுதி நேரப் பயிற்சியும், கோடைக்காலப் பயிற்சியும் பெற்ற மருத்துவர்கள் இந்நிறுவனச் சுவடித் துறையுடன் இணைந்து செயல்பட விரும்பினர். அவ்விருப்பத்திற்கிணங்கி நிறுவனச் சுவடிப் புலப்பொறுப்பாளர் முனைவர் தி.மகாலட்சுமி மேற்கொண்ட முயற்சியின் பயனாய்த் தமிழக அரசு சுவடிப்பயிற்சி பெற்ற மருத்துவர்களுள் ஐந்து மருத்துவர்களை அலுவல் பணியில் மாதத்திற்கு இருமுறை என ஆறுமாதம் வரை நிறுவனச் சுவடிப் பிரிவில் பணியாற்ற அனுமதி அளித்தது.

இந்த அனுமதி ஆறு மாதத்துடன் முடிந்து விட்டது. இம்முறையில் மருத்துவர்கள் வந்து செல்வது இனிவரும் காலங்களில் தொடருமாயின் சித்தமருத்துவச் சுவடிப் பதிப்புகளை மருத்துவர்களின் உதவியுடன் தொடருதல் இயலும்.

## பாடத் திட்டம்

தொடக்க காலத்தில் சுவடியியல், எழுத்து வரலாறு, மொழிவரலாறு, ஆய்வு நெறிமுறைகள், செய்முறைப் பயிற்சி,

ஆய்வேடு அளித்தல் ஆகியன பாடத்திட்டமாக அமைந்தன. பின்னர் ஆய்வு நெறிமுறைகள், எழுத்துவரலாறு, மொழி வரலாறு ஆகியன நீக்கப்பட்டன. பதிப்பு வரலாறு (1996), யாப்பியல், பாட்டியல் (1997) ஆகியன சேர்க்கப்பட்டன.

### சுவடிப் பணியாளர்

ஆராய்ச்சி அலுவலர் எனும் பணியில் 6.10.1979இல் சேர்ந்து சுவடிப் பட்டய வகுப்பின் பொறுப்பாளராக, முனைவர் பூ. சுப்பிரமணியம் பணியாற்றி வந்தார். பாடத்திட்டம் வகுத்தது முதல் செய்முறைப் பயிற்சி ஈறாக அனைத்துப் பணிகளிலும் ஈடுபட்டுச் சுவடிப் பதிப்பாளர்கள் பலரை உருவாக்கிய பெருமை இவரையே சாரும்.

1979 முதல் 1993 வரை இவர் அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்திலிருந்து மாற்றுப் பணி விடுப்பில் இங்குப் பணிபுரிய வந்து இருந்ததால் 1986 இல் தம் பணியிடத்திற்குத் திரும்பினார். இவர் ஆகஸ்ட் 1987இல் மீண்டும் இங்கு வந்து, முதுநிலை உதவியாளராக 1993 வரை பணிபுரிந்தார். 1979 முதல் 1993 வரை வெளிவந்த ஆய்வேடுகளுக்கு இவரே நெறியாளர் என்பது சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. இவர் சுவடித் தொடர்பான வெளியீடுகளையும் தந்துள்ளார்.

இவரையடுத்துக் குறிப்பிடத்தக்க அளவில் இப்புலத்திற்குப் பணியாற்றியவர் திரு.மு.கோ. இராமன் அவர்கள். இவர் 1979 முதல் 1986 வரை வகுப்புகளை நடத்தி வந்ததோடு மட்டுமின்றி சுவடிப் பயிற்சிக் கையேடு, திருமயிலை உலா ஆகிய படைப்புகளையும் தந்துள்ளார்.

முனைவர் பூ. சுப்பிரமணியத்தை அடுத்து 1994இல் முனைவர் ச. சிவகாமி சுவடிப் பட்டய வகுப்புகளின் பொறுப்பாளராகப் பணியாற்றினார். அதன்பின் வகுப்புப் பொறுப்பாசிரியராகவும் (1995 முதல்), சுவடிப்புலப் பொறுப்பாளராகவும் (1996 முதல்) முனைவர் தி. மகாலட்சுமி மே 2012 வரை பணியாற்றி வந்தார்.

பட்டய வகுப்பு ஆசிரியர்களாக முனைவர் ச. சிவகாமி, வே.இரா. மாதவன், முனைவர் கு. பகவதி, முனைவர் சி. சசிவல்லி, தி. லலிதா, க. லலிதாம்பிகா, மா. சத்தியபாமா, ஆய்வாளர் அழகப்பராசு போன்றோர் பணியாற்றியுள்ளனர்.

1995 முதல் 2004 வரை முனைவர் தி. மகாலட்சுமி, முனைவர் சு. நிர்மலாதேவி, திரு. த. பூமிநாகநாதன் ஆகியோர் வகுப்புகளை நடத்தி வந்தனர்.

## சுவடிப் பதிப்புகள்

பட்டயக்கல்வி நிறைவின் பகுதியாகப் பதிப்புகள் உருவாகியதுடன், நிறுவன ஆய்வு அலுவலரின் திட்டப் பணியாகவும் 1980 முதல் பதிப்புகள் தயாரிக்கப் பெற்று, நூலாக வெளிவரத் தொடங்கின. நிறுவனச் சுவடிகள் மட்டுமன்றி வேறு பல நிறுவனங்களில், நூலகங்களில் தனியாரிடம் பெறப்பட்ட சுவடிகளும் இந்நிறுவனத்தின் பதிப்பு வெளியீடுகளாக உருவாகியுள்ளன.

கல்வி அலுவலரின் திட்டப்பணியாக வந்தவை பலவும் உ.வே.சா. நூலகச் சுவடியாகவும், கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தைச் சார்ந்தவையாகவும் அமைகின்றன. பட்டயமாணவர்களின் ஆய்வுப் பதிப்புகள் சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடிநூலகத்தில் பெறப்பட்டவையாகப் பெரும்பாலும் அமைகின்றன. 1981இல் மதுரையில் நடைபெற்ற 5ஆவது உலகத் தமிழ் மாநாட்டினை எதிர்நோக்கி இந்நிகழ்வின் நினைவு வெளியீடாகவும் பதிப்புகள் அச்சேறின.

1984 முதல் தமிழ்ச் சுவடிப் பதிப்பின் முன்னவரும், வழி காட்டியுமான அறிஞர் உ.வே.சாமிநாதஐயர் பெயரில் அமைக்கப் பெற்ற அறக்கட்டளையின் சார்பில் சுவடிப் பதிப்புத் திறனாய்வு நூல்களும் வெளிவரலாயின. இதே காலக்கட்டத்தில் சுவடிப் பாட நூல்களும், சுவடியட்டவணைகளும் வெளிவரத் தொடங்கின.

1980இல் வரத்தொடங்கிய இப்பதிப்பு வெளியீடுகள் 1988 முதல் 1994 வரை வரப்பெறவில்லை.

பதிப்பித்தல் என்பது புதியதாகப் படைத்தல் போன்றதே. அதனினும் சிக்கல் நிறைந்த மேம்பட்ட பணியிது என்று கூடக் கூறலாம். அத்தகுச் சுவடியியல் சார்ந்த பதிப்புகளாக 63 நூல்கள் இதுவரை வெளிவந்துள்ளன. தசாபுத்திப்பலன், கஞ்சமி செட்டியார் பள்ளு என்ற காஞ்சிபுரப் பள்ளு, பராசரியம், புலத்தியர் அருளிய வைராக்கிய சதகம், குமரமலை பிள்ளைத்தமிழ் போன்றவை வெளிவர உள்ளன.

பணவிடுதூது, கருவூரார் பலதிரட்டு, மனைநூல், திரு மயிலை உலா, அமிர்த மதன கூத்து நாடகம், எட்டயபுரப்பள்ளு முதலான நூல்களை இப்புலம் சார்ந்தவர்கள் வெளிக்கொணர்ந்தனர். சுவடியியல் மீதான ஈடுபாட்டால் நிறுவனத்தின் பிற துறையினரும் பிரபந்தத்திரட்டு, தந்தி வனப் புராணம், கூவநூல், வாத்தியமரபு முதலான சுவடிப் பதிப்புகளைத் தந்துள்ளனர். கண் மருத்துவம், கருவூரார் பலதிரட்டு, தடிவீரசாமி கதை என்ற நூல்கள் தமிழக அரசின் பரிசைப் பெற்றுள்ளன.

நிறுவனமே வெளியிடுதல் என்ற நிலையிலிருந்து மாறுபட்டு நிறுவன ஆய்வேடு ஒன்று 'ஜோதிட நட்சத்திர மாலை' என்ற பெயரில் நர்மதா பதிப்பக வெளியீடாக வெளிவந்துள்ளது.

இலக்கியம், சிற்றிலக்கியம், மருத்துவம், இலக்கணம் போன்ற பொருண்மைகளில் நூல்கள் பல எழுந்துள்ளன. அவை புராணம், பிள்ளைத்தமிழ், தூது, பள்ளு, அம்மானை, அந்தாதி, மடல், ஊசல், கும்மி, உலா, திருப்புகழ், குழந்தை வாகடம், திரட்டு, குணவாகடம், மருந்து செய்முறைகள் போன்ற வகைமைகளில் வெளிவந்துள்ளன.

மூலம் அல்லது மூலத்துடன் கூடிய உரையைச் செம்மையாக்கித் தருதல், மூலத்தைப் பதிப்பிக்க எடுத்துக்கொண்ட முயற்சி, சிக்கல் களைதல் போன்றவற்றை விளக்கும் பதிப்புரை தருதல், மூலத்தின் நிறை குறைகளைச் சுட்டி நூலின் சிறப்பை வெளிக்காட்டும் நூலாய்வு தருதல், எடுத்துக் கொண்ட தலைப்பு தொடர்பான பொதுவிளக்கத்தினை அளித்தல் (காட்டு : பிள்ளைத் தமிழ் இலக்கியம் ஒன்று பதிப்பிக்கப்படும்போது சிற்றிலக்கியம், பிள்ளைத்தமிழ் ஆகியவற்றின் இலக்கணம், வரலாறு ஆகியன கூறுதல்), சுவடி மூலம் மட்டும் இருப்பின் தெளிவு வேண்டி உரை தருதல் (குறிப்புரை, பொருளுரை, பொழிப்புரை) போன்றவை சிறப்புறு பகுதிகளாக அமைகின்றன.

ஆய்வேடுகள் நூல் வடிவம் பெறும் நிலையில் பதிப்புரை சுருக்கம் பெறுகிறது.

சொல்லடைவு, அருஞ்சொற்பொருள், அட்டவணை, வரை படம், சித்திரம், புகைப்படம், ஒளிநகல் துணை நூற்பட்டியல் போன்ற இணைவுகளும் தரப்படுகின்றன. ஒப்பீட்டுப் பிரதி கிடைப்பின் பாடவேறுபாடு காட்டப்படுகிறது.

ஏடு எழுதியோரின் பிழைகளைந்து பதிப்பித்தல் என்ற பொதுமை பொதுவாக நிறுவனச் சுவடிப் பதிப்பில் பின்பற்றப்படுகிறது.

நிறுவனத்தின் ஒரு புலமாக விளங்கும் சுவடிப்புலம் உழைப்பால் பல சுவடிப் பதிப்புகளைக் கண்டுள்ளது என்றால் அது மிகை யாகாது.

**அறக்கட்டளை**

சுவடிப் பதிப்புகள் குறித்து ஆய்வுப் பொழிவுகள் நிகழ்த்து தற்காக 1983இல் தமிழ்த் தாத்தா உ.வே.சா. அவர்கள் பெயரால் நிறுவப்பட்ட அறக்கட்டளையின் வழி ஆய்வுப் பொழிவுகள் நிகழ்த்தப் பெற்றன. உ.வே.சா. சிற்றிலக்கியக் பதிப்புகள், தமிழ்க் கவிதை வரலாற்றில் வெகுசனப் பாடல்கள்(1917-1939) ஆகிய தலைப்புகளில் பொழிவுகள் மட்டும் நிகழ்த்தப் பெற்றன. மற்ற பொழிவுகளின் வழி உ.வே.சா. சங்கஇலக்கியப் பதிப்புகள் (1984) உ.வே.சா. காப்பியப் பதிப்புகள் (1985), உ.வே.சா. இலக்கணப் பதிப்புகள் (1986), உ.வே.சா. ஒரு தமிழ் வாழ்வு (1987), 'தொல்காப்பியப் பதிப்புகள்' (1992), உ.வே.சா. செவ்வைச் சூடுவார் பாகவதப் பதிப்பு (1993) உ.வே.சா. சொல்லும் சுவையும் (2000), உ.வே.சா. பதிப்புப் பணியும் பன்முக மாட்சியும் (2003)சுவடிப் பதிப்புக்கலை வழிகாட்டி உ.வே.சா. (2005), உ.வே.சாமிநாதையர் உரை நூல்கள் உணர்த்தும் புலப்பாட்டு நெறி (2008), இரணியன் இசை நாடகம் (2011), பதிப்பு முன்னோடிகள் (2013) ஆகிய நூல்கள் எழுந்துள்ளன.

இவ்வறக்கட்டளைப் பொழிவுகள் தொடங்கும்வரை சுவடிப் பதிப்புகள் மட்டுமே நூல்களாக வெளிவந்தன. இவ்வறக் கட்டளை நூல்கள் திறனாய்வுகளையும் வரலாறுகளையும் கொண்ட ஆய்வுகளாக வெளிவந்துள்ளன. நிறுவனத்திலுள்ள பிற அறக் கட்டளைகளின் வழி குறுந்தொகை உரைத்திறன் 2011, சுவடிப் பதிப்பாசிரியர்கள் ஆகிய நூல்களும் வந்துள்ளன. சுவடியியல் (முனைவர் பட்ட ஆய்வேடு) என்ற நூலும் இத்தன்மைத்தே.

டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளைக் கருத்தரங்கப் பொழிவு வெளியீடாக சுவடிப் பதிப்புத் திறன் (2002) என்ற பெயரில் இரு தொகுதிகள் வெளிவந்துள்ளன. பதிப்பு வரலாறு, பதிப்பு வகை, பதிப்புப் பணி, பதிப்புச் சிக்கல், பாடவேறுபாடு போன்ற பொருண்மைகள் இவற்றில் பேசப்படுகின்றன.

## முனைவர் பட்ட ஆய்வேடு

சுவடிப் பட்டய வகுப்பை நடத்திய பூ.சுப்பிரமணியம் இங்குப் பணிபுரிந்த காலத்தில் 'சுவடியியல்' என்ற தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வை மேற்கொண்டு பட்டம் பெற்றார்.

நிறுவனத்தில் சுவடிப் பட்டயம் பெற்ற இரா. நிர்மலாதேவி, இங்குப் பணிபுரிந்த காலத்தில் நிறுவனத்திலேயே முனைவர் பட்ட ஆய்வும் மேற்கொண்டு 'முத்தாரம்மன் கதை' எனும் சுவடிப் பதிப்பினை ஆய்வேடாக அளித்து முனைவர் பட்டம் பெற்றார்.

இவ்விருவரின் ஆய்வேடுகளின் சுருக்க வடிவு நூல்களாக வெளிவந்துள்ளன.

திருமுருகாற்றுப்படை பதிப்புகள், சி.வை.தாமோதரம் பிள்ளையின் கலித்தொகை பதிப்பு, சிலப்பதிகாரப் பதிப்புகள், சோதிடச்சுவடிகள், சித்த மருத்துவச் சுவடிகள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன சுவடிகள், மருத்துவச் சுவடிப் பாதுகாப்பும், ஓலைகளில் வேறுபடும் எழுத்து வடிவங்கள், தமிழ்ப் பதிப்பில் களத்தூர் வேதகிரி முதலியார், சித்த மருத்துவச் சுவடிகளில் காணப்படும் அரிய செய்திகள், சுவடிப்பதிப்பு வரலாறு (முத்துச்செல்வன்), தமிழ் இலக்கணப் பதிப்பு வரலாறு (2012, கே. ரவிச்சந்திரன்), சங்க இலக்கிய உரையாளர்கள் (2012, ச.கண்ணதாசன்) ஆகிய தலைப்புகளில் முனைவர் பட்ட ஆய்வுகள் நிகழ்த்தப் பெற்றுள்ளன.

## கருத்தரங்கு

சென்னை டாக்டர் உ.வே.சாமிநாதையர் நூல்நிலையச் சுவடிகளைப் பதிப்பித்துப் பாதுகாக்கும் பணியை இந்நிறுவனத்துடன் இணைந்து செய்யும் திட்டம் வகுக்கப்பட்டு, அச்சில் வராத புது நூல்களை ஓலை / தாள் சுவடிகளிலிருந்து அறிமுகம் செய்யும் கருத்தரங்குகள் திங்கள் தோறும் உ.வே.சா. நூலகத்தில் தொடக்கக் காலத்தில் நிகழ்த்தப்பெற்றது. பின்பு அவை நிறுவனத்தால் அச்சியேற்றப்பெற்றன.

தஞ்சை சரசுவதி மகால் நூலகத்துடன் இணைந்து சுவடியியல் தேசியக் கருத்தரங்கினை (2, 3, 4-1-1997) இப்புலம் நடத்தியது. இக்கருத்தரங்க விழாவினைச் சிறப்பிக்கும் வகையில் தினமலர் நாளிதழ், தொடக்க விழா அன்று (28.12.97) சுவடிச் செய்தி பற்றிய சிறப்பு மலர் ஒன்றினை வெளியிட்டது. இதில் சுவடிப் புல

வரலாறும், சுவடிப்புல வெளியீடுகளின் பட்டியலும் இடம் பெற்றுள்ளது. இக்கருத்தரங்கக் கட்டுரைகள் சுவடிச்சுடர் என்ற நூலாக வெளிவந்துள்ளது. இதில் பதிப்பு வரலாறு, இலக்கியம், மொழி, சித்த மருத்துவம், நாட்டுப்புறவியல் மற்றும் சுவடி தொடர்பான பொது சிறப்புக் கூறுகளை வெளிப்படுத்தும் வகையிலான கட்டுரைகள் அமைந்துள்ளன.

'தமிழில் ஆவணம்' என்ற தேசியக் கருத்தரங்கினை இப்புலம் 1998, ஆகஸ்ட் 17,18,19 ஆகிய நாட்களில் நடத்தியது. இக்கருத்தரங்கக் கட்டுரைகள் 'தமிழில் ஆவணம்' (2001) என்ற நூலாக வெளி வந்துள்ளது. ஆவணங்களாகக் கருதப்படுகின்ற கல்வெட்டுகள், பண்டைத் தமிழ் எழுத்துகள், செப்புப் பட்டயங்கள், ஓலைச் சுவடிகள், காசுகள் போன்ற பொருண்மைகளில் அமைந்த 26 கட்டுரைகள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

மலேசியா, சிங்கப்பூர், புதுதில்லி, கேரளா, தமிழ்நாடு உள்ளிட்டப் பல பகுதிகளில் இருந்து 64 ஆய்வாளர்கள் வழங்கிய கட்டுரைகள் சுவடிப் பதிப்பில் உரை வேறுபாடுகள் எனும் தலைப்பில் இரண்டு நூல்களாக கருத்தரங்க நாளன்றே வெளியிடப் பெற்றன. இக்கருத்தரங்கில் 67 பேராளர்கள் கட்டுரை வழங்கினர். சுவடியியல் கருத்தரங்கு பன்னாட்டு கருத்தரங்காக முதன்முறை இப்புலம் அரசின் நிதியுதவுடன் நடத்தியுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

சுவடியியல் பன்னாட்டுக் கருத்தரங்கு 2013, மார்ச் 6, 7 ஆகிய நாட்களில் நடைபெற்றது.

**சுவடிப் புலத்தில் பணிபுரிபவர்கள்**

சுவடிப் புலத்தினர் இக்கருத்தரங்குகளை நடத்தியதோடு மட்டுமின்றிக் கட்டுரைகளையும் வழங்கியுள்ளனர். அது மட்டுமின்றி வெளியிடங்களில் நடந்த சுவடிக் கருத்தரங்குகளிலும் நிறுவனத்தில் நடைபெற்று வரும் வெள்ளிக்கிழமைக் கருத்தரங்கு களிலும் சுவடிப்புலத்தைச் சார்ந்தோர் கலந்துகொண்டு 50க்கும் மேற்பட்ட கட்டுரைகளை வழங்கியுள்ளனர். , சுவடியியல் பாட வேறுபாடு, சந்தி பிரித்துப் பதிப்பித்தல்; சித்த மருத்துவமும் ஆயுர். வேதமும், மருத்துவச் சுவடிகளில் நிறங்கள், சுவடிப் பதிப்பித்தல் - ஓர் ஆய்வு, டாக்டர் ஐயரவர்களும் பாரதியாரும், சுவடிகள் தரும் சுவை, சுவடிப் பதிப்பித்தல் ஆய்வு, புறநானூற்றுப் பதிப்பு,

மருத்துவச்சுவடிப் பதிப்பில் எழும் சிக்கல்களும் தீர்வுகளும் போன்ற தலைப்புகளில் கட்டுரை படித்துள்ளனர்.

நிறுவனச் சிறப்புக் கருத்தரங்கில் தமிழ்ச் சுவடியியல் எனும் தலைப்பில் புலவர் மு.கோ. ராமன் பொழிவு நிகழ்த்தியுள்ளார்.

அதுபோல் நிறுவனம் மாதந்தோறும் நடத்தி வரும் ஆய்வு மன்றக் கருத்தரங்குகளில் சுவடிப்புலத்தைச் சார்ந்தவரும், அவர்களுடைய ஆய்வு மாணவர்களும் சுவடிகள் திரட்டுதல், சித்தர்களும் சித்த மருத்துவமும், சுவடியும் பதிப்பும், மருத்துவ நூல் பதிப்புகள் - ஒரு பார்வை சுவடிகள் திரட்டுதலின் பயன் போன்ற தலைப்புகளில் கட்டுரை படித்துள்ளனர்.

நிறுவன மாதக் கருத்தரங்கில் சுவடிப் பதிப்பில் ஆய்வுச் சிக்கல்கள் என்ற தலைப்பில் கட்டுரைகள் வழங்கப் பட்டுள்ளன.

**பயிலரங்கு**

பன்முகச் செயற்பாடுகளால் பாங்குடன் வளர்ந்து வரும் சுவடிப்புலம் இதுவரை பத்துப் பயிலரங்குகளை நடத்தி 600க்கும் மேற்பட்டவர்களைச் சுவடியியல் திறனுடையவர்களாக்கியுள்ளது. முந்தைய தலைமுறையினருடன் நின்றுவிட்ட ஓலைச் சுவடிகளைக் கற்கும், படிக்கும், பதிப்பிக்கும் பயிற்சி, பட்டயக் கல்வி வழி இளைஞர்களுக்கு மட்டுமின்றி, பயிலரங்குகள் வழி பல்துறை சார்ந்த அறிஞர்க்கும், மாணவர்க்கும், ஆய்வாளர்க்கும் அளிக்கப் பெற்றுள்ளது.

சுவடிப் பயிலரங்குகளில் தமிழகத்திலுள்ள சுவடிப்புல வல்லுநர் சுவடிகளின் தோற்றம், சுவடி உருவாக்கம், அமைப்பு முறை, அழிவு, திரட்டு, அறிவியல் பாதுகாப்பு, மூலபாடம், பாடவேறுபாடு, கல்வெட்டு,மோடி ஆவணம், தாள் சுவடி, கணித, சோதிட, மருத்துவச் சுவடி,போன்ற தலைப்புகளில் வகுப்புகள் எடுத்தனர். பயிற்சியின்போது ஒவ்வொரு நாளும் இரண்டு அல்லது மூன்று மணி நேரம் பயிற்சி அளிக்கப்பெற்றது. பயிற்சிக்காலத்தில் அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகம்,உ.வே.சா. நூலகம், அண்ணா மருத்துவமனை, ராகவேந்திரா மருத்துவச் சுவடிமையம் முதலான இடங்களுக்கு அழைத்துச்சென்று அவற்றின் சுவடிச்செயற்பாடுகள் குறித்த விளக்கம் அளிக்கப்பெற்றது. சுவடிக் கண்காட்சி பயிலரங்குகளில் இடம்பெற்றது.

*1991, 1995* (இரண்டு முறை), *1997,98, 2007 - 2009, 2012*ஆம் ஆண்டுகளில் இப்பயிலரங்குகள் நடைபெற்றுள்ளன. புலத்தினர் இப்பயிலரங்குகளை நடத்தியதோடு மட்டுமின்றி வெளியிடங்களில் நடந்த சுவடிப் பயிலரங்குகளில் ஐம்பதுக்கும் மேற்பட்ட சிறப்புப் பொழிவுகளையும் நிகழ்த்தியுள்ளனர்.

## தமிழ் அறிஞர் பாராட்டு

*5.5.95* முதல் *31.5.95* வரை நடந்த கோடைக்கால பயிலரங்கில் பேரா. அ.ச. ஞானசம்பந்தம் அவர்களால், மறைந்த தமிழறிஞர் பேரா. மு.சண்முகம் பிள்ளைக்குப் பதிப்புச் செம்மல் என்ற பட்டமும் வெள்ளிப் பதக்கமும் வழங்கப்பட்டன. அதேபோல் ஆவணக் கருத்தரங்கின் போது மேஜர் சா. கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்குத் தமிழ் அறிஞர் பாராட்டும், திரு. நெல்லை நெடுமாறன் அவர்களுக்கு, தொல்லியல் அறிஞர் பட்டமும் வழங்கப் பெற்றன.

## நன்கொடை (நிதியுதவி)

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திலுள்ள சுவடிகளைப் பாதுகாக்கவும் அட்டவணைப்படுத்தவும், *1991*இல் முனைவர் சிலம்பொலி செல்லப்பன் அவர்கள் நிறுவன இயக்குநராக இருந்த போது தில்லியில் உள்ள மைய அரசின் ஆவணக் காப்பகத்திட மிருந்து ரூ.*5,000* பெறப்பட்டது.

மேலும் நிறுவனச்சுவடிகளுக்கு விளக்க அட்டவணை தயாரித்து அச்சிட்டு வெளியிடுவதற்கு *1995-96*களில் ரூ.*30,000* பெறப்பட்டது. இந்நிதி உதவியுடன் இந்நிறுவனச் சுவடி அட்டவணைகளின் முதல் இரண்டு தொகுதிகள் வெளிவந்தன.

இந்நல்கையைத் தொடர்ந்து *1996-97* களில் அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகளை விரிவாக விளக்க அட்டவணை செய்து நூலாக அச்சிட்டு வெளியிடுவதற்காகவும், சுவடிப் பாதுகாப்பிற்காகவும் ரூ.*40,000* பெறப்பட்டது. அட்டவணையின் முதல் தொகுதி இந்நிதி உதவியால் வெளி வந்தது.

*1998-99*களில் இப்பணி தொடர்ந்து நடைபெற ரூ.*2,00,000* பெறப்பட்டது. அட்டவணையின் *2,3,4* தொகுதிகள் இந்நிதி உதவியால் வெளிவந்தன. இதற்கான திட்டப்பணி வரைவுகள்

முனைவர் பூ. சுப்பிரமணியம் (1991), முனைவர் தி. மகாலட்சுமி ஆகியோரால் தயாரித்து அளிக்கப்பட்டன.

2013-2014ஆம் ஆண்டிற்கான தமிழ் வளர்ச்சி நிதியுதவி ஒதுக்கீட்டில் 10 இலட்சம் நிதியுதவியினைப் பெற விண்ணப் பித்துள்ளது. நிறுவனச் சுவடிகளைக் கணினி மயமாக்குதலும், அச்சாகாத மூன்று சுவடி நூல்களை அச்சிடுவதும் இத்திட்டத்தின்வழி செயல்படுத்தப்படவுள்ளது.

தேசியச் சுவடிகள் பாதுகாப்பு மையத்தின் நிதியுதவியினைத் தொடர்ந்து பெற்று சுவடிகளை ஆவணப்படுத்தல், சுவடிகளைப் பாதுகாத்தல் என்ற பணிகளைச் செய்யவுள்ளது. தமிழகம் முழுமையிலும் உள்ள பெரும்பாலான இடங்களில் உள்ள சுவடிகளுக்கு இப்பணியினை மேற்கொள்ள உள்ளது.

1995-96 ஆம் ஆண்டுகளில் 12 சுவடிப் பதிப்பு நூல்களுக்குத் தமிழ் வளர்ச்சித்துறையின் நிதியுதவி கிடைத்துள்ளது.

குறுகிய கால, கோடைக்காலப் பயிலரங்குகளின் உரை யாளராகவும், நிறைவு விழாவின் சிறப்பாளராகவும் நிறுவனம் அழைத்தபோது பங்கேற்றதோடு மட்டுமல்லாமல் சித்த மருத்துவ மணிகள் என்ற நூல் வெளியீட்டிற்கு முழுமையான நிதியுதவி மூலிகைமணி க. வெங்கடேசன் வழங்கினார்.

"தமிழில் ஆவணங்கள்" என்ற கருத்தரங்கு சிறப்பாக அமைய டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் நற்பணி மன்றமும், கள்ளிகுலம் தட்சண மாற நாடார் கல்லூரியும் நிதியுதவி அளித்தன. அக்கருத்தரங்கு நடைபெற்றபோது சுவடித் தொடர்பான, ஆவணம் தொடர்பான கருத்தரங்குகளை ஆண்டுதோறும் நடத்த டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அவர்கள் இரண்டு இலட்சம் வைப்புநிதியாக வழங்கினார். அத்தொகையே டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளையாக உருப்பெற்றது. தமிழக அரசின் மற்றும் செம்மொழி மத்தியத் தமிழாய்வு நிறுவனத்தின் நிதியுதவியால் சுவடிப் புலத்தில் சுவடிக் கருத்தரங்குகளும் நடத்தப் பெற்றுள்ளன.

**சுவடிக்கொடை**

நிறுவனச் சுவடிகள் பெரும்பாலும் அன்பளிப்பாகத் திரட்டப்பெற்றவை. திரட்டும் பணியில் முன்னாள் இயக்குநர் பேரா. ச.வே. சுப்பிரமணியன், பேரா. முனைவர் அ.நா. பெருமாள்,

திரு. மு.கோ. இராமன், முனைவர் தி. மகாலட்சுமி போன்றோர் செய்துள்ள பங்களிப்பு குறிப்பிடத்தக்கது.

தங்களிடமிருந்த சுவடிகளை அன்பளிப்பாகவும், நன்கொடையாகவும் வழங்கிய நல்லமணம் கொண்ட அன்பர்கள் பலராவர். திருவாவடுதுறை ஆதீனத்தாரும், திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் மடத்தினரும் இக்கொடையில் முக்கிய இடம் பெற்றவராவர். ஸ்ரீபியாரு ராமபிரசாத் 14.10.1982இல் நிறுவனத்திற்கு 55 சுவடிக் கட்டுகளை நன்கொடையாக அளித்ததும் ஈண்டு எண்ணத்தக்கது. மருத்துவர் ஆ. வாசுகி கட்டுகள் பிரிந்த, பல பொருண்மைகள் கலந்த இருபதுக்கும் மேற்பட்ட சுவடிக் கட்டுகளை 1990இல் வழங்கி உதவினார். 1995இல் சுவடிப் பட்டயம் பயின்ற மாணவர் இரா. ரவிக்குமார் (1996) தனது சொந்தச் செலவில் தஞ்சை, திருச்சி, திருநெல்வேலி போன்ற பல இடங்களில் களப்பணி மேற்கொண்டு மருத்துவம், மனைநூல், மந்திரம் போன்ற பொருண்மைகளில் 21 சுவடிக் கட்டுகளைத் திரட்டித் தந்துள்ளார் என்பதும் குறிப்பிடத் தக்கது. மேலும் சுவடி வழங்கிய அன்பர் குறித்த விளக்கம் பின்வருமாறு அமைகிறது.

'கணித திவாகரம்' - புலவர் பா. கண்ணையன்

'எட்டயபுரப்பள்ளு' -சுவடி உரிமையாளர் : திருமதி புஷ்பம், 1995, சுவடியைப் பெற்றுத்தந்தவர் : திரு. ரவிச்சந்திரன்

'அகத்தீசரருளிய ஞான சவுமிய சாகரம்' - சுவடி உரிமையாளர் : சோ. குப்பம், செஞ்சி; பெற்றுத்தந்தவர் : முத்து எத்திராசன், 3.5.96

'ஸ்ரீ மகா பாகவத புராணம் - 4 பெரிய சுவடிக் கட்டுகள்' (உரைநடையில் அமைந்த ஒரே ஒரு நூல்), ஆர். குமரன், மருத்துவம் - 1, பத்திரம், ஆவணம் - 3 (மொத்தம் - எட்டு கட்டுகள்), 1996

'சண்முக நிகண்டு - 1', மருத்துவச் சுவடி -1, முனைவர் ஆ. தசரதன், 1996

'கிரந்தச் சுவடி', முனைவர் முத்துக்கண்ணப்பர், 27.8.1996

'3 சுவடிகள்', ஏழுமலை, 1996

'கஞ்சன் அம்மானை '-பாரதிராஜா, 1997 (அச்சாகியுள்ள கஞ்சன் அம்மானையைக் காட்டிலும் இந்நூல் பெரிதாக உள்ளது)

'ஞானசவுந்திரிய அம்மானை', முனைவர் ம. ராசேந்திரன், 1998.

'பாரதக் கதைப்பாடல்', கொடுமுடி சண்முகம், 20.7.1998.

'ஏழு சுவடிக் கட்டுகள்' (ஆவணம், வீட்டுக் கணக்கு, கோயில் கணக்கு), பிச்சுமணி, சுவடி மாணவர், 1999.

**சுவடி நூலகம்**

இந்நிறுவனம் சுவடிக்கென ஒரு நூலகத்தைத் துறைசார்ந்து இயக்கி வருகிறது.

இந்நூலகத்தில் 600 சுவடிக்கட்டுகளும் அவற்றில் 960 நூல்களும் உள்ளன. மேலும் 27 தாள்சுவடி நூற்கட்டுகளும், அவற்றுள் 58 நூல்களும் உள்ளன. இச்சுவடி நூல்கள் நல்ல நிலை, முழுமை, குறை, சிதைவு, செய்யுள் வடிவம், உரைநடை என்றவாறு காணப்படுகின்றன. நூற்பெயர் இன்றிப் பல உரை நடை நூல்களும், செய்யுள் வடிவிலான நூல்களும், இரண்டும் கலந்த நூல்களும் உள்ளன. சிதைந்த நிலையில் சில சுவடிகள் இருப்பது மட்டுமின்றி நல்ல சுவடிகள் சிலவற்றிலும் ஏடுகளில் மாற்றம், ஏடுகளின் எண்களில் மாற்றம், செய்திகளில் மாற்றம் என்ற நிலைகளுள்ளன. இவற்றில் செய்தித் தொடர்ச்சியை முழுமையாகக் காண இயலவில்லை. மேலும் உதிரி ஏடுகள் பாதுகாப்புக் கருதி கலப்பு ஏடுகள் என்ற பொதுத் தலைப்பில் 52 கட்டுகளாகக் கட்டி வைக்கப் பெற்றுள்ளன. இவை மீண்டும் செப்பம் செய்யப்பட வேண்டியவை. இவை தவிர வடமொழி, மலையாளம், தெலுங்கு ஆகிய பிறமொழிச் சுவடிக் கட்டுகள் 82 உள்ளன.

**இருப்பேடு**

நூல் இருப்புப் பட்டியல் 348க்குத் தொடக்க காலத்தில் திரு மு.கோ. இராமன் செய்து வைத்தார். அதனைத் தொடர்ந்து முனைவர் தி. மகாலட்சுமி 486 வரை நூல் இருப்பு விவர அட்டவணையைப் பதிவு செய்தார். அதன்பின் முனைவர் ஆ. தசரதன், திரு. மொ. மருதமுத்து, மூ. பரிமணம் ஆகியோர் 592 கட்டுகளுக்கு இப்பதிவினை மீண்டும் செய்துள்ளனர்.

**சுவடிக் கட்டுகளைச் செப்பனிடல்**

இந்நிறுவனத்தில் முன்பு இருந்த 348 சுவடிக் கட்டுகளுக்கும் திரு மு.கோ. இராமன் காகித அட்டைத் தலைப்புகள் போட்டு ஒழுங்கு படுத்தியிருந்தார். இந்நிறுவனத்தில் கட்டுகளாக இருந்த 348

சுவடிகள் மட்டுமின்றி, இரண்டு அட்டைப் பெட்டிகளில் கட்டு எண் தரப்படாத சில சுவடிக் கட்டுகள் இருந்தன. எஞ்சியவை கட்டுகள் பிரிந்த நிலையில் தனித்தனி ஏடுகளாக இருந்தன. அவற்றை ஒழுங்குப்படுத்திச் செப்பம் செய்யும் பணி 1990இல் இயக்குநர் பொறுப்பிலிருந்த முனைவர் அன்னிதாமசு அவர்களால் முனைவர் தி. மகாலட்சுமி அவர்களுக்கு வழங்கப்பட்டு அப்பணி செய்து முடிக்கப்பெற்றது.

### புதிய சுவடிக் கட்டுகளின் உருவாக்கம்

கறையான், புழு, பூச்சி மண், தூசி ஆகியவற்றுடனும் ஒன்றுடன் ஒன்று ஒட்டிக்கொண்டும் மிகவும் மோசமான நிலையில் இருந்த ஏடுகள் அனைத்தும் முதலில் மண்ணெண்ணெய், லெமன் கிராஸ் ஆயில் போன்றன கொண்டு சுத்தம் செய்யப்பட்டன. ஏடுகளின் நீள அகலங்கள், சுவடி எழுத்துகளிலுள்ள ஒற்றுமை, ஏட்டு எண் தொடர்ச்சி, பாடல் எண் தொடர்ச்சி முதலான பல உத்திகளைப் பயன்படுத்தி எண்பது புதிய சுவடிக் கட்டுகள் உருவாக்கப்பட்டன. மேலும் சித்த மருத்துவர் அ. வாசுகிதேவி 1990இல் கட்டுகள் பிரிந்த நிலையில் நிறுவனத்திற்கு வழங்கிய சுவடிகளும் ஒழுங்கு செய்யப்பெற்றன. இவையனைத்தும் முன்பிருந்த சுவடிகளுடன் (348) சேர்க்கப்பெற்றன.

### சுவடிகளின் அட்டவணைப் பணி

அமரர் பேரா. முனைவர் க.த. திருநாவுக்கரசு இயக்குநராக இருந்த காலத்தில் முனைவர் பட்ட ஆய்வாளர் அலமேலுவால் 76 சுவடிக் கட்டுகளுக்கு விளக்க அட்டவணை 1989இல் செய்யப் பெற்றிருந்தது. இச்சுவடிகளை அட்டவணை செய்ய தில்லி தேசிய ஆவணக் காப்பகம் நிதியுதவி நல்கியிருந்தது. எனவே 1992இல் இந்நிறுவனச் சுவடிகளுக்கு விளக்க அட்டவணைத் தயாரிக்கும் பணி, மேனாள் இயக்குநர் பொறுப்பிலிருந்த முனைவர் அன்னி தாமசு அவர்களால் முனைவர் தி. மகாலட்சுமிக்கும், தயாரித்த அட்ட வணைகளை மேற்பார்வையிடும் பணி முனைவர் பூ. சுப்பிரமணியம் அவர்களுக்கும் பணிக்கப்பெற்றன.

### சுவடிக் கட்டுகளுக்கு எண் மாற்றம்

பெரும்பான்மையான நிறுவனச் சுவடிக் கட்டுகளுக்கு முன்பு இடப்பட்டிருந்த காகித அட்டைத் தலைப்புகள் இல்லாதிருந்தன.

எனவே கட்டு எண், நூல் தலைப்பு ஆகியவற்றை அறியஇயலாத நிலை ஏற்பட்டது. அத்தகைய சுவடிக் கட்டுகளுக்குப் புதிய எண்களும், சுவடிகளின் உள்ளடக்க வரிகளிலிருந்து நூல் பெயர்களும் தரப்பெற்றன. எனவே முன்பு தரப்பட்டிருந்த கட்டு எண்களில் மாற்றம் ஏற்பட்டுள்ளது.

காட்டு: தற்போதைய கட்டுஎண் 392 என்பதன் பழைய கட்டு எண் 328. இச்சுவடி நூல் ஆய்வேடாக அளிக்கப் பெற்றுள்ளது. இவ்வாய்வேட்டில் 328 என்ற பழைய கட்டு எண்ணே இடம் பெற்றிருக்கின்றது.

இச்சுவடிக் கட்டுகளின் அட்டவணைப் பணி 1993 இல் நிறைவு பெற்றது.

புதுதில்லி தேசியச் சுவடிகளின் பாதுகாப்பு மையத்தின் உதவியைப் பெற்ற சென்னை, அரசு அருங்காட்சியகம் நிறுவனத் திலுள்ள அறுநூறு சுவடிக் கட்டுகளுக்கு எண்ணெயிடல், அட்டை யிடல் போன்ற பணிகளைச் செய்து தந்தது (06.08.2007 முதல் 31.08.2007 வரை)

**அட்டவணை நூலாக்கம்**

அதே ஆவணக் காப்பகம் அட்டவணைகளின் வெளியீட் டிற்கும் நிதியுதவி நல்கியதால் நூலாக்க முயற்சி 1996இல் அந்நாள் இயக்குநர் முனைவர் ச.சு. இராமர் இளங்கோ அவர்களால் மேற்கொள்ளப்பட்டது. எனவே 1995, 96களில் புதிதாகக் கிடைத்த சுவடிகளும், முன்பிருந்த தாள்சுவடிகளும் அட்டவணை செய்யப்பெற்று, முன்பு செய்யப்பெற்றிருந்த அட்டவணைகளுடன் சேர்க்கப்பெற்றன.

இந்நிறுவனச் சுவடிகளின் விளக்க அட்டவணைகள் 4 தொகுதிகளில் அமைகின்றன. சித்த மருத்துவம் பற்றியதாக அமையும் முதல் தொகுதியில் 270 நூல்களும், காப்பியம், புராணம் சிற்றிலக்கியம், பக்தி இலக்கியம், நீதி இலக்கியம் ஆகிய பொருண்மைகளில் இலக்கியம் பற்றியதாக அமையும் இரண்டாம் தொகுதியில் 271 - 533 நூல்களும், சமய தத்துவம், துதி, நாடகம், கதைப்பாடல் போன்ற பொருண்மைகளில் மெய்யியல் மற்றும் நாட்டுப்புறவியல் பற்றியதாக அமையும் மூன்றாம் தொகுதியில் 534-805 நூல்களும், அகராதி, நிகண்டு, இலக்கணம், [illegible]ிதம், ஆவணம்,

வரலாறு, ஆரூடம், சரசாத்திரம், சாமுத்திரிகா இலட்சணம், சோதிடம், ஞானம், பூசைமுறை, மந்திரம், மனைசாத்திரம் ஆகிய பொருண்மைகளில் மொழி, கணிதம், பண்பாடு பற்றியதாக அமையும் நான்காம் தொகுதியில் 806-1008 நூல்களும் இடம் பெற்றுள்ளன.

இங்ஙனம் இத்தொகுதிகள் பொருள் அடிப்படையில் முறையாக்கம் பெற்றுள்ளன. இவற்றுள் சமயம் தொடர்பான நூல்கள் முதல்நிலையிலும், மருத்துவ நூல்கள் அடுத்த நிலையிலும் காணப்படுகின்றன. கடலூர் ஞானியார் சுவாமிகள் மடத்திலிருந்து கிடைத்த சுவடிகளுள் பெரும்பான்மையானவை சமயச் சுவடிகளாய் இருந்தமை சமயச் சுவடிகளின் மிகுதிக்கொரு காரணம் எனலாம்.

முதல் தொகுதியில் சித்த மருத்துவச் சுவடிகளில் பதிப்புச் சிக்கல்கள் என்ற ஆய்வுக் கட்டுரையும், நான்காம் தொகுதியில் தமிழ்ச்சுவடிகளின் விளக்க அட்டவணை என்ற ஆய்வுக் கட்டுரையும் இடம்பெற்றுள்ளன. மேலும் இந்நான்காம் தொகுதியில் நூல் அகராதி, கட்டுஎண், நூல் எண் வரிசை மற்றும் பல இணைப்புகள் இடம்பெற்றுள்ளன.

**பிற நிறுவன விளக்க அட்டவணை**

நிறுவனச் சுவடிகள் வெளியிடப்படுவதற்கு முன்பாகவே அதாவது 1983இல் சுவடி அட்டவணை எனும் திட்டப்பணி இந்நிறுவனத்தில் தொடங்கப்பட்டு விட்டது. இதுகாறும் பத்து அட்டவணை நூல்கள் தமிழிலும், ஓர் அட்டவணை நூல் ஆங்கிலத்திலும் வெளிவந்துள்ளன. இந்த ஆங்கில அட்டவணை மருத்துவச் சுவடிகளின் விளக்கம் பற்றியதாக அமைகிறது. இவற்றுள் இரண்டு நூலக அடிப்படையிலும், ஐந்து துறைப் பொருண்மை யிலும், நான்கு அகரவரிசை அடிப்படையிலும் உருவாகியுள்ளன. அகரவரிசை அடிப்படையில் உருவாகியுள்ள நான்கு தொகுதிகளும் மருத்துவம் என்ற பொருண்மையில், அகத்தியர் என்ற ஒரு பெயருக்கே உருவாகியுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

**நூலக அடிப்படை**

1. தமிழ்ச் சுவடிகள் அட்டவணை (1983)
2. கே.ப.க. கீழ்த்திசைச் சுவடிகள் விளக்க அட்டவணை (முதல் தொகுதி, 1995)

**பொருண்மை அடிப்படை**

*1.* Siddha Medial Manuscripts in Tamil, V.R. Madhavan, 1984

*2-5.* *உலகத் தமிழாராய்ச்சி நிறுவன அட்டவணைகள் (4 நூல்கள்)*

**அகரவரிசை அடிப்படை**

*1-4 சென்னை அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலக அட்டவணைகள்.*

முனைவர் இரா. நிர்மலாதேவியின் 'தமிழ்ச் சுவடிகள் அட்டவணை' என்ற நூலே அட்டவணையின் முதல் நூல் ஆகும். கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடி நூலகத் தமிழ்ச் சுவடிகளைத் தமிழுலகுக்கு அறிமுகம் செய்வதாக இந்நூல் அமைகிறது. மேலுமிது அங்குத் தமிழ்ச் சுவடிகள் உள்ளதையும் அதிக எண்ணிக்கையில் உள்ளதையும் தெரியப்படுத்துகிறது. 1995இல் இதன் தொடர்ச்சியாக இச்சுவடிகளின் விளக்க அட்டவணையின் முதல் தொகுதி வெளிவந்துள்ளது.

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணையின் முதல் தொகுதி 1998இலும், 2ஆம் தொகுதி 1999இலும், 3,4ஆம் தொகுதிகள் 2000த்திலும் வெளிவந்துள்ளன. இதன் பதிப்பாசிரியர்களாக முனைவர் ஆ. தசரதன், திரு. மொ.மருத முத்து, திரு. மூ. பரிமணம் ஆகியோர் இருந்து மிகக் குறுகிய காலத்தில் 4 தொகுதிகளைக் கொண்டு வந்துள்ளனர் என்பது குறிப்பிடத்தக்கது.

இந்நூலகம் முன்பே வெளியிட்டுள்ள 30 விளக்க அட்டவணை நூல்களிலுள்ள அகத்தியர் பற்றிய 947 நூல்களை, 4 தொகுதிகளில் அகர வரிசைப்படுத்தி இவ்வட்டவணைப் பணிசெய்யப்பட்டுள்ளது.

நிறுவனத்தின்வழி இதுவரை வெளிவந்துள்ள அட்டவணைகள் சுவடித்துறையில் ஈடுபாடு கொண்டவர்களுக்கும், தமிழறிஞர்களுக்கும், சித்த மருத்துவர்களுக்கும், பிறருக்கும் பயன்படும் வகையில் அமைகின்றன. மேலும் அச்சாகாமல் இருக்கும் தமிழ்ச் சுவடிகளையும் இவை இனங்காட்டுகின்றன.

இங்ஙனம் நிறுவனச் சுவடிப்புலம் காலச் சூழலில் அழிந்து கொண்டிருக்கும் ஓலைச் சுவடிகளைத் திரட்டுதல், பாதுகாத்தல், விளக்க அட்டவணைத் தயாரித்தல், படியெடுத்தல், பதிப்பித்தல், பட்டயக் கல்வி நடத்துதல், பயிலரங்கு - கருத்தரங்கு நடத்துதல்

| | |
|---|---|
| 26.03.2000 | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், மக்கள் விடுதலைக் கலைக்குழு (சென்னை) என்ற அமைப்பின் துணையோடு டாக்டர் எம்.ஜி.ஆர். ஜானகி மகளிர் கலை அறிவியல் கல்லூரி வளாகத்தில் 'ஔவை' என்ற நாடகத்தை நிகழ்த்தியது. |
| 27.03.2000 முதல் 29.03.2000 வரை | தமிழக அரசின் நிதியுதவியுடன் 'உலகத் தமிழ் இலக்கிய வரலாறு' என்ற நூலினை வெளிக்கொணரும் பொருட்டு மலேசியா, சிங்கப்பூர், இலங்கை ஆகிய நாட்டினைச் சேர்ந்த 35 அறிஞர்கள் பணி அவையில் கலந்து கொண்டனர். |
| 19.12.2001 | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தால் தயாரிக்கப் பெற்ற கணினி வழித் தமிழ் கற்கும் 'தமிழுலகம்' என்ற 'குறுவட்டுகளில் தமிழ்' திட்டப்பணியின் நிறைவாக மாண்புமிகு கல்வி அமைச்சர் அவர்களால் குறுவட்டுகள் வெளியிடப்பெற்றன. |

# நிறுவன அறக்கட்டளைகள்

முனைவர் கு. பகவதி
பேராசிரியர்
சமூகவியல், கலை (ம) பண்பாட்டுப் புலம்

கட்டளை நிறுவி அறஞ்செய்தல் தமிழரின் பண்பாட்டு மரபு. இம்மரபின் தொடர்ச்சியே இன்று பல நிறுவனங்களிலும், பல்கலைக்கழகங்களிலும் நிறுவப்பட்டு வரும் அறக்கட்டளைகள். "என்னை நன்றாக இறைவன் படைத்தனன் தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே, என, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தமிழ்ப் பணிகளை எந்தெந்த முறைகளில் எல்லாம் வளர்ச்சி பெறச் செய்ய முடியுமோ அந்தந்த முறைகளில் எல்லாம் வளர்க்க முனைந்து உழைத்துக் கொண்டிருந்த நிறுவனத்தின் முதல் இயக்குநர் முனைவர் ச.வே. சுப்பிரமணியன் அவர்கள் தமிழரின் இந்தப் பண்பாட்டு மரபைப் பற்றியும் சிந்தித்தார். அன்பர்களை, ஆர்வலர்களை நாடினார். அவர்களிடம் நிதிபெற்று அறக்கட்டளைகள் நிறுவினார். நிறுவனத்தில் அறக்கட்டளைப் பணிகளும் தொடக்கம் பெற்றன.

## அறக்கட்டளையின் நோக்கங்கள்

1. தன்னலம் கருதாது, ஆழ்ந்த ஈடுபாட்டுடன் தமிழ் மொழிக்காக, தமிழ் நாட்டுக்காக, தமிழினத்திற்காகப் பாடுபட்டு, தடம் பதித்த சான்றோர் பெருமக்களை நினைவு கூர்தல், நன்றி பாராட்டுதல்.

2. அச்சான்றோர்களின் சாதனைகளை, வரலாற்றில் அவர்களின் இடத்தை வெளிக்கொணர்தல்.

3. அவர்களின் வழித்தடத்தில் இளைஞர்களை அழைத்துச் செல்லுதல்.

4. தமிழ்மொழி, இலக்கியம், இலக்கணம், சமூகம், வரலாறு, பொருளாதாரம் சார்ந்த ஆய்வுச் சிந்தனைகளை வெளிக் கொணர்தல்.

5. சான்றோர்களின் பெயரால் தமிழாய்வு மேலும் வளரவும், அமைப்பு சார்ந்த தமிழ்ப்பணிகளை ஆராயவும் நிறுவப்பட்ட அறக்கட்டளைகள் வளர்ச்சிப் பாதையை நோக்கிச் செல்லத் தொடங்கின.

6. சொற்பொழிவுகளை நிகழ்த்தி, அப்பொழிவுகளை சொற்பொழிவு நாளன்றே நூலாக வெளியிடுதல்

ஆகியன இவ்வறக்கட்டளைகளின் நோக்கங்களாகும்.

1983 முதல், 14 அறக்கட்டளைகளை நிறுவிய முனைவர் ச.வே. சுப்பிரமணியம் அவர்களைத் தொடர்ந்து, பின்னர் பொறுப்பேற்ற இயக்குநர்களும் இப்பணியினைத் தொடர்ந்தனர். பயனாக இன்று 35 அறக்கட்டளைகள் நிறுவனத்தில் அமைக்கப் பெற்றுள்ளன.

## அறக்கட்டளைச் சொற்பொழிவு தொடர்பான நிறுவன விதிமுறைகள்

1. நிறுவன அறக்கட்டளைச் சொற்பொழிவிற்கென பொழிவாளருக்கு ரூ.2,000/-(ரூபாய் இரண்டாயிரம் மட்டும்) மதிப்பூதியமாகத் தரப்படும். மேலும் அச்சொற்பொழிவின் வெளியீட்டில் 25 படிகள் மட்டும் ஆசிரியர் படிகளாகத் தரப்படும்.

2. நிறுவன அறக்கட்டளைச் சொற்பொழிவு நூல் வெளியீட்டுக்கென ஆசிரியருக்கு வேறு எவ்விதமான உரிமை ஊதியமும் தரப்பட மாட்டாது.

3. நிறுவன அறக்கட்டளைச் சொற்பொழிவுக் கருத்துகள் எந்த மதத்தையோ, கலாச்சாரத்தையோ, இனத்தையோ அவை சார்ந்த அமைப்புக்களையோ, எப்பிரிவினையோ புண்படுத்தும் வகையில் அமைந்திருத்தல் கூடாது.

4. நிறுவன அறக்கட்டளைச் சொற்பொழிவின் கருத்துகள் பொதுமைக்கு மாறுபட்ட நிலையில் அக்கருத்துக்களை நீக்கும் அதிகாரம் நிறுவனத்துக்கு உண்டு.

5. நிறுவனம் வெளியிடுகின்ற அறக்கட்டளைச் சொற்பொழிவு வெளியீட்டின் முதல் பதிப்புரிமை நிறுவனத்துக்கு மட்டுமே உண்டு.

6. நிறுவனம் அறக்கட்டளைப் பொழிவினை வெளியிட்ட இரண்டு ஆண்டுகளுக்குப் பின்னரே ஆசிரியருக்கு பதிப்புரிமை உண்டு.

7. அறக்கட்டளைச் சொற்பொழிவின் எழுத்துரு அச்சில் 100 பக்கங்களுக்குக் குறையாமல் இருக்கவேண்டும்.

8. அறக்கட்டளைச் சொற்பொழிவின் எழுத்துரு அச்சில் வரும் நிலையில் அந்நூலில் சொல்லப்பட்டுள்ள கருத்துகள் ஆசிரியரையே சாரும்.

9. சொற்பொழிவின் எழுத்துரு எந்த விதத்திலும் முன்னர் வெளியிடப்பட்ட நூல்களில் இருந்தோ, அல்லது ஆய்வேட்டில் இருந்தோ எடுத்து எழுதப்படவில்லை என்றும் வேறு எங்கும் நூலாக வெளியிடப்படவில்லை என்றும் உறுதியளிக்கப்படல் வேண்டும்.

மேற்கண்டவை அறக்கட்டளை விதிமுறைகளாகப் பின்பற்றப் படுகின்றன.

அறக்கட்டளைச் சொற்பொழிவுகளுக்குப் பொழிவாளர்களைத் தேர்வு செய்ய ஆளுநர்க் குழுவால் நியமிக்கப்படும் தேர்வுக் குழு, ஒவ்வொரு அறக்கட்டளைக்கும் பொழிவாளர்களைத் தேர்வு செய்யும் முறை தொடக்கக் காலத்தில் பின்பற்றப்பட்டது.

தேர்வு செய்யப்பட்ட பொழிவாளர்கள் அறக்கட்டளைப் பொருண்மையில் பொழிவு நிகழ்த்தக் கேட்டுக் கொள்ளப் பெறுகிறார்கள். பொழிவுக்குரிய எழுத்துரு கிடைக்கப் பெற்ற பின்னர் குறிப்பிட்ட நாளில் பொழிவு நடத்தப் பெறுகிறது. அன்றே பொழிவுகள் நூலாக வெளியிடப்பட்டு விடுகின் றன.

நிறுவனத்தின் அறக்கட்டளைப் பொழிவுகளைப் பொறுப் பேற்று நடத்த முனைவர் ச. சிவகாமி அவர்கள் நியமிக்கப்பட்டார். 1996 வரையிலும் அவர் அறக்கட்டளைகளைப் பொறுப்பேற்று நடத்தினார். அதன் பின்னர் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன ஆளுநர் குழுவின் முடிவின்படி, கல்விசார் அலுவலர்கள் அனைவருக்கும் இவ்வறக்கட்டளைகள் பிரித்து அளிக்கப்பட்டு, நடத்தப்பட்டு வருகின்றன. 36 அறக்கட்டளைகளின் பட்டியலும், நூல் வெளியீடு (ஆம், இல்லை என்ற குறிப்புடன்) வழங்கப்பட்டுள்ளது.

அவையாவன :-

| எண் | அறக்கட்டளை | நிறுவியோர் | ஆண்டு | பொருண்மை |
|---|---|---|---|---|
| 1. | கிறித்துவமும் தமிழும் | பேராயர் இரா. அருளப்பர் | 1983 | கிறித்துவம் |
| 2. | கழகம் வ. சுப்பையா பிள்ளை | சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | 1983 | சைவ சித்தாந்தம் |
| 3. | சீதக்காதி | சீதக்காதி அறக்கட்டளைக் குழுவினர் | 1983 | இசுலாம் இலக்கியம் |
| 4. | ஏவி.எம். ஜபாருதீன் நூர்ஜஹான் | ஏவி.எம். ஜபாருதீன் நூர்ஜஹான் டிரஸ்ட் | 1983 | இசுலாம் |
| 5. | டாக்டர் உ.வே. சாமிநாதையர் | பலர் | 1983 | தமிழ் நூல் பதிப்புகள் |
| 6. | வ.உ.சிதம்பரனார் | பலர் | 1983 | வ.உ.சியும் தமிழும் |
| 7. | தேவநேயப் பாவாணர் | பலர் | 1983 | பாவாணர் ஆய்வுகள், மொழியாய்வு |
| 8. | டாக்டர் செ. அரங்கநாயகம் | பலர் | 1983 | தொழில், கல்வி, அறிவியல், தொழில் நுட்பவியல் |
| 9. | சிலம்புச் செல்வர் ம.பொ.சி. | பலர் | 1983 | தமிழும் தமிழரும் |
| 10. | மறைமலை யடிகளார் | சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் | 1983 | அடிகளார் நூல்கள், தனித் தமிழ் இயக்கம் |
| 11. | டாக்டர் மு. வரத ராசனார் | பலர் | 1983 | படைப்பிலக்கியம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 12. | சதாவதானி செய்குத் தம்பிப் பாவலர் | சதாவதானி செய்குத் தம்பிப் பாவலர் நினைவு விழாக் குழு | 1984 | இசுலாம் |
| 13. | சி.பா.ஆதித்தனார் | அமரர் ஆதித்தனார் கல்வி நிறுவனம் | 1984 | இதழியல் |
| 14. | பெருந்தலைவர் காமராசர் | நாடார் மகாசன சங்கம், மதுரை | 1984 | சமூகவியல் |
| 15. | கலா நிலையம் டி.என். சேஷாசலம் | டி. பரணீதரன் | 1987 | கலா நிலையம் இதழ்கள், இலக்கியம், கோட்பாடுகள் |
| 16. | தனிநாயகம் அடிகளார் | கிறித்தவத் தமிழ் இலக்கியக் கழகம் | 1992 | தனிநாயகம் அடிகள், கிறித்துவம் |
| 17. | டாக்டர் ஜெ. ஜெயலலிதா | கே.பொன்னுசாமி | 1994 | கலை, பண்பாடு |
| 18. | இராம.சுப்பையர் | தினமலர் | 1995 | காசு இயலும் பிற துறைகளும் |
| 19. | பதிப்புச் செம்மல் பேராசிரியர் மெய்யப்பன் | பேராசிரியர் மெய்யப்பன் | 1996 | பதிப்பியல், தொல்லியல், கலைச்சொல்லாக் கம்,மொழி பெயர்ப்பியல், தமிழ் வளர்க்கும் நிறுவனங்கள், 20ஆம் நூற்றாண்டு இலக்கிய வரலாறு |
| 20. | பல்கலைச்செம்மல் தெ.பொ.மீனாட்சி சுந்தரனார் | பேராசிரியர் மது.ச.விமலா னந்தம் | 1996 | தெ.பொ.மீ. இலக்கியப்பணி, தொண்டும், மொழியியலும் |

| | | | | |
|---|---|---|---|---|
| 21. | நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை | முனைவர் கி.ர. அனுமந்தன் | 1998 | தமிழகத்தில் தேசியமும் காந்தியமும், மற்றும் நாமக்கல் கவிஞரின் படைப்புகள் |
| 22. | டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் | சிவந்தி ஆதித்தனார் | 1999 | வரலாற்றுத் துறை சார்ந்த ஆவணங்கள் |
| 23. | பெரியார் ஈ.வெ.ரா. | டாக்டர் ந. வேலுசாமி | 2002 | பெரியார் ஈ.வெ.ரா. அவர்களின் பகுத்தறிவுச் சிந்தனைகள் |
| 24. | பெரியார் ஈ.வெ.ரா. நாகம்மை | பெரியார் மகளிர் அணி | 2002 | மகளிர் விடுதலைச் சிந்தனைகள் |
| 25. | பெரியார் ஈ.வெ.ரா. மணியம்மை | பெரியார் மகளிர் அணி | 2002 | மகளிர் விடுதலைச் சிந்தனைகள் |
| 26. | ராமலிங்கம் அபிராமி | முனைவர் ஏ.ஆர்.ஏ. சிவ குமாரன் (சிங்கப்பூர்) | 2003 | திருமுறைகள் |
| 27. | பேராசிரியர் ச.வே. சுப்பிர மணியம் | கு. பகவதி | 2003 | செவ்விலக் கியங்கள் பண்பாடு, பெயராய்வு குறித்த ஆய்வுகள் |
| 28. | பெ.நா.அப்பு சுவாமி | பெ.நா.அப்பு சுவாமி குடும்பத்தினர் | 2003 | அறிவியல் |
| 29. | முனைவர் மு. தமிழ்க் குடிமகன் | முனைவர் ந. கடிகாசலம் | 2004 | கவிதையியல் |

| | | | | |
|---|---|---|---|---|
| *30.* | பேரறிஞர் அண்ணா தமிழ் மேம்பாடு | தமிழ்நாடு அரசு | *2005* | பேரறிஞர் அண்ணாவின் படைப்புகள் குறித்தும், அவர்தம் கொள்கை சார்ந்த சிந்தனைகளும் செயல்பாடுகளும் |
| *31.* | தத்துவஞானி வேதாத்திரி மகரிஷி | உலக சமுதாய சேவா சங்கம் | *2005* | வேதாத்திரி நூல்கள், தத்துவங்கள் |
| *32.* | டாக்டர் வ.செ. குழந்தை சாமி | திரு.இராம் ப. சாமி (அமெரிக்கா) | *2009* | டாக்டர் வ.செ. குழந்தைசாமியின் படைப்புகள், கவிதைத் திறனாய்வுகள் |
| *33.* | டாக்டர் வ.அய். சுப்பிர மணியன் | ச.வே.சு. | *2009* | திராவிட மொழிச் சிந்தனைகள், ஒப்பியல் ஆய்வு |
| *34.* | திரு. சி.மா. துரையரசு | சி.மா. துரையரசு | *2010* | சங்க இலக்கிய ஆய்வுகள் |
| *35.* | தனித்தமிழ்க் காவலர் முனைவர் தமிழ்க்குடிமகன் | முனைவர் சா.த. மெய்ம் மொழி | *2013* | தமிழிலக்கியங்கள் |

1. கிறித்தவமும் தமிழும்

பெயர் : கிறித்தவமும் தமிழும் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. *20,000*

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : *1983*

நிறுவியோர் : பேராயர் இரா. அருளப்பர்

பொருண்மை : கிறித்தவமும் தமிழும்

| எண் | பொழிவுத் தலைப்பு | பொழிவாளர் | ஆண்டு | நூல் |
|---|---|---|---|---|
| 1. | விவிலியம் - திருக்குறள் - சைவசித்தாந்தம் ஒப்பாய்வு | முனைவர் மு. தெய்வ நாயகம் | 1985 | ஆம் |
| 2. | கிறித்துவமும் தமிழகமும் | முனைவர் சூ. இன்னாசி | 1989 | ஆம் |
| 3. | திருமறையும் தீந்தமிழும் | முனைவர் பா. வளன் அரசு | 1990 | இல்லை |
| 4. | கிறித்தவ அறிஞர்களின் இலக்கணப் பணி | முனைவர் செ.வை. சண்முகம் | 1993 | ஆம் |
| 5. | தமிழ் நாவல்களில் சமுதாய மாற்றம் | முனைவர் ஐசக் அருளைமராசன் | 1994 | ஆம் |
| 6. | கிறித்தவத் தமிழ் நடையியல் நோக்கு | டேவிட் பிரபாகர் | 1999 | ஆம் |
| 7. | தமிழ் அச்சுத் தந்தை அண்ட்ரிக் அடிகளார் | திரு. ஆ. சிவசுப்பிர மணியன் | 2003 | ஆம் |
| 8. | தமிழ் உரைநடை யும் கிறித்தவர் பங்களிப்பும் | பேரா.ம.செ. இரபிசிங் | 2005 | ஆம் |
| 9. | அறிவை விரிவாக்கும் அறநூல்கள் (விவிலியமும் பதினெண்கீழ்க் கணக்கும் - ஓர் ஒப்பாய்வு) | திரு. தா.ஜோசப் ஜூலியஸ் | 2010 | ஆம் |

**2. கழகம் வ. சுப்பையாபிள்ளை அறக்கட்டளை**

பெயர் : கழகம் சுப்பையாபிள்ளை அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 15,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1983

நிறுவியோர் : சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

பொருண்மை : சைவசித்தாந்தம்/சைவத்தமிழ்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | சிவஞானபோதச் செம்பொருள் திறன் | முனைவர் கு. சுந்தரமூர்த்தி | 1989 | இல்லை |
| 2. | எட்டாந் திருமுறை | ஆ. சிவலிங்கனார் | 1992 | ஆம் |
| 3. | செந்தமிழ்ச் செல்வியின் இலக்கியப்பணி | முனைவர் பி. தெட்சிணாமூர்த்தி | 1992 | ஆம் |
| 4. | கன்னடத்தில் காரைக்கால் அம்மையார் வரலாறு | முனைவர் எம்.எஸ். சாந்தா | 1993 | ஆம் |
| 5. | தமிழ் நாட்டில் பைரவர் வழிபாடு | முனைவர் நாகப்பா நாச்சியப்பன் | 1993 | ஆம் |
| 6. | பெரியபுராணத்தில் மனித நேயம் | முனைவர் பழ. முத்தப்பன் | 1994 | இல்லை |
| 7. | திருமுறை இலக்கியம் | முனைவர் சோ. நா. கந்தசாமி | 1994 | ஆம் |
| 8. | சைவத் தமிழ் | முனைவர் கு. சுந்தரமூர்த்தி | 1998 | இல்லை |
| 9. | சிரவையாதீனப் பதிப்புகள் | புலவர் ப.வெ. நாகராஜன் | 2004 | ஆம் |
| 10. | சைவ சித்தாந்தத்தில் ஆன்மக் கொள்கை | முனைவர் வ. ரத்தினசபாபதி | 2005 | ஆம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 11. | திருநாவுக்கரசரின் (அப்பர்) உவமைநலம் | முனைவர் கோ. தெய்வநாயகம் | 2010 | ஆம் |
| 12. | முத்தமிழ் மாமுனி சுவாமி விபுலானந்தர் | முனைவர் ராம. கௌசல்யா | 2010 | ஆம் |

**3. சீதக்காதி அறக்கட்டளை**

பெயர் : சீதக்காதி அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 12,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1983

நிறுவியோர் : சீதக்காதி அறக்கட்டளைக் குழுவினர்

பொருண்மை : இசுலாமும் தமிழும்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | இசுலாம் வளர்த்த தமிழ் | முனைவர் மு.மு. உவைஸ் | 1984 | ஆம் |
| 2. | தித்திக்கும் திருமணி மாலை | முனைவர் சே.மு. முகமதலி | 1990 | இல்லை |
| 3. | இசைத் தமிழ் வளர்ச்சியில் இசுலாமியர் பங்கு | முனைவர் இரா. திருமுருகன் | 1994 | இல்லை |
| 4. | இசுலாமியச் சிற்றிலக்கியங்கள் | முனைவர் ஜே.ஆர். லெட்சுமி | 2009 | ஆம் |

**4. ஏ.வி.எம். ஜபாருதீன் நூர்ஜஹான் இசுலாமியத் தமிழ் அறக்கட்டளை**

பெயர் : ஏ.வி.எம். ஜபாருதீன் நூர்ஜஹான் இசுலாமியத் தமிழ் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 12,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1983

நிறுவியோர் : ஏ.வி.எம். ஜபாருதீன் நூர்ஜஹான் அறக்கட்டளை

பொருண்மை : இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | இனிக்கும் இராஜ நாயகம் | திரு.மு.மு. இஸ்மாயில் | 1984 | ஆம் |
| 2. | வண்ணக் களஞ்சியப் புலவரின் குத்பு நாயகம் ஆய்வுரை | முனைவர் மு. அப்துல் கரீம் | 1987 | ஆம் |
| 3. | கனகாபிஷேகமாலை | டாக்டர் பீ. நசீம்தீன் | 1992 | ஆம் |
| 4. | இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் சித்தரிக்கும் அறியப்படாத வாழ்வும் பண்பாடும் | பேரா. மு. அப்துல் சமது | 2004 | ஆம் |
| 5. | இசுலாமியத் தமிழ் இலக்கியத் தோற்றுவாய்களும் வெளிப்பாட்டு முறைகளும் | முனைவர் மு. ஜீவா | 2009 | ஆம் |

## 5. டாக்டர் உ.வே.சாமிநாதையர் அறக்கட்டளை

பெயர் : உ.வே.சா. அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 30,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1983

நிறுவியோர் : பலர்

பொருண்மை : தமிழ் நூல் பதிப்புகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | உ.வே.சா. சங்க இலக்கியப் பதிப்புகள் | முனைவர் குளோரியா சுந்தரமதி | 1984 | ஆம் |
| 2. | உ.வே.சா. காப்பியப் பதிப்புகள் | முனைவர் இரா. காசிராஜன் | 1985 | ஆம் |
| 3. | உ.வே.சா. இலக்கணப் பதிப்புகள் | முனைவர் கி. நாச்சிமுத்து | 1986 | ஆம் |
| 4. | உ.வே.சா. ஒரு தமிழ் வாழ்வு | திரு.எஸ்.டி. காசிராஜன் | 1987 | ஆம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 5. | சிற்றிலக்கியப் பதிப்புகள் | முனைவர் இ. சுந்தரமூர்த்தி | 1990 | இல்லை |
| 6. | தொல்காப்பியப் பதிப்புகள் | முனைவர் ச.வே. சுப்பிரமணியன் | 1992 | ஆம் |
| 7. | செவ்வை சூடுவார் பாகவதப் பதிப்பு | முனைவர் இரா. மாதவன் | 1993 | ஆம் |
| 8. | உ.வே.சா. நூல்களில் சொல்லும் சுவையும் | முனைவர் ஆறு அழகப்பன் | 1994 | ஆம் |
| 9. | உ.வே.சா. பதிப்புப் பணியும் பன்முக மாட்சியும் | முனைவர் செ. இராசு | 2003 | ஆம் |
| 10. | சுவடிப் பதிப்புக்கலை வழிகாட்டி டாக்டர் உ.வே.சா. | முனைவர் பூ. சுப்பிர மணியன் | 2005 | ஆம் |
| 11. | உ.வே. சாமிநாதையர் உரைநடை நூல்கள் உணர்த்தும் புலப்பாட்டு நெறி | முனைவர் நா. உசாதேவி | 2008 | ஆம் |
| 12. | சி.வை. தாமோதரம் பிள்ளை வாழ்வும் பணியும் | முனைவர் மு. சற்குணவதி | 2011 | ஆம் |
| 13. | இரணியன் இசை நாடகம் | பதிப்பாசிரியர் கா. சேதுராமன் | 2011 | ஆம் |
| 14. | உ.வே.சா.வின் குறுந்தொகை உரைத்திறன் | முனைவர் நிர்மலா மோகன் | 2011 | ஆம் |
| 15. | சங்க இலக்கியப் பதிப்பு மரபும் உ.வே.சா.வும் | முனைவர் வீ. அரசு | 2012 | இல்லை |
| 16. | சுவடிப் பதிப்பு முன்னோடிகள் | முனைவர் ம.சா. அறிவுடைநம்பி | 2013 | இல்லை |

## 6. வ.உ.சிதம்பரனார் அறக்கட்டளை

பெயர் : வ.உ.சி. அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 20,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1983

நிறுவியோர் : பலர்

பொருண்மை : வ.உ.சி.யும் தமிழும்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | செக்கிழுத்த செம்மல் சிதம்பரனார் | திரு.தி.நெ. வள்ளி நாயகம் | 1985 | ஆம் |
| 2. | தமிழ் தந்த வ.உ.சி | முனைவர் தி. லீலாவதி | 1986 | ஆம் |
| 3. | நாட்டுப்புறப் பாடல்களில் வரலாற்றுச் செய்திகள் | முனைவர் ச. முருகானந்தம் | 1990 | ஆம் |
| 4. | வ.உ.சியும் தமிழும் | முனைவர் சங்கரவள்ளிநாயகம் | 1992 | ஆம் |
| 5. | வ.வே.சு ஐயர் அரசியல் இலக்கியப் பணிகள் | திரு.பெ.சு மணி | 1993 | ஆம் |
| 6. | வ.உ.சி வளர்த்த தமிழ் | முனைவர் மா.ரா. அரசு | 2002 | ஆம் |
| 7. | வ.உ.சி. ஒரு பன்முகப்பார்வை | முனைவர் எஸ். கண்ணன் | 2005 | ஆம் |
| 8. | திருக்குறள் உரைச் சிந்தனைகள் | முனைவர் கை. சங்கர் | 2009 | ஆம் |
| 9. | மீனவர் சமுதாய நாட்டுப்புறப் பாடல்கள் ஆய்வும் பதிப்பும் | முனைவர் ஆ. திருநாகலிங்கம் | 2009 | ஆம் |
| 10. | பழந்தமிழர் அறிவியல் | முனைவர் க. பலராமன் | 2009 | ஆம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 11. | இதழியல் உலகம் | முனைவர் முகிலை இராசபாண்டியன் | 2009 | ஆம் |
| 12. | விடுதலைச் சிந்தனையாளர் வ.உ. சிதம்பரனாரின் தமிழியற்புலம் | முனைவர் பூ. செயராமன் | 2013 | ஆம் |

## 7. தேவநேயப் பாவாணர் அறக்கட்டளை

பெயர் : தேவநேயப்பாவாணர் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 20,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1983

நிறுவியோர் : கோவலங்கண்ணன்

பொருண்மை : பாவாணர் ஆய்வுகள்/மொழியாய்வு

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பாவாணரும் தனித்தமிழும் | முனைவர் மு. தமிழ்க் குடிமகன் | 1985 | ஆம் |
| 2. | தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள் | புலவர் இரா. இளங்குமரன் | 1985 | ஆம் |
| 3. | உலக முதன் மொழி தமிழ் | திரு. கு. பூங்காவனம் | 1986 | ஆம் |
| 4. | பாவாணர் ஆய்வு நெறி | திரு. இரா. மதிவாணன் | 1990 | ஆம் |
| 5. | தமிழெழுத்தின் வரிவடிவ வரலாறு | பேரா.சி. கோவிந்தராசனார் | 1992 | ஆம் |
| 6. | தேவநேயப் பாவாணரின் மொழியியல் வரலாற்றுக் கொள்கை | திரு.க. தமிழ மல்லன் | 1993 | ஆம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 7. | A Comparitive Study of Tamil and Japanese | Dr. Porko | 1993 | ஆம் |
| 8. | பாவாணர் பாவாணரே | முனைவர் இரா. இளவரசு | 2001 | ஆம் |
| 9. | மொழி சமுதாயம் இறையியல் தளங்களில் பாவாணரின் பங்களிப்பு | முனைவர் அருணா இராசகோபால் | 2002 | இல்லை |
| 10. | பாவாணர் கண்ட இன்றைய தமிழின் இலக்கணங்கள் | முனைவர் இரா. திருமுருகன் | 2003 | ஆம் |
| 11. | பாவாணரின் ஞான முதன்மொழிக் கொள்கை | முனைவர் இரா.மதிவாணன் | 2006 | ஆம் |
| 12. | நாசுதிராதிக் -ஞால முதன்மொழி ஆய்வு களுக்குப் பாவாணர் தரும் ஒளி | முனைவர் பி. இராமநாதன் | 2008 | ஆம் |
| 13. | பாவாணர் கடவுள் நம்பிக்கையும் சமயச் சால்பும் | புலவர் இரா. இளங்குமரன் | 2009 | ஆம் |

## 8. டாக்டர் செ. அரங்கநாயகம் அறக்கட்டளை

பெயர் : செ. அரங்கநாயகம் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 28,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1983

நிறுவியோர் : பலர்

பொருண்மை : தொழில், கல்வி, அறிவியல், தொழில் நுட்பவியல்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அறிவியல் அன்றும் இன்றும் | முனைவர் நா. சுப்பு ரெட்டியார் | 1990 | ஆம் |
| 2. | தமிழர் கட்டிடக்கலை | முனைவர் கோ. தெய்வ நாயகம் | 1991 | ஆம் |
| 3. | அறிவியல் தமிழ் இன்றைய நிலை | முனைவர் இராதா செல்லப்பன் | 1992 | ஆம் |
| 4. | தற்காலத்தமிழ் இலக்கியத்தில் உளவியல் | முனைவர் பி.என் முத்தையா | 1994 | இல்லை |
| 5. | விலங்கியலும் தமிழியலும் | முனைவர் ஏ.த. சோதிநாயகம் | 1994 | ஆம் |
| 6. | திருக்கோயில்களில் தொழில், சமுதாய உறவுகள் | முனைவர் சு. இராஜசேகரன் | 1994 | ஆம் |
| 7. | அறிவியல் தொழில் நுட்பக்கல்வி இன்றைய சந்தைச் சவால்கள் | முனைவர் மி. நோயல் | 2002 | ஆம் |
| 8. | தமிழர் கண்ட தாவரவியல் | முனைவர் வே. நெடுஞ் செழியன் | 2002 | ஆம் |
| 9. | தமிழினம் கண்ட வானவியல் சிந்தனைகள் | முனைவர் ப. ஐயம் பெருமாள் | 2006 | ஆம் |
| 10. | அறிவியல் நோக்கில் மொழி | முனைவர் செ. சண்முகம் | 2009 | ஆம் |
| 11. | நவீன நாடகங்களும் ஊடகங்களும் | முனைவர் ந.ம.வி. ரவி | 2010 | ஆம் |
| 12. | கடலடியில் தமிழர் நாகரிகம் | முனைவர் என். நந்திவர்மன் | 2010 | ஆம் |

## 9. சிலம்புச் செல்வர் ம.பொ.சி. அறக்கட்டளை

பெயர் : ம.பொ.சி. அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 40,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1983

நிறுவியோர் : பலர்

பொருண்மை : ம.பொ.சி.யும் தமிழும் தமிழரும்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | தமிழரின் தாயகம் | முனைவர் க.ப. அறவாணன் | 1984 | ஆம் |
| 2. | அகலமும் ஆழமும் | முனைவர் ம.ரா.போ. குருசாமி | 1985 | ஆம் |
| 3. | நாமக்கல் கவிஞர் கவிதைகளில் காந்தியம், தேசியம் | முனைவர் கி.ரா. அனுமந்தன் | 1989 | ஆம் |
| 4. | நாட்டுப்புறவியலில் உளவியல் பார்வை | முனைவர் சு. சண்முகசுந்தரம் | 1991 | ஆம் |
| 5. | சங்ககாலத் தமிழர் களின் மனிதநேய மணிநெறிகள் | முனைவர் சாலினி இளந்திரையன் | 1992 | ஆம் |
| 6. | தமிழர் காசு இயல் | முனைவர் நடனகாசிநாதன் | 1994 | ஆம் |
| 7. | தமிழ் வழி அறிவியல் கல்வி | முனைவர் இராமசுந்தரம் | 2002 | இல்லை |
| 8. | ம.பொ.சியின் தமிழ் உணர்வு | முனைவர் தா. சேது பாண்டியன் | 2002 | ஆம் |
| 9. | ம.பொ.சி.யின் பார்வையில் தமிழ்மொழி, இலக்கியம், பண்பாடு | திரு. பெ.சு. மணி | 2004 | ஆம் |
| 10. | தமிழக எல்லைப் போராட்டங்கள் | முனைவர் முகிலை இராசபாண்டியன் | 2007 | ஆம் |

## 10. மறைமலையடிகளார் அறக்கட்டளை

பெயர் : மறைமலையடிகளார் அறக்கட்டளை

வைப்பு நிதி : 25,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1983

நிறுவியோர் : சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம்

பொருண்மை : அடிகளார் நூல்கள் / தனித்தமிழ் இலக்கியம்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | மறைமலையடிகளார் தனித்தமிழ்க் கொள்கை | புலவர் இரா. இளங்குமரன் | 1986 | ஆம் |
| 2. | தொல்காப்பியம் இலக்கியச் சிந்தனை | முனைவர் க. ஆறுமுகம் | 1991 | ஆம் |
| 3. | தொல்காப்பிய இசைக் குறிப்புகள் | முனைவர் வீ.ப.க சுந்தரம் | 1992 | ஆம் |
| 4. | பழந்தமிழ்க் காட்சி நெறியியல் | முனைவர் நிர்மல் செல்வமணி | 1993 | ஆம் |
| 5. | மறைமலையடிகளார் சமயத் தொண்டும் படைப்பாற்றலும் | முனைவர் அ.மு. பரம சிவானந்தம் | 1994 | இல்லை |
| 6. | தமிழ் மொழி, இன இலக்கிய மேம்பாடு - மறைமலையடி களாரின் பங்களிப்பு | முனைவர் நா. செயப் பிரகாசு | 2002 | ஆம் |
| 7. | அருந்தமிழ் நூற் காவலர் அடிகளார் | முனைவர் வே.இரா. மாதவன் | 2004 | ஆம் |
| 8. | பழந்தமிழரும் கிளைமொழிகளும் | முனைவர் ந. கலைவாணி | 2011 | ஆம் |

**11. டாக்டர் மு. வரதராசனார் அறக்கட்டளை**

பெயர் : டாக்டர் மு. வரதராசனார் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 25,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1983

நிறுவியோர் : பலர்

பொருண்மை : படைப்பிலக்கியம்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | மு.வ. புதினங்களில் தமிழ் தமிழினம் | முனைவர் பொன் சௌரிராஜன் | 1989 | ஆம் |
| 2. | தமிழும் பிராகிருதமும் | மு.கு. ஜகந்நாதராஜா | 1990 | ஆம் |
| 3. | தமிழும் குறியியலும் | தமிழவன் (முனைவர் எஸ். கார்லோஸ்) | 1992 | ஆம் |
| 4. | எண்பதுகளில் தமிழ்ப் புனைகதைகளில் பெண்ணியம் | முனைவர் சு. வேங்கடராமன் | 1993 | ஆம் |
| 5. | சங்கரராம் படைப்புகள் | முனைவர் பிரேமா நந்தகுமார் | 1993 | இல்லை |
| 6. | புதுமைப்பித்தன் கதைகளில் சமுதாய விமர்சனம் | முனைவர் ந. ஆறுமுகம் | 1993 | ஆம் |
| 7. | விடுதலைக்குமுன் தமிழ் நாவல்களில் பெண்கள் | முனைவர் எம்.ஏ. சுசீலா | 1994 | ஆம் |
| 8. | நாவல் கலையியல் | முனைவர் இரா. பாலசுப்பிரமணியன் | 2004 | ஆம் |
| 9. | திருக்குறளில் பொதுநிலை உத்திகள் | முனைவர் பொன் சவுரிராசன் | 2005 | ஆம் |
| 10. | பெண்ணியப் படைப்பிலக்கியம் | முனைவர் தி. கமலி | 2006 | ஆம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 11. | குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம் | முனைவர் சுகு. பன்னீர் செல்வம் | 2009 | ஆம் |
| 12. | பழந்தமிழ் அமைப்பியல் மற்றும் குறியியல் ஆய்வுகள் | முனைவர் தமிழவன் (கார்லோஸ்) | 2009 | ஆம் |
| 13. | சிறுபஞ்சமூலம் ஒரு சமூகப் பார்வை | முனைவர் சு. பழனியாண்டி | 2009 | ஆம் |
| 14. | காரைக்கால் அம்மையார் பாடல்கள் - ஓர் ஆய்வு | முனைவர் சுப்புலட்சுமி மோகன் | 2010 | ஆம் |
| 15. | சொல்லாடல்கள் | முனைவர் மு. ஜீவா | 2010 | ஆம் |
| 16. | தமிழ் நாடக வகையும் வரலாறும் | முனைவர் வெ.மு. ஷாஜகான் கனி | 2011 | ஆம் |
| 17. | பெரியாரிய நோக்கில் மு.வ. | முனைவர் இரா. அறவேந்தன் | 2012 | ஆம் |

**12. சதாவதானி செய்குத்தம்பிப் பாவலர் அறக்கட்டளை**

பெயர் : சதாவதானி செய்குத்தம்பிப் பாவலர் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 25,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1984

நிறுவியோர் : சதாவதானி பாவலர் நினைவு விழாக்குழு

பொருண்மை : இசுலாமியத் தமிழ்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | மகாமதிப் பாவலர் | முனைவர் செ. பசுலு முகைதீன் | 1986 | ஆம் |
| 2) | படைப்போர் இலக்கியங்கள் | முனைவர் பீ.மு. அஜ்மல்கான் | 1992 | ஆம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 3) | திருக்குர் ஆன் தமிழ் மொழிபெயர்ப்பு (பீர், அப்பா, ஞானியாரப்பா முன்வைத்து) | திரு. எச்.முஸ்தபா | 2011 | ஆம் |

**13.** இதழாளர் சி.பா. ஆதித்தனார் அறக்கட்டளை

பெயர் : இதழாளர் சி.பா. ஆதித்தனார் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 20,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1984

நிறுவியோர் : சி.பா. ஆதித்தனார் கல்வி நிறுவனம்

பொருண்மை : இதழியல்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | இதழாளர் ஆதித்தனார் | திரு. அ.மா. சாமி | 1990 | ஆம் |
| 2. | கம்பன் எழுத்தச்சன் இராமாயணங்கள் | முனைவர் ப. பத்மநாபன் தம்பி | 1992 | ஆம் |
| 3. | இருபதாம் நூற்றாண்டுக் கவிதைகளில் சமூக நீதிக் கோட்பாடு | முனைவர் து. சீனிச்சாமி | 1993 | ஆம் |
| 4. | ஒப்பிலக்கியக் கோட்பாடுகள் | முனைவர் கே. செல்லப்பன் | 1994 | ஆம் |
| 5. | இதழாளர் பெரியார் | இறையனார் | 1998 | ஆம் |
| 6. | ஏ.என். சிவராமனின் பத்திரிகை உலகம் | பொன் தனசேகரன் | 2005 | ஆம் |
| 7. | ஈழத்தில் கண்ணகி கலாச்சாரம் | முனைவர் பால. சுகுமார் | 2009 | ஆம் |

**14.பெருந்தலைவர் காமராசர் அறக்கட்டளை**

பெயர் : பெருந்தலைவர் காமராசர் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 30,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1984

நிறுவியோர் : நாடார் மகாசன சங்கம், மதுரை

பொருண்மை : சமூகவியல்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | காந்தீயப் பெருந்தலைவர் காமராசர் | முனைவர் ஜான் ஆசீர்வாதம் | 1990 | ஆம் |
| 2. | மலையாளக் கவிதைகள் | முனைவர் சிற்பி பாலசுப்பிர மணியன் | 1991 | ஆம் |
| 3. | தாய்லாந்தில் தமிழ்ப் பண்பாட்டுக் கூறுகள் | முனைவர் எஸ்.நாகராஜன் | 1993 | ஆம் |
| 4. | இக்கால இலக்கியக் கோட்பாடுகள் | முனைவர் அ.அ. மணவாளன் | 1994 | ஆம் |
| 5. | தமிழ் சமூகவியல் ஒரு கருத்தாடல் | முனைவர் தாயம்மாள் அறவாணன் | 2002 | ஆம் |
| 6. | பாரதியின் சமுதாயச் சிந்தனைகள் | முனைவர் இளமதி ஜானகி இராமன் | 2004 | ஆம் |
| 7) | மீளும் வரலாறு, அறியப்படாத நந்தனின் கதை | இரா. இரவிக்குமார் | 2009 | ஆம் |
| 8. | மனிதப் புனிதர் கக்கன் | முனைவர் அம்பேத்கர் பிரியன் | 2010 | ஆம் |

| | | | | |
|---|---|---|---|---|
| *9.* | மருதத்தில் மக்கள் வாழ்வியல் | முனைவர் எ. பாலுச்சாமி | *2011* | ஆம் |
| *10.* | உதயணக்குமார காவியம் உணர்த்தும் வாழ்வியல் நெறிகள் | முனைவர் இரா. சிவக்குமார் | *2013* | ஆம் |

**15. கலாநிலையம் டி.என். சேஷாசலம் அறக்கட்டளை**

பெயர் : கலாநிலையம் டி.என். சேஷாசலம் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. *15,000*

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : *1987*

நிறுவியோர் : பரணீதரன்

பொருண்மை : கலாநிலையம், இதழ்கள், இலக்கியம், கோட்பாடுகள்

| | | | | |
|---|---|---|---|---|
| *1.* | தமிழும் தெலுங்கும் | முனைவர் தா.சா. மாணிக்கம் | *1990* | ஆம் |
| *2.* | அழகியல் | முனைவர் மீனாட்சி முருகரத்தினம் | *1991* | ஆம் |
| *3.* | இலக்கியச் சிந்தனையாளர் டி.என். சேசாசலம் | முனைவர் ஏ.என். பெருமாள் | *1992* | ஆம் |
| *4.* | பெண்ணியம் அறிமுகம் | முனைவர் இரா. பிரேமா | *1993* | ஆம் |
| *5.* | இலக்கிய வகைத் திறனாய்வு | முனைவர் கீ. இராசா | *1994* | ஆம் |
| *6.* | சங்ககாலப் பெண்பாற் புலவர்களின் மொழிநடையும் கருத்தாக்கமும் | முனைவர் வ. ஜெயா | *2003* | ஆம் |

| | | | | |
|---|---|---|---|---|
| *7.* | தமிழில் பிறதுறைக் கோட்பாட்டாய்வுகள் வரலாறும் மதிப்பீடும் | முனைவர் ம. மதியழகன் | *2005* | ஆம் |
| *8.* | தமிழ்ப் புனைகதை களில் உளவியல் | முனைவர் பாத்திமா சூசைமணி | *2008* | ஆம் |
| *9.* | தமிழ் நாடகப் பனுவல், இந்திய நாடகப் பனுவல் ஒப்பீடு | முனைவர் காமாட்சி தரணிசங்கர் | *2009* | ஆம் |
| *10.* | படைப்பிலக்கியம் - விளிம்புநிலை மக்கள் ஆய்வு நோக்கு | முனைவர் சா. மேகலின் சந்திரா | *2011* | ஆம் |
| *11.* | ஆதிசைவம் | முனைவர் பா. இராஜசேகர் | *2013* | ஆம் |

**16.**தனிநாயகம் அடிகளார் அறக்கட்டளை

பெயர் : தனிநாயகம் அடிகளார் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 10,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1992

நிறுவியோர் : கிறித்தவத் தமிழ் இலக்கியக் கழகம்

பொருண்மை : தனிநாயக அடிகள் / கிறித்தவத் தமிழ் இலக்கியங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| *1.* | தனிநாயக அடிகளார் வாழ்வும் பணியும் | அமுதன் அடிகள் | *1992* | ஆம் |
| *2.* | தனிநாயக அடிகளாரின் ஆய்வுகள் | பேரா.ம.செ. இரபிசிங் | *1995* | ஆம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 3. | தனிநாயக அடிகளின் இதழியல் வழித் தமிழ்ப்பணி | திரு. பா. இறை யரசன் | 1995 | ஆம் |
| 4. | உலக அரங்கில் தமிழ் | மது.ச. விமலானந்தம் | 2003 | ஆம் |
| 5. | விவிலியத் தமிழ் | முனைவர் அ. ஆலீஸ் | 2004 | ஆம் |
| 6. | தலித் அறம் | முனைவர் அரங்க மல்லிகா | 2011 | ஆம் |
| 7. | மானுடம் போற்றும் தனிநாயகம் அடிகள் | நீற்றா பற்றிமாகரன் | 2013 | இல்லை |

17. டாக்டர் ஜெ. ஜெயலலிதா அறக்கட்டளை

பெயர் : டாக்டர் ஜெ. ஜெயலலிதா அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 12,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1994

நிறுவியோர் : முன்னாள் கல்வியமைச்சர் கே. பொன்னுசாமி

பொருண்மை : கலை - பண்பாடு

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பண்பெனப்படுவது | கவிஞர் நா. புலமைப்பித்தன் | 2003 | இல்லை |
| 2. | சங்க இலக்கியத்தில் பாணர் | முனைவர் காந்திதாசன் | 2011 | ஆம் |
| 3. | சேக்கிழாரும் இசைத்தமிழும் | முனைவர் பாகீரதி | 2012 | ஆம் |
| 4. | பாணர் இன வரைவியல் | முனைவர் பக்தவத்சலபாரதி | 2013 | ஆம் |

**18. இராம சுப்பையர் அறக்கட்டளை**

பெயர் : இராமசுப்பையர் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 25,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1995

நிறுவியோர் : தினமலர்

பொருண்மை : காசு இயலும் பிற துறைகளும்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | மொழி அகழாய்வு - ஒரு புதுநோக்கு | முனைவர் வ.அய். சுப்பிரமணியன் | 1998 | இல்லை |
| 2. | பல்லவர் காலக் கட்டடக் கலை | டாக்டர் இரா. கலைக்கோவன் | 2001 | இல்லை |
| 3. | சங்க காலக் காசு இயல் | முனைவர் ப. சண்முகம் | 2003 | ஆம் |
| 4. | அறந்தாங்கித் தொண்டைமான்கள் | புலவர் செ. இராசு | 2008 | ஆம் |
| 5. | தமிழ் இலக்கியத்தில் மானிடத்தின் விழிப்பு | செந்நெறிச் செல்வர் பற்றிமாகரன் | 2013 | இல்லை |

**19. பதிப்புச் செம்மல் பேராசிரியர் மெய்யப்பன் அறக்கட்டளை**

பெயர் : பேராசிரியர் மெய்யப்பன் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 20,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1996

நிறுவியோர் : பேரா.ச. மெய்யப்பன்

பொருண்மை : பதிப்பியல்/தொல்லியல்/கலைச்சொல்லாக்கம்/மொழிபெயர்ப்பியல்/தமிழ் வளர்க்கும் நிறுவனங்கள், இருபதாம் நூற்றாண்டு வரலாறு, மொழிபெயர்ப்பியல்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | மேலைநோக்கில் தமிழ்க் கவிதை | முனைவர் மருதநாயகம் | 2000 | ஆம் |
| 2. | இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை | முனைவர் சிற்பி பாலசுப்பிர மணியன் | 2006 | ஆம் |
| 3. | மொழிபெயர்ப்பு ஒரு கவின்கலை | முனைவர் வீ. சந்திரன் | 2010 | ஆம் |
| 4. | சுவடிப் பதிப்பாசிரியர்கள் | முனைவர் சி. இலட்சுமணன் | 2011 | ஆம் |

**20.** டாக்டர் தொ.பொ. மீனாட்சிச் சுந்தரனார் அறக்கட்டளை

பெயர் : தெ.பொ. மீனாட்சிச் சுந்தரனார் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 15,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1996

நிறுவியோர் : பேரா. மது.ச. விமலானந்தம்

பொருண்மை : தெ.பொ.மீ. இலக்கியப் பணி / தொண்டு / மொழியியல்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | தெ.பொ.மீ. தமிழ் / மொழியியல் பணி | முனைவர் பொற்கோ | 2000 | இல்லை |
| 2. | கானல் வரி | முனைவர் ச.வே. சுப்பிரமணியன் | 2002 | ஆம் |
| 3. | தெ.பொ.மீ.யின் தமிழ்த் தொண்டும், மொழியியல் பங்களிப்பும் | முனைவர் ஜீ. சீனிவாச சர்மா | 2004 | ஆம் |
| 4. | சங்க இலக்கிய ஆய்வு தெ.பொ.மீ.யும் மேலை அறிஞரும் | முனைவர் ப. மருதநாயகம் | 2008 | ஆம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 5. | இந்தியச் சூழலில் மொழி இழப்பு ஒரு சமுதாய மொழியியல் கண்ணோட்டம் | முனைவர் வ. ஞானசுந்தரம் | 2009 | ஆம் |
| 6. | மனோன்மணியமும் பின்காலனித்துவமும் | முனைவர் க. பஞ்சாங்கம் | 2010 | ஆம் |

**21. நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை**

பெயர் : நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 20,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1998

நிறுவியோர் : திரு. இரா. இராஜா, அமெரிக்கா

பொருண்மை : தமிழகத்தில் தேசியமும், காந்தியமும் மற்றும் நாமக்கல் கவிஞரின் படைப்புகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | நாமக்கல் கவிஞரின் குறளுரைத் திறனாய்வு | முனைவர் தமிழண்ணல் | 2002 | இல்லை |
| 2. | தமிழில் விடுதலை இலக்கியம் | முனைவர் கா. செல்லப்பன் | 2003 | ஆம் |
| 3. | நாமக்கல் கவிஞரின் உரைநடைப் படைப்புகளில் காந்தியமும் தேசியமும் | முனைவர் கி. அனுமந்தன் | 2004 | ஆம் |
| 4. | நாமக்கல் கவிஞரின் தமிழ்ப்பணி | முனைவர் ச. வளவன் | 2009 | ஆம் |

## 22. டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளை

பெயர் : டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 2,00,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 1999

நிறுவியோர் : டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார்

பொருண்மை : தமிழில் ஆவணங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | சுவடிப்பதிப்புத்திறன் இரண்டு தொகுதிகள் கருத்தரங்கு | தொகுப்பு | 2002 | ஆம் |
| 2. | பாரதி இந்தியா | சிலம்பு செல்வராசு | 2003 | ஆம் |
| 3. | தமிழ் நாட்டுப் புறவியல் ஆய்வு வரலாறு | முனைவர் ஆ. பிச்சை | 2003 | ஆம் |
| 4. | தமிழில் மருத்துவ இதழ்கள் | டாக்டர் சு. நரேந்திரன் | 2003 | ஆம் |
| 5. | தொல்லியல் நோக்கில் சங்க காலம் | முனைவர் கா. ராஜன் | 2004 | ஆம் |
| 6. | வலங்கைமாலையும் சான்றோர் சமூகச் செப்பேடுகளும் | திரு. சீ. இராமச் சந்திரன் | 2004 | ஆம் |
| 7. | பண்டைய தமிழக வரைவுகளும் குறியீடுகளும் | முனைவர் இராச பவுன்துரை | 2004 | ஆம் |
| 8. | இலக்கணநூல்களில் கருத்து வளர்ச்சி | முனைவர் பெ. சுயம்பு | 2005 | ஆம் |
| 9. | தமிழ் இதழ்கள்- விடுதலைக்குப் பின் | முனைவர் வே. சசிகலா | 2006 | ஆம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 10. | பள்ளு இலக்கியம் மறுவாசிப்பு பிரதிக்கு வெளியே | முனைவர் தே. ஞானசேகரன் | 2006 | ஆம் |
| 11. | தமிழ் நாடக வெளிப்பாட்டுக் களங்கள் | முனைவர் க. இரவீந்திரன் | 2008 | ஆம் |
| 12. | தமிழில் தத்துவ நூல்கள் | முனைவர் நா.பாஸ்கரன் | 2008 | ஆம் |
| 13. | புதுவைச் சிவம் கவிதைகளும் புரட்சிக் கோட்பாடுகளும் | முனைவர் சிவ இளங்கோ | 2009 | ஆம் |
| 14. | அறிவியல் தமிழ் செய்தித் தொடர் பியலின் சமூக வரலாறு | முனைவர் த.வி. வெங்க டேஸ்வரன் | 2009 | ஆம் |
| 15. | மொழியியல் நோக்கில் தொல்காப்பியமும் சங்க இலக்கியமும் | முனைவர் எஸ். ஆரோக்கிய நாதன் | 2009 | ஆம் |
| 16. | அரங்கேற்றுகாதை ஆராய்ச்சி | முனைவர் வெ.மு. ஷாஜஹான் கனி | 2009 | ஆம் |
| 17. | தமிழ் இலக்கியங்களில் மனித உறவுகள் | முனைவர் சற்குணவதி | 2010 | ஆம் |
| 18. | பாரதியாரின் தமிழ் மொழிப்பற்று | முனைவர் கி. கௌரி | 2010 | ஆம் |
| 19. | மூவர் தமிழ் மூன்று பார்வைகள் | காவிரிநாடன் | 2010 | ஆம் |
| 20. | காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள் | திருமதி இரா.பேபி வேகா இசையமுது | 2010 | ஆம் |
| 21. | இராசேந்திர சோழன் வெளியிட்ட 'எசாலம்' செப்பேடுகள் | முனைவர் ச.கிருட்டிண மூர்த்தி | 2010 | ஆம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 22. | அரங்கியல் நோக்கில் கபிலர் பாடல்களில் காணலாகும் கதை மாந்தர்கள் | முனைவர் இரா. திராவிடமணி | 2011 | ஆம் |
| 23. | சங்க இலக்கிய சமூக ஆய்வுகள் | முனைவர் க.அ.ஜோதிராணி | 2011 | ஆம் |
| 24. | அரசகுல சான்றோர் வரலாறும் மதுரைக்காஞ்சியும் | முனைவர் நெல்லை நெடுமாறன் அ. தசரதன் | 2011 | ஆம் |
| 25. | திணை வரலாறு | முனைவர் வெ.மு. ஷாஜஹான் கனி | 2012 | ஆம் |

**23. பெரியார் ஈ.வெ.ரா. பகுத்தறிவு அறக்கட்டளை**

பெயர் : பெரியார் ஈ.வெ.ரா. அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 20,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 2002

நிறுவியோர் : டாக்டர் ந. வேலுசாமி

பொருண்மை : பெரியார் ஈ.வெ.ரா. அவர்களின் பகுத்தறிவுச் சிந்தனைகள் குறித்து

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பெரியாரின் பண்பாட்டுப் புரட்சி | திரு. கி. வீரமணி | 2002 | ஆம் |
| 2. | மக்கள் நேயச் சுயமரியாதை | முனைவர் பொற்கோ | 2005 | ஆம் |
| 3. | உலகப் பகுத்தறிவு நீரோட்டத்தில் பெரியார் | முனைவர் நந்திவர்மன் | 2009 | ஆம் |
| 4. | சிந்தனைச் சிற்பி ம.சிங்காரவேலரும் தந்தை பெரியாரும் | முனைவர் முத்து குணசேகரன் | 2010 | ஆம் |

**24. பெரியார் ஈ.வெ.ரா. நாகம்மை அறக்கட்டளை**

பெயர் : பெரியார் ஈ.வெ.ரா. நாகம்மை அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 20,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 2003

நிறுவியோர் : பெரியார் மகளிர் அணி

பொருண்மை : மகளிர் குறித்த சிந்தனைகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும் | முனைவர் சரளா இராசகோபாலன் | 2005 | ஆம் |
| 2. | பெரியாரியப் பெண்ணியம் | முனைவர் கு.ம. இராமாத்தாள் | 2007 | ஆம் |
| 3. | சுயமரியாதை இயக்க வீராங்கனைகள் அன்றும் இன்றும் | ஏ.பி.ஜே. மனோரஞ்சிதம் | 2013 | ஆம் |

**25. பெரியார் ஈ.வெ.ரா. மணியம்மை அறக்கட்டளை**

பெயர் : பெரியார் ஈ.வெ.ரா. மணியம்மை அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 20,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 2003

நிறுவியோர் : பெரியார் மகளிர் அணி

பொருண்மை : மகளிர் குறித்த சிந்தனைகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | மௌனத்தின் அதிர்வுகளும் மொழியும் - பெண் | முனைவர் தேவதத்தா | 2005 | ஆம் |
| 2. | மகளிர் முன்னேற்றத்தில் இதழின் பங்களிப்பு - அவள் விகடன் | முனைவர் லொ.ஆ. உமாமகேஸ்வரி | 2009 | ஆம் |
| 3. | திராவிட இயக்கத்தில் அன்னை மணியம்மையின் பங்கு | முனைவர் ந.க. மங்களமுருகேசன் | 2009 | ஆம் |

## 26. திருமிகு இராமலிங்க அபிராமி அறக்கட்டளை

பெயர் : இராமலிங்கம் அபிராமி அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 50,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 2003

நிறுவியோர் : முனைவர் ஏ.ஆர்.ஏ. சிவகுமாரன், சிங்கப்பூர்

பொருண்மை : திருமுறைகள்

| | | | |
|---|---|---|---|
| 1. | பெரியபுராணம் திருமுறைகளின் கவசம் | முதுமுனைவர் தி.ந. இராமச் சந்திரன் | 2005 ஆம் |
| 2. | பண்பாட்டு நோக்கில் திருமுறைகள் | முனைவர் தா. ஈசுவரப்பிள்ளை | 2008 ஆம் |
| 3. | இசை மருத்துவம் | முனைவர் சே. பிரேமா | 2009 ஆம் |
| 4. | நீரணி பவளக் குன்றம் (ஒன்பதாம் திருமுறை) | முனைவர் கி. சுப்பிரமணியன் | 2009 ஆம் |
| 5. | தமிழறிஞர் அடிகளாசிரியரின் சிறுவர் இலக்கியப் படைப்புகள் | முனைவர் ஆ. சிவபெருமான் | 2009 ஆம் |
| 6. | திருநாவுக்கரசரின் உவமை நயம் | கோ. தெய்வ நாயகம் | 2010 ஆம் |
| 7. | நரம்பு கருவிகள் | முனைவர் செ. சுப்புலட்சுமி மோகன் | 2012 ஆம் |
| 8. | திருமுறைகளின் அகப்பொருள் மரபுகளும் தொண்டு நெறிகளும் | முனைவர் க. முருகேசன் | 2013 ஆம் |

**27. முனைவர் ச.வே.சுப்பிரமணியன் அறக்கட்டளை**

பெயர் : முனைவர் ச.வே. சுப்பிரமணியன் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 20,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 2003

நிறுவியோர் : முனைவர் கு. பகவதி

பொருண்மை : செவ்விலக்கியங்கள் குறித்த ஆய்வுகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம் | முனைவர் சுடலி தியாகராசன் | 2009 | ஆம் |
| 2. | பெயரியல் | முனைவர் இரா. கண்ணன் | 2011 | ஆம் |

**28. பெ.நா. அப்புசுவாமி அறக்கட்டளை**

பெயர் : பொ.நா. அப்புசுவாமி அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 50,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 2003

நிறுவியோர் : பெ.நா. அப்புசுவாமியின் குடும்பத்தினர்

பொருண்மை : அறிவியல் தமிழ், கலைச் சொல்லாக்கம்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | கலிலியோ முதல் கலாம் வரை | விஞ்ஞானி பேரா. நெல்லை சு. முத்து | 2009 | ஆம் |
| 2. | பொறியியல் கலைச் சொற்கள் | முனைவர் இரா. இராமசாமி | 2011 | ஆம் |

**29. முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அறக்கட்டளை**

பெயர் : முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 20,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 2004

நிறுவியோர் : முனைவர் ந. கடிகாசலம்

பொருண்மை : கவிதையியல்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | கவிதையியல் | முனைவர் க. பூரணச்சந்திரன் | 2008 | ஆம் |
| 2. | கண்ணதாசனின் ஆளுமைத் திறன் | முனைவர் ம. செந்தில்குமார் | 2011 | இல்லை |
| 3. | தூயத் தமிழ்க்கடல் காவலர் மறைமலை யடிகளார் | கலைமாமணி அ. மறைமலையான் | 2013 | இல்லை |

**30. பேரறிஞர் அண்ணா அறக்கட்டளை**

பெயர் : பேரறிஞர் அண்ணா அறக்கட்டளை

வைப்பு நிதி : ரு. 10,00,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 2005

நிறுவியோர் : தமிழக அரசு

பொருண்மை : பேரறிஞர் அண்ணாவின் சொற்பொழிவுகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | அறிஞர்கள் பார்வையில் பேரறிஞர் அண்ணா (நூற்றாண்டு - தொடர் சொற்பொழிவுகள் மற்றும் கருத்தரங்கம்) | (பதி) முனைவர் மு. வளர்மதி | 2010 | ஆம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 2. | அறிஞர் அண்ணா மொபசான் சிறுகதைகள் ஒப்பாய்வு | கேசவன் சொர்ணம் (மொரிசியஸ்) | 2010 | ஆம் |
| 3. | அண்ணாவின் புனைக்கதைத் திறன் | பேரா. முனைவர் சேது | 2011 | ஆம் |
| 4. | அண்ணா ஒரு சமூகக் குறியீடு சீர்திருத்த நாடகங்கள் | முனைவர் மு. ஜீவா | 2011 | ஆம் |
| 5. | கவிஞர் புதுவை சிவத்தின் சீர்திருத்த நாடகங்கள் | முனைவர் சிவ. இளங்கோ | 2012 | ஆம் |

**31. தத்துவஞானி வேதாத்திரி மகரிஷி அறக்கட்டளை**

பெயர் : தத்துவஞானி வேதாத்திரி மகரிஷி அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 1,00,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 2005

நிறுவியோர் : உலக சமுதாய சேவா சங்கம்

பொருண்மை : வேதாத்திரி மகரிஷி அவர்களின் பன்முகப் பார்வை, பணி, எழுத்துகள் போன்ற பல்வேறு கூறுகள் மற்றும் மதநல்லிணக்கம், ஒருமைப்பாடு, அறிவியல் சிந்தனைகள் ஆகியன பற்றி

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | தத்துவஞான வேதாத்திரி மகரிஷி யின் படைப்புகளில் திருக்குறளின் தாக்கம் | முனைவர் கஸ்தூரி ராஜா | 2010 | ஆம் |
| 2. | மதங்களும் மனித நேயமும் | முனைவர் இரா. சிகாமணி | 2011 | ஆம் |
| 3. | சித்தர்களின் நெறியில் வேதாத்திரி மகரிஷி | முனைவர் ச. ஞானசம்பந்தன் | 2012 | இல்லை |

**32. டாக்டர் வ.செ. குழந்தைசாமி அறக்கட்டளை**

பெயர் : டாக்டர் வ.செ. குழந்தைசாமி அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 1,00,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 2009

நிறுவியோர் : திரு. இராம் ப. சாமி, அமெரிக்கா

பொருண்மை : வ.செ. குழந்தைசாமி பற்றிய ஆய்வுகள்

| | | | |
|---|---|---|---|
| 1. குலோத்துங்கன் கவிதைகள் - ஒருகோபுரதீபம் | திரு. மு. குழந்தை வேலு | 2009 | ஆம் |
| 2. வா.செ.கு. என்ற ஆளுமையாளர் | முனைவர் இரா. மோகன் | 2011 | ஆம் |
| 3. கவிஞர் குலோத்துங் கனின் மானுட யாத்திரை காவிய வானில் புதிய தாரகை | முனைவர் சு.கு. பன்னீர்செல்வம் | 2011 | ஆம் |

**33. டாக்டர் வ.அய். சுப்பிரமணியம் அறக்கட்டளை**

பெயர் : டாக்டர் வ.அய். சுப்பிரமணியன் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 20,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 2009

நிறுவியோர் : டாக்டர் ச.வே. சுப்பிரமணியன்

பொருண்மை : திராவிட மொழிச் சிந்தனைகள், ஒப்பியல் ஆய்வு

| | | | |
|---|---|---|---|
| 1. தமிழும் தமிழ்க் கற்பித்தலும் | முனைவர் சீதாலட்சுமி (சிங்கப்பூர்) | 2011 | ஆம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 2. | திராவிட மொழி களும் திராவிட மொழி ஆய்வுகளும் | முனைவர் ச. மனோகரன் | 2013 | ஆம் |

34. திரு. சி.மா. துரையரசு அறக்கட்டளை

பெயர் : திரு. சி.மா. துரையரசு அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 50,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 2010

நிறுவியோர் : திரு. சி.மா. துரையரசு

பொருண்மை : சங்க இலக்கிய ஆய்வுகள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | உலக மொழிகளில் தமிழ்ச் சொற்கள் | திரு. பா. சண்முக சுந்தரம் | 2011 | ஆம் |
| 2. | சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழிநடை | முனைவர் வீ. ரேணுகாதேவி | 2013 | ஆம் |

35. தனித்தமிழ்க் காவலர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அறக்கட்டளை

பெயர் : தனித்தமிழ்க் காவலர் முனைவர் மு. தமிழ்க்குடிமகன் அறக்கட்டளை

வைப்பு நிதி : ரூ. 1,00,000

தோற்றுவிக்கப்பட்ட ஆண்டு : 2013

நிறுவியோர் : முனைவர் சா.த. மெய்ம்மொழி

பொருண்மை : தமிழிலக்கியங்கள்

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | தூய தமிழ்க் காவலர் தமிழ்க் கடல் மறைமலை அடிகளார் | கலைமாமணி அ. மறைமலையான் | 2013 | ஆம் |

# நிறுவன ஆய்வேடுகள்

முனைவர் சூ. நிர்மலாதேவி
இணைப் பேராசிரியர்
இலக்கியம் (ம) சுவடியியல் புலம்

உலகத் தமிழராய்ச்சி நிறுவனம் 'தமிழ் உயராய்வு மையம்' என்ற அமைப்புக்குத் தக முனைவர் பட்ட ஆய்வுகளை நிகழ்த்தும் பொருட்டு ஆய்வு மாணவர்கள் சேர்த்துக் கொள்ளப்பட்டனர். 1975 தொடங்கி மார்ச் 2012 வரையிலான முனைவர் பட்ட ஆய்வுகள் குறித்த கருத்துகள் இத்தலைப்பின் கீழ்த்தரப்படுகின்றன.

## முனைவர்பட்ட ஆய்வுகள் குறித்த பட்டியல் விளக்கம்

இக்கட்டுரைகளின் இறுதியில் இந்நிறுவனத்தில் நிகழ்ந்த முனைவர் பட்ட ஆய்வுகளின் பட்டியல் ஒன்று இணைக்கப் பட்டுள்ளது. இந்தப் பட்டியல் நிறுவனத்திலிருந்து வெளியிடப் படுகின்ற ஆண்டறிக்கைகள், செய்திக்கதிர்கள், முனைவர் பட்டம் பெற்றுச் சென்றவர்கள் குறித்த அலுவலகக் கோப்புகள், நூலகத்தில் உள்ள ஆய்வேட்டு இருப்பு எண்ணிக்கைக் கோப்புகள், முனைவர் ச. சிவகாமி அவர்கள் 'தமிழியல்' இதழில் எழுதிய 'நிறுவன ஆய்வேடுகள்' (24) (1983) என்ற கட்டுரை ஆகியவற்றை அடிப்படைத்தரவுகளாகக் கொண்டு தயாரிக்கப் பெற்றதாகும். மொத்தம் 161 முனைவர் பட்ட ஆய்வுகள் இந்நிறுவனத்தில் நிகழ்த்தப்பட்டுள்ளன. 2004ஆம் ஆண்டு முதல் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக அனுமதிப் பெற்று முதுகலை, ஆய்வியல் நிறைஞர் வகுப்பு நிறுவனத்தில் தொடங்கப்பட்டதால் 180 ஆய்வியல் நிறைஞர் ஆய்வேடுகள், 56 முதுகலை ஆய்வேடுகள் பட்டியலும் இங்கு வழங்கப்பட்டுள்ளன. 2013 ஆம் ஆண்டு தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்ட ஆய்வுக்கான அனுமதியும் பெறப்பட்டுள்ளது.

## ஆய்வுத் தலைப்பு – இருமொழிகள்

எண், ஆய்வாளர் பெயர், ஆய்வுத்தலைப்பு, ஆய்வு நெறியாளர், ஆண்டு என்ற உட்தலைப்புகளுடன் அமைந்துள்ள

இப்பட்டியலில் ஆய்வுத்தலைப்புகள் தொடக்கக் கால கட்டங்களில் ஆங்கிலத்தில் பதிவு செய்யப்பட்டு அவ்வாறே தரவுகளிலும் குறிக்கப்பெற்றுள்ளதால் பட்டியலில் தலைப்புகள் ஆங்கிலத் திலேயே தரப்பட்டுள்ளன. இடைப்பட்ட கால கட்டத்தில் அதாவது 1979-83 வரையிலான காலத்தில் ஆங்கிலம், தமிழ் ஆகிய இருமொழிகளிலும் தலைப்புகள் பதிவு செய்யப்பட்டுள்ளதால் அவ்வவ்வாறே தலைப்புகள் அமைக்கப்பட்டுள்ளன. பிந்தைய ஆண்டுகளில் 2012 வரை தமிழில் தலைப்புப் பதிவு நடைபெறுவதால் தமிழில் தலைப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. விதிவிலக்காக ஒப்பீட்டாய்வு போன்றவற்றிலும் பிறதுறை சார்ந்த தமிழியல் ஆய்வுகளிலும் ஆங்கிலத்தில் தலைப்புகள் அமைந்துள்ளன. அவை அவ்வவ்வாறே தரப்பட்டுள்ளன.

**ஆய்வாண்டு**

பட்டியலில் பதிவாண்டு, பட்டம்பெற்ற ஆண்டு என்ற இருவகை ஆண்டுகள் தரப்பட்டுள்ளன. வரிசை எண் 47 வரையும் பதிவாண்டும் அதன்பின்னர் பட்டம்பெற்ற ஆண்டும் இடம் பெற்றுள்ளன. கிடைத்த தரவுகளின் அடிப்படையில் இத்தகு இருவகையான பகுப்புகளை அமைக்க நேர்ந்தது. பதிவாண்டில் குறிப்பிடப்பட்டுள்ள ஆய்வுகள் அனைத்தும் நிறுவனத்தில் ஆய்வுக்காகப் பதிவு செய்யப்பட்டவை என்பது உறுதியாகத் தெரிகிறது. ஆனால் இவர்கள் அனைவரும் நிறுவனத்தில் பட்டம் பெற்றுச் சென்றவர்கள் என்று கூற இயலாது. நெறியாளரை மாற்றிக் கொண்டு வேறு இடத்தில் சேர்ந்து பட்டம் பெற்றவர்கள், ஆய்வை முடிக்காமல் விட்டுச் சென்றவர்கள், முடிக்குமுன் இயற்கை எய்தியவர்கள் என்ற பலதரப்பினரும் இதில் அடங்குவர்.

அடுத்ததாகப் பட்டம் பெற்ற ஆண்டு என்ற பிரிவிற்குள் அடங்குபவர்கள் அனைவரும் நிறுவனத்தில் முனைவர் பட்டம் பெற்றுச் சென்றவர்கள் என்ற உறுதியான பிரிவில் அடங்குகின்றனர். ஆனால் தொடக்க நிலையில் ஆய்வு முடிப்பவர்கள் கண்டிப்பாக நிறுவன நூலகத்துக்கு ஆய்வேட்டுப் பிரதி ஒன்றை அளிக்க வேண்டும் என்ற விதி கடைப்பிடிக்கப்படாத காரணத்தால் இவர்களால் மேற்கொள்ளப்பட்ட ஆய்வேடுகள் நூலகத்தில் காணப்படவில்லை. இதனால் நிறுவனத்தில் ஆய்வு செய்த அனைவருடைய ஆய்வேடும் நிறுவன நூலகத்தில் இடம் பெற்றிருக்கவில்லை என்பது இங்குக் கருதத்தக்கது.

## ஆய்வுக் களன்கள்

வருகைப்படுத்தப்பட்ட பட்டியலை வைத்துப் பார்க்கும் பொழுது ஆய்வேடுகளின் ஆய்வுக் களன்களாகத் தமிழ் இலக்கியம், மொழியியல், தொல்பொருளியல், வரலாறு, பண்பாடு, மானுடவியல், சுவடியியல், ஒப்பிலக்கியம், நாட்டுப்புறவியல், சமயம், தத்துவம், இலக்கணம், இதழியல், நுண்கலைகள், செய்தித் தொடர்பு, அறிவியல் ஊடகங்கள், உளவியல், இசை, நாடகம், நாட்டியம், பொருளாதாரம், வணிகவியல், நாட்குறிப்புகள், கலைச் சொற்கள், மருத்துவம், போரியல், சட்டவியல், விளையாட்டு என்ற பல்துறைகளும் ஆய்வுக் களன்களாக அமைந்துள்ளமை தெரிகின்றது. இப்பொருண்மைகள் விளக்க நோக்கு, வரலாற்று நோக்கு, ஒப்பீட்டு நோக்குகள் என்ற பிரிவுகளில் ஆய்வாக மேற்கொள்ளப்பட்டுள்ளன.

## ஆய்வாளர்கள்

பட்டியலில் 14 முதல் 23 வரையிலானதில் ஆய்வாளர் பெயர் அறியப்பெறவில்லை. நிறுவன ஆய்வாளர்கள் தொடக்க நிலை தொட்டு இன்றுவரையும் முழுநேர ஆய்வாளர்கள் பகுதி நேர ஆய்வாளர்கள் என்ற இரு பிரிவினராக ஆய்வு மேற் கொண்டிருந்தனர். பணியில் இருந்து கொண்டே முனைவர் பட்டம் பெற விழைபவர்களுக்குப் பகுதிநேர ஆய்வு சிறந்த வாய்ப்பாக அமைகின்றது. முழுநேர ஆய்வாளர்களுக்கு நிறுவனம் தொடக்க நிலையில் அதாவது 75களில் திங்களொன்றுக்கு ரூ.300உம் எண்பதுகளில் ரூ.600 உம் அடுத்த காலகட்டங்களில் ரூ. 900 வீதம் இரண்டாண்டுகளுக்கு முதல் 5 பேருக்கு உதவித்தொகை அளித்து முனைவர்பட்ட ஆய்வுக்கு ஊக்கமளித்து வந்தது. தற்போது நிறுவனத்தில் இருபது மாணவர்கள் ஆய்வு செய்து வருகின்றனர்.

## ஆய்வு நெறியாளர்கள்

நிறுவனத்தில் மேற்கொள்ளப்படுகின்ற ஆய்வுகளுக்கு நெறியாளர்களாக நிறுவனத்தில் பணிபுரிகின்ற இயக்குநர்கள் பேராசிரியர்கள், இணைப் பேராசிரியர்கள். முதுநிலை ஆராய்ச்சி யாளர்கள் அமைந்து வருகின்றனர். தொடக்கக் கால கட்டங்களில் ஆய்வு உதவியாளர்கள் ஒப்பந்த அடிப்படையில் அமர்த்தப் பட்டனர். 1995 தொடங்கி நிரந்தரப் பணியில் இருக்கும் முனைவர் பட்டம் பெற்ற ஆய்வு உதவியாளர்களும் தகுதி அடிப்படையில்

நெறியாளராக இந்நிறுவனத்தில் பணியாற்றி வந்துள்ளனர். பட்டியலில் 7 முதல் 23 வரையிலானதில் ஆய்வு நெறியாளர்கள் யார் என்பது அறியப் பெறவில்லை.

## ஆய்வுப் போக்குகள்

1975 தொடங்கிய 2013 வரையிலான 38 ஆண்டுகளாக நடைபெற்று வரும் நிறுவன முனைவர்பட்ட ஆய்வுப்பணியில் 1995 முதல் 2001 வரையிலான 7 ஆண்டுகளில் பெருந்தொய்வு நிலை ஏற்பட்டிருந்தது. இதை நீக்கிப் பார்த்தால் முனைவர் பட்ட ஆய்வுப் பணி ஒரே சீராகச் சென்றுள்ளது தெரிகின்றது.

ஆய்வுப் போக்குகளில் குறிப்பிடத்தக்க மாற்றங்களும் வளர்ச்சிகளும் நிகழ்ந்துள்ளதை ஆய்வேடுகளை வைத்துக் காணும்போது அறியமுடிகின்றது.

தமிழ் இலக்கியம் தொடர்பான ஆய்வுகளில் சங்க இலக்கியம் தொடங்கி இக்கால இலக்கியம் வரை ஆய்வுக்குட்படுத்தப் பட்டுள்ளன. இக்கால இலக்கியங்கள் அல்லது 20ஆம் நூற்றாண்டு இலக்கியம் என்ற கூறப்படும் சிறுகதை, நாவல் நாடகங்கள், புதுக்கவிதை என்பவை முக்கிய ஆய்வுக் களன்களாகக் கொள்ளப் பட்டு அதிக அளவில் ஆய்வுக்குட் படுத்தப்பட்டுள்ளன. சங்க, காப்பிய, பக்தி இலக்கியங்களை விட இவை அதிக அளவில் ஆய்வு செய்யப்பட்டுள்ளன என்பது ஆய்வேட்டு எண்ணிக்கைகளை வைத்து நோக்கும் பொழுது தெளிவாகத் தெரியவருகின்றது.

நாட்டுப்புறவியலை ஆய்வுக் களமாக அமைக்கும் காலச் சூழல் இருந்ததால் நாட்டுப்புறவியல் தொடர்பான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன.

1. மாவட்ட வாரியாகப் பிரித்துக் கொண்டு ஆய்வு மேற் கொள்ளுதல்
2. நாட்டுபுறத் தெய்வங்கள் தொடர்பான ஆய்வுகள்
3. நாட்டார் கதைப்பாடல்கள்
4. நாட்டார் கலைகள்
5. பொதுநிலை ஆய்வுகள்

எனப் பகுத்துக் கொண்டு ஆய்வு செய்துள்ளமை தெரிய வருகின்றது.

1. தஞ்சாவூர் மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள்
2. கன்னியாகுமரி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள்
3. திருச்சி மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள்
4. வடார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள்
5. தென்னார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள்
6. தஞ்சை மாவட்ட மீனவர் பாடல்கள்
7. தூத்துக்குடி மாவட்ட முளைப்பாரிச் சடங்குப் பாடல்கள்

என்பன மாவட்ட வாரியான நாட்டுப் புறவியல் ஆய்வுகளாகும்.

1. தமிழர் நாட்டுப்புற விளையாட்டுகள்
2. நாட்டுப்புறத் தெய்வ விழாக்கள் வழி தமிழ்ப் பண்பாட்டு வரலாறு
3. கணியான் ஆட்டம்

என்பன நாட்டார் கலைகள் தொடர்பான ஆய்வுகளாகும். கருத்துப் புலப்பாட்டில் கதைப்பாடல்கள் என்ற ஆய்வு நாட்டார் கதைப் பாடல் தொடர்பானதாகும்.

கருப்பண்ணசாமி வழிபாட்டில் மந்திரச் சடங்குகள், நாட்டுப்புற அம்மன் தெய்வங்கள் (செஞ்சி வட்டம்) நாட்டுப்புறத் தெய்வங்கள் குறித்த ஆய்வுகளாகும். மாவட்ட வாரியான நாட்டுப்புறப் பாடல் ஆய்வுகள் மிகுதியாக நிகழ்த்தப்பட்டுள்ளன என்பது தெளிவாகின்றது.

தனி நபர் படைப்புகள் தொடர்பான ஆய்வுகள் பல நிகழ்த்தப்பட்டுள்ளன. அவையாவன:

1. பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனாரின் நூல்கள் ஓர் ஆய்வு
2. செய்குதம்பிப் பாவலரின் இலக்கியங்கள் - ஒரு திறனாய்வு மதிப்பீடு
3. பாம்பன் சுவாமிகள் நூல்கள் திறனாய்வு
4. தமிழக மறுமலர்ச்சிக்குப் பாரதிதாசனின் பங்களிப்பு
5. இராமலிங்கரின் படைப்புகளில் சுத்தசன்மார்க்க நெறியின் தோற்றமும் வளர்ச்சியும்

6. திரு.வி.க. நூல்களில் சமுதாயநோக்கு
7. அறிஞர் அண்ணாவின் மேடைத்தமிழ்
8. தமிழ் வள மேம்பாட்டில் டாக்டர் ந. சுப்பு ரெட்டியாரின் பணி
9. அ. மாதவையாவின் தமிழ் நாவல்கள் - ஓர் ஆழ்நிலைப் பார்வை
10. ஊத்துக்காடு வேங்கடசுப்பையர் படைப்புகள் - ஓர் ஆய்வு
11. அகத்தியரின் பல்துறைச் சிந்தனைகள்
12. தாயுமானவர் பாடல்களில் அறச் சிந்தனைகள்
13. சுஜாதாவின் அறிவியற் சிந்தனைகள்
14. சுந்தரர் தேவாரத்தின் இலக்கியச் சிந்தனைகள்

என்பனவாகும்.

சுவடியியல், மொழிபெயர்ப்பியல் பட்ட வகுப்புகள் 1979 இல் நிறுவனத்தில் தொடங்கப்பட்ட பின்னர் இவ்வியல்கள் தொடர்பான ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டமை தெரிய வருகின்றது.

1. சுவடியியல் - ஓர் ஆய்வு
2. முத்தாரம்மன் கதை - ஓர் ஆய்வு
3. தமிழ் மொழி பெயர்ப்பில் வரலாற்று நூல்கள்
4. குழந்தை மருத்துவம்
5. சித்த மருத்துவத்தில் நஞ்சு முறிவு நூல்களின் ஒப்பாய்வு

என்ற ஆய்வேடுகளைச் சுட்டிக் காட்டலாம்.

இவற்றுடன் கோயில்கள் தொடர்பான ஆய்வுகள் இசையியல், நாட்டியம், நாடகம், அழகுக் கலைகள் தொடர்பான, ஆய்வுகளும் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இவற்றுள் தமிழர் பண்பாடு தொடர்பான ஆய்வுகளை இந்நிறுவனம் சிறப்பாகச் செய்தது பெருமைக்குரியது என்பது குறிப்பிடத்தக்கது.

ஒட்டு மொத்தமாக நோக்கும்பொழுது இந்நிறுவன முனைவர் பட்ட ஆய்வுகள் தமிழ் உலகிற்கு அளித்த செழிப்பான நன்கொடைகள் மிகப் பல என்பதும், ஆய்வுப் பாதையில் நிறுவன ஆய்வுப் பதிவுகள் ஆழமானவை, அகலமானவை என்பதும் தெளிவாகத் தெரிய வருகின்றது. கண்முன் விரிந்து கிடக்கும் ஆய்வுக் களன்களும் பணிகளும் மிகப்பல என்பதும் புலப்படுகின்றது.

இப்படி உருவான உலகளாவிய நிறுவனங்களுடன் இந்தியாவின் தில்லி நூலக இணையம் (Delnet) தேசிய நூல் விவர அட்டவணை அடிப்படைக் குறிப்பு கணிப்பொறி வழி முன்னோடித் திட்டம் (National Bibliographil Databasee) என்ற திட்டத்தின் மூலம் இந்தியாவில் சிறந்து விளங்கும் நூலகங்களை இணையத்தின் வாயிலாக உலக இணையங்களோடு இணைக்க முன்வந்தது.

இந்திய அரசு அனுமதியுடன் மத்திய அமைச்சகங்களின் பண்பாட்டுத் துறையின் நிதியுதவியுடனும் தில்லி நூலக இணையம் இந்தியாவில் இருபெரும் நூலகங்களைத் தேர்வு செய்ய எண்ணியது. வடக்கே பட்டியாலா நகரில் அமைந்துள்ள பஞ்சாப் பல்கலைக்கழக நூலகமும் தென்னாட்டில் தமிழகத்தின் தலைசிறந்த நூலகமாக உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகமாகக் கருதி கணினி மூலம் அட்டவணைப்படுத்த விழைந்தனர். இருபத்தைந்தாயிரம் (25,000) தமிழ் மற்றும் ஆங்கில நூல்களைக் கணினியில் அட்டவணைப் படுத்தியது. ரூ. 7,00,00த்திற்குச் செலவினை ஏற்று இரண்டு கணினி மற்றும் பிரிண்டர் ஆகியவைகளையும் அட்டவணைப்படுத்த ரூ. 10,000 விலையுள்ள வழி நூல்களையும் அன்பளிப்பாகக் கொடுத்தனர்.

கணினியில் நூலின் தலைப்பு, ஆசிரியர், பொருள் (Subject), புத்தக வெளியீட்டு வருடம், வெளீட்டாளர் பெயர், ISBN, ISSN, எண்கள், பிரிவு எண் (Classification Number) ஆகியவற்றில் ஏதாவது ஒன்றைத்தெரிவித்து இருந்தால் அந்த நூல்இருப்பதை அறியவும். அந்த நூல் கருத்தால் அதனைப் பற்றிய முழு விவரங்களையும் மிக எளிதாக அறியலாம்.

தொடர்ந்து அறிவியல் நகரத் திட்டப் பணியின் (Science City) மூலம் மொழிக்கென முதன்முதலில் 25,000 தமிழ் மற்றும் ஆங்கில நூல்களை அட்டவணைப்படுத்தி அளித்துள்ளது.

## தேடக் கிடைக்காத அரிய வகை நூல்கள்

தொலைந்து போகக் கூடிய ஆவணங்களையும் சில வகை நூல்களையும் மூடிய அணுகுமுறையில் (Closed access) வைத்து பாதுகாக்கப்படுகிறது. தொன்மையும் இலக்கியத் தரமும் வாய்ந்த அரிய பல நூல்கள் இங்கே உள்ளன. அவற்றில் சில.

1. 1868ஆம் ஆண்டு வெளிவந்த 'பதினோராம் திரு முறை'
2. 1889ஆம் ஆண்டு வெளிவந்த 'முத்துவீரியம்'
3. 1891ஆம் ஆண்டு வெளிவந்த 'தாயுமான சுவாமிகள் பாடல்'
4. 1894ஆம் ஆண்டு வெளிவந்த 'புறநானூறு மூலமும் உரையும்'
5. 1889ஆம் ஆண்டு வெளிவந்த 'பத்துப்பாட்டு'
6. 1889ஆம் ஆண்டு வெளிவந்த 'புறப்பொருள் வெண்பா மாலை'
7. 1892ஆம் ஆண்டு வெளிவந்த 'சிலப்பதிகார மூலமும் அடியார்க்கு நல்லருரையும்'
8. 1898ஆம் ஆண்டு வெளிவந்த 'மணிமேகலை'
9. 1899ஆம் ஆண்டு வெளிவந்த 'பிரபந்தத் திரட்டு'
10. 1900 ஆம் ஆண்டு வெளிவந்த ஜி.யூ. போப் அவர்கள் மொழிபெயர்த்த 'திருவாசகம்'
11. 1902ஆம் ஆண்டு வெளிவந்த 'அபிதானக்கோசம்'
12. 1903ஆம் ஆண்டு வெளிவந்த 'வரவனப்புராணம்'
13. 1903ஆம் ஆண்டு வெளிவந்த 'சைவ சித்தாந்த சங்கிரதம்'
14. 1906ஆம் ஆண்டு வெளிவந்த புத்த சரித்திரம், 'பௌத்த தருமம், பௌத்த சங்கம்'
15. 1907 ஆம் ஆண்டு வெளிவந்த 'பாகவத புராணம்'
16. 1908ஆம் ஆண்டு வெளிவந்த குலாம்காதிறு நாவலர் இயற்றிய 'ஆரிபு நாயக வசனம்'
17. 1912 ஆம் ஆண்டு வெளிவந்த 'சத்திய வேத ஆகமம்'
18. 1920ஆம் ஆண்டு வெளிவந்த 'பதிற்றுப்பத்து'
19. 1924ஆம் ஆண்டு வெளிவந்த 'திருக்குறள் விளக்கம், பரிமேலழகர் உரையும்'
20. 1924ஆம் ஆண்டு வெளிவந்த 'பூர்வீக சங்கீத உண்மை'
21. 1925ஆம் ஆண்டு வெளிவந்த 'பாரத வெண்பா'
22. 1926ஆம் ஆண்டு வெளிவந்த 'செங்குந்தர் பிரபந்த திரட்டு'

**பழமை வாய்ந்த பத்திரிகைகள் மற்றும் சிற்றிதழ்கள்**

*செந்தமிழ்*
*செந்தமிழ்ச் செல்வி*
*கலா நிலையம்*
*விவேகோதயம்*
*சித்தாந்த தீபிகை*
*புதுவை முரசு*
*உலகத் தமிழ் மாநாட்டு மலர்கள்*
*மாநாட்டுக் கட்டுரைகள்*

மேலும் சில முக்கிய நூல்கள், மறுமலர்ச்சி எழுத்தாளர் நூல்கள் போன்றவற்றைக் குறிப்பிட்டுக் காட்டலாம்.

**நூல் பாதுகாப்பு**

தொழில்நுட்ப முன்னேற்றம் ஏற்பட்ட பின்னர் நூல்களைப் பாதுகாப்பதற்கெனப் புதிய பல கருவிகளும், வேதிப் பொருட்களும் பயன்படுத்தப்படுகின்றன. நூல்களில் கடுமையான பாதிப்பை ஏற்படுத்தக் கூடியவை பூச்சிகள், கரையான்கள். இவற்றை அழிப்பதற்குப் பூச்சிகொல்லிப்பெட்டியில் Thiymas என்ற வேதிப் பொருளை மின்விளக்கின் வெப்பத்தால் சூடேற்றும்போது பூச்சிகள் அழிக்கப்பட்டு நூல்கள் பாதுகாக்கப்படுகின்றன.

**நூலகர்கள்**

கற்பது என்பது மனிதனின் அடிப்படைக் கடமை. கற்பதற்கு அடிப்படையாகக் தேவைப்படுவது நூல்கள். நூல்களை ஆக்கு பவர்கள் எவ்வளவு பாராட்டுக்குரியவர்களோ அதைவிடப் போற்று தலுக்கும் பாராட்டுதலுக்கும் உரியவர்கள் நூல்களைச் சேகரித்துப் பாதுகாப்பவர்கள். அத்தகைய அரிய பணியை முப்பது ஆண்டுகள் வாழ்வின் மிக அரிய தருணங்களையெல்லாம் நூல் தேடலுக்கும், நூல் பாதுகாத்தலுக்கும் நூல்களைப் பார்க்க வந்தவர்களுக்கு அதைப் பற்றி எடுத்துச் சொல்லுவதற்கும் செலவழித்திருக்கிறார்கள் மேனாள் நூலகர்கள் **திருமதி அ.யோகம், திருமதி இரா. பார்வதி** அவர்கள். 30 ஆண்டுகால உழைப்பு என்பது எளிய செய்தியல்ல. அவர்களுடைய அரிய பணி என்றென்றும் மனநெகிழ்ச்சியோடுதான் பாராட்ட எண்ணத் தோன்றும். அவர்களைத் தொடர்ந்து தற்போது நூலகத்தில் மூன்று நூலகர்களால் நூலகப் பணி மேற்கொள்ளப்பட்டு வருகின்றது.

# நிறுவன நூல்கள்

முனைவர் ச. சிவகாமி
பேராசிரியர்
தமிழ் இலக்கியம் (ம) சுவடியியல் புலம்

தமிழாய்வையும் வெளியீட்டையும் தலையாயப் பணியாகக் கொண்ட உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 1975இல் 'தமிழில் விடுகதை'களுடன் தன் நூல் வெளியீட்டைத் தொடங்கியது. அன்று முதல் இன்றுவரை இடையறாது நடைபெறும் இப்பணி தமிழுலகில் மிகுந்த வரவேற்பைப் பெற்றதொன்றாகும். இதுவரை வெளிவந்துள்ள 751 நூல்கள் பற்றியதொரு பொது நோக்காக இந்நூற்றொகை அமைகிறது.

## ஆய்வுப் போக்கு

நிறுவன ஆய்வுப் பாதையில் இருவிதப் போக்குகள் தெளிவாக அமைகின்றன. முதல் காலகட்டத்தில் சுமார் 15 ஆண்டுகள் தமிழாய் விற்குத் தேவையான அடிப்படை நூல்களை உருவாக்குவதாய், தமிழாய்விற்குப் புதிய கோணங்களை, தமிழின் பெருமையை வெளிப்படுத்துவதாய் ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. இரண்டாம் காலகட்டமாகிய பிற்பகுதி தமிழின் அனைத்துத் துறைகளையும் அளவளாவி பல்வேறு கோணங்களிலும் அக்கறை காட்டியுள்ளது. அரிய நூல்களின் மறு பதிப்பிலும், தனிக்கவனம் செலுத்தியுள்ளது.

## ஆய்வுத்தளம்

ஆய்வுகளின் பிறப்பிடங்களாக 9 தளங்களைப் பார்க்க முடிகிறது.

1. திட்டப்பணிகள் இவற்றில் முதன்மையானதாக அமை கின்றன. தேர்ந்தெடுக்கும் குறிப்பிட்ட ஆய்வினைத் தனியர் அல்லது குழுவினர் நிறைவேற்றுவர், கல்விசார் அலுவலர், ஆய்வுமாணாக்கர், உள்நாட்டு வெளிநாட்டு வருகை தரு பேராசிரியர் என்போரால் இது நிறைவேற்றப்படுகின்றது.

2. நிறுவனத்திற்கு அன்று முதல் இன்றுவரை பெருமை சேர்ப்பதில் அதன் கருத்தரங்கத் தொகுப்பு வெளியீடுகள் அமைகின்றன. கருத்தரங்கக் கருத்துரைகள் காற்றோடு கரைந்து விடாது நூலாக்கம் கண்டு என்றும் பயன்படும் வகையில் அவற்றிற்கு 'நிலைபேறு' அளிக்கப்படுகின்றது. நிறுவனக் கல்வி அலுவலர் மற்றும் ஆய்வாளர் பங்கேற்கும் வாரக் கருத்தரங்கம், நிறுவனத்தாருடன் புறநிலைத் தமிழறிஞர் பங்கேற்கும் திங்கள் கருத்தரங்கம், ஆண்டுக் கருத்தரங்கம், சிறப்புக் கருத்தரங்கம் என்பனவாக இக்கருத்தரங்கக் கட்டுரைத் தொகுப்புகள் மலர்ந்துள்ளன. சிறப்புக் கருத்தரங்குகள் தேசிய அளவில் மட்டுமின்றி உலகளாவிய நிலையிலும் நடை பெறுவது சிறப்பிற்குரியதாகும்.

3. நிறுவனத்தில் நிறுவப்பட்டுள்ள 37 அறக்கட்டளைகள் வழி நிகழ்த்தப்படும் சொற்பொழிவுகளும் நூலாக்கம் கொள் கின்றன. இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருண்மை யைத் தன் அடிப்படை இலக்காகக் கொண்டுள்ளதால் ஆய்வுப் பரப்பு விரிவும் ஆழமும் காண வழியமைகிறது.

4. அவ்வப்போது நிகழும் சிறப்புச் சொற்பொழிவுகளும் நூலுருப் பெறுகின்றன.

5. நிறுவனத்தின் வழி முனைவர் பட்டம் பெற்றோரின் ஆய்வேடு களும் குறிப்பிடத்தக்க அளவு வெளியிடப்பட்டுள்ளன. இன்று சுவடிப்பதிப்புகளின் தேவை மிகுதியாக உணரப்பட்டுள்ளதன் காரணமாகச் சுவடியியல் பட்டய மாணாக்கரின் சுவடிப் பதிப்பேடுகளும் வெளிவந்துள்ளன.

6. சுவடியியல், மொழிபெயர்ப்பியல் பட்டய வகுப்புகளை நிறுவனம் தோற்றுவித்து நடத்திவருவதன் காரணமாக அவற்றிற்கான பாடநூல்களை வெளியிட்டுள்ளது. நிறுவனத் தில் தமிழ்ப் பயிலும் பிற நாட்டவர், பிற இந்திய மொழி யினருக்கான தமிழ்ப்பாட நூல்களும், அவற்றின் ஒலி நாடாக்களும் வெளியிடப்படுகின்றன. இவற்றால் நிறுவனத் திற்கு வந்து தமிழ் கற்க இயலாப் பிறரும் பயனடைகின்றனர். இன்று கணினி வழி கற்றுக் கொள்வதற்கு வாய்ப்பாகக் குறுவட்டுகளும் உருவாக்கப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

7. உலகத் தமிழ் மாநாடு, பாரதியார், பாரதிதாசன், அறிவியல் அறிஞர் பெ.நா. அப்புசுவாமி போன்ற தமிழ்ப் பெருமக்களின் நூற்றாண்டு விழா, நிறுவன வெள்ளிவிழா, பயிலரங்குகள் எனச் சிறப்பு நிலையிலும் பல நூல்கள் வெளிவருகின்றன.

8. தமிழாய்விற்கு இன்றியமையாத, பழம் பெருமை வாய்ந்த அரிய நூல்களும், மொழிபெயர்ப்புகளும் மீண்டும் நிறுவனப் பதிப்பாக வெளிவருகின்றன.

9. தமிழிலக்கியங்களை மொழிபெயர்த்து வழங்குவதிலும் முன்னிற்கிறது.

**ஆய்வு இயல்பு**

நிறுவனம் வெளியிட்டுள்ள நூல்களை அவற்றின் பொருண்மை, துறை, களம் குறித்த பொது இயல்பு நோக்கிப் பகுத்துரைப்பது அதன் பரந்துபட்ட தன்மையை, பயன்பாட்டைத் தெளிவாக்கும்.

1. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஆய்வுலகிற்கு வழிகாட்டும் நெறிப்படுத்தும் அடிப்படைப்பண்பில் ***ஆராய்ச்சி நெறிமுறைகள், தமிழ் ஆய்வுக் களங்கள், Dissertation on Tamilology*** முதலான நூல்களைத் தந்துள்ளது.

2. அடிப்படைத் தரவுகளை ஆய்வுலகிற்குத் தொகுத்துத் தரும் கருத்திலும் பல நூல்கள் வெளிவந்துள்ளன. உலகில் தமிழும் தமிழரும், தமிழ் நாவல்கள் அகரவரிசை, சுவடி விளக்க அட்டவணைகள், ***Bibliography on Translation*** என இப்பட்டியல் மிக நீண்டது.

3. இலக்கிய ஆய்வு நூல்கள் சங்ககாலம் முதல் தற்காலம் வரையிலுமாக அமைகின்றன. இவை முழுநிலையில் இலக்கியத் திறனாய்வு (***இளங்கோவின் இலக்கிய உத்திகள், நாமக்கல் கவிஞர் கவிதைகள்***) செய்வதாகவும் பிற துறை சார்புடனும் (***விடுதலைக்கு முன் தமிழ் நாவல்களில் பெண்கள், தமிழ் இலக்கியத்தில் ஊனமுற்றோர், இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள்***) காணப்படுகின்றன. ஒன்பது தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ள ***'தமிழ் இலக்கியக் கொள்கை'*** இதனுள் முதன்மை பெறுகிறது.

4. இலக்கணம் குறித்தும் பல நூல்கள் எழுந்துள்ளன. *'தொல்காப்பிய உரைவளம்'* 32 நூல்களுடன் நிறைவு பெற்றது குறிக்கத்தக்கது. *நன்னூல் உரைவளம்* 18 தொகுதிகள் வெளியிடப்பட்டதும் குறிப்பிடத்தக்கது. கிறித்துவ அறிஞர் களின் இலக்கணப் பணி, **A Grammar of Contemporary Literary Tamil** போல்வனவும் வெளிவந்துள்ளன.

5. *தமிழெழுத்தின் வரிவடிவம், உலக முதன்மொழி தமிழ், இயற்கை மொழியாய்வு - தமிழ்* என்பன போன்று மொழியியல் சார்ந்தனவும் மிகுதியாக உள.

6. தமிழர் பண்பாட்டைச் சிறப்பிக்கும் வகையில் *தமிழர் ஆடைகள், தமிழர் உணவு, தமிழர் திருமணம், தென் கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப்பண்பாடு* எனப் பலவாக எழுந்துள்ளன.

7. *இருபதின் கவிதைகளில் சமூகநீதிக் கோட்பாடு, தமிழர் சமூகவியல்* எனச் சமூகவியலும் நிறுவன நூல்களில் சிறப்பிடம் கொண்டுள்ளது.

8. தமிழரின் தாயகம், **Epigraphical evidences for Tamil studies,** *தமிழரின் காசு இயல்* எனத் தொல்லியலும் நிறுவன ஆய்வு களுக்குக் களனாகின்றது.

9. தமிழ்க் கலைகள் தொடர்பாகவும் பல அரிய நூல்கள் வெளிவந்துள்ளன. *தமிழர் இசை, தமிழர் தோற்கருவிகள், நாட்டிய நன்னூல், தமிழர் கூத்துகள், தமிழர் கலைச் செல்வங்கள்* முதலானவை இதில் அடங்கும்.

10. *சமயச் சொல்லகராதி, காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் கோயில், இசுலாம் வளர்த்த தமிழ், தமிழகத்தில் ஆசீவகர்கள்* எனச் சமயவியலும் இடம்பெற்றுள்ளது.

11. இன்று ஆய்வுலகின் கவனத்தைப் பெற்றுள்ள பெண்ணியம் குறித்தும், *பெண்ணியம், தமிழக மகளிர் தொடக்கக் காலம் முதல் ஆறாம் நூற்றாண்டு வரை, தமிழக மகளிரியல்* முதலான நூல்களால் தன் பங்களிப்பை உணர்த்தியுள்ளது.

12. மற்றொரு குறிப்பிடத்தக்க கூறாக ஒப்பியல் அமைகிறது. பல மொழிகளுடனான ஒப்பியல் *(திராவிட மொழி இலக்கியங்கள்)* பிறிதொரு மொழியுடனான ஒப்பியல்

*தமிழும் பிராகிருதமும்,* இரு நூல்களுக்கிடையே ஒப்பீடு (Tolkappiyam and Astadhyayi) இரு புலவரிடையேயான ஒப்புநோக்கு (கம்பன் எழுத்தச்சன் இராமாயணங்கள்) பிற அறிவுத்துறைகளுடனான ஒப்பியல் *(தமிழும் பிற துறைகளும்)* எனப் பலவாக இது வகைமை காட்டுவதும் கூறத்தக்கது.

13. அறிவியல் பார்வையிலும் பாராட்டத்தக்க வகையில் நூல்கள் எழுந்துள்ளதை, *அறிவியல் தமிழ் இன்றைய நிலை, தமிழும் விலங்கியலும்* போல்வன கொண்டறியலாம்.

14. தமிழ் நாட்டு வரலாற்றின் இலக்கிய ஆதாரங்கள் கி.மு.200-கி.பி. 1300, *காந்தீயப் பெருந்தலைவர் காமராசர், தமிழ் வள்ளல் பாண்டித்துரையார்* என வரலாற்றியலும் நிறுவன நூல் வெளியீட்டில் தடம் பதித்துள்ளது.

15. தமிழக வரலாற்றையும், பண்பாட்டையும், மொழி வளத்தையும் ஒருங்கே தரும் ஊர்ப்பெயராய்வும் சிறப்பிடம் பெறுகின்றது. *கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள், தமிழகம் இலங்கை ஊர்ப் பெயர்கள் - ஓர் ஒப்பாய்வு* என்பன சான்றுகள்.

16. சுவடிப் பதிப்பின் காரணமாக எண்ணற்ற சித்த மருத்துவ நூல்களும் வெளிவந்துள்ளன. *கண் மருத்துவம், சித்த மருத்துவ மணிகள், மருந்து செய்முறைகள்* எனப் பலவாக அவை அமைகின்றன.

17. பைந்தமிழ் வளர்த்த தமிழாளர் பலர் பற்றியும், அவரது படைப்புகள் பற்றியும் பல நூல்கள் தந்து நிறுவனம் அவர்களைப் பெருமை செய்துள்ளது. *தமிழ்த் தாத்தா உ.வே. சாமிநாதையர், கப்பலோட்டிய தமிழர் வ.உ.சிதம்பரனார், மூதறிஞர் ம.பொ.சி., மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர், தமிழ்த்தூதர் தனிநாயகம் அடிகளார்* என இவ்வரிசையும் பெரியதாகும்.

18. திறனாய்வுக் கோட்பாடுகள் அடிப்படையிலும் நூல்கள் உருவாவதை *அழகியல், தமிழும் குறியியலும்* முதலானவை காட்டுகின்றன.

19. *விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள், இதழாளர் ஆதித்தனார், இதழாளர் பெரியார், திராவிட இயக்க இதழ்கள், பொதுஉடைமை இயக்க இதழ்கள், மகளிர் இதழ்கள்* போன்றவற்றால் இதழியல் ஆய்வுகளும் இடம்பெற்றுள்ளன.

20. தமிழாய்வை வளப்படுத்திய நிலையிலும், நிறுவனத்திற்குப் பெருமை சேர்த்த வகையிலும் தொடர் ஆய்வுகள் சிறக்கின்றன. தமிழரின் மரபுச் செல்வத்தை வெளிப்படுத்தும் **Heritage of the Tamils** - வரிசை இதில் முன்னிற்கிறது. தமிழறிஞர் வரிசை நூல்களும் குறிப்பிடத்தக்கவையாகும்.

21. நிறுவன ஆய்வுப் பணிகளில் நாட்டுப்புறவியல் சார்ந்தனவும் மிகுதியாக உள. *தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வு, தமிழர் நாட்டு விளையாட்டுகள், தமிழக நாட்டுப்புறக் கலைகள், நெல்லை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், தமிழில் கதைப்பாடல், நாட்டுப்புறப் பாடல்களில் வரலாற்றுச் செய்திகள், நாட்டுப்புறப் பாடல்களில் உளவியல் பார்வை* என்பனவாக பரந்துபட்டமைகிறது.

22. சுவடிப்பதிப்புகளிலும் பலவகைமைகளைக் காண்கிறோம். *தோட்டுக்காரி கதை, குசலவர் சுவாமி கதை* என நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் மிகுதியாக உள. சிவகிரி குமரசதகம், கருணையம்மன் அந்தாதி, திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத்தமிழ், திருமயிலைஉலா, பணவிடுதூது, தந்திவனப் புராணம், சித்திரக் கவிகள் எனச் செம்மையிலக்கிய பதிப்புகளும் பெருகியுள. *கூவநூல், மனைநூல்* எனத் தமிழரின் பழம் பெருமைகளை உணர்த்தும் சுவடிப் பதிப்புகளும் உண்டு. *பிரபந்தத் திரட்டு, பிரபந்த தீபிகை* என இலக்கண ஆய்வுப் பதிப்புகளும் உள்ளன.

23. நிறுவனத் தமிழ்ப்பணியில் பெருமைக்குரிய பிறிதொரு மைல்கல் மொழிபெயர்ப்புகளாகும். *தொல்காப்பியம்* (ஆங்கிலம்) *பாரதிதாசனின் தேர்ந்த நூறு பாடல்கள்* (ஆங்கிலம், கன்னடம், மலையாளம், தெலுங்கு) *நற்றிணை நானூறு* (ஆங்கிலம்) *சங்கத் தமிழ்ப் பாடல்கள்* (ஆங்கிலம்) *ஜப்பானியக் காதல் பாடல்கள், திருவாசகம்* (ஆங்கிலம்) என அவையும் பலதிறப்பட்டன.

24. பாடநூல்களாக, சுவடியியல் பயிற்சிக்கையேடு, சுவடியியல், மொழிபெயர்ப்பியல், **A course in Modern Standard Tamil, Tamil An- Auto Instructional Course Text :Book Hand Book Work Book**, கணினி குறுவட்டு 'தமிழ் உலகம்' தமிழ் மொழி கற்பித்தல் போல்வன இடம்பெறுகின்றன.

**நிறுவன நூல்களின் தனிப்பெருமைகள்**

1. உயராய்விற்குத் தேவையான அடங்கல்களையும் உசாத்துணை நூல்களையும் நல்குவதில் இன்று அனைத்துத் தமிழாய்வு நிறுவனங்களிலும் முன்னிற்பது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் என்பது அனைவரும் அறிந்த உண்மை.

2. இன்று பின்தங்கியுள்ள பழந்தமிழ் ஆய்வுகளுக்குக் கருத்தரங்குகள் வழி சிறப்பளித்து அவற்றின் கட்டுரைத் தொகுப்பையும் வெளியிட்டு நிறுவனம் பெருமை அடைகின்றது. தொல்காப்பிய இலக்கியக்கோட்பாடுகள், சங்க இலக்கியம், கவிதையியல் நோக்கு, சிந்தனைப்பின்புல மதிப்பீடு போல்வன எடுத்துக் காட்டுகளாகும்.

3. நிறுவன வெளியீடுகளில் 15 நூல்கள் தமிழக அரசு மற்றும் பிற பரிசுகளைப் பெற்றுள்ளதும் சுட்டத்தக்கது.

4. நூல்களின் இடையே அமையும் அட்டவணைகளும் நூல் தொடர்பான பின்னிணைப்புகளும் பெரும்பான்மையான நூல்களிலமைந்து மேலாய்விற்குத் துணை செய்கின்றன. சான்றுகளாகத் *தமிழர் தோற்கருவிகள், சித்திரக் கவிகள், ஊஞ்சல் இலக்கியம், தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள், தமிழர் திருமணம், டாக்டர் உ.வே.சா. இலக்கணப் பதிப்புகள்* ஆகியவற்றைக் கருதலாம்.

5. கிடைத்தற்கரிய பழம்பெருமை வாய்ந்த, இன்றைய ஆய்விற்கு இன்றியமையாத *பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள், தி. சதாசிவ ஐயர் பதிப்பித்த ஐங்குறுநூறு மூலமும் உரையும், நாடகமேடை நினைவுகள், ராட்லரின் தமிழ் - ஆங்கில அகராதி, தமிழ் மொழி வரலாறு* போன்ற மறுபதிப்புகளும் இவண் எண்ணத்தக்கன. ஆய்வுக் காப்பகமாகவும் நிறுவனம் திகழ்வதை இவ்வாய்வு நூல்கள் எடுத்துக்காட்டுகின்றன.

6. நிறுவனத்திற்குப் புறத்தே நடைபெற்று, அச்சில் வாராது முடங்கிக் கிடந்த தமிழாய்வுகளுக்கு உயிரூட்டிய தன்மையும் கருதத்தக்கது. இவ்வகையில் இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் முதலிரு கருத்தரங்கக் கட்டுரைத் தொகுப்புகள் குறிப்பிடத் தக்கன.

7. தமிழிலக்கியப் படைப்பாளர் தம் படைப்புகள் பற்றிய அறிமுகச் செய்திகளையளிக்க அவற்றை முதன்மை ஆவணமாக ***(நானும் என் எழுத்தும்)*** நூலாகத் தந்துள்ளதும் கூறத்தக்கது.

8. தமிழகத் தமிழறிஞர் மட்டுமன்றி அயலகத் தமிழறிஞர் பலரையும் வரவழைத்துக் கருத்தரங்குகள் நடத்தி அவற்றை நூலாக்கியுள்ளமையும் நிறுவனத்தின் தனிச்சிறப்பாகும். ***அயலகத் தமிழ்க்கலை, இலக்கியம் - சமகாலச் செல் நெறிகள்*** சான்றாகும்.

9. நூல் வெளியீட்டில் நிறுவன முழுநேர, பகுதிநேர ஆய்வாளரும் குறிப்பிடத்தக்க பங்கேற்றுள்ளமையும் நவிலத்தக்கதாகும்.

10. நிறுவன நூல்கள் தமிழகத்திற்கு வெளியேயும் உலகளாவிய தமிழறிஞரை ஆர்வலரைக் கருத்தில் கொண்டுள்ளதால், **Papers on Tamil Studies, Indian Epistemology, Studies in Tamil Prosody and Poetics** என்பன போன்று ஆங்கிலத்திலும் அதிக அளவில் வெளியாவதும் கூறப்பட வேண்டியதாகும்.

11. தமிழக அரசு, மைய அரசு இவற்றுடன், இவை சார்ந்த நிறுவனங்களும் குறிப்பாகத் தமிழ்வளர்ச்சி இயக்ககம், இந்து சமய அறநிலையத்துறை, தில்லி தேசிய ஆவணக் காப்பகம், பல்கலைக்கழக நிதிநல்கைக் குழு, இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம் மற்றும் தனியார் வழங்கிய நிதி நல்கைகள் நிறுவன நூல் வெளியீட்டைப் பெரிதும் ஊக்கப் படுத்தியுள்ளன.

12. வணிக நோக்கின்றி, ஆய்வுத் துணையாதல் மற்றும் தமிழ் வளர்ச்சி இவற்றையே முதன்மை இலக்காகக் கொண்டுள்ளமையால் நூல்களின் விலை குறைவாக அமைந்து பலரும் எளிதில் வாங்கக் கூடியதாகிறது.

நிறைவாகக் கூறுமிடத்து, தமிழின் அனைத்துத் துறைகளையும் உட்கொண்டதாக நிறுவன நூல்கள் அமைகின்றன; எவ்வகை ஆய்விற்கும் அவை துணையாகின்றன; வழிகாட்டுகின்றன. உலகத் தமிழ் இலக்கிய வரலாறு - 6 தொகுதிகள். வெள்ளிவிழாக் கருத்தரங்கக் கட்டுரைகள் என பல புதிய ஆய்வு நூல்களும் இதற்குச் சான்றுகளாகும். தமிழாய்வு வரலாற்றில் நிறுவனத்திற்கெனத் தனி இடமும் முத்திரையும் உண்டு என்பது உள்ளங்கை நெல்லிக்கனி.

# நிறுவன வெளியீடுகள்

முனைவர் ச. சிவகாமி
பேராசிரியர்
தமிழ் இலக்கியம் (ம) சுவடியியல் புலம்

முனைவர் மு. வளர்மதி
இணைப் பேராசிரியர்
அயல்நாட்டுத் தமிழர் புலம்

## 1975

1. **தமிழில் விடுகதைகள், ச.வே. சுப்பிரமணியன், பக். 412, ரூ. 12**

   *தமிழ் மொழியிலுள்ள 2504 விடுகதைகள் தொகுக்கப்பட்டு விடைகளுடன் தரப்பட்டுள்ளன. விடுகதைகள் பற்றிய விரிவான ஆய்வுரை, இந்திய, உலக மொழிகளுடனான ஒப்பியல் பார்வையுடன் முன்பகுதியில் அமைந்துள்ளது.*

2. **ஆராய்ச்சி நெறிமுறைகள், ச.வே. சுப்பிரமணியன் (பதி), பக். 172, ரூ. 5**

   *மருத்துவம், பொறியியல், வேதியியல், இயற்பியல், உளவியல், தமிழ் எனப் பல்துறை சார்ந்த 9 அறிஞர்கள், ஆய்வு நெறிக்கு வழிகாட்டும் கட்டுரைகளின் தொகுப்பு.*

3. **A Course in Modern Standard Tamil, P.Kothandaraman, P. 210, Rs.7.50**

   This Manual offers a planned course to learn Tamil through English

4. **Tamil Research Through Journals, A.A.Manavalan, P. 210, Rs. 7.50.**

   Only those that directly deals with the Tamil works literary and religions have been selected for inclusion in this Volume with annotations.

5. **Dr.Mu.Va., S.V.Subramanian, A.A.Manavalan - (eds) P. 302, Rs.20**

This Volume contains 21 research papers on his works and personality which the last is an annotated bibliography of Mu.Va's works that has 83 entries.

6. **தமிழ் இலக்கியக் கொள்கை, தொகுதி – 1, ச.வே. சுப்பிரமணியன், தா.வே. வீராசாமி (பதி) பக். 476, ரூ. 10**

தமிழ் இலக்கியத்திற்கென்று தனிக் கொள்கைகள் உண்டு என்பதனை நிறுவுதற் பொருட்டு நிகழ்ந்த கருத்தரங்கக் கட்டுரைகளின் தொகுப்பு. தொல்காப்பியம் முதலாக வைணவ உரையாசிரியர்கள் ஈறாகப் பதின்மூன்று கட்டுரைகள் கொண்டது.

## 1976

7. **உலகில் தமிழும் தமிழரும், பொன். கோதண்டராமன், பக். 92, ரூ. 4**

ஆஸ்டிரியா முதல் வெனிசுலா வரை உலகின் 56 நாடுகளில் வாழ்கின்ற தமிழர்கள், அவர்களின் நிலை, தமிழ் கற்க இருக்கும் வாய்ப்புகள் முதலானவற்றைப் பேசுகிறது. உலக நாடுகளில் தமிழ் வளம்பெறச் செய்யவேண்டிய பணிகள் பற்றிய குறிப்பும் உண்டு.

8. **அடியார்க்கு நல்லார் உரைத்திறன், ச.வே. சுப்பிரமணியன், பக். 526, ரூ. 12**

சிலப்பதிகார உரையாசிரியர் அடியார்க்கு நல்லாரின் உரையை வகை, தொகை செய்தளிக்கும் களஞ்சியமாக உள்ளது.

## 1977

9. **தமிழ் இலக்கியக்கொள்கை, தொகுதி –2, ச.வே. சுப்பிரமணியன், க.த. திருநாவுக்கரசு (பதி), பக். 520, ரூ. 10**

சிந்தாமணி முதலாக இராமலிங்கர் வரையிலாகப் பன்னிரு கட்டுரைகள் அடங்கியது.

10. **Dissertation on Tamilogy, Annie Thomas, P. 300, Rs.10**

This work is a compilation, based on the treatises on Tamilology submitted to varous Indian and foreign universities for Post-graduate and Research Degrees and provides abstracts of may dissertations(Total 1238 titles)

## 1978

11. **தமிழ் இலக்கியக் கொள்கை, தொகுதி – 3, ச.வே. சுப்பிர மணியன், அ. அ. மணவாளன் (பதி), பக். 408, ரூ. 8**

*பொருளிலக்கணம் முதல் புதுக்கவிதைகள் வரை பத்துக் கட்டுரைகள் அடங்கியது.*

## 1979

12. **தமிழ் இலக்கியக் கொள்கை, தொகுதி – 4, ச.வே. சுப்பிர மணியன், ஏ.என்.பெருமாள் (பதி), பக். 432, ரூ. 10**

*சூளாமணி முதலாக பாரதியார் கவிதைகள் நிறைவாக பன்னிரு கட்டுரைகளின் தொகுப்பு.*

13. **தமிழ் நாட்டுப்புற இயல் ஆய்வு, ச.வே. சுப்பிரமணியன் (பதி), பக். 528, ரூ. 15**

*தமிழ் நாட்டுப்புறவியல் தோற்றம், வரலாறு, அதன் பொதுத் தன்மைகள் பற்றியும் நாட்டுப்புறக் கலை, கதைப்பாடல் முதலானவற்றை மாவட்ட வாரியாக ஆராய்ந்து உரைக்கும் 26 கட்டுரைகளின் தொகுப்பு.*

## 1980

14. **சின்ன மகிபன் குளுவ நாடகம், ஏ.என். பெருமாள், பக். 156, ரூ. 5**

*குறிப்புரையுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளது. இச்சுவடிப் பதிப்பில் குளுவ நாடகம் பற்றிய ஆய்வுரை தமிழிலும், நூலறிமுகம் ஆங்கிலத்திலுமாக அமைந்துள்ளது.*

**15. உலகத் தமிழ் எழுத்தாளர் யார்? எவர்?, (பதி) ச.வே. சுப்பிர மணியன், ந. கடிகாசலம், பக். 264, ரூ. 6**

*இலங்கை, பர்மா, ஆஸ்திரேலியா, இந்தோனேசியா, ஜப்பான், பிரான்சு, தென் ஆப்பிரிக்கா, இங்கிலாந்து, சிங்கப்பூர், மலேசியா, அந்தமான் உள்ளிட்ட 1443 தமிழ் எழுத்தாளர்கள் பற்றிய விவரங்கள் அடங்கியுள்ளது.*

**16. தமிழ் இலக்கியக் கொள்கை தொகுதி – 5, ச.வே. சுப்பிர மணியன், அன்னிதாமசு (பதி), பக். 454, ரூ. 12**

*அணி இலக்கணம் தொடங்கி, பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரம் வரையிலாக பதின்மூன்று கட்டுரைகள் கொண்டது.*

**17. Heritage of the Tamils - Language & Grammar, S.V. Subramanian, K.M. Irulappan (eds), P. 676, Rs.12.**

This Volume contains 44 articles is an attempt to study the language and grammatical heritage of the Tamils.

**18. தொல்காப்பியம் சிறப்புப் பாயிரம் (உரைவளம்), ஆ. சிவலிங்கனார் (பதி), பக். 272, ரூ. 10.**

*தொல்காப்பியச் சிறப்புப் பாயிர உரையாசிரியர் உரைகள், அறிஞர்களின் ஆய்வுரைகள், பனம்பாரனார் வரலாறு, தொல்காப்பியம், காப்பியப் பெயர்க்காரணங்கள் மற்றும் பல்வேறு கருத்துரைகள் இணைந்துள்ளன.*

**19. திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத் தமிழ், ச.சிவகாமி (பதி+உரை), பக். 162, ரூ. 7.50**

*சுவடிப்பதிப்பான இந்நூல் பிள்ளைத்தமிழ் பற்றிய ஆய்வு முன்னுரையுடன் பொழிப்புரையும் குறிப்புரையும் கொண்டது.*

**20. பணவிடுதூது, இரா. நிர்மலாதேவி (பதி), பக். 128, ரூ. 6**

*தூது இலக்கிய ஆய்வு, நூலாராய்ச்சி, குறிப்புரையுடன் கூடிய சுவடிப்பதிப்பு - தூது நூற் தொகுப்பும் இணைந்துள்ளது.*

21. **தமிழர் நாட்டு விளையாட்டுகள், இரா. பால சுப்பிரமணியம், பக். 328, ரூ. 14**

நாட்டுப்புறச் சமுதாயப் பண்பாட்டினைச் சிறப்பிக்கும் நாட்டுப்புற விளையாட்டுகளை மதுரை மாவட்டத்தின் கள ஆய்வாகக் கொண்டு விளக்கும் நூல். விளையாட்டை விளக்கும் வரைபடங்களுடன் கலைச்சொற்களின் பட்டியலும் இந்நூலில் உள்ளது.

22. **தமிழர் ஆடைகள், கே. பகவதி, பக். 432, ரூ. 16.**

தொல்காப்பியம் முதல் கி.பி. 12 ஆம் நூற்றாண்டு வரையிலான இலக்கியங்கள் உணர்த்தும் ஆடைகள் பற்றிய முனைவர் பட்ட ஆய்வு நூல். ஆடை பற்றிய கலைச் சொற்கள், பழமொழிகள், நம்பிக்கைகள் ஆகியனவும் இறுதியில் தொகுக்கப் பட்டுள்ளன. **தமிழக அரசின் பரிசு பெற்ற நூல்.**

23. **தொல்காப்பியம் எழுத்ததிகாரம் – நூன் மரபு, ஆ. சிவலிங்கனார் (பதி), பக். 218, ரூ. 9**

தொல்காப்பிய உரையாசிரியர்கள், தற்கால இலக்கணச் சிந்தனையாளர்கள், மொழியியலாளர்களின் கருத்துகள், மொழிபெயர்ப்புகள், பிற்கால இலக்கண நூல்களின் ஒப்புமை கூறுகளுடன் தொல்காப்பியம் நூன்மரபு இயலுக்கான உரைவளத்தை ஆய்ந்து கூறும் நூலாகும்.

24. **தமிழர் கண்ட மனம், கரு. நாகராசன், பக். 214, ரூ. 9**

சங்க இலக்கியம் முதல் பாரதியார் வரை, மனம் பற்றிய தமிழர் எண்ணங்கள் ஆராயப்பட்டுள்ளன. மனம், நெஞ்சம், உள்ளம், சிந்தை, சித்தம், அகம், இதயம் என்பனவற்றின் அடிப்படையில் நூலமைந்துள்ளது.

25. **தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், க. காந்தி, பக். 418, ரூ. 16**

சங்க இலக்கியங்கள் வழி பண்டைத் தமிழரின் பழக்க வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் விரிவாக விளக்கும் முனைவர் பட்ட ஆய்வேட்டின் நூலாக்கம். **தமிழக அரசின் பரிசு பெற்றது.**

26. கூவ நூல், (பதி) ச.வே. சுப்பிரமணியன், பக். 160, ரூ. 7

தமிழரின் கிணறு தோண்டும் கலையினை விளக்கும் ஐந்து சுவடிகளின் பதிப்பு. ஆய்வு முன்னுரையுடன் செய்திகளைத் தெளிவுபடுத்தும் பல அட்டவணைகளும் உண்டு.

27. தமிழக நாட்டுப்புறக் கலைகள், ஏ.என். பெருமாள், பக். 224, ரூ. 10

தமிழகத்தின் பல்வேறு நாட்டுப்புறக் கலைகளை விரிவாக விளக்கிச் செல்வது.

28. Papers on Tamil Studies, S.V. Subramanian & V. Murugan (eds), P. 325, Rs.15

This book attempts at studying some of the features of Tamil language and culture as revealed in its literature.

29. பிரபந்தத் திரட்டு, (பதி) அன்னிதாமசு, பக். 414, ரூ. 16

பாட்டியல் இலக்கணம், பிரபந்தங்களின் இலக்கணம், உவமை, இறைவர், சாதி, இனம் எனப் பலவற்றின் தொகுப்பாக அமையும் இச்சுவடிப்பதிப்பு உரையுடன் கூடியது.

30. Epigraphical Evidences for Tamil Studies, A. Velu Pillai, P. 196, Rs.10

It deals with the origin and development of Tamil Palaeography, the influence of Tamil script in South East Asia, the Common features of Tamil Nadu and SriLanka etc in a detailed and critical manner based on epigraphical sources.

## 1981

31. Tiru Murugan, Kamil V. Zvelebil, P. 100, Rs.5

It examines the various aspects of the worship of Tirumurugan in historical and sociological persepectives bringing valuable evidences from different sources. It tracing the impact of Tamil tradition on the worship of Tirumurugan and his fellow deities.1981

32. **மனை நூல், பூ. சுப்பிரமணியம் (பதி), பக். 354, ரூ. 15**

*வீடுகட்டுவதற்கான விதிமுறைகளும், விளக்கங்களும் அதற்குரிய நில அமைப்பு முதல் வழங்கும் சுவடிகளின் பதிப்பு.*

33. **தமிழர் உணவு, சே. நமச்சிவாயம், பக். 354, ரூ. 12**

*சங்க நூல்களை அடிப்படையாகவும் கல்வெட்டு, நிகண்டு முதலானவற்றைத் துணையாகவும் கொண்டு தமிழரின் உணவுப் பொருட்கள் உணவுமுறை அவற்றின் வழி வெளிப்படும் பண்பாடு போன்றனவற்றை ஆராயும் நூல். கலைச்சொற்களின் பின்னிணைப்பும் உண்டு.*

34. **A study of the Perunkathai, R. Vijayalakshmi, P. 236, Rs.12**

The author has attempted to trace out the story of Udayana in an authentic way from Perunkathai. The story aspect is compared with the various versions in different Indian languages like Paisaci, Sanskrit and Prakrit. **தமிழக அரசின் பரிசு பெற்றது.**

35. **தமிழ் இலக்கியக் கொள்கை தொகுதி – 6, ச.வே.சுப்பிரமணியன், ந. கடிகாசலம் (பதி), பக். 457, ரூ. 16**

*அடியார்க்கு நல்லார், பள்ளு, குறவஞ்சி, சிந்து, பட்டினத்தார், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள், அண்ணாமலை ரெட்டியார், திரு.வி.க., சுத்தானந்த பாரதியார் ஆகியவர்களின் கட்டுரைகள் கொண்டது.*

36. **தொல்காப்பியம் எழுத்ததிகாரம் – மொழிமரபு, ஆ. சிவலிங் கனார் (பதி), பக். 224, ரூ. 9**

*தொல்காப்பிய எழுத்ததிகாரம் 'மொழி மரபு' எனும் இயலுக்கு தொல். உரையாசிரியர்கள் தொடங்கி தற்கால ஆய்வறிஞர்கள் வரையிலான உரை விளக்க ஆய்வு நூலாகும்.*

37. **தந்திவனப் புராணம், தா.வே. வீராசாமி (பதி), பக். 354, ரூ. 15**

*திருவானைக்கா பற்றிய கமலை ஞானப்பிரகாசரின் இத்தலபுராணம் விரிவான ஆய்வுரையுடன் அமைந்த சுவடிப் பதிப்பாகும்.*

**38. தொல்காப்பியம் பொருளதிகாரம் – மரபியல், கே. பகவதி (பதி), பக். 256, ரூ. 10**

தொல்காப்பிய உரையாசிரியர்கள் 'மரபியல்' இயலுக்கான உரையுடன், தற்கால ஆய்வறிஞர்களின் ஆய்வுரையுடன் கூடிய நூலாகும்.

**39. Tamil Writers Directory, S.V. Subramanian, N. Ghadigachalam (eds), P. 264, Rs.10**

This Directory list out 1417 writers and more than 3000 titles in Tamil which will be of immense use in writing the development of Tamil literature in the 20th century.

**40. Tamil Drama (Origin and development), A.N. Perumal, P. 413, Rs.20**

The history of the Tamil Drama during the 20th century has been traced. List of Musical Plays and Modern Tamil plays are in Appendix I & II

**41. தொல்காப்பியம் எழுத்ததிகாரம் – பிறப்பியல், ஆ. சிவலிங்கனார், (பதி), பக். 180, ரூ. 8**

உரைவளத்துடன் அரசஞ் சண்முகனாரின் மொழிமரபு ஆராய்ச்சி கட்டுரையும், கே. முருகையனின் 'Tolkappiyar's Concept of Phonetics Articulation as described by Tamil grammarians' என்னும் கட்டுரைகளும் இணைந்தது.

**42. Cultural Heritage of the Tamils, S.V. Subramanian, T.V. Veerasami, P. 450, Rs.20**

21 scholars of various faculties in Tamilnadu contributed learned articles to throw light upon the cultural Heritage of the Tamils.

**43. தமிழர் தோற்கருவிகள், ஆர். ஆளவந்தார், பக். 276, ரூ. 10**

பண்டைக்காலம் முதல் தமிழர் பயன்படுத்திவந்த 86 தோற்கருவிகள் பற்றிய அனைத்துக் கூறுகளும் (அமைப்பு, பயன்பாடு, செய்முறை போல்வன) இடம்பெற்றுள்ளன. இவை தொடர்பான கலைச்சொற்களும், தமிழிலக்கியச் சான்றுகளும் பின்னிணைப்பாக உள்ளன.

44. **Literary Heritage of the Tamils, S.V. Subramanian, N. Ghadigachalam, P. 905, Rs.50**

This Volume contains 46 articles is an attempt to study the literary heritage of the Tamils. The articles are surveying, probing, explicating, Categorising the unique and manifold literary heritage of the Tamils and on the measure of their distinctive contribution to the culture of India and the world.

## 1982

45. **தொல்காப்பியம் எழுத்ததிகாரம் – புணரியல், ஆ. சிவலிங்கனார், பக். 207, ரூ. 10**

தொல்காப்பிய உரையாசிரியர்கள் 'புணரியல்' இயலுக்கான உரையுடன், தற்கால ஆய்வறிஞர்களின் ஆய்வுரையுடன் கூடிய நூலாகும்.

46. **1980இல் தமிழ், ச.வே. சுப்பிரமணியன், ர. விஜயலட்சுமி (பதி), பக். 928, ரூ45**

உலகநிலையில் தமிழின் வளர்ச்சியையும் மாற்றத்தையும் ஆண்டுதோறும் அனைத்துத் துறைகளிலும் கணக்கிட வேண்டும் என்ற முயற்சியின் முதல் நூல். இந்தியா மட்டு மின்றித் தமிழர் வாழும் பிற நாடுகளிலும் தமிழின் வளர்ச்சி யைக் காட்டும் நூலாகும்.

47. **கருவூரார் பலதிரட்டு, இரா. நிர்மலாதேவி, பக். 108, ரூ. 6**

சுவடியிலிருந்து பதிப்பிக்கப்பட்டுள்ள உரையுடன் கூடிய மருத்துவ நூல் பிராணாயாமம், யோகம் போன்றவற்றின் தகவல்களைத் தரும் இந்நூலுக்குச் சிறந்த ஆய்வு முன்னுரை யும் உண்டு. தமிழக அரசின் பரிசு பெற்றது.

48. **சுவடியியல் பயிற்சிக் கையேடு, மு.கோ. இராமன், பக். 108, ரூ. 6**

சுவடிகளிலிருந்து நேரடியாக நூல்களைப் படியெடுத்துப் பதிப்பிக்க விரும்புவோர்க்கு அதற்கான வழிமுறைகளும், விளக்கங்களும் தரும் சுவடிக் கல்வி நூல்.

**49. தொல்காப்பிய, எழுத்ததிகாரம் – தொகைமரபு, ஆ. சிவலிங்கனார், (பதி), பக். 184, ரூ. 8**

*உரைவளத் தொகுப்புடன் வை. இரத்தினசபாபதியின் ஆங்கில முன்னுரை, உரைத்தொடர் விளக்கம், உதாரணப் பொருள் விளக்கம், கருவியும் செய்கையும், கட்டுரை என்பனவும் உள.*

**50. தமிழ் இலக்கியக் கொள்கை, தொகுதி – 7, ச.வே. சுப்பிரமணியன், ர. விஜயலட்சுமி (பதி), பக். 375, ரூ. 15**

*அந்தாதி, ஊசல், சிலேடை, மடல், விலாசம், மெய்க்கீர்த்தி, தூது, கும்மி, நிகண்டுகள், யசோதரகாவியம் ஆகியவற்றின் இலக்கியக் கொள்கைகள் அறியப்பட்டுள்ளன.*

**51. தொல்காப்பியம் சொல்லதிகாரம் – கிளவியாக்கம், ஆ. சிவலிங்கனார், (பதி), பக். 509, ரூ. 20**

*எழுத்ததிகார உரைவளம் போன்று பழைய, புதிய உரைகள், தொடர்புடைய பிற இலக்கண நூற்பாக்கள், ஆங்கில மொழிபெயர்ப்பு, பதிப்பாசிரியர் விளக்கம், மொழியியலார் எண்ணம், ஆய்வாளர் கருத்துகள் ஆகியன இணைந்தது.*

**52. கும்மிப்பாடல்கள், ஏ.என். பெருமாள் (பதி), பக். 400, ரூ. 16**

*தமிழில் கும்மிப்பாடல்கள் பற்றிய அறிமுகத்துடன், அச்சில் வராத 9 கும்மிப் பாடல்களின் குறிப்புரையுடன் கூடிய பதிப்பு. ஒவ்வொன்றின் அறிமுகத்துடன் இறுதியில் தேவையானவற்றிற்கு விரிந்த விளக்கம், அச்சான கும்மிகள், சுவடிக் கும்மிகள் ஆகியவற்றின் அட்டவணையும் உண்டு.*

**53. பாரதியார் வாழ்க்கைக் கொள்கைகள், ச.வே. சுப்பிரமணியன், பக். 170, ரூ. 8**

*மனித வாழ்வியம், அடிப்படை வாழ்வு, குழந்தை, இளைஞர், முதியோர், பெண், சமுதாயவியம், உலகியம், உடல் - உள்ளம் - உயிர் முதலானவற்றின் வழி பாரதியார் தரும் வாழ்க்கைக் கொள்கைகள் விளக்கம் பெற்றுள்ளன.*

**54. தமிழும் தமிழரும், ந. கடிகாசலம், பக். 120, ரூ. 5**

*உலகில் தமிழர் வாழுமிடங்கள், அங்கு வழங்கப்படும் தமிழ்க்கல்வி, தமிழ் தொடர்பான ஆய்வுகள், உலகில் தமிழ் வளரச் செய்ய வேண்டிய பணிகள் என்பன கொண்டது.*

55. **பிரபந்த தீபிகை, ச.வே. சுப்பிரமணியன், அன்னிதாமசு, (பதி), பக். 241, ரூ 12**

*வேம்பத்தூர் முத்துவேங்கட சுப்பையா நாவலரின், பிரபந்தங்கள் பற்றிய விளக்கமான இந்நூல் சுவடிப் பதிப்பாகும். இசை, சமயம், சிற்பம், உடற்கூறு, சமுதாயம், அரசு முதலான பிற செய்திகளும் இணைத்துள்ளன.*

56. **கண் மருத்துவம், வே.இரா. மாதவன் (பதி), பக். 996, ரூ50**

*கண் மருத்துவம் பற்றிய 14 சுவடிகளும், பிற சுமார் 300 மருத்துவச் சுவடிகளில் உள்ள கண் மருத்துவக் குறிப்புகளும் நோய், மருந்து என மிக விரிவாகத் தொகுத்துப் பதிப்பிக்கப் பட்டுள்ளது. கண் தொடர்பான இலக்கிய, சமுதாய, வழக்குச் செய்திகளும் உள.* **தமிழக அரசின் பரிசு பெற்றது.**

57. **தொல்காப்பியம் எழுத்ததிகாரம் – உருபியல், ஆ. சிவலிங்கனார் (பதி), பக். 128, ரூ 8**

*உரைவளத்துடன், அரசஞ்சண்முகனாரின் 'நுண்பொருட் கோவை' கட்டுரையும் இணைந்தது.*

58. **திவ்வியப்பிரபந்தத்தில் மனம், கரு. நாகராசன், பக். 260, ரூ. 12**

*மனம் பற்றிய சிந்தனை வைணவ சமயத்தில் எவ்வாறு உள்ளது என்பதை அளவிடும் நோக்கில் எழுந்துள்ளது. மனம், நெஞ்சம், உள்ளம், சித்தம், அகம், இதயம் முதலான கூறுகளில் ஆய்வு செய்யப்பட்டுள்ளது. இவை திவ்வியப் பிரபந்தத்தில் இடம் பெற்றுள்ள இடங்கள் பின்னிணைப்பாகத் தொகுக்கப்பட்டுள்ளன.*

59. **தொல்காப்பியம் எழுத்ததிகாரம் – உயிர்மயங்கியல், ஆ. சிவலிங்கனார் (பதி), பக். 248, ரூ 12**

*உரைவள நூலான இதில் பொருட் சுருக்கமும் இணைந்துள்ளது.*

## 1983

60. **திருமயிலை உலா, மு.கோ. இராமன் (பதி), பக். 120, ரூ 7**

*605 கண்ணிகளைக்கொண்ட இச்சுவடி குறிப்புரையுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளது. மயிலை உலா பற்றிய ஆய்வு முன்னுரையும் உண்டு.*

61. ஊஞ்சல் இலக்கியம், த. அழகப்பராசு (பதி), பக். 220, ரூ 10

*வெளிவராத 10 ஊஞ்சல் இலக்கியங்களின் பதிப்பு விரிவான ஆய்வு முன்னுரையுடன் கிடைக்கும் அறிய வருகின்ற சுவடியில் உள்ள ஊஞ்சல்கள் வரிசை தனித்தனியே பின்னிணைப்பாக உள்ளன.*

62. மீனாட்சியம்மன் திருப்புகழ், வே.இரா. மாதவன், பக். 230, ரூ 10

*104 திருப்புகழ்ப் பாடல்கள் சந்தக் குறிப்புகளுடன் சுவடியிலிருந்து பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஆய்வு முன்னுரை, குறிப்புரையுடன் அமைந்துள்ளது.*

63. தமிழர் எண்ணங்கள், க. காந்தி, (தொகு), பக். 360, ரூ 16

*சங்க இலக்கியம், பதினெண்கீழ்க்கணக்கு நூல்களிலிருந்து திரட்டப்பட்ட தமிழரின் உயர்ந்த கருத்துகள் ஆய்வு முன்னுரையுடன் பகுத்துரைக்கப்பட்டுள்ளன.*

64. **Art & Architecture (Heritage of the Tamils), S.V. Subramanian, A.N. Perumal (eds), P. 510, Rs.25**

A collection of 35 essays on Music, dance, drama, folk arts sculpture, iconography, architecture and painting which revealed the Tamils heritage on art and architecture.

65. **Philosophical Heritage of the Tamils, S.V. Subramnaian + R. Vijayalakshmi, (eds), P. 424, Rs.22**

Eleven out of twenty five articles deal with the philosophical tenets of saiva Siddhanta while the remaining articles deal with the other systems such as Visistadvaita, Jaina, Sankya etc.

66. **Folk Arts of Tamils, A.N. Perumal, 172, Rs.10**

The English translation of the Tamil work Nattuppurak-kalaikal by the same author surveys the folk arts in Tamil Nadu.

67. தமிழர் அளவைகள், கே. பகவதி, பக். 152, ரூ8

*தமிழர் அளவைகள் குறித்த நூலாகும். இவ்வளவையால் பெறப்படும் அரசியல், சமுதாயம், பண்பாடு ஆகியனவும் தெளிவாக்கப்பட்டுள்ளன. அளவைத் தொடர்பானத் தமிழர் எண்ணங்களும், கலைச்சொற்களும் பின்னிணைப்பாக உள்ளன.*

68. **தொல்காப்பியம் எழுத்ததிகாரம் – புள்ளி மயங்கியல், ஆ. சிவலிங்கனார் (பதி), பக். 283, ரூ 15**

*தொல்காப்பிய உரையாசிரியர்கள் 'புள்ளி மயங்கியல்' இயலுக்கான உரைவளத்துடன், பிற்கால ஆய்வறிஞர்களின் ஆய்வுரையுடன் கூடிய நூலாகும்.*

69. **கல்வெட்டில் ஊர்ப்பெயர்கள், ஆர். ஆளவந்தார், பக். 220, ரூ. 12**

*தமிழகக் கல்வெட்டில் காணப்படும் ஊர்ப் பெயர்களின் அமைப்பு முறை, பெயர் பெற்ற முறைகள், காலப்போக்கில் பெயர் பெற்ற மாற்றம், அறியவரும் பிற செய்திகள் என்பன உள. தேவையான பின்னிணைப்புகளும் உண்டு.*

70. **எண்பத்தொன்றில் தமிழ், ச.வே. சுப்பிரமணியன், ந. கடிகாசலம் (பதி), பக். 1244, ரூ. 65**

*1981 இல் உலகில் தமிழின் நிலை குறித்து அதன் அனைத்துத் துறைகளிலுமாக 47 கட்டுரைகள் உள.*

71. **இலக்கியத்தில் நிறம், ச.வே. சுப்பிரமணியன், ந. கடிகாசலம் (பதி), பக். 487, ரூ23**

*சங்கம் தொட்டுப் பாரதிதாசன் வரை பல்வேறு நிறங்களும் இலக்கியத்தில் பயன்பட்டுள்ள முறையை ஆராயும் 32 கட்டுரைகளின் தொகுப்பு நூலாகும்.*

72. **ம.பொ.சி.யின் இலக்கிய நூல்கள் – ஓர் மதிப்பீடு, ப. அன்பு, பக். 494, ரூ. 20**

*1980 வரை ம.பொ.சி. எழுதியுள்ள இலக்கியம் தொடர்பான நூல்களைப் பற்றிய ஆய்வாகும். ம.பொ.சி.யின் இவ்விலக்கியப் பணியின் பெருமையைத் தெளிவாக்குகிறது.*

73. **வெள்ளைக்காரன் கதை, ஏ.என். பெருமாள், (பதி), பக். 120, ரூ. 7**

*நாட்டுப்புறத் தெய்வமாக்கப்பட்டுள்ள வெள்ளைக்காரன் ஒருவனின் கதையைச் சுவடியிலிருந்து பதிப்பித்துள்ளது. நூலாய்வும் விளக்கவுரையும் கொண்டது.*

74. **தமிழ் இலக்கியக் கொள்கை, தொகுதி– 8, ச.வே.சுப்பிரமணியன், கே. பகவதி (பதி), பக். 484, ரூ. 20**

*இலக்கியக் கல்வி பற்றிய பொதுநிலைக் கட்டுரையுடன் வெண்பா, கலம்பகம் போன்ற சிற்றிலக்கிய வகைகளின் இலக்கியக் கொள்கைகளை ஆராயும் பதினொரு கட்டுரை களைத் தருவது.*

75. **மெய்க்கீர்த்திகள், பூ. சுப்பிரமணியம், பக். 450, ரூ. 20**

*மெய்க்கீர்த்திகள் இலக்கியமே என வலியுறுத்தும் ஆய்வுக் கட்டுரையுடன் சோழர், பாண்டியர், விஜய நகர மன்னர் மற்றும் பிற மெய்க்கீர்த்திகள் விளக்கவுரையுடன் பதிப்பிக்கப்பட் டுள்ளன. அவை வெளியாகியுள்ள இடங்கள், இடம் பெறும் ஊர்ப்பெயர்கள் முதலான குறிப்புகளும் உண்டு.* **தமிழக அரசின் பரிசு பெற்றது.**

76. **தொல்காப்பியம் எழுத்ததிகாரம் – குற்றியலுகரப் புணரியல், ஆ. சிவலிங்கனார் (பதி), பக். 224, ரூ. 11**

*பதிப்பாசிரியர் குறிப்புகளுடன் கூடிய உரைவளத் தொகுப்பு*

77. **சிந்து இலக்கியம், பழ. முத்தப்பன், பக். 168, ரூ. 8**

*சிந்து இலக்கியம் பற்றிய பொது ஆய்வு, ஐந்து சிந்து நூல்களின் குறிப்புரையுடன் கூடிய பதிப்பு, சிந்து நூற் (வெளிவந்த, வராத) பட்டியல் ஆகியன கொண்டது.*

78. **தொல்காப்பியம் சொல்லதிகாரம் – வேற்றுமையியல், ஆ. சிவலிங்கனார் (பதி), பக். 272, ரூ. 14**

*உரைவளத் தொகுப்புடன் வேற்றுமையியல் விளக்கம், உருபாய்வு, பொருட்சுருக்கம் கொண்டது.*

79. **திருவனந்தபுரம் கேரளப் பல்கலைக்கழக, தமிழ்ச் சுவடிகள் அட்டவணை, இரா. நிர்மலாதேவி (பதி), பக். 129, ரூ. 6**

*கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் உள்ள 1091 சுவடிகள் பற்றிய விளக்க அட்டவணை.*

80. **Bibliograpy on Translation, S. Sivakami, P. 624, Rs.35**

மொழிபெயர்ப்பு பற்றிய பொது அறிமுகத்துடன் தமிழ் உலக மொழிகளிலிருந்து பெற்றுள்ள 4234 மொழிபெயர்ப்புகளும், பிற மொழிகளில் காணப்படும் தமிழ் நூல்களின் 730 மொழி பெயர்ப்புகளும் பொருள், மொழி அடிப்படையில் வரிசைப் படுத்தப்பட்டுள்ளன.

81. **தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள், மெய். சந்திரசேகரன், பக். 248, ரூ. 12**

தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் இலக்கியம், கல்வெட்டு, நாட்டுப்புறவியல் கள ஆய்வு முதலானவற்றின் வழி ஆய்வு செய்யப்பட்டுள்ளது. ஊர்ப்பெயர்களின் அகர நிரல், கல்வெட்டுகளில் தஞ்சை மாவட்டம், சிறப்புக் கூறுகள், பிற குறிப்புகள் என்பனவும் பின்னிணைப்பாக உள.

82. **சித்திரக் கவிகள், வே. இரா. மாதவன், பக். 454, ரூ. 25**

தமிழ்ச் சித்திரக்கவிகளின் பெருமையைப் பறைசாற்றும் நூல். 54 வகை சித்திரக் கவிகள் சித்திரங்களாகக் காட்டப்பட்டுள்ளன. இடம்பெற்றுள்ள சித்திரக் கவிகளுக்குக் குறிப்புரை, கருத்துரை, விளக்கவுரை உண்டு. தமிழக அரசின் பரிசு பெற்றது.

83. **Historical Heritage of the Tamils, S.V. Subramanian, K.D. Thirunavukkarasu (eds), P. 684, Rs.35**

This book helps to understand the political, historical and cultural history of the ancient Tamils with 39 articles.

84. **திராவிட மொழி இலக்கியங்கள் (அறிமுகம்), ச.வே. சுப்பிர மணியன், பக். 648, ரூ. 35**

தொடக்க இலக்கியம் முதல் மொழிபெயர்ப்பு இலக்கியம் வரை முழுநிலையில் இலக்கியக் களங்களை 16 தலைப்பு களில், தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் என நான்கு மொழிகளில் அறிமுக நோக்கில் விரிவாக அளவிட்டுள்ளது.

# 1984

**85. இஸ்லாம் வளர்த்த தமிழ், ம.மு. உவைஸ், (அ.சொ.), பக். 288, ரூ. 15**

*கி.பி.17ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட இஸ்லாமிய இலக்கியங்களையும் அதன்பின் தோன்றிய இஸ்லாமியக் காப்பியங்களையும் அறிமுகம் செய்கிறது.*

**86. Tamil Text (An Auto Instructional Course), N. Deivasundaram, A. Gopal, P. 240, Rs.25**

This book accompanied by six cassettes is an auto instructional course. Text designed for the non-Tamils to learn Tamil.

**87. உ.வே.சா. சங்க இலக்கியப் பதிப்புகள், குளோறியா சுந்தரமதி, பக். 172. ரூ. 10**

*உ.வே. சாமிநாதையரின் பதிப்புத் திறனை அவரின் சங்க இலக்கியப் பதிப்புகள் வழி விளக்கும் நூல்.*

**88. Siddha Medicine (Heritage of the Tamils), S.V. Subramanian, V.R. Madhavan (eds), P. 788, Rs.45**

44 articles on various faculties which comprehensively survey the siddha system (Tamil medicine) were compiled here.

**89. Siddha Medical Manuscripts in Tamil, V.R. Madhavan (ed), P. 172, Rs.8**

A study and catalogue of Siddha Medical Manuscripts in Tamil (about 3000) available in various libraries

**90. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் தொகுதி – 1, ஆர். ஆளவந்தார், பக். 232, ரூ. 12**

*சங்க இலக்கியங்களில் காணப்படும் ஊர்ப்பெயர்கள், அமைப்பு முறை, விளக்கம், அவற்றின் வழி அறியவரும் கொள்கைகளும் கோட்பாடுகளும் இதில் விளக்கம் பெறுகின்றன. ஊர்ப்பெயர் வரிசையும் உண்டு.*

**91. தொல்காப்பியம் சொல்லதிகாரம் – வேற்றுமை மயங்கியல், ஆ. சிவலிங்கனார் (பதி), பக். 220, ரூ. 12**

உரைவளத் தொகுப்பு

**92. தொல்காப்பியம் சொல்லதிகாரம் – விளிமரபு, ஆ. சிவலிங்கனார் (பதி), பக். 116, ரூ. 6**

உரைவளத் தொகுப்பு பொருட் சுருக்கத்துடன் கூடியது.

**93. தமிழரின் தாயகம், க.ப. அறவாணன், (அ.சொ.), பக். 164, ரூ. 10**

மானுடவியல் சான்றுகள் கொண்டு தமிழரின் தாயகம் தென்னகம் என்பதை வலியுறுத்துவது. தமிழினம் தோன்றி பரவிய வரலாறு பேசப்பட்டுள்ளது. **தமிழக அரசின் பரிசு பெற்றது.**

**94. தொல்காப்பியம் சொல்லதிகாரம் – பெயரியல், ஆ. சிவலிங்கனார், (பதி), பக். 219, ரூ. 12**

உரைவளத் தொகுப்பு. இயல் விளக்கமும், பொருட் சுருக்கமும் இணைந்தது.

**95. தன்வந்திரி குழந்தை வாகடம், க. லலிதாம்பிகா (பதி), பக். 240, ரூ. 14**

இச்சுவடிப் பதிப்பில் குழந்தை நோய்வகை, அவற்றின் விளக்கம், அவற்றிற்கான மருந்துகள் ஆகியன அமைந்துள்ளன. நூலாய்வுரையும் உண்டு. தன்வந்திரி நூல்கள், நோய்கள், மருந்துப் பெயர்கள் இவற்றிற்கானப் பட்டியலும் உண்டு.

**96. தொல்காப்பியம் சொல்லதிகாரம் – வினையியல், ஆ. சிவலிங்கனார் (பதி), பக். 352, ரூ. 20**

உரைவளத் தொகுப்பு

**97. Karaikkal Ammaiyar, S. Sasivalli, P. 104, Rs. 6**

Analysing the works of Karaikkal ammaiyar a well known saiva woman saint with her biography. Her works were in appendix.

98. **தமிழ் இலக்கியக் கொள்கை, தொகுதி– 9, ச.வே. சுப்பிரமணியன், ச. சிவகாமி (பதி) பக். 352, ரூ. 20**

உரைநடை இலக்கியம், வாழ்க்கை வரலாற்றிலக்கியம், பயண இலக்கியம், கடித இலக்கியம், நாவல், சிறுகதை, நாடகம், இதழ்கள், கைலாசபதி, மொழிபெயர்ப்பு ஆகியன இதில் ஆய்வு செய்யப்பட்டுள்ளன.

99. **வர்ம சூத்திரம், செ. ஜான் செல்வராஜ், பக். 187, ரூ. 10**

வாக்படர் கூறும் வர்மானியச் செய்திகள், மருந்துகள் பற்றிய விளக்கவுரையுடன் கூடிய சுவடிப்பதிப்பு. குமரி நாட்டிற்கே உரிய இக்கலைச்செல்வத்தை இந்நூல் பிறருக்கும் அறிமுகப் படுத்தி யுள்ளது. **தமிழக அரசின் பரிசு பெற்றது.**

100. **இளங்கோவின் இலக்கிய உத்திகள், ச.வே. சுப்பிரமணியன், பக்.216, ரூ. 12**

இளங்கோவின் படைப்புச்சிறப்பினைப் பொருள், வெளியீடு, வடிவம் எனும் மூன்று நிலைகளில் அணுகிக் கண்டுள்ளது.

101. **தமிழர் இசை, ஏ.என். பெருமாள், பக். 904, ரூ. 70**

தொல்காப்பியம் முதல் இன்றுவரையிலான தமிழிசையின் வரலாற்றை இலக்கியங்கள் வழி தருகிறது. இசைக் கருவி களின் படங்களும் உள்ளன. **தமிழக அரசின் பரிசு பெற்றது.**

102. **இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் தொகுதி – 2, கு. பகவதி, பக்.362, ரூ22**

தேவாரம் முதல் பெரியபுராணம் வரை இலக்கியங்களில் இடம் பெற்றுள்ள 385 ஊர்ப் பெயர்களின் அமைப்பு முறைகளும் தோற்றக் காரணிகளும் விளக்கம் பெற்றுள்ளன.

103. **இனிக்கும் இராஜநாயகம், மு.மு. இஸ்மாயில், (அ.சொ.), பக்.652, ரூ. 50**

இராஜநாயகம் எனும் இசுலாமியக் காப்பியம் பற்றிய விரிந்த ஆய்வு நூல். காப்பியத்துள் இடம்பெற்றுள்ள அரபுச் சொற் களுக்குப் பொருள் நூலிறுதியில் உள்ளது.

# 1985

**104. பாவாணரும் தனித்தமிழும், மு. தமிழ்க்குடிமகன், (அ.சொ.), பக்.184, ரூ. 12**

*பாவாணர் பார்வையில் தமிழ், தமிழர், தமிழும் பிற திராவிட மொழிகளும், தமிழும் வடமொழியும், தனித்தமிழும் பாவாணரும் போல்வன சிறப்பிக்கப் பட்டுள்ளன. இறுதியில் பாவாணர் நூலடங்களும் உண்டு.*

**105. தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள், இரா. இளங்குமரன், (அ.சொ.), பக். 148, ரூ. 10**

*பாவாணர் வாழ்க்கை வரலாறுடன் அவரது சொல்லாராய்ச்சிப் பணியைத் தூண்டல், பொது, சிறப்பு போன்ற பல பார்வை களில் உணர்த்துகிறது.*

**106. டாக்டர் உ.வே.சா. காப்பியப் பதிப்புகள், இரா. காசிராசன், (அ.சொ.), பக். 178, ரூ. 10**

*உ.வே.சா. பதிப்பித்துள்ள சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, பெருங்கதை வழி அவரின் பதிப்புப்பணியின் பல்வேறு சிறப்புக் கூறுகளும், உரையாசிரியராக வளர்ந்த நிலையும் விளக்கம் பெற்றுள்ளன.*

**107. விவிலியம் – திருக்குறள் – சைவசித்தாந்தம் – ஓர் ஒப்பாய்வு, மு. தெய்வநாயகம், (அ.சொ.), பக். 350, ரூ. 20**

*விவிலியக் கருத்துகளைத் திருக்குறள் மற்றும் சைவ சித்தாந்தத்துடன் இணைத்து நோக்குவது.*

**108. செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்கள், கரு. நாகராசன், பக். 336, ரூ. 25**

*பொதுநிலையில் ஊர்ப்பெயராய்வும், சிறப்பாகச் செங்கை மாவட்ட ஊர்ப்பெயர்களின் ஆய்வும் விரிவாக அமைந் துள்ளது.*

109. நெல்லை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், துளசி. இராமசாமி, பக். 180, ரூ. 15

*நாட்டுப்புறத் தெய்வங்களின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் அவற்றின் வழிபாட்டு முறைகளையும், விளாத்திகுள வட்டத்தைக் கள ஆய்வு செய்து இந்நூல் ஆராய்ந்துள்ளது.*

110. **Heritage of the Tamils - Temple Arts, S.V. Subramanian, G. Rajendran (ed),P. 632, Rs.50**

26 research papers on big as well as small temples in Tamil Nadu which has a multi-faceiously edifying and uniquely important role to play in the past 1500 years, history of the Tamil People.

111. மொழிபெயர்ப்பியல், சு. சண்முக வேலாயுதம், பக். 140, ரூ. 10

*மொழிபெயர்ப்பியல் மாணாக்கருக்கான பாடநூலாக அது குறித்த விளக்கம், வகைமை, பயன், கொள்கைகள் வரலாறு முதலானவற்றைப் பேசுகிறது.*

112. தமிழர் திருமணம், சசிவல்லி, பக். 360, ரூ. 25

*தொல்காப்பியம் முதல் பிற்காலத் தமிழர் மற்றும் இக்காலச் சீர்திருத்தத் திருமணங்கள் ஆராயப்பட்டுள்ளன. திருமண முறை, திருமணப் பாடல்கள், இலக்கியச் சான்றுகள் என்பன பின்னிணைப்பில் உள்ளன.* தஞ்சை, தமிழ்ப் பல்கலைக்கழகப் பரிசு பெற்றது.

113. எண்பத்திரண்டில் தமிழ், ச.வே. சுப்பிரமணியன், ந. கடிகாசலம், அன்னிதாமசு (பதி), பக். 1148, ரூ. 90

*ஆண்டுகளில் தமிழ் வரிசையில் 44 கட்டுரைகளுடன் அமைந்தது. நூல், ஆசிரியர், பதிப்பக அகர வரிசைகளும் உண்டு.*

114. தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம், ச. சிவகாமி, பக். 386, ரூ.35

*நூலின் முதல் பகுதி வாழ்க்கை வரலாற்றிலக்கியம் பற்றிய ஆய்வாகவும் இரண்டாம் பகுதி சுமார் 2100 பிறர் வரலாறு, தன்வரலாறு ஆகியவற்றின் தொகுப்பாகவும் அமைகின்றன.*

**115. Tolkappiyam - Phonology & Morphology ( An English Translation), D. Albert (R), P. 316, Rs.25**

The translation of the first two parts of the Tolkappiyam with original

**116. தமிழ் நாவல்கள் (அகர வரிசை), வே. சீதாலட்சுமி, பக். 478, ரூ.40**

*1983 ஆம் ஆண்டுவரை வெளிவந்த 6298 புதினங்களின் தொகுப்பு. புதினங்கள் பற்றிய பொதுநிலை ஆய்வு முன்பகுதியிலும், இதுவரை வந்துள்ள புதின ஆய்வுகள் பின் பகுதியிலுமாக உள.*

**117. அகலமும் ஆழமும், ம.ரா.பொ. குருசாமி, (அ.சொ.), பக். 118, ரூ. 12**

*ம.பொ.சியின் ஆளுமைத் திறம், தனித்தன்மை, வரலாற் றுணர்வு, சமுதாய உணர்வு, மொழிக்கொள்கை போல்வன அவர்தம் நூல்கள் வழி விளக்கம் பெற்றுள்ளன. அவர் படைப்புகளின் கால நிரலும், பொருள்நிரலும் பின்னிணைப் பில் உள்ளன.*

**118. மருந்து செய்முறைகள், தி. லலிதா (பதி), பக். 524, ரூ. 45**

*கேரளப் பல்கலைக்கழகச் சுவடி நூலகத்தின் 29 ஓலைச் சுவடிகளிலிருந்து தொகுக்கப்பட்ட செய்திகள் மருந்து செய்முறைகள், நோயும் மருந்தும் என இருபகுதிகளில் கொடுக்கப்பட்டுள்ளன.*

**119. செக்கிழுத்த செம்மல் சிதம்பரனார், தி.நெ. வள்ளிநாயகம், பக்.166, ரூ. 15**

*வீரத்தமிழர் விடுதலைப் போரில் மேற்கொண்ட பங்கும், இலக்கியத்திற்கு ஆற்றிய தொண்டும் சிறப்பிக்கப் படுகின்றன.*

**120. தமிழர் கூத்துகள், ஜான் ஆசீர்வாதம், பக். 239, ரூ. 25**

*பழந்தமிழரிடையே வழங்கிய பல்வகைக் கூத்துகள் பற்றிய ஆய்வு நூல். சங்க இலக்கியத்துள் இடம்பெறும் கூத்து தொடர் பான சொற்களும் அவை பயிலுமிடங்களும் பின்னிணைப் பாக உள.*

# 1986

**121. டாக்டர் உ.வே.சா. இலக்கணப் பதிப்புகள், கி. நாச்சிமுத்து, (அ.சொ.), பக். 131, ரூ. 12**

உ.வே.சா. பதிப்பித்த புறப்பொருள் வெண்பாமாலை, நன்னூல் மயிலைநாதர் உரை, நன்னூல் சங்கரநமச்சிவாயர் உரை, தமிழ்நெறி விளக்கம் வழி அவரின் பதிப்புப் பெருமை சிறப்பிக்கப்பட்டுள்ளது. இப்பதிப்புகளுக்கான ஒரு விளக்க நூலடைவு இறுதியில் இணைக்கப்பட்டுள்ளது.

**122. மகாமதிப் பாவலர், செ. பசுலுமுகயிதீன், (அ.சொ.), பக். 112, ரூ. 11**

செய்குத் தம்பிப் பாவலரின் வாழ்வும் பணியும் இணையும் திறனாய்வு நூல்.

**123. Education & Vocation (Heritage of the Tamils), S.V. Subramanian, V.R. Madhavan, P. 518, Rs.50**

This compilation Contains 34 articles an Education and vocation which comprehensively survey the subjects from early period to the present day.

**124. உலக முதன்மொழி தமிழ், கு. பூங்காவனம், பக். 122, ரூ. 12**

உலக முதன் மொழி தமிழே என்று பாவாணர் உறுதி செய்வதை விளக்கும் நூல்.

**125. தொல்காப்பியம் உரைவளம், சொல்லதிகாரம் – இடையியல், ஆ. சிவலிங்கனார், பக். 222, ரூ. 22**

உரைவளத் தொகுப்பு

**126. மறைமலையடிகளார் தனித்தமிழ்க் கொள்கை, இரா. இளங் குமரன், பக். 156, ரூ.**

தனித்தமிழின் தொடக்க காலச் சிறப்பு, இடைக்கால மாற்றம், மீண்டும் எழுச்சி என்பனவற்றுடன் மறைமலையடிகளாரின் தனித்தமிழ் பற்றிய எண்ணங்களும் செயற்பாடுகளும் விரித்துரைக்கப்பட்டுள்ளன.

**127. தமிழ் தந்த வ.உ.சி., தி. லீலாவதி, பக். 125, ரூ. 15**

விடுதலை வீரர் வ.உ.சிதம்பரனாரின் தமிழ்த் தொண்டில் உரைத்திறன் பற்றிய ஆய்வு.

# 1987

**128. உ.வே.சா. ஒரு தமிழ் வாழ்வு, எஸ்.டி. காசிராசன், (அ.சொ.), பக். 144, ரூ. 15**

*உ.வே.சா. வாழ்க்கை எப்படித் தமிழ் வாழ்வாக, தமிழுக்கே உழைத்த வாழ்வாக அமைந்தது என்பதை விளக்குகிறது.*

**129. வண்ணக்களஞ்சியப் புலவரின் குத்பு நாயகம் ஆய்வுரை, மு. அப்துல் கறீம், (அ.சொ.), பக். 124, ரூ. 15**

*குத்பு நாயகம் வழி வண்ணக் களஞ்சியப் புலவரின் இஸ்லாமியக் கொள்கை விளக்கம், தமிழ் மரபு, புலமைத் திறன் முதலியன தெளிவாக்கப்பட்டுள்ளன.*

**130. வாத்திய மரபு, அ.நா. பெருமாள் (பதி), பக். 198, ரூ. 20**

*விரிவான முன்னுரையுடன் 108 தாளங்களின் அமைப்பு முறைகளும் அளவுகளும் இச்சுவடிப்பதிப்பில், உரையுடன் இடம்பெற்றுள்ளன. டாக்டர் ஆல்பர்டின் ஆங்கில முன்னுரையும் உண்டு.*

**131. Tamil Verse in Translation (Sangam age), P.N. Appuswami (Tr) P. 352, Rs.40**

The selected 120 poems have been translated into English. The similar passage from other languages were also given in apt places.

**132. தமிழில் கதைப்பாடல், அ.நா. பெருமாள், பக். 288, ரூ. 25**

*தமிழ்க் கதைப்பாடல்களில் வெளிப்படும் வாழ்வியல், சமுதாயவியல், வரலாற்றியல் போல்வன ஆராயப்பட்டுள்ளன. கதைப்பாடல்களின் அகர வரிசையும் உண்டு.*

**133. மங்கலதேவி கண்ணகிக் கோட்டம், துளசி. இராமசாமி, பக்.121, ரூ.15**

*சுருளிமலைத் தொடரில் உள்ள மங்கல தேவிக்கோயில் தான் கண்ணகிக் கோட்டம் என்பதை நாட்டுப்புறவியல் அணுகுமுறை யில் உறுதிப்படுத்துகிறது.*

**134. தொல்காப்பியம் உரைவளம், சொல்லதிகாரம் – உரியியல், ஆ. சிவலிங்கனார் (பதி), பக். 204, ரூ. 20**

*உரைவளத் தொகுப்பு, இயல் விளக்கத்துடன்.*

369. **ஜப்பானியக் காதல் பாடல்கள், (மன்யோசு தொகுதி–10இல் அடங்கிய பாடல்களின் மொழிபெயர்ப்பு), மனோன்மணி சண்முகதாஸ், பக். 336, ரூ. 75**

*2350 பாடல்கள் விளக்கம், குறிப்புரை, உணர்வுநிலை ஆகியவற்றுடன் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. மூலம் பற்றிய முன்னுரையும் உண்டு.*

370. **தாய்நாட்டிலும் மேலைநாடுகளிலும் தமிழியல் ஆய்வு, கு. பகவதி, செ. ஜீன்லாறன்ஸ் (பதி), பக். 332, ரூ. 75**

*தமிழகம், பிற மாநிலங்கள் மற்றும் பிற நாடுகளில் அமையும் தமிழியல் ஆய்வு வளர்ச்சியை உணர்த்தும், வருநாளில் அமைய வேண்டிய ஆய்வு முறைமையைச் சுட்டும் 27 கட்டுரைகளின் தொகுப்பு*

371. **பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி – 2, மு. வளர்மதி (தொகு), பக். 368, ரூ. 80**

*1917 முதல் 1986 வரை பல வார, மாத இதழ்களில் எழுதிய 100 அறிவியல் கட்டுரைகளின் தொகுப்பு.*

372. **தமிழ் நாடகம் நேற்றும் இன்றும், கு. பகவதி (பதி), பக். 144, ரூ. 30**

*நாடக முயற்சியாளர்களின் நாடகக்கலைபற்றிய மதிப்பீடாக அமையும் பத்து கட்டுரைகள் கொண்டது.*

373. **பயிலரங்கக் கவிதைகள், ச. சிவகாமி, (பதி), பக். 80, ரூ. 18**

*15-19 வயதுடைய மாணாக்கர் பங்கேற்ற கவிதைப் பயிலரங்கில் படைக்கப்பட்ட சிறந்த கவிதைகளின் தொகுப்பு*

374. **தமிழர் சமூகவியல் சில பார்வைகள், அன்னிதாமசு, பக். 156, ரூ. 35**

*மக்கட் பாகுபாடு, சமயவாதியாகப் பெண், முதுமை, இறப்பு, செல்வமும் வறுமையும், காதுகுத்தலும், முடிகொடுத்தலும், வரிசைமுறை, சமூகச் சிதைவு போன்ற, தமிழர் சமுதாயத்தை வெளிப்படுத்தும் பன்னிரு கட்டுரைகள் அடங்கியது.*

375. **Indian Epistemology - as espounded in the Tamil classics, S.N. Kandaswamy, P. 402, Rs.125**

The work elabolately discussed the subject under eighteen topics and has brought forth salient features of the contribution of Tamil scholars to the field of Indian epistemology during BC 500 to AD1800

376. தொல்காப்பிய ஆய்வுகள், அரங்க. முருகையன், இரா. அறவேந்தன், சு. தமிழ்வேலு (பதி), பக். 96, ரூ. 20

*இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் அறிஞர் வ.சுப. மாணிக்கனார் அறக்கட்டளைக் கட்டுரைப் போட்டியில் வெற்றிபெற்ற முதல் மூன்று கட்டுரைகள்.*

377. சங்க இலக்கிய ஆய்வுகள், அரங்க. முருகையன், இரா. அறவேந்தன், சு. தமிழ்வேலு (பதி), பக். 124, ரூ. 30

*இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் அறிஞர் வ.சுப. மாணிக்கனார் அறக்கட்டளைக் கட்டுரைப் போட்டியில் வெற்றிபெற்ற முதல் மூன்று கட்டுரைகள்.*

378. தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், கே.கே. பிள்ளை, பக். 588, ரூ. 125

*தமிழக வரலாற்றுக்கான அடிப்படை ஆதாரங்கள் முதல் இருபதாம் நூற்றாண்டில் தமிழகம் வரையிலானத் தமிழக மக்களின் வரலாற்றையும் பண்பாட்டையும் உணர்த்தும் நூலின் மறுபதிப்பு*

379. தமிழ் ஆங்கிலம் அகராதி தொகுதி – 1, (A Dictionay of Tamil and English) J.P. Rottler, பக். 324, ரூ. 150

*1834 இல் வெளிவந்ததன் மறுமதிப்பு*

380. தமிழ் ஆங்கிலம் அகராதி தொகுதி – 2, (A Dictionay of Tamil and English) J.P. Rottler பக். 432, ரூ. 250

381. தமிழ் ஆங்கிலம் அகராதி தொகுதி – 3, (A Dictionay of Tamil and English) J.P. Rottler, பக். 468, ரூ. 225

382. தமிழ் ஆங்கிலம் அகராதி தொகுதி – 4, (A Dictionay of Tamil and English) J.P. Rottler, பக். 254, ரூ. 125

383. நாலடியார் (The Naladiar), கோமளபுரம் இராசகோபாலப் பிள்ளை (உரை) எஸ். அனவரதவிநாயகம் பிள்ளை (மொழி), பக். 424, ரூ. 90

*1903இல் வெளிவந்ததன் மறுபதிப்பு. தமிழ், ஆங்கில முகவுரையுடன் கூடியது. நாலடியார் பதிப்பு மற்றும் மொழி பெயர்ப்பு பற்றிய கண்ணோட்டத்தை டி.என். ராமசந்திரன் தந்துள்ளார்.*

**384. Manimekalai, A. Madhaviah (Tr), P. 94, Rs.20**

The epic Manimekalai's translation in prose

**385. முத்ரா ராக்ஷஸம், சி.கே. நடேசசர்மா (மொழி) பக். 176, ரூ. 40**

விசாகதத்தரின் சமஸ்கிருத நாடகத்தின் தமிழ் வடிவம். தெ.பொ.மீ. முன்னுரையுடன் கூடிய மறுபதிப்பு.

**386. Four Long Poems from Sangam Tamil, -, P. 100, Rs.30**

If contains the Ten Tamil Idyls (P. Sundaram Pillai), The age of Pattu pattu (T.A. Ramalingam Chetiar) Ciru-pananattuppadai and Madurai Kanchi (Translated by V.Kandaswami Mudaliar) and Prose Transltion of Kurinji Pattu and Porunaratuppadai (P. Coomaraswamy)

**387. உ.வே.சா. நூல்களில் சொல்லும் சுவையும், ஆறு. அழகப்பன், (அ.சொ.), பக். 80, ரூ. 18**

உ.வே. சாமிநாதையரின் பதிப்பு மற்றும் படைப்பு நூல்களில் இடம்பெறும் சிறப்புச் சொற்களும் அவற்றிற்கு அவர் தந்துள்ள நுட்பமான விளக்கங்களும் தெளிவு படுத்தப்படுகின்றன.

## 2001

**388. The Narrinai Four Hundred, A Dakshinamurthy (Tr), P. 856, Rs. 175**

This work is the first translation of the Narrinai in English. The implied similes are explained at the end of the translations of the respective verses.

**389. Social Life of the Tamils - The Classical period, S. Singaravelu, P. 224, Rs. 70**

The reprint of the 1966 edition has three parts as Habitat and Material culture, Religions Beliefs and social structure and Institutions.

**390. Sound Correspondences between Tamil and Japanese, Susumu Ohno, P. 114, Rs. 35**

It is the firs major work in the field of Tamil - Japanese studies and it was first published by the gakshiun educational foundation, Tokyo in the year 1980. This work is as important as the Dravidian Etymological Dioctonary.

**391. Translation Theroy and Application, M. Valarmathi (ed), P. 111, Rs. 35**

In this book the specialised scholars and translators have widely expressed their experience and ideas.

**392. On Translating Tirukkural, V. Ramasamy, P. 168, Rs. 50**

The Ph.D. Thesis presents a comprehensive treatment of the problems of literary translation with the base of various English versions of Tirukkural under the syntactic, stylistic, semantic and cultural dimensioins..

**393. சர்வக்ஞர் உரைப்பா, இறையடியான் (மொழி), பக். 178, ரூ. 40**

*கன்னடத்தில் சிறப்பாகப் பேசப்படும் சர்வக்ஞரின் 'உரைப்பா', 'திரிபதி' எனும் மூன்றடிப்பாவால் ஆன அறநூல். அதுபோன்றே தமிழிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.*

**394. அழகன் பெருமாள் கதை, சூ. நிர்மலாதேவி (பதி), பக். 208, ரூ. 45**

*வரலாற்றுக் கதைப்பாடல் சுவடியிலிருந்து ஆராய்ச்சி முன்னுரையுடன் பதிப்பிக்கப்பட்டுள்ளது.*

**395. தமிழ் மேடை நாடக வரலாறு, கு. பகவதி, (பதி), பக். 265, ரூ. 55**

*பதினைந்து மேடை நாடகக் கலைஞர்கள் நாடகத் துறைக்கு ஆற்றிய பணிகளை விளக்கும் நூல்.*

**396. இந்திய விடுதலைக்குப்பின் தமிழிலக்கியச் செல் நெறிகள், செ. ஜீன் லாறன்ஸ், கு. பகவதி (பதி), பக். 256, ரூ. 55**

*கவிதை, புனைகதை, ஆய்வியல் முதலானவற்றில் ஏற்பட்டுள்ள மாற்றங்களையும், வளர்ச்சியையும் அளவிடும் 22 கட்டுரைகளின் தொகுப்பு.*

397. **தமிழ்க் கற்பித்தலில் உன்னதம் ஆசிரியர் பங்கு, கா. சிவத்தம்பி, (அ.சொ.), பக். 84, ரூ. 20**

*உலகளாவிய நிலையில் தமிழ்மொழி வாயிலாகக் கற்பித்தலில் எழும் சிக்கல்களை ஆராயும் நூல்.*

398. **அயலகத் தமிழ்க்கலை, இலக்கியம்–சமகாலச் செல் நெறிகள், ந. கடிகாசலம், ச. சிவகாமி (பதி), 456, ரூ. 125**

*இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் தமிழறிஞர்கள் தங்களது நாட்டின் பல்துறைத் தமிழ் வளர்ச்சியை விளக்கும் நூல்.*

399. **தமிழ் இலக்கியத்தில் எதிர்காலவியல், ச. சிவகாமி, பக். 192, ரூ. 45**

*எதிர்காலவியலை அறிமுகப்படுத்தி, இலக்கியத்துள் அதனிடம், எதிர்காலவியல் இலக்கியம் தமிழில் அமைந்துள்ள முறைமை, தமிழின் எதிர்காலம் ஆகியவற்றை வெளிப்படுத்துவது.* **இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் பரிசு பெற்ற நூல்.**

400. **உலகத் தமிழாராய்ச்சி நிறுவன சுவடி விளக்க அட்டவணை 4, தி. மகாலட்சுமி, பக். 328, ரூ. 70**

*மொழி, கணிதம், பண்பாடு தொடர்பான 203 நூல்கள் பற்றிய சுவடிகளின் விளக்கம் அமைந்துள்ளது.*

401. **சுவடிச்சுடர், தி. மகாலட்சுமி, சூ. நிர்மலாதேவி, த. பூமிநாக நாதன் (பதி), பக். 536, ரூ. 120**

*சுவடிப்பதிப்பு பலதுறைகளிலும் அமைந்துள்ள முறைமை, சுவடிக் காப்பங்கள், சுவடி அட்டவணைகள் எனச் சுவடியியல் சார்ந்த 32 கட்டுரைகளின் தொகுப்பு*

402. **தமிழில் ஆவணங்கள், ஆ. தசரதன், தி. மகாலட்சுமி, சூ. நிர்மலா தேவி, த. பூமிநாகநாதன் (பதி), பக். 356, ரூ. 75**

*ஆவணங்களாகக் கருதப்படும் கல்வெட்டுகள், பண்டைத் தமிழ் எழுத்துகள், செப்புப் பட்டயங்கள், ஓலைச் சுவடிகள், காசுகள் பற்றிய 26 கட்டுரைகளின் தொகுப்பு நூல்.*

**403. தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள், செ. ஜீன் லாறன்ஸ், பக். 320, ரூ70**

*தொல்காப்பிய எழுத்து, சொல்லதிகாரங்கள் தரும் இலக்கண, மொழியியல் கோட்பாடுகளை வரையறுக்கும் 19 கட்டுரைகள் கொண்டது.*

**404. எழுத்திலக்கணக் கோட்பாடு, செ.வை. சண்முகம், பக். 328, ரூ. 70**

*தமிழின் தொல்காப்பியம் முதல் சுவாமிநாதம் வரையிலான ஒன்பது இலக்கண நூல்களின் எழுத்து இலக்கணக் கோட்பாட்டை விரித்துரைக்கும் இந்நூல் 1980இல் வெளி வந்ததன் மறுபதிப்பு.*

**405. மேலை நோக்கில் தமிழ்க்கவிதை, ப. மருதநாயகம், (அ.சொ.), பக். 412, ரூ. 100**

*சிதைவாக்கத் திறனாய்வு, உரையாடலியம், வாசகன் அனுபவத் திறனாய்வு போன்ற மேலைத் திறனாய்வு அணுகுமுறைகளைத் தமிழிலக்கியங்கள் வழி தமிழுக்கு அறிமுகப்படுத்துவது.*

**406. Tiruvaacakam Tamil Text & English Translation, T.N. Ramachandran, P. 773, Rs.175**

The fully translated work in verse form includes a vivid introduction and some research articles about Tiruvaacakam as appendices.

**407. சதகத் திரட்டு–1, த. இராசேசுவரி (பதி), பக். 376, ரூ. 80**

*பதிப்பாய்வு உரையுடன் கூடிய திருத்தொண்டர் சதகம், கயிலாசநாதர் சதகம், அவையாம்பிகை சதகம் செயங் கொண்டார் சதகம், திருமுகவிலாசம் என்பனவற்றின் சுவடிப் பதிப்பு.*

**408. சதகத் திரட்டு – 2, த. இராசேசுவரி (பதி), பக். 255, ரூ. 55**

*கோகுலசதகம், வடவேங்கடநாராயண சதகம், அண்ணாமலை சதகம், அருணாசல சதகம், குருநாத சதகம் ஆகியவற்றின் உரையுடன் கூடிய சுவடிப்பதிப்பு.*

**409. Tamil Literature & Indian Philosophy, S.N. Kandhaswamy, P. 664, Rs.200**

The metaphysical thoughts of both the homogeneous and hetrogeneous systems of Indian philosophy, as embalmed in the Tamil classics have been sufficiently analysed and the contributions of Tamil intellectuals to the main stream of Indian thought have been adequately assessed in this book.

**410. பரத நாட்டிய சாஸ்திரம், எஸ்.என். ஸ்ரீராமதேசிகன் (மொழி), பக். 608, ரூ. 150**

*பரதமுனிவர் இயற்றிய 6000 சுலோகங்கள் கொண்ட வடமொழி நூலின் முழுமையான மொழிபெயர்ப்பு.*

**411. நானும் என் எழுத்தும், நா. சந்திரசேகரன் (பதி), பக். 270, ரூ. 60**

*அசோகமித்திரன் முதல் ஜெயகாந்தன் வரை 20 படைப்பாளர் தம் படைப்புகள் பற்றித் தாமே அளித்துள்ள அறிமுகங்கள் கொண்டது.*

**412. தமிழ்ப் பண்பாடு, க.த. திருநாவுக்கரசு, பக். 120, ரூ. 25**

*தொன்மைச் சிறப்பு, சிறப்பு மிகு பழக்க வழக்கங்கள், அழகுக் கலைகள், ஆன்மீக நெறி, மெய்யறிவு போல்வன சிறப்பிக்கப்பட்டுள்ளன.*

**413. An Introduction to Religion & Philosophy - Tevaram & Tivyappirapandam, R. Vijayalakshmy, P.680. Rs.200**

This book deals with the important aspects of Tevaram and Tivyappirapantam such as their composers, the secred shrines at which these compositions were sung and the philosopical concepts.

**414. A Bunch of Essays in Tamil Literature, P.N. Appusamy, P. 96, Rs.30**

Reprint of the collected essays published in various English Magazines.

# 2002

**415. தமிழ் இலக்கியத்தில் ஊனமுற்றோர், அன்னிதாமசு, பக். 192, ரூ. 45**

*சமூக நோயியலில் உட்படுகின்ற ஊனம் பற்றிய தரவுகளைத் தொல்காப்பியம் முதல் பெரிய புராணம் வரையிலான இலக்கியக் களனிலும், நிகண்டு, அகராதிகளிலும் பழமொழி, விடுகதை, விளையாட்டு ஆகியவற்றிலும் தொகுத்துப் பகுத்து ஆராய்கிறது.*

**416. அறிவானந்த அடிகள் இயற்றிய சிறுத்தொண்டர் நாடகம், இ. சுந்தரமூர்த்தி (பதி), பக். 327, ரூ. 75**

*தெருக்கூத்து நாடக வகையாக அமையும் சிறுத்தொண்டரின் வாழ்க்கைச் சரிதம் சுவடியிலிருந்து பதிப்பிக்கப்பட்டுள்ளது.*

**417. தமிழர் கட்டிடக் கலை, கோ. தெய்வ நாயகம், (அ.சொ.), பக். 120, ரூ. 30**

*தமிழகக் கட்டிடக் கலையில் நகரின் தோற்றமும் வளர்ச்சியும், தொன்மையும் முன்பகுதியில் விரித்துரைக்கப்படுகிறது. பின்பகுதி கோயிற் கட்டிடக்கலை பற்றிப் பேசுகிறது.*

**418. தமிழக மகளிரியல், அன்னிதாமசு (பதி), பக். 350, ரூ. 80**

*24 கட்டுரைகளில் மகளிர் அமைப்புகள், பெண் படைப்பாளர், இலக்கியம், நாட்டுக்காகவும் சமுதாயத்திற்காகவும் போராடிய மகளிரின் வரலாற்று ஆய்வுகள் குறித்த நூலாகும்.*

**419. பாவாணரும் தனித்தமிழும், மு. தமிழ்க்குடிமகன், (அ.சொ.), பக். 201, ரூ. 40**

*1985இல் வெளிவந்த நூலின் மறுபதிப்பு.*

**420. நாட்டுப்புறக் கதைகளும், நாடக ஆக்கமும், கே.ஏ. குணசேகரன், பக். 135, ரூ. 30**

*நாட்டுப்புறக் கதைகளை நாடகமாக்கத் தேவைப்படும் உத்திமுறைகள், சிந்தனைகள், வரலாற்றுப் பார்வை, சமூகப்பார்வை போன்றவை கட்டபொம்மு, மதுரைவீரன் ஆகிய கதைகளைக் கொண்டு விளக்கப்பட்டுள்ளது.*

**421. கிறித்தவத் தமிழ் நடையியல் நோக்கு, ப. டேவிட் பிரபாகர், (அ.சொ.), பக். 96, ரூ. 20**

*கிறித்துவத் தமிழின் தோற்றம் முதல் இன்றைய நிலை வரையிலான கணிப்புடன் கலைச்சொற்கள், சிறப்பு வழக்குகள், மரபுத் தொடர்கள், கருத்துப் படிமங்கள் மற்றும் இலக்கணக் கூறுகள் வழி உணர்த்தப்பட்டுள்ளது.*

**422. இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள், அ.அ. மணவாளன் (அ.சொ.), பக். 150, ரூ. 35**

*1995இல் வெளிவந்த நூலின் இரண்டாம் பதிப்பு*

**423. தமிழ் நாவல்களின் சமுதாய மாற்றம், ஐசக் அருமை ராஜன், (அ.சொ.), பக். 88, ரூ. 20**

*மதம்மாறிய நாடார்களின் கிறித்தவப் பின்னணியில் எழுந்த நான்கு புதினங்களின் வழி சமுதாய மாற்றம், சம நிலையாக்கம் வெற்றி பெறவில்லை என்பதை உணர்த்துகிறார்.*

**424. பழமொழி நானூறு (தெலுங்கு மொழிபெயர்ப்பு), புல்லூர் முனிரத்தினம், பக். 320, ரூ. 70**

*மொழிபெயர்ப்பு கவிதை வடிவம் கொண்டுள்ளது. பாடலின் கீழ் அதற்கு உரையும் உள்ளது.*

**425. சுவடிப் பதிப்புத் திறன் (தொகுதி–1), சா. கிருட்டினமூர்த்தி, தி. மகாலட்சுமி, சூ. நிர்மலாதேவி, த. பூமிநாகநாதன் (பதி), பக். 216, ரூ. 50**

*தலபுராணம், சித்த மருத்துவம், கதைப்பாடல் எனப் பல்துறை சார்ந்த சுவடிகளின் பதிப்பு நிலை, பதிப்பு நுட்பங்கள், அவற்றின் சிக்கல்களும் தீர்வுகளும் முதலானவற்றைத் தருவன.*

**426. சுவடிப் பதிப்புத் திறன் (தொகுதி–2), சா. கிருட்டினமூர்த்தி, தி. மகாலட்சுமி, சூ. நிர்மலாதேவி, த. பூமிநாகநாதன் (பதி), பக். 208, ரூ. 45**

*மேற்படி.*

427. சங்கத்தமிழ் உறவுமுறைச் சொற்கள், எச். சித்திரபுத்திரன், பக். 208, ரூ. 45

*மானுடவியல், மொழியியல், இலக்கணம் வழி முன்பகுதி உலகளாவிய நிலையிலும் பின்பகுதி சங்க இலக்கியத்திலும் அமையும் உறவு முறைகளையும், உறவுமுறைச் சொற்களை யும் ஆராய்கிறது.*

428. மாளவிகாக்னிமித்திரம், எஸ்.எஸ். தேசிகன் (மொழி), பக். 88, ரூ. 20

*காளிதாசர் நாடகத்தின் தமிழ் வடிவம்*

429. கானல் வரி, ச.வே. சுப்பிரமணியன், (அ.சொ.), பக். 120, ரூ. 30

*கானல்வரியின் புதிய சிந்தனைகள், இசைக் குறிப்புகள், உரை கொண்டது.*

430. **Vaisnavism in Tamil Literature Between the 7th and 9th Centuries, Indra Parthasarathy, P. 208, Rs. 50**

The author has attempted to present the period of the alvars as a movement, necessitated by historical factors and establish that it was but a continuity of a glorious Tamil tradition.

431. தமிழ் மொழி இன இலக்கிய மேம்பாடு – மறைமலையடிகளாரின் பங்களிப்பு, நா. செயப்பிரகாசு (அ.சொ.), பக். 80, ரூ. 20

*அடிகளாரின் எழுத்துகளில் வெளிப்படும் தமிழ்மொழி, இனம், இலக்கியம் ஆகியவற்றின் மேம்பாடு குறித்த சிந்தனைகள் தருவது.*

432. அறிவியல் தொழில்நுட்பக் கல்வி இன்றைய சந்தைச் சவால்கள், மி. நோயல் (அ.சொ.), பக். 88, ரூ. 20

*அறிவியல் தொழில் நுட்பக் கல்வி தமிழகத்தில் அமைந்துள்ள முறை, எதிர்கொள்ள வேண்டிய சிக்கல்கள், அவற்றை வெற்றிகொள்ளும் வழி ஆகியவை இடம் பெற்றுள்ளன.*

433. ம.பொ.சியின் தமிழுணர்வு, தூ. சேதுபாண்டியன், (அ.சொ.), பக். 160, ரூ. 40

*தமிழர் என்ற இனவுணர்ச்சியை ம.பொ.சி. எப்படி தமிழரிடையே தோற்றுவித்து வளர்த்தார் என்பதை அவரது படைப்புகள் வழி விரிக்கிறது.*

**434. தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள், தனிநாயகம் அடிகளார், பக். 192, ரூ. 40**

*1999இல் நிறுவனம் வெளியிட்ட நூலின் மறுபதிப்பு*

**435. தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல், தாயம்மாள் அறவாணன், (அ.சொ.), பக். 96, ரூ. 25**

*சமூகவியலின் அடிப்படைகளையும், திருமணம், குடும்பம், அரசு, சாதி, சமயம் முதலான, அதன் கூறுகளையும், ஆராய்கிறது.*

**436. Work Book - Spoken Tamil, D. Renganathan, P. 190, Rs. 50**

It's a Spoken Tamil Work book designed for the Tamil - An auto instructional course Text.It contain a number of exercises.

**437. பெரியாரின் பண்பாட்டுப் புரட்சி, கி. வீரமணி, (அ.சொ.), பக். 96, ரூ. 25**

*சமூகச் சீர்திருத்தத்திற்குப் பெரியார் ஆற்றிய பணிகளையும் அதன் விளைவுகளையும் குறித்து விரித்துரைப்பது.*

**438. தமிழ் அன்னை, பம்மல் சம்பந்த முதலியார், பக். 150, ரூ. 40**

*தமிழன்னை பிறந்து வளர்ந்த கதை, சிவாலயச் சிற்பங்கள் எனும் இரு நூல்களின் மறுமதிப்பு.*

**439. வ.உ.சி. வளர்த்த தமிழ், மா.ரா. அரசு, (அ.சொ.), பக். 80, ரூ. 20**

*வ.உ.சி.யின் மேடைப் பொழிவுகளும், தனித்தமிழ் ஈடுபாடும் இதில் ஆராயப்பட்டுள்ளன.*

**440. மிருச்சகடிகம், எஸ்.ஏ. பாலகிருஷ்ண ஐயர். பக். 216, ரூ. 50**

*வடமொழி மிருச்சகடிகம் நாடக மொழிபெயர்ப்பின் மறுபதிப்பு*

**441. தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், கே.கே.பிள்ளை, பக். 594, ரூ. 125**

*1999இல் வெளிவந்த நூலின் மறுபதிப்பு.*

# 2003

442. தமிழில் விடுதலை இலக்கியம், கா.செல்லப்பன், (அ.சொ.), பக். 80, ரூ. 20

*கவிதை மற்றும் உரைநடையிலக்கியங்களில் தேசிய உணர்வும் காந்தீயமும் இணைந்து நிற்பதை விளக்குகிறது.*

443. உலக அரங்கில் தமிழ், மது. ச. விமலானந்தம், (அ.சொ.), பக். 103, ரூ. 30

*உலக நாடுகளில் தமிழைப் பரப்புவதற்குத் தனிநாயகம் அடிகளார் மேற்கொண்ட முயற்சிகளைப் பேசுவது.*

444. பாரதி இந்தியா, சிலம்பு நா. செல்வராசு, (அ.சொ.), பக். 168, ரூ. 40

*புதுவையில் பாரதியார் நடத்திய 'இந்தியா' இதழ் பற்றிய ஆய்வு.*

445. தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு, அ. பிச்சை, (அ.சொ.), பக். 208, ரூ. 50

*நாட்டுப்புற இலக்கியம், கலைகள், பண்பாடு ஆகியவற்றில் நிகழ்ந்துள்ள ஆய்வுகளின் ஆய்வாக அமைந்துள்ளது. இதுவரை செய்யப்பட்டுள்ள ஆய்வுகளின் பட்டியல் பின்னிணைப்பாக உள்ளது.*

446. தெசிணியின் தமிழாக்கப் பாடல் திரட்டு, தி.வ. தெய்வ சிகாமணி (கவிஞர் தெசிணி), பக். 200, ரூ. 50

*சீனம், ஆங்கிலம், செர்மனி, பிரெஞ்சு, உருசியா, கொரியா, ஸ்பெயின், துருக்கி ஆகிய மொழிக் கவிதைகளுடன் வங்க மொழிக் கவிஞரான தாகூர், கன்னடக் கவிஞர் பேண்ட்ரே ஆகியோர் கவிதைகளும் கவிதை வடிவில் தமிழாக்கம் பெற்றுள்ளன.*

447. உ.வே.சா. பதிப்புப்பணியும் பன்முக மாட்சியும், செ. இராசு, (அ.சொ.), பக். 120, ரூ. 35

*உ.வே.சா. ஆற்றிய தமிழ்ப் பெரும் பணியான பதிப்புப் பணி பற்றிய மதிப்பீடும் அதன்வழிப் பெற்ற அவரது பன்முக ஆளுமையும் காட்டுவது.*

**448. பாவாணர் கண்ட இன்றைய தமிழின் இலக்கணங்கள், இரா. திருமுருகன் (அ.சொ.) பக். 112, ரூ. 30**

*இன்றைய உரைநடைத் தமிழுக்கான இலக்கண வரைவிற்குப் பாவாணரின் பங்களிப்பை எடுத்துரைக்கிறது.*

**449. தமிழ் மொழியின் வரலாறு, வி.கோ. சூரிய நாராயண சாஸ்திரியார் (பரிதிமாற் கலைஞர்), பக். 104, ரூ. 30**

*தமிழ் மொழியின் வரலாற்றைப் பற்றிய ஓர் அடிப்படையான, ஆய்வு நூலான இது மறுபதிப்பாகும்.*

**450. கோவலன் கதை, சூ. நிர்மலாதேவி, பக். 208, ரூ. 50**

*விரிவான நூலாராய்ச்சியுடன் கூடியது; நாட்டுப்புறக் கதைப் பாடலின் சுவடிப்பதிப்பு.*

**451. தமிழ்ச் சுருக்கெழுத்து நூல், ஜி.எஸ். அனந்தநாராயணன், பக். 268, ரூ. 50**

*சீனிவாசராவ் கண்டறிந்த படி, தமிழ்ச் சுருக்கெழுத்தைக் கற்பிப்பது.*

**452. தமிழில் மருத்துவ இதழ்கள், சு. நரேந்திரன், (அ.சொ.), பக். 120, ரூ. 35**

*மருத்துவம் பற்றிய பொது அறிமுகத்துடன், தமிழில் மருத்துவ இதழ்களின் வரலாறு, வடிவம், உள்ளடக்கம் பேசுவது.*

**453. தமிழ் அச்சுத்தந்தை அண்ட்ரிக் அடிகளார், ஆ. சிவசுப்பிர மணியன், (அ.சொ.), பக். 104, ரூ. 30**

*அண்ட்ரிக் அடிகளாரின் வாழ்வும் பணியும் கூறும் நூல்.*

**454. Social Heritage of the Tamils, Annie Thomas, N. Ghadigachalam + S. Sivakami (eds), P. 288, Rs. 75**

This compilation contains 25 articles which elucidate the cherished Social Heritage of the Tamils.

**455. நடிப்புக் கலையும் பேசும்படக் காட்சியும், பம்மல் சம்பந்த முதலியார், பக். 160, ரூ. 40**

*நடிப்புக் கலையில் தேர்ச்சி பெறுவதெப்படி, கதம்பம், தமிழ் பேசும் படக் காட்சி ஆகிய மூன்று படைப்புகள் இணைந்த மறு பதிப்பு.*

456. நாச்சியார் திருமொழி (தெலுங்கு மொழிபெயர்ப்பு), பி. உமா, பக். 152, ரூ. 40

*ஆண்டாளின் 143 பாசுரங்கள் தெலுங்கில் கவிதை வடிவம் பெற்றுள்ளன. உரை விளக்கமும் தத்துவ விளக்கமும் கொண்டது.*

457. இயற்கை மொழியாய்வு தமிழ், கு. சுப்பையாபிள்ளை, பக். 320, ரூ. 70

*1998இல் வெளிவந்த நூலின் மறுபதிப்பு*

458. தமிழர் உணவு, சே. நமசிவாயம், பக். 320, ரூ. 70

*1981இல் வெளிவந்ததன் மறுபதிப்பு*

459. மகளிர் இதழ்கள், இ. சுந்தரமூர்த்தி, மா.ரா. அரசு (பதி), பக். 304, ரூ. 70

*சுகுணபோதினி முதல் பெண்மணி ஈறாக 10 மகளிர் இதழ்கள் பற்றிய ஆய்வு.*

460. தமிழர் ஆடைகள், கு. பகவதி, பக். 436, ரூ. 90

*1980 இல் வெளிவந்ததன் மறுபதிப்பு*

461. தமிழர் காசு இயல், நடன. காசிநாதன், பக். 206, ரூ. 50

*1995இல் வெளிவந்ததன் மறுபதிப்பு*

462. சங்ககாலக் காசு இயல், ப. சண்முகம், பக். 126, ரூ. 30

*காசு இயல் வரலாறு ஆராயப்பெற்றுள்ளது.*

463. தமிழர் நாட்டு விளையாட்டுகள், இரா. பாலசுப்பிரமணியன், பக். 322, ரூ. 75

*1981இல் வெளிவந்ததன் மறுபதிப்பு*

464. தமிழர் அளவைகள், கு. பகவதி, பக். 152, ரூ. 40

*1983இல் வெளிவந்ததன் மறுபதிப்பு*

465. கருவூரார் பலதிரட்டு, சூ.நிர்மலாதேவி, பக். 277, ரூ. 70

*1982இல் வெளிவந்ததன் மறுபதிப்பு*

466. **தமிழக நாட்டுப்புறக் கலைகள், ஏ.என். பெருமாள், பக். 228, ரூ. 55**

*1980இல் வெளிவந்ததன் மறுபதிப்பு*

467. **தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கைகளும், க. காந்தி, பக். 416, ரூ. 100**

*1980இல் வெளிவந்ததன் மறுபதிப்பு*

468. **சங்கத் தமிழர் வழிபாடும் சடங்குகளும், மு. சண்முகம் பிள்ளை, பக். 368, ரூ. 85**

*1996 இல் வெளிவந்ததன் மறுபதிப்பு.*

469. **தமிழர் திருமணம், வி.சி. சசிவல்லி, பக். 360, ரூ. 85**

*1985இல் வெளிவந்ததன் மறுபதிப்பு*

470. **தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் – இலக்கியம், ஜீன் லாறன்ஸ், கு. பகவதி (பதி), பக். 360, ரூ. 100**

*1997ஆம் ஆண்டு நடத்திய நிறுவன வெள்ளிவிழாக் கருத்தரங்கில் படிக்கப்பட்ட இலக்கியம் சார்ந்த 36 கட்டுரைகளின் தொகுப்பு.*

471. **சங்கர நமச்சிவாயர், அ. தாமோதரன், பக். 198, ரூ. 60**

*நன்னூலுக்குச் சங்கர நமச்சிவாயர் வரைந்த உரை மீதான ஆய்வு*

472. **Agreement in Dravidian Langugesm, B.Ramakrishnan Reddy (ed) P. 256, Rs.100**

Linguistic analysis of Dravidian languages in 17 articles.

473. **சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும், வ. ஜெயா, (அ.சொ.), பக். 112, ரூ. 30**

*சங்க இலக்கியம் கண்ட பெண் புலவர்களின் இலக்கிய மொழி, கருத்து, வெளிப்படுத்திய சமுதாயம் என்பனவற்றைப் பேசுவது.*

474. **அறிவியல் தமிழ் அறிஞர் பெ.நா. அப்புசுவாமி, சா. கிருட்டின மூர்த்தி, மு. வளர்மதி, ஆ. தசரதன் (பதி), பக். 216, ரூ. 60**

*பெ.நா. அப்புசுவாமியின் படைப்புகளை, தமிழ்ப்பணி மீதான ஆய்வு.*

# 2004

**475. இக்கால உலகிற்கு திருக்குறள், தொகுதி – 1, (தொகு) முனைவர் தி.சே. சுப்பராமன், முனைவர் சேயோன் (பதிப்பாசிரியர்கள்) முனைவர் சா. கிருட்டினமூர்த்தி, (பதி), பக். 274, ரூ. 80/–**

*இக்கால உலகிற்கு திருக்குறளின் தேவை என்ற பொருண்மையில் அண்ணா பல்கலைக்கழகமும், மயிலைத் திருவள்ளுவர் தமிழ்ச்சங்கமும் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் இணைந்து, நடத்திய பன்னாட்டுக் கருத்தரங்குக் கட்டுரைகளின் தொகுப்பு, அறிவியல், பொறியியல் தொழில்நுட்பம், மருத்துவம், மேலாண்மை எனும் தலைப்புகளில் 39 கட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.*

**476. இக்கால உலகிற்கு திருக்குறள், தொகுதி–2, (தொகு) மேலது, பக். 288, ரூ. 85**

*பொருளாதாரம்,அரசியல், மத, நல்லிணக்கம், இல்லறம், சமுதாயநோக்கு எனும் தலைப்புகளில் 43 கட்டுரைகள் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன.*

**477. இக்கால உலகிற்கு திருக்குறள், தொகுதி–3, (தொகு) மேலது, பக். 322, ரூ. 95**

*சமுதாய நோக்கு, பிறமொழி இலக்கிய ஒப்புமைகள், பொது எனும் பகுப்பின் கீழ் 51 கட்டுரைகள் இத்தொகுதியில் இடம் பெற்றுள்ளன.*

**478. நாடகவியல், வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார் (பரிதிமாற் கலைஞர், பக். 232, ரூ. 70**

*இந்நாடகவியல் பாயிரம், நூல் எனத் தொடங்கிப் பொது இயல்பு, சிறப்பியல்பு, உறுப்பியல்பு, நடிப்பியல்பு என்று நான்கு பொருண்மைகளில் நாடகத்தைப்பற்றி விரிவாக ஆராய்கிறது.*

**479. நாவல் கலையியல், இரா. பாலசுப்பிரமணியன், (அ.சொ.), பக். 168, ரூ. 50**

*நாவல் பற்றிய அனைத்துப் படைப்புக் கூறுகளையும் கொள்கை அளவில் வெளிப்படுத்திக் காட்டும் நூல்.*

**480. கார் நாற்பது, களவழி நாற்பது, இன்னா நாற்பது, நன்னெறி (ஆங்கில மொழிபெயர்ப்புடன் (NAANARPATHU AND NANNERI) Translated by Poet Desini, P. 105. Rs.30**

1) Rains: Forty, (2) Battle-FieldForty (3) The(Miserable) unpleasant Forty (4) The (Good) Sweet.Forty (5) The Righteous Path *என்ற தலைப்புகளில் ஆங்கில மொழிபெயர்ப்பில் இடம் பெற்றுள்ளன.*

**481. பண்டைத் தமிழ் எழுத்துக்கள், தி.நா. சுப்பிரமணியன், (அ.சொ.), பக். 134, ரூ. 40.**

*பண்டைத் தமிழ் நாட்டில் பழக்கத்திலிருந்த சித்திர எழுத்துகள் தொடக்கமாக பிராமி, கிரந்தம், வட்டெழுத்து முதலிய தமிழ் எழுத்துக்களையும், பிறமொழி எழுத்துக்களையும் ஒப்பு நோக்கும் ஆய்வு. 12 கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.*

**482. திராவிட மொழி இலக்கியங்கள், ச.வே.சுப்பிரமணியன், பக். 640, ரூ. 180**

*திராவிட மொழிகளான தமிழ், மலையாளம், கன்னடம், தெலுங்கு, குடகு, பிராய்கூ முதலிய மொழிகளையும், இம் மொழிகளில் உள்ள இலக்கியங்களையும் ஆராய்ந்து 16 கட்டுரைகளாக இந்நூலில் வழங்கியுள்ளார்.*

**483. தமிழகத்தின் வரிவடிவங்கள், சி.கோவிந்தராசனார், (அ.சொ.), பக். 100, ரூ. 30**

*தமிழகத்தின் வரிவடிவங்களை பற்றி விளக்குகிறார். இந்நூலில் 87 பொருண்மைகளில் தமிழ் எழுத்துக்களின் வரிவடிவங்களை ஆராய்ந்துள்ளார்.*

**484. Studies in Manimekalai - N.Balusamy , P. 170. Rs. 70**

The author has briefly examined the age of Manimekalai, and discussed about the epical qualities of Manimekalai in its several aspects.

**485. தட்சணாமூர்த்தி குருமுகம் 100, தி. மகாலட்சுமி, பக். 164, ரூ. 50.**

*தமிழர் கண்ட சிறந்த மருத்துவமாக சித்த மருத்துவம் விளங்குகிறது. யோகம், ஞானம், மருத்துவம், வாதம், கற்பம் ஆகியவற்றைப் பற்றி விளக்குகிறது.*

**486. அருந்தமிழ் அறிஞர் அ.சா.ஞா., ச. கிருஷ்ணமூர்த்தி, ச. சிவகாமி (பதி), பக். 176, ரூ. 50.**

*அ.ச. ஞானசம்பந்தன் அவர்களின் வாழ்க்கைப் பயணம், அ.ச. ஞாவும் திருக்குறளும், இலக்கியத்திறனாய்வு நூல்களும் சிலப்பதிகார ஆய்வு, அழகியலும் ஆன்மீகமும் என்ற தலைப்புகளில் ஆறு கட்டுரைகள் அடங்கியுள்ளன.*

**487. நாவலர் ந.மு. வேங்கடசாமி நாட்டார், ச. கிருஷ்ணமூர்த்தி ச. சிவகாமி (பதி), பக். 168, ரூ. 50**

*ந.மு. வேங்கடசாமி நாட்டார் அவர்களின் வாழ்க்கை வரலாறு, பதிப்புத்திறன், உரைத்திறன், திறனாய்வுத் திறன், தமிழ்ப் பண்பாடு, பல்துறைச் சிந்தனை பற்றிய ஆறு ஆய்வுக் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.*

**488. பாரதவெண்பா, பண்டித அ. கோபாலையர் (பதி), பக். 280, ரூ. 80**

*வெண்பா யாப்பில் அமைந்த பாரதவெண்பா என்ற இந்தநூல் மறுபதிப்பாக வெளிவந்துள்ளது.*

**489. உலகத் தமிழிலக்கிய வரலாறு (தொன்மை முதல் கி.பி. 500 வரை) தமிழண்ணல், பக். 189, ரூ. 45**

*தமிழிலக்கியத் தொன்மை ஒரு நடுநிலைப் பார்வையோடு ஆராயப்பட்டுள்ளது. சங்க முற்காலம் தொடங்கி வச்சிர நந்தியின் திரமிள சங்கம் வரையில் விளக்கப்பட்டுள்ளது.*

**490. உலகத் தமிழிலக்கிய வரலாறு (கி.பி. 501 – கி.பி. 900) சோ.நா. கந்தசாமி, பக். 298, ரூ. 70**

*கி.பி. 501 கி.பி.900 என்ற காலப்பகுதிக்குரிய இலக்கிய வரலாறு ஆராயப்பட்டுள்ளது. அறநூல்கள் முதல் நிகண்டுகள் வரை கால அடிப்படையில் அமைக்கப்பட்டுள்ளன.*

**491. ஆராய்ச்சிப் பேரறிஞர் தி.வை. சதாசிவப்பண்டாரத்தார். சா. கிருட்டினமூர்த்தி, ச. சிவகாமி (பதி), பக். 152, ரூ. 45.**

*சதாசிவ பண்டாரத்தார் அவர்களின் வாழ்க்கை வரலாறு, இவர் எழுதிய இலக்கிய வரலாற்று நூல்கள், தமிழக வரலாற்றுக் களத்தில் பண்டாரத்தாரின் பங்களிப்பு பற்றிய ஆறு ஆய்வுக் கட்டுரைகள் அடங்கியுள்ளன.*

**492. விவிலியத் தமிழ், அ. ஆலிஸ், (அ.சொ.) பக். 144, ரூ. 40**

*விவிலியத்தில் இடம் பெறும் சொல்லாட்சி, தொடரமைப்பு, உத்திகளும் மொழியமைப்பும், கருத்தோட்டமும் மொழி அமைப்பும் ஆராயப்பட்டுள்ளன.*

**493. அருந்தமிழ் நூற் காவலர் அடிகளார், வே.இரா. மாதவன், (அ.சொ.), பக். 192, ரூ. 55.**

*மறைமலையடிகள் பற்றிய வாழ்க்கைக் குறிப்புகள், அவர்கள் நிகழ்த்திய சொற்பொழிவுகள். சங்க இலக்கிய ஆராய்ச்சிகள் போன்றவற்றை உள்ளடக்கியதாக அமைந்துள்ளது.*

**494. தணிகைமணி வ.சு.செங்கல்வராய பிள்ளை, (பதி), சா. கிருட்டினமூர்த்தி, ச. சிவகாமி, பக். 168, ரூ. 50.**

*தணிகை வ.சு.செங்கல்வராய பிள்ளை அவர்களின் வாழ்க்கை வரலாறு, இலக்கியக் கொடை, பகுப்பாய்வுத் திறன், ஆய்வுத்திறன், உரைநெறி, உரைத்திறன் பற்றிய ஆறு ஆய்வுக் கட்டுரைகள் அடங்கியுள்ளன.*

**495. ம.பொ.சி.யின் பார்வையில் தமிழ்மொழி இலக்கியப் பண்பாடு, பெ.சு. மணி, (அ.சொ.), பக். 104, ரூ. 30.**

*ம.பொ.சியின் பார்வையில் தமிழ்மொழி, தமிழ் இலக்கியம், தமிழ்ப் பண்பாடு என்ற தலைப்புகளின் வழி ஆராயப் பட்டுள்ளது.*

**496. குமரமலைப் பிள்ளைத் தமிழ், வீரபத்திரக் கவிராயர் (ஆசி.) த. பூமிநாகநாதன் (பதி), பக். 272, ரூ. 75.**

*குமரமலைப் பிள்ளைத் தமிழ் மூலமும் உரையும் பதவுரை, பொழிப்பு, அருஞ்சொற்பொருள் என்ற வடிவில் விளக்கப் பட்டுள்ளன.*

**497. மூதறிஞர் மு. இராகவையங்கார், சா.கிருட்டினமூர்த்தி, ச. சிவகாமி, (பதி), பக். 144, ரூ. 40**

*மு. இராகவையங்காரின் வாழ்க்கை வரலாறு, மொழிப் பற்றும் நாட்டுப்பற்றும், பதிப்புப்பணி, புராண, இதிகாச ஆய்வுகள், பண்டைத் தமிழர் பற்றிய ஆய்வுகள், மொழியியல் கோட்பாடுகள் செந்தமிழும் ஆகிய பொருண்மை குறித்த மு. இராகவையங்காரும், எழுவரின் கருத்தரங்கக் கட்டுரைகள் அடங்கியுள்ளன.*

498. **சிவக்கவிமணி சி.கே. சுப்பிரமணிய முதலியார் (பதி), சா. கிருட்டினமூர்த்தி, ச. சிவகாமி (பதி), பக். 128, ரூ. 35**

*சி.கே. சு.வின் வாழ்க்கை வரலாறு, சேக்கிழாரும், சி.கே.சு.வும், பெரியபுராணப் பதிப்புப் பணிகள், உரைத்திறன், சித்தாந்தப் புலமை, சட்டப் புலமை என்ற தலைப்புகளின் கீழ் அறுவரின் கருத்தரங்கக் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.*

499. **தொல்லியல் நோக்கில் சங்ககாலம், கா. ராஜன், பக். 160, ரூ. 70.**

*இந்நூல் மறுபதிப்பாக வெளிவந்துள்ளது. சங்க இலக்கியம் சமகாலத்திய தமிழ்ச்சமூகத்தைப் பற்றி ஏராளமான தரவுகள் இருப்பினும், அது அக்காலச் சமூகத்தின் பன்முகத்தை முழுமையாக வெளிக்காட்டவில்லை என்பதை தொல்லியல் ஆராய்ச்சியோடு விளக்கப்பட்டுள்ளன.*

500. **வளர்ச்சிப் பாதையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், அன்னிதாமசு, மு. வளர்மதி (பதி), பக். 448, ரூ. 200**

*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் ஆய்வுப் பணிகள் மற்றும் அதன் வளர்ச்சி நிலை தொடக்கம் முதல் இன்று வரை நடைபெற்ற பணிகள் குறித்த ஆவண நூல்.*

501. **இ.ப.த.ம.ஆய்வுக்கோவை 2004, தொகுதி–1, சிற்பி பாலசுப்பிர மணியம், ஒய்.டென்னிசன், சிலம்பு நா.செல்வராசு, பெ. சுபாசு சந்திரபோசு, சா. கிருட்டினமூர்த்தி (பதி), பக். 376, ரூ. 75**

*2004 இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நிகழ்ந்த இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் 35ஆம் கருத்தரங்க இலக்கியவியல் தொடர்பான 80 கட்டுரைகளின் தொகுப்பு.*

502. **இ.ப.த.ம.ஆய்வுக்கோவை 2004, தொகுதி–2, சிற்பி பாலசுப்பிர மணியம் + ஒய்.டென்னிசன், சிலம்பு நா.செல்வராசு, பெ. சுபாசு சந்திரபோசு, சா. கிருட்டினமூர்த்தி (பதி), பக். 300, ரூ. 75**

*2004 இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நிகழ்ந்த இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற 35ஆம் கருத்தரங்க இலக்கணவியல் தொடர்பான 67 கட்டுரைகளின் தொகுப்பு.*

503. **இ.ப.த.ம.ஆய்வுக்கோவை 2004, தொகுதி–3, சிற்பி பாலசுப்பிர மணியம், ஒய்.டென்னிசன், சிலம்பு நா.செல்வராசு, பெ. சுபாசு சந்திரபோசு, சா. கிருட்டினமூர்த்தி (பதி), பக். 274, ரூ. 75**

*2004இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நிகழ்ந்த இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் 35ஆம் கருத்தரங்க பண்பாட்டியல் தொடர்பான 59 கட்டுரைகளின் தொகுப்பு.*

504. **இ.ப.த.ம. ஆய்வுக்கோவை 2004, தொகுதி–4, சிற்பி பாலசுப்பிர மணியம், ஒய்.டென்னிசன், சிலம்பு நா.செல்வராசு, பெ. சுபாசு சந்திரபோசு, சா. கிருட்டினமூர்த்தி (பதி), பக். 392, ரூ. 200**

*2004 இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நிகழ்ந்த இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் 35ஆம் கருத்தரங்க சமயவியல் தொடர்பான 83 கட்டுரைகளின் தொகுப்பு.*

505. **இ.ப.த.ம.ஆய்வுக்கோவை 2004, தொகுதி–5, சிற்பி பாலசுப்பிர மணியம், ஒய்.டென்னிசன், சிலம்பு நா.செல்வராசு, பெ. சுபாசு சந்திரபோசு, சா. கிருட்டினமூர்த்தி (பதி), பக். 489, ரூ. 200**

*2004 இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நிகழ்ந்த இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் 35ஆம் கருத்தரங்க இக்கால இலக்கியம் தொடர்பான 104 கட்டுரைகளின் தொகுப்பு இந்நூலில் உள்ளது.*

506. **இ.ப.த.ம. ஆய்வுக்கோவை 2004, தொகுதி–6, சிற்பி பாலசுப்பிர மணியம், ஒய்.டென்னிசன், சிலம்பு நா.செல்வராசு, பெ. சுபாசு சந்திரபோசு, சா. கிருட்டினமூர்த்தி (பதி), பக். 381, ரூ. 200**

*2004 இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் நிகழ்ந்த இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் 35ஆம் கருத்தரங்க பல்துறையியல் தொடர்பான 81 கட்டுரைகளின் தொகுப்பு.*

507. **நாமக்கல் கவிஞரின் உரைநடைப் படைப்புகளில் காந்தியமும் தேசியமும், கி.ர. அனுமந்தன், (அ.சொ.), பக். 125, ரூ. 35**

*நாமக்கல் கவிஞரின் உரைநடைப் படைப்புகளான மலைக் கள்ளன், மாமன் மகள், காந்திய அரசியல், மரகதவல்லி, சாதிகளில்லாச் சமுதாயம், தமிழ் மொழியும் தமிழரசும் போன்ற பல படைப்புகளின் வழியாக சுதந்திர வேட்கையை யும், தேசப் பற்றையும், காந்தியத்தையும் உணர்த்துகின்றன.*

508. **பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர், சா. கிருட்டினமூர்த்தி, ச.சிவகாமி (பதி), பக். 112, ரூ. 35**

*தமிழறிஞர் வரிசையில் பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் அவர்களின் வாழ்க்கை வரலாறு, படைப்புத்திறன், உரைத் திறன், இலக்கிய நோக்கு, இலக்கணப் பார்வை போன்ற செய்திகள் இடம் பெற்றுள்ளன.*

509. **திருமணம் செல்வக்கேசவராய முதலியார், சா. கிருட்டின மூர்த்தி, ச. சிவகாமி, (பதி), பக். 104, ரூ. 30**

*தமிழறிஞர் வரிசையில் செல்வக்கேசவராய முதலியார் அவர்களின் வாழ்க்கை வரலாறு, படைப்புத்திறன், கம்ப நாடார், பதிப்புத்திறன், உரைநடைத்திறன் குறித்து விளக்கு கிறது.*

510. **சிரவையாதீனப் பதிப்புகள், ப.வெ. நாகராஜன், (அ.சொ.), பக். 104, ரூ. 30**

*சிரவையாதீனம் ஓர் அறிமுகம், சிரவையாதீனப் பதிப்புகள் ஆய்வு வரலாறு, சிரவையாதீனப் பதிப்பு நெறிமுறைகள். பதிப்பு என்ற நான்கு தலைப்புகளில் அமைக்கப்பட்டுள்ளது.*

511. **இலக்கிய இதழ்கள், இ.சுந்தரமூர்த்தி, மா.ரா. அரசு (பதி), பக். 400, ரூ. 110**

*1935இல் தொடங்கப்பெற்ற ஸ்ரீ சுப்ரமணிய பாரதி கவிதா மண்டலம் தொடங்கி 1991இல் உருவான சுபமங்களா உட்பட 16 இலக்கிய இதழ்களின் தனித்துவமான தன்மைகளை ஆய்ந்து 11 கட்டுரைகள் தரப்பெற்றுள்ளன.*

512. **தென்னிந்திய மருத்துவ வரலாறு, இரா. நிரஞ்சனா தேவி, பக். 408, ரூ. 115**

*ஆதிகால மருத்துவம், உலக மருத்துவம், தென்னிந்திய மருத்துவம், தமிழ்நாட்டு மருத்துவம் போன்ற செய்திகள் சிறப்பாக ஆராயப்பட்டு நூலாக்கம் பெற்றுள்ளன.*

513. **வலங்கை மாலையும் சான்றோர் சமூகச் செப்பேடுகளும், சீ. இராமச்சந்திரன் (அ.சொ.), பக். 240, ரூ. 70**

*வரலாற்றுப்பார்வையில் வலங்கைமாலை, அவல் பூந்துறைச் சான்றோர் மடச்செப்பேடு, திருவிடை மருதூர்ச் சான்றோர் மடச்செப்பேடு ஆகியன குறித்து ஆராயப்பட்டுள்ளன.*

**514. தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள், இலக்கணம், மொழியியல், செ. ஜீன் லாறன்ஸ், கு.பகவதி, (பதி.), பக். 376, ரூ. 105**

*இலக்கணம் மொழியியல் சார்ந்த 42 கட்டுரைகள் நூலாக்கம் பெற்றுள்ளன.*

**515. தமிழெனப்படுவது, இரா. கோதண்டராமன், பக். 408, ரூ. 115.**

*இரா. கோதண்டராமன் அவர்களின் ஆய்வுக் கட்டுரைகள் மரபு இலக்கணம், மொழியியல் சிந்தனை என்ற பொருண்மையின் கீழ் நூலாக்கம் பெற்றுள்ளன.*

**516. சங்கத் தமிழர் வாழ்வியல், மு. சண்முகம் பிள்ளை, பக். 352, ரூ. 100.**

*சங்கத் தமிழர்களின் வாழ்வியல் கூறுகளை முறையாக 10 தலைப்புகளில் தொகுத்தளிக்கிறது.*

**517. பண்டைத் தமிழக வரைவுகளும் குறியீடுகளும் இராசு. பவுன்துரை, (அ.சொ.), பக். 280, ரூ. 80.**

*தமிழ், பிராமி எழுத்துருவாக்க முயற்சிகள் ஏற்பட்ட காலத்தின் பின்புலம் ஆய்வுக்குரியனவாக அமைந்து, தமிழ் மொழியின் வரலாறு குறித்த ஆய்வுக்குரிய தரவுகளை அளிக்கும் தொடக்க ஆய்வாகவும் இந்நூல் அமைகிறது.*

**518. இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் தொகுதி – 3, இ. சுந்தரமூர்த்தி, மா.ரா. அரசு, (பதி), பக். 200, ரூ. 60.**

*தத்துவபோதினி, ஜனவிநோதிநி, செந்தமிழ், சித்தாந்தம், குமரன், ஹனுமான், கல்கி ஆகிய இதழ்கள் பற்றிய அரிய செய்திகளை ஆய்வு நோக்கில் தருகின்றது.*

**519. இந்திய விடுதலைக்கு முந்தைய தமிழ் இதழ்கள் தொகுதி – 3, இ. சுந்தரமூர்த்தி, மா.ரா. அரசு, (பதி), பக். 160, ரூ. 45.**

*விவேகபோதினி, கலைமகள், புதுவை கலாநிலையம், பிரசன்ன விகடன், கலைமகள்(சென்னை), மணிக்கொடி ஆகிய இதழ்கள் பற்றிய அரிய செய்திகளை ஆய்வு நோக்கில் தருகின்றது.*

**520. இஸ்லாமியத் தமிழ்ப் புதினங்கள் சித்திரிக்கும் அறியப்படாத வாழ்வும் பண்பாடும், மு. அப்துல் சமது, (அ.சொ.), பக். 136, ரூ. 40.**

*அரிய இஸ்லாமியப் பண்பாடுகளை உலகறியச்செய்ய இந்நூல் துணையாய் நிற்கிறது.*

**521. பாரதியின் சமுதாயச் சிந்தனைகள், க. இளமதி சானகிராமன், (அ.சொ.), பக். 80, ரூ. 25.**

*சமுதாய மாற்றத்திற்கான தீர்வுகளைக் கூறிய பாரதியின் சமுதாயச் சிந்தனைகள் ஆய்வு நோக்குடன் வடிவமைக்கப் பட்டுள்ளன.*

**522. சமூகத்திலும் இலக்கியத்திலும் ஊனமுற்றோர். அன்னிதாமசு, பக். 288, ரூ. 80.**

*தமிழிலக்கியத்தில் ஊனமுற்றோர் (2002 ) என்ற முன் வந்த நூலின் தொடர்ச்சியாக இந்நூல் அமைகிறது.*

**523. தெ.பொ.மீனாட்சி சுந்தரனாரின் தமிழ்த் தொண்டும் மொழியியல் பங்களிப்பும், கோ.சீனிவாசவர்மா, (அ.சொ.), பக். 74, ரூ. 25.**

*தெ.பொ.மீ அவர்களின் தமிழ்த்தொண்டு பற்றியும், அவரது மொழியியல் பங்களிப்புப் பற்றியும் விரிவாக ஆராய்ந்துள்ளது.*

**524. சங்கத் தமிழரின் மனிதநேய மணிநெறிகள், சாலினி இளந் திரையன், (அ.சொ.), பக். 140, ரூ. 45.**

*மனித நேய இலக்கியம் எனச் சங்க இலக்கியத்தை இனம் காணும் நூலாசிரியர், தொல் தமிழர் திட்டமிட்ட கொள்கை யினராக வாழ்ந்தனர் எனக் காட்டுகிறது.*

**525. மொழிபெயர்ப்புத் தமிழ், ச. சிவகாமி, பக். 200, ரூ. 60.**

*மொழிபெயர்ப்புத்தமிழ் எனும் விரிந்து பரந்த அளவில் ஆய்வுக் கண்ணோட்டத்துடன் ஏழு தலைப்புகளில் கூடுதல் தகவல்களை வழங்குகிறது.*

**526. தொல்காப்பியத் தொடரியல், செ.வை. சண்முகம், (அ.சொ.), பக். 408, ரூ. 120.**

தொல்காப்பியச் சொல்லதிகாரம் தொடரியல் செய்திகளைக் கொண்டிருக்கின்ற நிலைகளை இந்நூல் பத்துத் தலைப்புகளில் விளக்குகின்றது. உரையாசிரியர்களின் தொடரியல் கோட்பாடு களையும் இறுதியில் ஆராய்கின்றது.

**527. சுவடிப் பதிப்புக்கலை வழிகாட்டி டாக்டர் உ.வே.சா., பூ. சுப்பிர மணியம், பக். 172, ரூ. 50.**

இக்காலப் பதிப்பாசிரியர்களுக்குப் பெரிதும் வழிகாட்டுதற் குரிய பதிப்பு முறைகள் பலவற்றைத் தாங்கி நிற்பவையாகும். அம்முறைகளைத் தக்கச் சான்றுகளுடன் ஆறு இயல்களில் எடுத்துக்காட்டுவதாக இந்நூல் அமைகின்றது.

**528. இலக்கண நூல்களில் கருத்து வளர்ச்சி, பெ. சுயம்பு, (அ.சொ.), பக். 128, ரூ. 35**

தொல்காப்பியம் முதல் காலந்தோறும் இலக்கண நூல்களில் ஏற்பட்ட கருத்து வளர்ச்சியைக் காட்டும் நூல்.

## 2005

**529. வ.உ.சி.ஒரு பன்முகப் பார்வை, எஸ்.கண்ணன், (அ.சொ.), பக். 72, ரூ. 25**

வ.உ.சியைப் பல்வேறு கோணங்களில் அணுகிப் பார்த்து அரிய கருத்துகளை வழங்கியுள்ளது இந்நூல்.வ.உ.சி படைப்பு களின் பட்டியலும் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளது.

**530. தமிழில் பிற துறைக் கோட்பாட்டாய்வுகள் வரலாறும் மதிப்பீடும், ம. மதியழகன், (அ.சொ.), பக். 74, ரூ. 25**

வரலாறு, சமூகவியல், மானிடவியல்,உளவியல், மொழி யியல், தத்துவவியல் போன்ற துறைகளின் செல்வாக்கையும், மார்க்சியம், அமைப்பியல், பின் அமைப்பியல், தலித்தியம், பெண்ணியம் போன்ற கோட்பாட்டாய்வுகளையும் இந் நூல் மதிப்பீடு செய்துள்ளது.

531. **தமிழ்க்கடல் இராய சொக்கலிங்கம், சா.கிருட்டினமூர்த்தி ச. சிவகாமி (பதி), பக். 104, ரூ. 30**

*இராய. சொக்கலிங்கம் அவர்களின் வாழ்க்கை வரலாற்றையும், அவரின் தமிழ்ச் சிந்தனை, காந்தியச் சிந்தனை, காப்பிய ஆய்வு, பதிப்புப் பணி, உரைப்பணி, இதழாசிரியர் பணி என அவரின் பன்முகச் செயல்பாடுகளையும் தமிழுலகிற்கு அளித்துள்ளது.*

532. **தமிழ் இலக்கியத்தில் மனிதநேயம், சூ. நிர்மலாதேவி (பதி), பக். 388, ரூ. 115**

*'தமிழ் இலக்கியத்தில் மனிதநேயம்' எனும் பொருண்மையில் 2003ஆம் ஆண்டு (சனவரி 3 முதல் டிசம்பர் 26 வரை) நடத்தப்பெற்ற ஓராண்டு வெள்ளிக்கிழமைக் கருத்தரங்குகளின் கட்டுரைகளின் தொகுப்புநூல் இது.*

533. **திருக்குறளில் பொதுநிலை உத்திகள், பொன். சௌரிராசன், (அ.சொ.), பக். 104, ரூ. 30**

*திருக்குறளில் காணப்படும் பொதுநிலை, சிறப்பு நிலை, தனிநிலை என சுட்டுதற்குரிய சில உத்திகளை மையமாகக் கொண்டுள்ளது.*

534. **தமிழ் உரைநடையும் கிறித்தவர் பங்களிப்பும், ம.செ. இரபிசிங், (அ.சொ.), பக். 64, ரூ. 20**

*உரைநடை என்னும் இலக்கிய வடிவத்தின் தோற்றம் மற்றும் வளர்ச்சிக் கூறுகளை வரலாற்றியல் ஆதாரங்களுடன் கிறித்துவ அறிஞர்களின் பங்களிப்பையும் விவரித்துக் கூறுகிறது.*

535. **சித்தாந்தச்செல்வர் க.வெள்ளைவாரணனார் (பதி), சா. கிருட்டின மூர்த்தி, ச.சிவகாமி, பக். 80, ரூ. 25**

*க. வெள்ளைவாரணனார் அவர்களின் வாழ்வியலையும், இலக்கிய, இலக்கணப் பணியையும் இசைத்தமிழ் மற்றும் பதிப்புப் பணியையும் இந்நூல் விவரிக்கிறது.*

536. **மகாவித்துவான் ரா. ராகவையங்கார் (பதி), சா. கிருட்டினமூர்த்தி, ச.சிவகாமி, பக். 96, ரூ. 30**

*மகாவித்துவான் ரா. ராகவையங்கார் அவர்களின் வாழ்க்கை வரலாற்றையும், தமிழ்ப் பணியையும்,வரலாற்று நோக்கில் அவரது பதிப்புப் பணியையும் விளக்குகின்றன.*

**537. திருவாவடுதுறைப் புராணம், வே.இரா. மாதவன் (பதி), பக். 816, ரூ. 250**

தமிழகத்தில் காவிரியால் வளம்பெற்ற சோழநாட்டு கோயில்களுள் ஒன்றான திருவாவடுதுறை பற்றிய தலவரலாற்று இலக்கியமாகத் திகழ்கிறது. மேலும் திருமூலர், திருமந்திரத்தை இத்தலத்தில் வழங்கியதாகவும் தேவார மூலம், சித்தர்கள் மற்றும் மன்னர்கள் பலர் இத்தலத்தில் வந்து பேறுபெற்றதாகவும் பல வரலாற்றுச் செய்திகள் காணப்படுகின்றன.

**538. காஞ்சிபுரம் (கி.பி.6ஆம் நூற்றாண்டிற்கு முன்), கு. பகவதி, பக். 218, ரூ. 65**

கி.பி. 6ஆம் நூற்றாண்டிற்கு முன் வழங்கப்பட்ட காஞ்சிபுரத்தில் வரலாற்றை அறிவதற்கான நூல். காஞ்சி பெயராய்வு, அமைப்பு, ஆட்சியாளர்களும் ஆட்சிமுறையும், வாழ்வியல் போன்றவற்றை எடுத்துக்காட்டும் ஆய்வு.

**539. பெரியபுராணம், தி.ந. இராமச்சந்திரன், (அ.சொ.), பக். 178, ரூ. 55**

பெரியபுராணம் திருமுறைகளின் கவசம் என்கிறார். முதல் 11 திருமுறைகளின் முடிவே பெரியபுராணம் என்கிறார். பெரியபுராணத்தை பன்முக நோக்கில் ஆய்வு செய்துள்ளார். மொழிபெயர்ப்பு பதிப்பு, இடைச் செருகல்கள் போன்ற பல்வேறு குறிப்புகளைத் தந்துள்ளார்.

**540. சைவ சித்தாந்தத்தில் ஆன்மக் கொள்கை, வை. இரத்தினசாமி, (அ.சொ.) ,பக். 214, ரூ. 65**

சைவ சித்தாந்தத்தின் வாழ்வியல் நோக்கும், ஆன்மக் கொள்கையும் பற்றிய ஆய்வாக வெளிவந்துள்ளது.

**541. திராவிட இயக்க இதழ்கள் (தொகுதி–1), இ. சுந்தரமூர்த்தி, மா.ரா. அரசு (பதி), பக். 216, ரூ. 60**

திராவிட இயக்க இதழ்கள் திராவிடன், புதுவை முரசு, விடுதலை, திராவிட நாடு, முரசொலி, போர்வாள், புதுவாழ்வு ஆகியன குறித்த கட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

**542. இதழாளர் பெரியார், அ. இறையன், (அ.சொ.), பக். 216, ரூ. 60**

*பெரியாரைப் பற்றியும் அவர் பொறுப்பேற்று நடத்திய (அ) தொடங்கிய இதழ்கள் குடியரசு, திராவிடன், ரிவோல்ட், புரட்சி, பகுத்தறிவு, விடுதலை, ஜஸ்டிசைட், உண்மை, மாடர்ன் ரேஷனலிஸ்ட் போன்ற இதழ்கள் பற்றியும் இவ்விதழ்களில் பெரியாரின் பங்களிப்புப் பற்றியும் கூறுவதாக அமைந்துள்ளது.*

**543. திராவிட இயக்க இதழ்கள், தொகுதி–2, இ. சுந்தரமூர்த்தி, மா.ரா. அரசு (பதி), பக். 196, ரூ. 75**

*திராவிட இயக்க சிந்தனைகளைத் தாங்கி வெளிவந்த ஒரு பைசாத் தமிழன், நகரதூதன், தனிஅரசு, நம்நாடு, கலைமன்றம், கதிர் ஆகிய இதழ்கள் குறித்தும், பாரதிதாசன், சி.பி.சிற்றரசு, வே. ஆனைமுத்து, டி.கே. சீனிவாசன் ஆகிய இதழாளர்கள் குறித்தும் இடம்பெற்றுள்ளன.*

**544. தமிழர் கண்ட தாவரவியல், வே.நெடுஞ்செழியன், (அ.சொ.), பக். 144, ரூ. 40**

*தாவரவியலின் அடிப்படைக் கொள்கைகள் விவரிக்கப்பட்டுள்ளன. தொல்காப்பியம், சங்க இலக்கியங்கள் வாயிலாக பண்டைய தமிழர்களின் தாவரவியல் அறிவை எடுத்துக் காட்டுகிறது.*

**545. உலகத் தமிழிலக்கிய வரலாறு(கி.பி. 1851 கி.பி. 2000), க. சிவத்தம்பி, முனைவர் ச.சிவகாமி, முனைவர் இராம. குருநாதன் (பதி), பக். 631, ரூ. 180**

*உலகத் தமிழிலக்கிய வரலாற்றின் நிறைவுப் பகுதியான (தொகுதி 6, 1851 - 2000) தமிழகம், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் எனத் தாயகத்திலும் அண்டை நாடுகளிலும் மலர்ந்துள்ள தமிழ்ப் படைப்பும், ஆய்வும் தமிழின் பன்முக எழுச்சியை வளர்ச்சியை இன்னும் மேற்செய்யப்பட வேண்டிய முறைமைகளைக் காட்டுகின்றது இந்நூல்.*

**546. மௌனத்தின் அதிர்வுகளும் மொழியும் – பெண், தேவதத்தா (பதி), பக். 126, ரூ. 40**

*மேலை நாட்டில் பெண்ணியம் தோன்றி வளர்ந்த வரலாறு, இந்தியாவில் பெண் விடுதலை இயக்கங்களின் செயல் பாடுகள், பெண்மொழி உருவாக்கம் மற்றும் பயன்பாடு, பெண் கவிஞர்களின் கவிதைகளில் காணப்படும் பெண்மொழி ஆகியன விரித்துரைக்கப்பட்டுள்ளன.*

**547. தமிழரின் மரபுச் செல்வங்கள் அறிவியல் தொழில்நுட்பம், தொகுதி–1, சா. கிருட்டினமூர்த்தி (உதவிப் பதி.), தி. மகாலட்சுமி (பதி), பக். 298, ரூ. 90**

*இலக்கியம், மொழி, பண்பாடு, கலை, சமுதாயம், வரலாறு, பொருளாதாரம், கல்வி, தொழில் ஆகிய துறைகளில் தமிழரின் மரபுச்செல்வங்கள் எனப் போற்றப்பட்ட அறிவியல் சிந்தனை களை எடுத்துக்கூறும் வகையில் 1979ஆம் ஆண்டு நிறுவனத் தில் நடத்தப்பட்ட தேசியக் கருத்தரங்கில் வழங்கப்பட்ட 32 கட்டுரைகள் அடங்கிய நூல் இது. இதில் 17 கட்டுரைகள் ஆங்கிலத்தில் வழங்கப்பட்டுள்ளன.*

**548. தமிழரின் மரபுச் செல்வங்கள் அறிவியல் தொழில்நுட்பம், தொகுதி–2, சா. கிருட்டினமூர்த்தி (உதவிப் பதி.), தி. மகாலட்சுமி (பதி), பக். 352, ரூ. 100**

*மேற்படி தேசியக் கருத்தரங்கில் வழங்கப்பட்ட 30 கட்டுரைகள் அடங்கிய நூல் இது. இதில் 11 கட்டுரைகள் ஆங்கிலத்தில் வழங்கப்பட்டுள்ளன.*

**549. தமிழிலக்கிய வகைமையியல் (தொகுதி–1), சா. கிருட்டினமூர்த்தி, ச.சிவகாமி, (சிராஜ் உன்னிசாநாசர், லொ.ஆ. உமா மஹேஸ்வரி, அபிதா சபாபதி (பதி), பக். 456, ரூ. 130**

*உலகத் தமிழ் இலக்கிய வகையும் வடிவும் என்ற தலைப்பில் நடைபெற்ற இரண்டு நாள் பன்னாட்டு கருத்தரங்கத்தினை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும், எம்.ஜி.ஆர்.ஜானகி மகளிர் கலை அறிவியல் கல்லூரியும் இணைந்து நடத்தியது. இதில் இலக்கியத்தின் தோற்றம், இலக்கிய வகைமை, பாடுபொருள், இலக்கியப் பின்புலங்கள் ஆகியவை ஆராய்ந்து விளக்கும் 60 கட்டுரைகள் வெளியிடப்பட்டுள்ளன.*

**550.** **தமிழிலக்கிய வகைமையியல் (தொகுதி–2), சா. கிருட்டினமூர்த்தி, ச.சிவகாமி, சிராஜ் உன்னிசாநாசர், லொ.ஆ.உமாமஹேஸ்வரி, அபிதா சபாபதி (பதி), பக். 400, ரூ. 115**

*மேற்படி நடத்தப்பட்ட கருத்தரங்கின் 51 கட்டுரைகளின் தொகுப்பு.*

**551.** **தமிழிலக்கிய வகைமையியல் (தொகுதி–3), சா. கிருட்டினமூர்த்தி, ச.சிவகாமி, சிராஜ் உன்னிசாநாசர், லொ.ஆ.உமா மஹேஸ்வரி, அபிதா சபாபதி (பதி), பக். 520, ரூ. 150**

மேற்படி நடத்தப்பட்ட கருத்தரங்கின் 70 கட்டுரைகளின் தொகுப்பு.

**552.** **ஏ.என். சிவராமனின் பத்திரிகை உலகம், பொன். தனசேகரன், (அ.சொ.), பக். 96, ரூ. 30**

*தினமணியின் ஆசிரியராக இருந்து பணியாற்றிய ஏ.என். சிவராமன் அவர்களின் வாழ்க்கைக் குறிப்பு, அவர் தினமணியின் ஆசிரியரான அனுபவம், வெளிநாட்டு அனுபவம், எழுத்தாற்றல், சிந்தனைத் திறன், அவர் எழுதிய நூல்கள் ஆகியன குறித்து விளக்கும் நூல்.*

**553.** **மக்கள் நேயச் சுயமரியாதை, முனைவர் பொன். கோதண்ட ராமன் (பொற்கோ), (அ.சொ.), பக். 94, ரூ. 30**

*பண்டைத் தமிழர் வாழ்வில் சுயமரியாதை உணர்வுகள் எவ்வாறு வெளிப்பட்டு நின்றன என்பதையும் பிராமணியத் தாக்கத்தால் தமிழர் பண்பாடு சிதைவுற்று அடிமைச்சிந்தனை இடம் பெற்றது என்பதையும் அதிலிருந்து விடுதலைப் பெற பெரியார் தமது வாழ்நாள் முழுவதும் எத்தகைய போர்க் குணத்துடன் அயராது பாடுபட்டுள்ளார் என்பதைத் தெளிவாக எடுத்துக்காட்டியுள்ளார்.*

**554.** **வேதாத்திரியத்தில் சமூகவியல் இறையியல் சிந்தனைகள், சா. கிருட்டினமூர்த்தி, ஜீ. அழகர் இராமானுஜம், (பதி), பக். 438, ரூ. 130**

*தத்துவஞானி வேதாத்திரி மகரிஷி கொள்கைகளை மையமாகக் கொண்டு முப்பத்து நான்கு கட்டுரைகள் இந்நூலில் அமைந்துள்ளன.*

555. **தமிழ் ஆய்வு இதழ்கள் (பதி) இ. சுந்தரமூர்த்தி, மா.ரா. அரசு, (பதி), பக். 168, ரூ. 50**

*இந்நூல் தொகுப்பில் சித்தாந்த தீபிகை, கலைக்கதிர்,* Tamil Culture, *தமிழ் ஆய்வு, புலமை, தமிழ்க்கலை ஆகிய தமிழாய்வு இதழ்கள் குறித்த 10 கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.*

556. **தொல்காப்பியப் பொருளதிகாரம் (கருத்துரையும் ஆங்கில மொழி பெயர்ப்பும்), அ.அ. மணவாளன், பக். 122, ரூ. 50**

*தொல்காப்பிய அகத்திணையியல், புறத்திணையியல் கருத்து மொழிபெயர்ப்பாக இந்நூல் அமைந்துள்ளது.*

557. **பெண்ணிய உளப்பகுப்பாய்வும் பெண் எழுத்தும் (அ.சொ.), செ. சாரதாம்பாள், பக். 120, ரூ. 40**

*பெண்ணியச்சிந்தனை என்பதைத் தொடக்க நிலையில் இருந்து அதன் தற்கால வளர்ச்சி வரை அமைந்த விரிவான ஆய்வு.*

558. **பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார், சா. கிருட்டினமூர்த்தி, ச. சிவகாமி, (பதி) பக். 120, ரூ. 40**

*பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியாரின் வாழ்க்கை வரலாறு, தமிழ்ப் பணிகளை எடுத்துக்காட்டும் நூல்.*

559. **பேராசிரியர் எம்.எஸ்.பூரணலிங்கம் பிள்ளை ம. இராசேந்திரன், ச. சிவகாமி, (பதி), பக். 104. ரூ. 30**

*தமிழ் மொழி வளர்ச்சிக்கு அரும்பணியாற்றிய அறிஞரான எம்.எஸ்.பூரணலிங்கம்பிள்ளையின் வாழ்க்கை வரலாறு, தமிழ் இலக்கிய வரலாறு, தமிழாய்வுகள், திருக்குறள் மொழிபெயர்ப்பு, எம்.எஸ். பூரணலிங்கம் பிள்ளை நோக்கில் இராவணன் எனும் தலைப்புகளில் ஆய்ந்து கூறப்பட்டுள்ளன.*

## 2006

560. **உலகத் தமிழிலக்கிய வரலாறு, கி.பி. 901 முதல் கி.பி. 1300, அ.அ. மணவாளன், பக். 320, ரூ. 100**

*சோழர் காலத் தமிழகத்தில் தோன்றிய தமிழ் இலக்கிய இலக்கணங்களையும், உரைகளையும், காப்பியங்களையும், ஈழத்தில் தோன்றிய நூல்களைப் பற்றியும் விரிவான ஆழமான ஆய்வுப் புதையலாக இந்நூல் அமைந்துள்ளது.*

**561. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க்கவிதை, சிற்பி பாலசுப்பிர மணியன், (அ.சொ.) பக். 280, ரூ. 80**

*இருபதாம் நூற்றாண்டில் தமிழ்க்கவிதையின் வளர்ச்சி நிலையை வரலாற்றுப் பார்வையுடன் வழங்குகிறது.*

**562. தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் செ. ஜீன்லாறன்ஸ், கு. பகவதி, (பதி), பக். 319, ரூ. 90**

*1995 உலகத்தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வெள்ளிவிழா ஆண்டினை சிறப்பிக்கும் தமிழியல் ஆய்வுகள் நாட்டுப் புறவியல், கலை, பண்பாடு என்ற தலைப்பில் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.*

**563. தமிழ் இதழ்கள் விடுதலைக்குப்பின், வே. சசிகலா, (அ.சொ.), பக். 136, ரூ. 40.**

*விடுதலைக்குப்பின் வந்த நாளிதழ்கள், கொள்கை இதழ்கள், சாதி இதழ்கள், சஞ்சிகைகள், சிறப்பு இதழ்கள் போன்றவை ஆய்வு செய்து வெளியிடப்பட்டுள்ளன.*

**564. பள்ளு இலக்கியம் மறுவாசிப்பு பிரதிக்கு வெளியே, தே. ஞான சேகரன், (அ.சொ.), பக். 254, ரூ. 75**

*மள்ளர் எனப்பட்ட தேவேந்திரகுலத்தார் பற்றிய வாய்மொழி வழக்காறுகள் மற்றும் செப்பேட்டு ஆவணங்களைத் தொகுத்தும் மறு வாசிப்பு என்ற நிலையில் பின் நவீனத்துவப் பார்வையில் இந்நூல் வழங்கப்பட்டுள்ளது.*

**565. தமிழக வானவியல் சிந்தனைகள், ப. ஐயம்பெருமாள், (அ.சொ.), பக். 120, ரூ. 35.**

*தமிழ் இலக்கியத்தில் பதிவாகியுள்ள வானவியல் சிந்தனை களைத் தற்கால வானவியல் வளர்ச்சியுடன் ஒப்பிட்டுப் பண்டைத் தமிழரின் இச்சிந்தனைகள் அவற்றுடன் பொருந்துனவற்றைச் சான்றுகளுடன் இந்நூல் விளக்குகிறது. பேரண்டம், ஓல்பர்ஸின் புதிர், தமிழர் கண்ட கோள்கள், வால்நட்சத்திரங்கள், சூரிய சந்திர கிரகணங்கள் அறிவியலின் பார்வையில் விண்மீன்கள் குறித்த செய்திகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.*

**566. பாவாணரின் ஞால முதன்மொழிக் கொள்கை, இரா. மதிவாணன் (அ.சொ.), பக். 160, ரூ. 45**

ஞால முதல்மொழித் தமிழே என்ற கருதுகோளைக் கொண்டுள்ள உலக அறிஞர்கள் பலரின் கருத்துகளையும், கண்டு பிடிப்புகளையும் சுட்டி அவற்றை மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரின் கருத்துகளோடு ஒப்பிட்டு உலக முதன்மொழி தமிழாகவே தோற்றம் பெற்றுள்ளது என நிறுவுகிறது.

**567. பெண்ணியப் படைப்பிலக்கியம், தி. கமலி, (அ.சொ.), பக். 262, ரூ. 75**

பெண்ணியம் தொடக்கம் முதல் அண்மைவரை இந்நூலில் ஆராயப்பட்டுள்ளது. புனைகதைகளில் ஆண், பெண் படைப்பாளரின் பெண்ணியக் கருத்துகள், பெண்ணியப் படைப்பாளர்களின் பெண்ணியக் கதைகளும்,கவிதைகளும் தனி இலக்கிய வகையாகப் பரிணமித்து வருகின்றபாங்கு ஆகியவை இந்நூலில் சான்றுகளுடன் வழங்கப்பட்டுள்ளன.

## 2007

**568. தமிழக எல்லைப் போராட்டங்கள், முகிலை இராசபாண்டியன், (அ.சொ.), பக். 216, ரூ. 60**

தமிழகத்தின் தென் எல்லையான குமரிமாவட்டப் பகுதி களைத் திருவிதாங்கூரிலிருந்து பிரித்துத் தமிழகத்தோடு தக்க வைத்துக் கொள்வதற்கு குமரிப்பகுதி மக்கள் நடத்திய போராட்டங்கள் மற்றும் வேங்கடம் சார்ந்த பகுதிகளைத் தமிழ்நாட்டிலிருந்து பிரிந்து செல்வதை வடதமிழக மக்கள் எதிர்த்து நடத்திய போராட்டங்களைப் பற்றியும் அரசியல் கட்சி களின் நிலைப்பாடுகளையும் இந்நூல் எடுத்துக்காட்டுகிறது.

**569. தொல்காப்பியம், எழுத்ததிகார மூலமும், நச்சினார்க்கினியர் உரையும், கணேசையர் பதிப்பு, பக். 472, ரூ. 200**

சி. கணேசையர் அவர்கள் எழுதிய உரைவிளக்கக் குறிப்பு களுடன் 1952இல் பதிப்பிக்கப்பட்டு மறுபதிப்பாக 2007இல் வெளியிடப்பட்டுள்ளது.

**570. Economic Heritage of the Tamils, (Ed) Annie Thomas, P. 304, Rs. 115**

National Seminar on the Economic Heritage of the Tamils conducted from 27th January 1993. This Volume is covering 31 articles on various topics.

**571. வாழிய செந்தமிழ், இரா. கோதண்டராமன் (அ.சொ.), பக். 496, ரூ. 140**

*இலக்கண ஆய்வு, இக்கால மொழியியல் கருத்துக்களையும் முற்கால மரபுச் சிந்தனைகளையும் அடித்தளமாகக் கொண்டு, வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு மொழியில் புதியன புகுதலும் பழையன கழிதலும் நிகழும் நிலையையும் இதன்மூலம் தமிழில் புதிய வடிவங்கள் பயன்பாட்டிற்கு வந்துள்ளமை யைத் தகுந்த சான்றுகளுடன் இந்நூல் விளக்குகின்றது.*

**572. பேராசிரியர் அ.மு. பரமசிவானந்தம் ம. இராசேந்திரன், ச. சிவகாமி, (பதி), பக். 144, ரூ. 40**

*அறிஞர் அ.மு. பரமசிவானந்தத்தின் வாழ்க்கை வரலாறு, ஆய்வும் படைப்பும், பயண இலக்கியம், நாட்டுப்புறவியல் பங்களிப்பு மற்றும் இதழியல் பணிகள் குறித்தது இந்நூல்.*

**573. திருப்புகழ் ஒளிநெறி (அருணகிரிநாதர்) தொகுதி–1, வி.சி. சசிவல்லி, பக். 320, ரூ. 90**

*திருப்புகழ்ப் பாக்களைப் பகுத்து, நுணுகிக் காணும் ஆய்வு நூல்.*

**574. திருப்புகழ் ஒளிநெறி (அருணகிரிநாதர்) தொகுதி–2, வி.சி. சசிவல்லி, பக். 322, ரூ. 90**

*மேற்படி.*

**575. திருப்புகழ் ஒளிநெறி (அருணகிரிநாதர்) தொகுதி–3, வி.சி. சசிவல்லி, பக். 280, ரூ. 80**

*மேற்படி.*

**576. பெரியாரியப் பெண்ணியம், கு.ம. இராமாத்தாள், (அ.சொ.), பக். 112, ரூ. 35**

*பெரியாரியல் நோக்கினை அடிப்படையாகக் கொண்டு பெண்ணிய நிலையை இந்நூலாசிரியர் விளக்கியுள்ளார். பெண்ணிய இயக்கம் என்பது எது?, தாய்மையின் சிறப்பு, பெண் சிசுக்கொலை, பாலியல் வன்கொடுமை, வரதட்சணைக் கொடுமை முதலானவற்றையும், பெண்கள் முன்னேற்றத்திற் காக இயற்றப்பட்ட சட்டங்களின் பட்டியலையும் இந்நூல் எடுத்துக்காட்டுகின்றது.*

**577. தொல்காப்பியம் சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும், கணேசயர் பதிப்பு, பக். 600, ரூ. 200**

*கணேசையர் எழுதிய உரை விளக்கக் குறிப்புகளுடன் 1955 இல் பதிக்கப்பட்டு மறுபதிப்பாக இந்நூல் வெளிவந்துள்ளது.*

**578. தமிழ்ப் புனைகதைகளில் உளவியல், பாத்திமா சூசைமணி (அ.சொ.), பக். 128, ரூ. 35**

*தமிழ்ப் புதினங்களில் படைப்பாளி உளவியல், சமூக உளவியல் எனப் பகுத்து சான்றாதாரங்கள் காட்டப்பட்டு விளக்கப்பட்டுள்ளது.*

**579. Tamil poetry today, K.S.Subramanian, P. 352, Rs. 150**

Tamil Poetry took a different shape during the 20th Century as free verse or vacanakavithai with structural and content freedom. Its present varient is widely known as New Poetry. The author deserves to be commended for his meticulous and sensitive translation of hundred and six poems.

**580. தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள், தொல்லியல் வரலாறு, சமூகவியல், செ. ஜீன் லாறன்ஸ், கு. பகவதி, (பதி), பக். 376, ரூ. 100**

*காலத்திற்கேற்ப தமிழ் மொழியில் ஏற்படும் வளர்ச்சிகளையும், மாற்றங்களையும் வெளிப்படுத்துவது மற்றும் தமிழ் மொழி யின் இலக்கணம், இலக்கியம், இனமேம்பாடு, பண்பாட்டு வளர்ச்சி முதலானவற்றை மையப் பொருண்மையாகக் கொண்ட 33 கட்டுரைகள் அடங்கியுள்ளன.*

**581. தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் (சமயம், தத்துவம், உளவியல்), செ.ஜீன் லாறன்ஸ், கு.பகவதி, (பதி), பக். 319, ரூ. 100**

*சமயம், தத்துவம், உளவியல் என்ற தலைப்பில் ஐந்தாவது தொகுதியாக வெளிவந்துள்ள இந்நூலில் தமிழில் 25 கட்டுரைகளும், ஆங்கிலத்தில் 3 கட்டுரைகளுமாக மொத்தம் 28 ஆய்வுக் கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.*

**582. மொழி, சமுதாய, சமயத் தளங்களில் பாவாணர் பங்களிப்பு, அருணா இராசகோபால், (அ.சொ.), பக். 160, ரூ. 50**

*தமிழரின் தொன்மை, தமிழ் மொழியின் தொன்மை மற்றும் சொல்வளம், தமிழ்ச் சமுதாயத்தில் தாழ்வுநிலை, மக்களுக்கு ஏற்படும் இன்னல்கள் ஆகியன குறித்து இந்நூலில் விரிவாக ஆய்வு செய்யப் பெற்றுள்ளன.*

**583. தொல்காப்பியம், பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும், முன்னைந்தியல்கள், பாகம்–1, கணேசையர் பதிப்பு, பக். 904, ரூ. 325**

*சி. கணேசையர் ஏட்டுப்பிரதிகளோடு ஒப்புநோக்கித் திருத்திய திருத்தங்களோடும் எழுதிய உரைவிளக்கக் குறிப்புகளோடும், ஈழகேசரி, அதிபர் நா. பொன்னையா அவர்களால் 1943இல் பதிப்பிக்கப்பட்டு, மறுபதிப்பாக வெளிவந்துள்ளது.*

**584. தொல்காப்பியம், பொருளதிகார மூலமும் பேராசிரியருரையும், பின்னான்கியல்கள், பாகம்–2, கணேசையர் பதிப்பு, பக். 832, ரூ. 300**

*மேற்படி.*

**585. தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் (அறிவியல், தகவல் தொடர்பு), செ. ஜீன் லாறன்ஸ், கு. பகவதி, (பதி), பக். 272, ரூ. 80**

*அறிவியல் தகவல் தொடர்பு குறித்த ஆய்வுப் போக்குகளை விளக்கும் வகையில் தமிழில் 22 கட்டுரைகளும், ஆங்கிலத்தில் 3 கட்டுரைகளுமாக மொத்தம் 25 கட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. இந்நூல் ஆறாவது தொகுதி நூலாகப் பதிப்பித்து வெளியிடப்பட்டுள்ளது.*

**586. மலேசியத் தமிழரும் தமிழும், முரசு நெடுமாறன், பக். 352, ரூ. 100**

*ஒரு நூற்றாண்டுக்கும் மேலான மலேசியத் தமிழர்களின் வரலாறு, கலை, இலக்கியம், பண்பாடு, சமயம், கல்வி, ஊடகம் என்பவை இந்நூலில் ஆராயப்பட்டுள்ளது.*

## 2008

**587. வெள்ளக்கால் ப. சுப்பிரமணிய முதலியார், ம. இராசேந்திரன், ச. சிவகாமி (பதி), பக். 128, ரூ. 40**

*ப. சுப்பிரமணிய முதலியார் அவர்களின் வாழ்க்கை வரலாறு, படைப்புகள், மொழிபெயர்ப்பு மற்றும் இதழியல் பணிகள் குறித்து ஆறு தமிழறிஞர்களால் ஆராயப்பட்டுள்ளது.*

**588. வீரசோழியம், சி.வை. தாமோதரம்பிள்ளை (பதி), பக். 296, ரூ. 85**

*சி.வை. தாமோதரம் பிள்ளை அவர்கள் பெருந்தேவனார் உரையுடன் 1895இல் பதிப்பித்து வெளியிட்ட இந்நூல், 2008இல் மறுபதிப்பாக நூலாக்கம் பெற்றுள்ளது.*

**589. கதைப்பாடல்களில் கட்டுப்பாட்டு மீறல்கள், சூ. நிர்மலாதேவி, பக். 328, ரூ. 95**

*கதைப்பாடல் வகைகளுள் சமூகக் கதைப்பாடல் என்ற வகையை மட்டும் எடுத்துக்கொண்டு அதில் காணப்படும் சமுதாயக் கட்டுப்பாட்டு மீறல்களை வெளிப்படுத்துவதாக இந்நூல் அமைக்கப்பட்டுள்ளது.*

**590. சித்த மருத்துவ வரலாறு, ஆனைவாரி ஆனந்தன், பக். 400, ரூ. 115**

*சித்த மருத்துவம் தொடர்பான வரலாறு, பண்பாட்டு செய்திகள் விளக்கப் படங்களுடன் எளிய நடையில் எழுதப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது.*

**591. தமிழ் நாடக வெளிப்பாட்டுக் களங்கள், க. இரவீந்திரன் (அ.சொ.), பக். 304, ரூ. 85**

*நாடக நிலை, கூத்துக்கலை, தமிழினம் தழுவிய நாடகப் பரவல், நாடக ஆளுமை, நாடக முழுமை பற்றி செய்திகள் சிலப்பதி காரத்தின் வழி ஆராயப்பட்டுள்ளன.*

**592 டி.கே.சி., கரு.அழ.குணசேகரன், த. பூமிநாகநாதன், (பதி), பக். 208, ரூ. 60**

*டி.கே.சி. அவர்கள் தமிழுக்குச் செய்த பணிகள் குறித்து வெளியிடப்பட்டுள்ளது. மொழிநடை, கடித இலக்கியம், பதிப்புப்பணி, இரசனைத்திறன், கலைக்கோட்பாடு, ஆய்வுத் தடங்கள், பிற ஆய்வுகள் என ஆய்வுக் கட்டுரைகளாக இடம் பெற்றுள்ளன.*

**593 ரா.பி. சேதுப்பிள்ளை, கரு.அழ. குணசேகரன், த, பூமிநாக நாதன், (பதி), பக். 248, ரூ. 70.**

*ரா.பி. சேதுப்பிள்ளை அவர்களின் பன்முக ஆய்வினை விளக்கும் வகையில் இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது. ரா.பி. சேதுப்பிள்ளை மொழி ஆய்வு, ஊர்ப்பெயர் ஆய்வு எனப் பலதுறை ஆய்வுகள் பற்றிய 11 கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.*

**594 நா. வானமாமலை (அச்சில்)**

**595. வாகீச கலாநிதி கி.வா.ஜகந்நாதன், ம. இராசேந்திரன் , ச. சிவகாமி, (பதி), பக். 216, ரூ. 60**

*கி.வா. ஜகந்நாதனின் பல்துறைத் திறன்களை விளக்கும் நோக்கில் சிறுகதை, உரை, பதிப்பு, சங்க இலக்கிய ஆய்வு, நாட்டுப்புறவியல், நடையியல், இதழியல் என 9 கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.*

**596. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் (விடுதலைக்கு முன்) பகுதி 1, கரு. அழ. குணசேகரன், தி. மகாலட்சுமி (பதி), பக். 336, ரூ. 100**

*இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் (விடுதலைக்கு முன்) என்னும் தலைப்பில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் பல கவிஞர்களைப் பற்றி வெள்ளிக் கருத்தரங்கில் வழங்கப்பட்ட 25 கட்டுரைகளின் தொகுப்பாக இந்நூல் அமைந்துள்ளது.*

**597. இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிஞர்கள் (விடுதலைக்கு முன்) பகுதி 2, கரு.அழ. குணசேகரன், தி. மகாலட்சுமி, (பதி), பக். 336, ரூ. 100**

*மேற்படி.*

598. **நாகதிராதிக் ஞால முதன்மொழி ஆய்வுகளுக்குப் பாவாணர் தரும் ஒளி பி. இராமநாதன், (அ.சொ.), பக். 112, ரூ. 35**

*பாவாணர் ஆற்றிய சொற்பொழிவுக் கருத்துகளையும், வட மொழி ஆய்வு குறித்த அரிய தகவல்களையும் இந்நூல் எடுத்துரைக்கின்றது.*

599. **கவிதையியல், க. பூரணச்சந்திரன் (அ.சொ.), பக். 168, ரூ. 50**

*பழங்காலத் தமிழ்க் கவிதைகள் முதல் தற்காலக் கவிதைகள் வரையிலும் கவிதையின் இலக்கியப்பண்பு, வாசிப்பு முறை, வடிவம், தன்மை, யாப்பு, ஒலிநலம், சந்தம் போன்றவை களைப் பற்றிய ஆராய்ச்சி நூல்.*

600. **பண்பாட்டு நோக்கில் திருமுறைகள், தா. ஈசுவரப்பிள்ளை (அ.சொ.), பக். 96, ரூ. 30**

*தமிழ் இலக்கிய வரலாற்றில் சைவத் திருமுறைகளின் தோற்றத்தையும், பக்தி இலக்கிய வளர்ச்சியையும், காலந் தோறும் ஏற்பட்ட மாறுதல்களையும் இந்நூல் விளக்குகின்றது.*

601. **சங்க இலக்கிய ஆய்வு தெ.பொ.மீயும் மேலை அறிஞரும், ப. மருதநாயகம், (அ.சொ.), பக். 199, ரூ. 60**

*அறிஞர் தெ.பொ.மீ. பழந்தமிழ் இலக்கியம் பற்றி ஆராய்ந்து கண்டுள்ள முடிவுகளை மேனாட்டுத் திறனாய்வு அணுகுமுறை களின் வழி நோக்கி, வெளிப்படுத்தியுள்ள கருத்துகள் இந் நூலில் இடம்பெற்றுள்ளன.*

602. **அறந்தாங்கித் தொண்டைமான்கள், புலவர் செ. இராசு, (அ.சொ.), பக். 150, ரூ. 45**

*20க்கும் மேற்பட்ட தொண்டைமான்கள் குறித்து விளக்கும் நூல்.*

603. **உ.வே.சாமிநாதையர் உரைநடை நூல்கள் உணர்த்தும் புலப்பாட்டு நெறி, நா. உசாதேவி, (அ.சொ.), பக். 112, ரூ. 35**

*உ.வே. சாமிநாதையர் வாழ்வியல், புலப்பாட்டு நெறி, நல்லுரைக் கோவை, நினைவு மஞ்சரி ஆகியவற்றை விளக்கியுள்ளார்.*

# 2009

604. **தமிழில் தத்துவ நூல்கள், நா. பாஸ்கரன், (அ.சொ.), பக். 136, ரூ. 40**

*தத்துவ அறிமுகம், உலகத் தோற்றம், உடல், பிராணன், மனம், அறிவு, ஆனந்தம், செயல், வினைப்பயன், பாலியல், மாயை, ஞானியர், நிறை வாழ்வியல் எனும் தத்துவங்களை விளக்குகின்றது.*

605. **ஆறுமுக நாவலர், கரு.அழ. குணசேகரன், த. பூமிநாக நாதன், (பதி) பக். 190, ரூ. 60**

*ஆறுமுக நாவலரின் உரைநடை, பதிப்புப் பணி, படைப்பு, பாடங்கள், கல்வி நிறுவனங்கள் வைத்தல், அச்சகம் நிறுவுதல், சைவ சமயம் பேணல் ஆகியவற்றை இந்நூல் ஒருசேரக் கூறுகின்றது.*

606. **சி.வை. தாமோதரம்பிள்ளை, கரு.அழ. குணசேகரன், த. பூமிநாகநாதன், (பதி), பக். 190, ரூ. 60**

*பதிப்பு முன்னோடியான சி.வை. தாமோதரம் பிள்ளை அவர்களின் பன்முகப் பங்களிப்புகளை 30.9.2004இல் நடந்த கருத்தரங்கில் வழங்கிய 8 கட்டுரைகள் விளக்குகின்றன.*

607. **புதுவைச் சிவம் கவிதைகளும் புரட்சிக் கோட்பாடுகளும், முனைவர் சிவ. இளங்கோ, (அ.சொ.), பக். 184, ரூ. 60**

*இருபதாம் நூற்றாண்டுப் படைப்புச்சூழல், திராவிட தேசியம், இந்தித்திணிப்பு எதிர்ப்பு, பெண்ணுரிமை, சமதர்மக் கோட்பாடுகள், வருணாசிரமம் எதிர்ப்பு, சமூகச் சீர்திருத்தம், சிறுகாவியப் படைப்புகள், கவிதைக் கதைகள் ஆகியவற்றை இந்நூல் விளக்கி கூறியுள்ளது.*

608. **சொல்லிலக்கணக் கோட்பாடு, தொல்காப்பியம் (முதல் தொகுதி), செ.வை. சண்முகம், பக். 240, ரூ. 70**

*சொல்லதிகாரத்தை மொழியியல் பின்னணியில் அணுகியுள்ளது. சொல்லதிகாரத்தை சமூக விஞ்ஞானக் கோட்பாடுகளில் ஒன்றான மொழியியலை மையமாகக் கொண்டு ஆராயப்பட்டுள்ளது.*

**609. அறிவியல் தமிழ்ச் செய்தித் தொடர்பியலின் சமூக வரலாறு, த.வி. வெங்கடேஸ்வரன், (அ.சொ.), பக். 104, ரூ. 40**

*அறிவியல் பரப்புதலின் வரலாற்றை, அச்சு ஊடகம் மூலம் படைக்கப்பட்ட அறிவியல் இலக்கியத்தை பகுத்தாய்வதன் மூலம் அறிவியல் பரப்புதலுக்குப் பின்புலமாக அமைந்த அரசியல் சமூகப் பண்பாட்டுக் கூறுகளை வெளிக்காட்ட இந்நூல் விழைகின்றது.*

**610. சங்க இலக்கியம், கவிதையும் கருத்தும், கார்த்திகேசு சிவத்தம்பி, பக். 192, ரூ. 60**

*தமிழிலக்கிய மரபில் சங்கம், தொல்காப்பியம் கூறும் இலக்கிய ஆக்க மரபுகள், சூழல் , திணை மரபுகள், புறத்திணை மரபுகள், யாப்பும் மொழியும், வனப்பு, பரிபாடல் உண்டாக்கும் பிரச்சனை, பத்துப்பாட்டு மரபும் மாற்றமும் முதலியவற்றை இந்நூல் ஆழமான ஆய்வுப் பார்வையுடன் விளக்குகிறது.*

**611. இசுலாமியத் தமிழ் இலக்கியத் தோற்றுவாய்களும் வெளிப்பாட்டு முறைகளும், மு. ஜீவா, (அ.சொ.), பக். 200, ரூ. 60**

*இசுலாமிய இலக்கியங்கள் தோற்றம் வளர்ச்சி பற்றிய குறிப்பு களோடு, இசுலாமியத் தமிழ் இலக்கிய வகைகள், கதைப் பாடல், கதையாடல் முறைமைகளில் இசுலாமிய இலக்கியங் களின் பங்களிப்புப் பற்றி இந்நூல் குறிப்பிடுகின்றது.*

**612. இருபதாம் நூற்றாண்டின் சாதனைத் தமிழ்ப் பெண்மணிகள், ச. சிவகாமி (பதி), பக். 528, ரூ. 150**

*இருபதாம் நூறறாண்டு சாதனைத் தமிழ்ப் பெண்மணிகளை தொகுத்து அவர்களின் சமூகப் பணிகளை விடுதலைப் போராட்டங்களை அரசியல் திறங்களை, படைப்புகளை, கலைகளை ஆய்வு செய்து 36 கட்டுரைகளாக வெளியிட் டுள்ளனர்.*

**613. இசுலாமியச் சிற்றிலக்கியங்கள், ஜெ.ஆர். இலட்சுமி, (அ.சொ.), பக். 136, ரூ. 40**

*தமிழ் இலக்கிய வரலாற்றில் இசுலாமியச்சிற்றிலக்கியங்களின் பங்களிப்பினை எடுத்துரைக்கிறது. இசுலாமிய சிற்றிலக்கிய*

வகைகளான முனாஜாத்து,கிஸ்பொ, மங்அலா, நாமா என்ற பல்வகை சிற்றிலக்கியங்கள் எடுத்தாளப்பட்டுள்ளன.

**614. பாவாணர் கடவுள் நம்பிக்கையும் சமயச் சால்பும், இரா. இளங் குமரன், (அ.சொ.), பக். 104, ரூ. 30**

*பாவாணரின் கிறித்துவச் சமயச் சார்புகளையும், படைப்புத் திறன்களையும் எடுத்துரைக்கின்றது.*

**615. மகளிர் முன்னேற்றத்தில் அவள் விகடன் இதழின் பங்களிப்பு, லொ. ஆ. உமாமகேஸ்வரி, (அ.சொ.), பக். 112, ரூ. 35**

*தமிழ் இதழியல் வரலாற்றில் மகளிர் முன்னேற்றத்திற்காக 'அவள் விகடன்' இதழின் பங்களிப்பினை எடுத்துரைக்கின்றது.*

**616. திருக்குறள் உரைச் சிந்தனைகள், கை. சங்கர், (அ.சொ.), பக். 176, ரூ. 50**

*வ.உ.சி.யின் திருக்குறள் உரை பற்றியும் அறத்துப்பால், பொருட்பால், காமத்துப்பால் குறள்களில் சில புரிதல்களை-யும் எடுத்துக் கூறுவதாக இந்நூல் அமைந்துள்ளது.*

**617. அறிவியல் நோக்கில் மொழி, செ. சண்முகம், (அ.சொ.), பக். 144, ரூ. 45**

*அறிவியல் நோக்கில் மொழியின் அமைப்பு பொருண்மைகள், வழக்குகள் போன்றவற்றைப் பற்றிய ஆராய்ச்சி நூலாக இந்நூல் அமைந்துள்ளது.*

**618. மீனவர் சமுதாய நாட்டுப்புறப் பாடல்கள் ஆய்வும் பதிப்பும், ஆ. திருநாகலிங்கம், (அ.சொ.), பக். 112, ரூ. 35**

*மீனவர்கள் மீன்பிடித் தொழிலின் போது பாடப்படும் பாடல் களில் சித்தரிக்கப்படும் சமுதாயம், பண்பாடு, தொடர்பானச் செய்திகளை ஆராய்ந்து கூறுவதாக இந்நூல் அமைந்துள்ளது.*

**619. A Course in Modern Standard Tamil(Laboratory Manual) Texts and Exercises, Dr. Pon. Kothandaraman (Porko), P. 200, Rs. 65.**

*1975ல் வெளிவந்த இந்நூலின் மறுபதிப்பு.*

**620. இசை மருத்துவம், சே. பிரேமா, (அ.சொ.), பக். 144, ரூ. 45**

தமிழிசையும் சித்த மருத்துவமும், நாட்டுப்புற இசையும் மருத்துவமும், இசையும் அறிவியல் தொடர்பும் என்பதான பொருண்மைகளை விளக்குகின்றது.

**621. கம்பன் களஞ்சியம், ச. சிவகாமி, பக். 458, ரூ. 280**

பல்கலைக்கழக நிதி நல்கையின்வழி அமைந்த பெருந்திட்டப் பணியில் வெளிவந்துள்ள இந்நூல் கம்பன் கையாண்டுள்ள சொற்கள், அடைமொழிகள், விளக்கங்கள், கவித்துவ மொழி நடைகள் அனைத்தும் எண்ணிப் பார்க்கத்தக்க வகையில் அமைந்துள்ளது.

இராவணனை ஆரியன் என்றே சுட்டுதல், அவன் ஆட்சியில் ஆராய்ச்சி மணி மண்டபம் இருந்தமை, சைவ வைணவ ஒருமைப்பாட்டை உருவாக்குதல், அந்தணர்களுக்கு மிக் உயர்ந்த மதிப்பளித்தல், தோள்களில் சூலம், மழு வரைதல் போன்ற எண்ணற்ற செய்திகள் இக்களஞ்சியம் வாயிலாகப் பெறப்படுகின்றது.

**622. குலோத்துங்கன் பார்வையில் சமுதாயம், சு.கு. பன்னீர்செல்வம் (அ.சொ.), பக். 240, ரூ. 70**

தமிழ் இலக்கியத்துறையில் தொழில்முறை நிபுணத்துவம் உடைய மிகச் சிலரில் வா.செ. குழந்தைசாமியும் ஒருவராவர். இவரின் வாழ்வும் தமிழ்ப் பணியும் பல கோணங்களில் ஆராயப்பட்டு நூலாக வடிவமைக்கப்பட்டுள்ளது.

**623. மொழியியல் நோக்கில் தொல்காப்பிய, சங்க இலக்கிய ஆய்வுகள், எஸ். ஆரோக்கியநாதன், (அ.சொ.), பக். 120, ரூ. 40**

சமூக மொழியியலாளர், பயன்பாட்டு மொழியியலாளர், பண்பாட்டு மொழியியலாளர் எனப் பல நிலை மொழியியல் வல்லுநர்கள் பார்வையில் பல்வேறு தலைப்புகளில் எழுதப்பட்டுள்ள இப்பொழிவுரை சிறந்த ஆய்வு நூலாக அமைகின்றது.

**624. தமிழர் பண்பாட்டுச் சொற்கோவை – ஒப்பனையியல், கு. பகவதி, பக். 405, ரூ. 250**

பல்கலைக்கழக நிதி நல்கையின் வழி அமைந்த பெருந்திட்டப் பணியில் வெளிவந்துள்ளன இந்நூல் தமிழர் தம் ஒப்பனை

முறைகள் குறித்து இலக்கியங்களிலிருந்து தொகுத்துத் தரப்பட்டுள்ளன. சங்க காலம் தொடங்கி பன்னிரெண்டாம் நூற்றாண்டு வரையிலான தகவல்கள் இந்நூலுள் திரட்டித்தரப் பெற்றுள்ளது. ஒரு சொல்லுக்குப் பல எடுத்துக் காட்டுகளைப் பல இலக்கியங்களிலிருந்தும் எடுத்துக்காட்டி ஆசிரியர் விளக்கித் தொகுத்துள்ளார்.

**625. தமிழிலக்கியக் குறியீடுகள் அகராதி, ஜெ. சரஸ்வதி, பக். 332, ரூ. 225**

தொல்காப்பியம் முதல் கி.பி. 12ஆம் நூற்றாண்டு வரையிலான தமிழ்ப் படைப்புகளை மட்டுமே களனாகக் கொண்டு, அக்காரம் தொடங்கி வைரம் ஈறாக ஏறத்தாழ 1040 கலைச் சொற்களும் இணைச் சொற்களாக சுமார் 1085 உம் இதில் அமைக்கப்பட்டு நூலாக்கம் பெற்றுள்ளது.

**626. அரங்கேற்று காதை ஆராய்ச்சி, வெ.மு. ஷாஜகான்கனி, (அ.சொ.), பக். 440, ரூ. 140**

சிலப்பதிகார அரங்கேற்று காதை தொன்று தொட்டு வரும் பழந்தமிழ் நாடக வழக்காறுகளையும் அறிந்து கொள்வதற்கு இடமாக இந்நூல் அமைந்துள்ளது.

**627. பழந்தமிழில் அமைப்பியல் மற்றும் குறியியல் ஆய்வுகள், தமிழவன், (அ.சொ.), பக். 144, ரூ. 45**

பழந்தமிழ் இலக்கணம், உரை மற்றும் பழந்தமிழர் இலக்கியத்தை மேற்கத்திய மொழியியல், அமைப்பியல், குறியியல் நோக்கில் அணுகி புதிய கருத்துக்களை அளிக்கின்றது.

**628. இந்தியச் சூழலில் மொழி இழப்பு, ஒரு சமுதாய மொழியியல் பார்வை, வ. ஞானசுந்தரம், (அ.சொ.), பக். 184, ரூ. 60**

மொழி, இழப்பு மொழி - தக்கவைப்பு குறித்த இந்திய நாட்டு மேலை நாட்டு மொழியியல் அறிஞர்களின் பல்வேறு கருத்துகளையும் இத்துறையின் வளர்ச்சிப் போக்குகளையும் மொழி இழப்புக் குறித்து இந்திய மொழியியல் அறிஞர்களோடு இணைந்து மேற்கொண்ட ஆய்வுகளும் இந்நூலில் விளக்கப்பட்டுள்ளன.

**629. Essays and Tributes on Tirukkural. (1886-1986 A.D.), A.A. Manavalan, P. 296, Rs.100**

This is a compilation of essays on Tirukkural from different sources such as books and journals written by eminent scholars.

**630. பழந்தமிழில் அறிவியல், க. பலராமன், (அ.சொ.), பக். 136, ரூ. 45**

*பழமையும், புதுமையும் நிறைந்த பைந்தமிழில் காணப் பெறும் அறிவியல் செய்திகளை அறிவியல் கண்ணோட்டத் தோடு அணுகும் முயற்சியாக இந்நூல் அமைகின்றது.*

**631. நீறணி பவளக் குன்றம், கி. சுப்பிரமணியன், (அ.சொ.), பக். 112, ரூ. 35**

*பன்னிரு திருமுறைகளில் ஒன்பதாம் திருமுறையின் ஒரு பாடலின் ஒரு தொடரான நீறணி பவளக்குன்றம் என்ற தலைப்பின் கீழ் பன்னிரண்டு கட்டுரைகள் கொண்டதாக இந்நூல் அமைகின்றது.*

**632. உலகப் பகுத்தறிவு நீரோட்டத்தில் பெரியார், நந்திவர்மன், (அ.சொ.), பக். 120, ரூ. 35**

*உலகப் பகுத்தறிவுச் சிந்தனையாளர்களுடன் ஒப்பிட்டு பெரியாரின் பகுத்தறிவுச் சிந்தனைகளை அவருடைய புதுமையான எண்ணங்களை, தனிப்பெருஞ்சிறப்பை எடுத்துக்காட்டுவதாக இந்நூல் அமைந்துள்ளது.*

**633. கலீலியோ முதல் கலாம் வரை, நெல்லை சு. முத்து, (அ.சொ.), பக். 112, ரூ. 35**

*அதிசயிக்கும் அனைத்தையும் அறிவியல் பார்வையில் கேள்விக்குட்படுத்துபவன் விஞ்ஞானி எனும் பொருளில் அறிவியல் சிந்தனை, அறிவியல் வரலாறு, அறிவியல் தொடர் முயற்சிகள் எனச் சிறந்த தகவல்களின் திரட்டாக இந்நூல் அமைகின்றது.*

**634. குலோத்துங்கன் கவிதைகள் ஒரு கோபுர தீபம், மு. குழந்தைவேலு, (அ.சொ.), பக். 208, ரூ. 60**

*கவிஞர் குலோத்துங்கன் பல காலங்களில் பல சூழல்களில் எழுதிய கவிதைகள் ஆய்வுக்கு உட்படுத்தப்பட்டுள்ளன.*

**635. தமிழறிஞர் அடிகளாசிரியரின் சிறுவர் இலக்கியப் பாடல்கள், அ. சிவபெருமான், (அ.சொ.), பக். 96, ரூ. 30**

அடிகளாசிரியரின் பல்வேறு தமிழ்ப்பணிகளில் சிறுவர் இலக்கியம் என்ற தலைப்பில் பாடிய பாடல்களின் தொகுப்புப் பற்றியும்,அப்பாடல்களில் அடிகளாசிரியர் வெளிப்படுத்தியுள்ள எண்ணங்கள் பற்றியதாக இந்நூல் அமைந்துள்ளது.

**636. நாமக்கல் கவிஞரின் தமிழ்ப்பணி, சா. வளவன், (அ.சொ.), பக். 88, ரூ. 30**

நாமக்கல் கவிஞரின் தமிழ்ப்பணி, நாமக்கல் கவிஞர் காட்டும் வாழ்வியல் நெறிகள் ஆகியவை இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

**637. ஈழத்தில் கண்ணகி கலாச்சாரம், பால. சுகுமார், (அ.சொ.), பக். 88, ரூ. 30**

ஈழமக்களின் வாழ்வின் வாசல்கள் தோறும் கண்ணகி முக்கியக் குறியீடாக விளங்குவதை இந்நூல் எடுத்துக்காட்டுகின்றது.

**638. சிறுபஞ்சமூலம் ஒரு சமூகவியல் பார்வை, சு. பழனியாண்டி, (அ.சொ.), பக். 98, ரூ. 30**

சிறுபஞ்சமூலம் காட்டும் சமுதாயம், அரசியல், சமயம் பற்றி இந்நூல் விளக்கிக் காட்டுகின்றது.

**639. மீளும் வரலாறு, அறியப்படாத நந்தனின் கதை, ரவிக்குமார், (அ.சொ.), பக். 108, ரூ. 40**

மன்னர்களைச் சார்ந்து வரலாறு எழுதும் முறைகளிலிருந்து வேறுபட்டு புதிய பார்வையில் ,புதிய தடத்தில், தகவல்களும், தரவுகளும் கொண்டு மீண்டும் கட்டமைக்கப்பட்டு நந்தன் குறித்த வரலாறு பதிவு செய்யப்பட்டுள்ளது.

**640. சங்கத்தமிழ் – தொகுதி–1, ச.அகத்தியலிங்கம், பக். 268, ரூ. 100**

தமிழ்மொழி வரலாற்று நோக்கு, தொல் பழந்தமிழ், முன்பழந்தமிழ், பின்பழந்தமிழ் எனப் பகுத்து மொழியியல் நோக்கில் அமைந்த ஆய்வாக இந்நூல் திகழ்கின்றது.

641. **சங்கத்தமிழ் – தொகுதி–2, ச. அகத்தியலிங்கம், பக். 268, ரூ. 100**

*வினையியல் நோக்கில் தன்மை முன்னிலை விகுதிகள் எவ்வாறு சங்கத் தமிழில் வந்துள்ளது என்பதை இலக்கண, மொழியியல் அடிப்படையில் விளக்கியுள்ளார்.*

642. **ம.பொ.சி.யின் வாழ்க்கை வரலாற்று இலக்கியங்கள், யோ.ஞான. சந்திர ஜான்சன், (அ.சொ.), பக். 168, ரூ. 60**

*ம.பொ. சிவஞானம் தமிழுக்கும் தமிழருக்கும் உழைத்த உழைப்பைப் பதிவு செய்ததோடு தமிழ் இலக்கியத்துக்கும் தமிழருக்கும் பல நிலைகளில் உழைத்த உழைப்புகளை எல்லாம் பதிவுச் செய்வதாக இந்நூல் அமைந்துள்ளது.*

643. **தொல்காப்பியம், சங்க இலக்கியம் பதிப்பும் பதிப்பாளரும், (தொ.நூ.) ச. சிவகாமி, பக். 440, ரூ. 160**

*தொல்காப்பியம், சங்க இலக்கியத்தின் பெருமையை வலுப் படுத்த அதன் பதிப்பு, பதிப்பாளர்கள் பற்றிய முழுமையறிதல், அதன் சிறப்பை வெளிப்படுத்துதல் விதமாக 28 கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.*

## 2010

644. **இந்தி நாடகப் பனுவல் (ஆடி மாதத்தில் ஒரு நாள்), காமாட்சி தரணிசங்கர், (அ.சொ.), பக். 130, ரூ. 50**

*இந்தி நாடகங்கள், நவீன நாடகங்கள், இவற்றில் நவீன இந்தி நாடக உலகில் மோகன் ராகேஷின் பங்களிப்பினை நூல் விளக்குகின்றது.*

645. **திராவிட இயக்கத்தில் மணியம்மையாரின் பங்கு, ந.க. மங்கள முருகேசன், (அ.சொ.), பக். 104, ரூ. 40**

*மணியம்மையார் பற்றிய பல அரிய தகவல்களுடன் பகுத்தறிவுச் சிந்தனைகள் பொதிந்த ஆய்வு நூலாக இந்நூல் அமைகின்றது.*

646. **பண்பாட்டுப் பார்வையில் திருமந்திரம், சுடலி தியாகராசன், (அ.சொ.), பக். 200, ரூ. 70**

*திருமந்திரம் வெளிப்படுத்தும் பண்பாடுகளின் இன்றைய தேவையை விளக்குவதாக இந்நூல் அமைகின்றது.*

**647. காரைக்கால் அம்மையார் பாடல்கள் ஓர் ஆய்வு, செ. சுப்புலட்சுமி மோகன், (அ.சொ.), பக். 86, ரூ. 40**

காரைக்காலம்மையாரின் பாடல்கள் குறித்த கலையியல் சிந்தனை எனும் விதத்தில் இந்நூல் முக்கிய இடம் பெற்றுள்ளது.

**648. தத்துவஞானி வேதாத்திரி மகரிஷியின் கருத்துகளில் திருக்குறளின் தாக்கம், கஸ்தூரி ராஜா, (அ.சொ.), பக். 138, ரூ. 65**

வேதாத்திரி மகரிஷியின் 44 நூல்களில் திருக்குறளின் பதிவுகளை இந்நூல் மிக துல்லியமாக எடுத்துக்காட்டியுள்ளது.

**649. Freudism in the Novels of James Joyce and T.Janakiraman - A Comparative Study -A. Geetha, P. 214, Rs. 125**

In Five Chapters the author discusses Social, Economical,Cultural and Structural aspects of their novels to compare and contrast both the stream of consciousness of Novelists.

**650. மனோன்மணியமும் பின்காலனித்துவமும், க. பஞ்சாங்கம், (அ.சொ.), பக். 98, ரூ. 50**

மனோன்மணியம் சுந்தரனார், ஆங்கில ஆட்சி சார்ந்தும், ஆங்கில அறிவாளிகளைச் சார்ந்தும், ஆங்கில மொழி இலக்கியங்கள் சார்ந்தும் தனது படைப்புத் தளத்தை அமைத்துக்கொண்டுள்ளார் என விமர்சன நோக்கில் எடுத்து விளக்கப்பட்டுள்ளது.

**651. திருநாவுக்கரசரின் (அப்பர்) உவமை நலம், கோ. தெய்வநாயகம், (அ.சொ.), பக். 94, ரூ. 50**

தொல்காப்பியரின் இலக்கண வழி நின்று உவமை குறித்தும், திருநாவுக்கரசர் தம் பாடல்களில் எவ்விதம் உவமைச் சிறப்புகளைக் கையாண்டார் என விளக்கப்படுகிறது.

**652. நவீன் நாடகங்களும் ஊடகங்களும், ரூ. ம.வீ. ரவி, (அ.சொ.), பக். 112, ரூ. 50**

நாடகமயமாக்கல் குறித்த விளக்கத்தை நாடக நிகழ்ச்சிக் கூறுகளான முகபாவனை, ஒப்பனை, ஆடை அணி, இசை, வசன உச்சரிப்பு முறை, சிகை அலங்காரம், மேடை

பொருட்கள் போன்ற பதின்மூன்று கூறுகளைக் கொண்டு இலக்கிய வடிவங்களின் நாடகத் தன்மைகளை விளக்குவதாக அமைந்துள்ளது.

**653. சொல்லாடல்கள், மு. ஜீவா, (அ.சொ.), பக். 168, ரூ. 75**

நவீனத்துவ இலக்கியத்தின் சொல்லாடல்கள் பற்றிய கருத்துகளை எடுத்துரைக்கின்றது.

**654 சி.வை. தாமோதரம் பிள்ளை, மு.சற்குணவதி, (அ.சொ.), பக். 104, ரூ. 45**

சி.வை. தாமோதரம் பிள்ளை அவர்களின் வாழ்க்கை வரலாறு, தமிழ்ப்பணி, பண்புநலன் ஆகியவை ஆய்வு செய்யப்பட்டு நூலாக வெளியிடப்பட்டுள்ளது.

**655. இலக்கணத் தொகை, ச.வே.சுப்பிரமணியன், (ம.ப.), பக். 668, ரூ. 300**

தமிழ் இலக்கணம் குறித்த விரிந்த ஆய்வுச் சிந்தனையை கொண்டுள்ளது. தொல்காப்பியம், காக்கைப்பாடினியம், யாப்பருங்கலம், வீரசோழியம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம் போன்ற இலக்கண நூல்கள் பலவற்றின் செய்திகளைக் கொண்டுள்ளது.

**656. அறிவை விரிவாக்கும் அற நூல்கள், தா. ஜே லீ. ஜூலியஸ், (அ.சொ.), பக். 100, ரூ. 45.**

அறக்கருத்துக்களை உள்ளடக்கிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் மற்றும் பக்தி இலக்கியமான திருமந்திரம் ஆகிய நூல்கள் விவிலியத்துடன் ஒப்பாய்வு செய்யப்பட்டுள்ளன.

**657. சங்கத்தமிழ் (தொகுதி–3), ச. அகத்தியலிங்கம், பக். 266, ரூ. 115.**

பழந்தமிழ் நூல்களில் காணப்படும் வினையியல் படர்க்கை விகுதிகள் பற்றிய ஆய்வு நூலாக வெளிவந்துள்ளது.

**658. சங்கத்தமிழ் (தொகுதி–4), ச. அகத்தியலிங்கம், பக். 300, ரூ. 130**

பழந்தமிழ் நூல்களில் காணப்படும் வினையெச்சம் பற்றிய ஆய்வு நூலாக வந்துள்ளது.

**659. சங்கத்தமிழ் (தொகுதி–5), ச. அகத்தியலிங்கம், பக். 257, ரூ. 110**

*பழந்தமிழ் நூல்களில் காணப்படும் வினையெச்ச வாய்ப்பாடு குறித்து குறிப்பிட்டு குறையெச்சம், குறையெச்ச விகுதிகள், காலஎச்ச விகுதிகள், நிபந்தனை யெச்சம், கூட்டுக்கால வெச்சங்கள் என்று பல்வேறு எச்ச வகைகளை எடுத்துக் காட்டுகளைத் தந்து விளக்கியுள்ளது.*

**660. குமரி மாவட்ட இசுலாமியர் நம்பிக்கைகளும் தர்காக்களும், பிறீடா மேபல் ராணி, (அ.சொ.), பக். 120, ரூ. 55**

*குமரி மாவட்டத்தில் உள்ள இசுலாமியர்களின் வரலாறு, பழக்க வழக்கங்கள், தர்காக்கள் போன்றவற்றினை ஆய்வு செய்து வெளியிட்டுள்ளது.*

**661. தமிழ் இலக்கியங்களில் மனித உறவுகள், மு. சற்குணவதி, (அ.சொ.), பக். 203, ரூ. 90**

*தமிழ் இலக்கிய வரலாற்றில் தொல்காப்பிய இலக்கண நூல் தொடங்கி அனைத்து நிலை இலக்கியங்களிலும் காணலாகும் மனித உறவுகளைச் சான்றுடன் இந்நூல் எடுத்துக் கூறுகின்றது.*

**662. தமிழ் மொழிபெயர்ப்பு முன்னோடிகள், ம்ு. வளர்மதி, பக். 424, ரூ. 185**

*தமிழில் மொழிபெயர்ப்புப் பணியில் ஈடுபட்ட 16 தமிழறிஞர் களின் மொழிபெயர்ப்புத் திறனை விரிவாக எடுத்துக்காட்டும் ஆய்வு.*

**663. பதிற்றுப்பத்து மூலமும் ஆராய்ச்சிப் புத்துரையும், கரு. அழ. குண சேகரன், பக். 373, ரூ. 170**

*பதிற்றுப்பத்துப் பாடல்களில் காணலாகும் செய்திகளை கலையியல் மற்றும் சமூகவியல் நோக்கிலும் கண்டு, நிகழ்த்துக் கலை பற்றிய குறிப்புகளை ஆராய்ந்து, சமண அறநெறிகள் ஒரு சில பாடல்களில் இடம் பெற்றிருத்தலை இந்நூல் விளக்குகின்றது.*

**664. பாரதியாரின் தமிழ் மொழிப்பற்று, கி. கௌரி சக்திவேல், (அ.சொ.), பக். 112, ரூ. 50**

*பாரதியாரின் தமிழ் மொழிப்பற்று, பன்மொழி அறிவாற்றல், இன்றைய கல்வியில் தமிழின் தேவை குறித்த செய்திகள் நூலாக்கம் பெற்றுள்ளன.*

**665. சங்க அகப்பாடல்கள் தோழி கூற்று, அ. நிர்மலா, (அ.சொ.) பக். 392, ரூ. 170**

*சங்க இலக்கிய அகப்பாடல்களில் தோழியின் கூற்றுக்களாக அமைந்த அனைத்துப் பாடல்களை மட்டும் ஒன்று திரட்டி வழங்கப்பட்டுள்ளது.*

**666. கோட்டோவியத்தில் தமிழ் அறிஞர்கள் (தொ.நூ. அச்சில்), பத்மாவதி, கிரிவாசன்**

*நூறு தமிழறிஞர்களின் உருவங்கள் கோட்டோவியத்துடன் அவர்களைப் பற்றிய குறிப்புகள் அடங்கிய நூல்.*

**667. மனிதப் புனிதர் கக்கன், சி. அம்பேத்கர் பிரியன், (அ.சொ.), பக். 240, ரூ. 110**

*கக்கன் காங்கிரஸ் பேரியக்கத்தில் கொண்ட முழுமையான ஈடுபாடு, அனுபவித்தக் கொடுமைகள், பாராளுமன்ற, சட்டமன்ற உறுப்பினராய் ஆற்றிய சேவைகள், அமைச்சராய் பொறுப்பேற்று ஆற்றிய பணிகள், அரசியலில் நேர்மை, தூய்மை, ஒழுக்கம் காத்திட வாழ்ந்த இவரைப் பற்றி இந்நூல் விளக்குகின்றது.*

**668. மொழிபெயர்ப்பு ஒரு கவின்கலை, வீ. சந்திரன் (அ.சொ.), பக். 170, ரூ. 75**

*மொழிபெயர்ப்பிற்கான கொள்கைகள், வகைகள், கலைச் சொல்லாக்கம் ஆகிய பொருண்மைகளில் விரிவாகப் பேசுகிறது இந்நூல்.*

**669. மூவர் தமிழ் மூன்று பார்வைகள், காவிரிநாடன், (அ.சொ.), பக். 104, ரூ. 50**

*இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட திருஞானசம்பந்தரின் தமிழைப் பக்தி நோக்கிலும், திருநாவுக்கரசரின் தமிழைச் சமூக நோக்கிலும், சிவபெருமான் ஓலை கொடுத்து ஆட்கொண்டு தோழமை அருளிய சுந்தரரின் தமிழை இலக்கிய நோக்கிலும் ஆய்ந்துள்ளார் நூலாசிரியர்.*

**670. காமன்வெல்த் நாடுகளின் கவிதைகள் (அ.சொ.) இரா. பேபி வேகா இசையமுது, பக். 200, ரூ. 100**

*இந்தியா, ஆஸ்திரேலியா, ஆப்பிரிக்கா , கனடா, சிங்கப்பூர், மலேசியா, இலங்கை, நியூசிலாந்து, பாகிஸ்தான் நாடுகளின் கவிஞர்களின் கவிதைகள் மொழிபெயர்ப்பில் இடம் பெற்றுள்ளன.*

**671. அறிஞர்களின் பார்வையில் பேரறிஞர் அண்ணா, மு. வளர்மதி, (பதி), பக். 326, ரூ. 145**

*பேரறிஞர் அண்ணா தமிழ் மேம்பாடு அறக்கட்டளைக் கருத்தரங்கு மற்றும் பேரறிஞர் அண்ணா நூற்றாண்டு விழாக் கருத்தரங்கு ஆகிய இரு கருத்தரங்குகளில் வழங்கப்பட்ட சொற்பொழிவுகளின் தொகுப்பாக இந்நூல் வடிவமைக்கப் பட்டுள்ளது. இந்நூலில் அண்ணாவின் கவிதைகள், நாடக இலக்கியப் பணி, அண்ணாவின் சொற்பொழிவுகள், பயிற்றுமொழிக் கொள்கை, அரசியல் நாகரிகம், பிறநாட்டு அறிஞர்களும் அண்ணாவும், பகுத்தறிவுச் சிந்தனைகள் என 20 தலைப்புகளில் அண்ணாவின் சிறப்பினை எடுத்துக்காட்டு கின்றது.*

**672. அறிஞர் அண்ணா – மொபசான் சிறுகதைகள், ஒப்பாய்வு, கேசவன் சொர்ணம், (அ.சொ.), பக். 368, ரூ. 160**

*19ஆம் நூற்றாண்டு பிற்பகுதியில் பிரெஞ்சு இலக்கிய அறிஞரான மொபசான் (Guy de Mapessant) படைத்த சிறுகதைகள், பேரறிஞர் அண்ணா தமிழில் புனைந்துள்ள சிறுகதைகள் ஆகியவற்றில் காணப்படும் சமூகப் பண்பாட்டுப் பின்னணியை ஆய்ந்து ஒப்பிட்டுக் காட்டுகின்றது.*

**673. இராசேந்திர சோழன் வெளியிட்ட எசாலம் செப்பேடுகள், ச. கிருஷ்ணமூர்த்தி, (அ.சொ.), பக். 128, ரூ. 55**

*எசாலம் செப்பேடுகளின் அமைப்பு, செப்பேடுகளின் மூலங்கள், எசாலம் புதையலில் கண்டெடுத்த ஐம்பொன் சிலைகள், கற்சிற்பங்கள், கல்வெட்டுகள் ஆகியன ஆராயப் பட்டு நூலாக்கம் பெற்றுள்ளன.*

**674. கடலடியில் தமிழர் நாகரிகம், நந்திவர்மன், (அ.சொ.), பக். 128, ரூ. 55**

*இந்நூல் தமிழர் நாகரிகம் குறித்து ஒன்பது தலைப்புகளில் அமைந்த ஆழ்ந்த ஆய்வுச் சிந்தனைகளை வழங்குகின்றது.*

**675. படைப்பு நெறிமுறைகள், கரு.அழ.குணசேகரன் (பதி), பக். 368 ரூ. 160**

*20.12.2010 முதல் 22.12.2010 வரையிலான மூன்று நாட்கள் நிறுவனத்தில் நடைபெற்ற கருத்தரங்கின் கட்டுரைத் தொகுப்பாகும். கவிதை, நாடகங்கள், புதினங்கள், சிறுகதைகள், சிறுவர் இலக்கியம், வாழ்க்கை வரலாறுகள், தன் வரலாறுகள், பயண இலக்கியங்கள், புனைவுக் கட்டுரைகள், இதழியல், இணையம், தொலைக்காட்சி, ஊடகங்கள் என்கிற பொருண்மையில் 36 கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.*

**676. தமிழக மரபுச் செல்வங்கள், இயல், இசை, நாடகம் (தொ.நூல்), கரு.அழ. குணசேகரன்), பக். 369, ரூ. 170**

*தமிழரின் நிகழ்கலை மரபுச் செல்வங்கள் எனும் தலைப்பில் நடத்தப்பட்ட மூன்று நாள் கருத்தரங்குகளில் வழங்கப்பட்ட இயல், இசை, நாடகம் குறித்த 33 கட்டுரைகளின் தொகுப்பு.*

**677. Comparative Studies in Literary Cultures, A.A.Manavalan, P. 176, Rs.100**

The book contains fifteen articles subjected in various periods and they are chronological and proportonately provided space for each period respectively Sangam, Bhakthi and Modern ,the book bestowed home to break through the practical scenario of Comparative attempt so far found in the literary culture.

**678. Sangam Classics, New Perspective, A.L. A. Pandurangan, P. 192, Rs. 105**

The book mainly consists of two aspects of Sangam Literature one with religious thoughts and the other is about kingship of Sangam and social systems encomasses with the practical domains such as education, society, cultural philosophy, religious and so on.

679. **நன்னூல் உரைவளம் எழுத்தியல்–1, தொகுதி–3, இரா. கண்ணன், பக். 264, ரூ. 115**

*எழுத்தியல் தொகுதி 1, 55ஆவது நூற்பா முதல் 92ஆவது நூற்பா வரை இலாசரசு ஆங்கில மொழிபெயர்ப்புடன் பல்வேறு அறிஞர்களின் விளக்க உரைகள் இடம்பெற்றுள்ளன.*

680. **நன்னூல் உரைவளம் எழுத்தியல்–2, தொகுதி–4, இரா. கண்ணன், பக். 320, ரூ. 140**

*எழுத்ததிகாரம் எழுத்தியலில் 93ஆவது நூற்பாவிலிருந்து 126ஆவது நூற்பா வரை உரைவிளக்கம் வழங்கப்பட்டுள்ளது.*

681. **நன்னூல் உரைவளம் பாயிரம்–1, தொகுதி–1, இரா. கண்ணன், பக். 179, ரூ. 85**

*சிறப்புப் பாயிரம் - பாயிரத்தின் பெயர்கள் தொடங்கிய நூலின் மாண்புகள் முடிய 24 பொருண்மைகளில் பாயிரத்தின் சிறப்பு விளக்கப்பட்டுள்ளது.*

682. **அரங்கியல் நோக்கில் கபிலர் பாடல்களில் காணலாகும் கதை மாந்தர்கள், இரா. திராவிடராணி, (அ.சொ.), பக். 222, ரூ. 100**

*கபிலரின் பாடல்களைத் தொகுத்துக் குவித்து அவற்றை அகம், புறம் என்றும் பிரித்து வகைப்படுத்திப் பாடல்களில் பயின்றுள்ள கருத்துக்களை ஆராய்ந்து அவற்றுள் நாடகக் கூறுகள், நாடக உத்திகள் ஆகியவற்றை வெளிக்கொணர்ந்து அவற்றின் சிறப்புத் தன்மைகளைப் புலப்படுத்துவதாக இந்நூல் அமைந்துள்ளது.*

683. **கடற் பொறியியற் கலைச்சொற்கள் (குறுங் கலைக்களஞ்சியம்) இரா. இராமசாமி, சுப. சுப்பிரமணியன், இரா. சுந்தரவடிவேலு, (அ.சொ.), பக். 335, ரூ. 150**

*கடற் பொறியியற் கலைச்சொற்கள் குறித்த விளக்கவுரையாக இந்நூல் விளங்குகிறது. கடற்பொறியியற் துறைசார் மாணவர்களுக்கும், ஆய்வாளர்களுக்கும் மட்டுமல்லாது பிற துறைசார் மக்கள் எவரும் எளிதில் புரிந்துகொள்ள ஏதுவாக எழுதி விளக்கப்பட்டுள்ள அகராதியாக அமைந்துள்ளது.*

**684. அண்ணாவின் புனைக்கதைத் திறன் (அ.சொ.), இரா.சேது, பக். 154, ரூ. 70.**

*பேரறிஞர் அண்ணாவின் புனைக்கதைத் திறன்களை இதழியல் நோக்கிலும், வரலாற்றுப் பண்பாட்டு வழக்கிலும், திறனாய்வுப் பார்வையிலும் சமுதாயச்சிந்தனைப் போக்கிலும் ஆய்வு செய்யப்பட்டுள்ளது.*

**685. இரணியன் இசை நாடகம் (அ.சொ.), (அச்சில்), கோ. சேதுராமன் பக். ரூ.**

**686. சங்க இலக்கியத்தில் சமூக ஆய்வுகள், க.அ. ஜோதிராணி, (அ.சொ.), பக். 120, ரூ. 55**

*சங்க இலக்கியப் பிரதியை மறுவாசிப்புச் செய்து மார்க்சிய நோக்கில் உற்பத்தி முறைகளின் தாக்கம் வழி ஆய்வதாக இந்நூல் அமைகின்றது.*

**687. கவிஞர் குலோத்துங்கனின் மானுட யாத்திரை– காவிய வானில் புதிய தாரகை, சு.கு. பன்னீர்செல்வம், (அ.சொ.), பக். 112, ரூ. 50**

*இந்நூல் எட்டுத் தலைப்புகளின் கீழ் அமைந்துள்ள கட்டுரைகளைக் கொண்டுள்ளது. அயல்நாட்டுக் கவிஞர்களின் அறிவியல் கருத்துகள், ஈழத்தில் நடந்த படுகொலைகளைத் தடுக்காத நிலையினைக் கண்டு மனம் குமுறும் ஆசிரியரின் எண்ண வெளிப்பாடு மற்றும் பெண்ணியத்தைப் போற்றும் பதிவுகளைக் கொண்டதாக இந்நூல் விளங்குகின்றது.*

**688. தமிழ் நாடக வகையும் வரலாறும் (சங்ககாலம் வரை), வெ.மு. ஷாஜகான்கனி, (அ.சொ.), பக். 256, ரூ. 110**

*இந்நூலில் தமிழ் நாடகத்தின் வரலாறு தொல்காப்பியம் முதல் ஆராயப்பட்டுள்ளது. தொல்காப்பியத்தின் வழி 60 நாடகங்களையும் சங்கப்பாடல்கள் வழி 46 நாடகங்களையும் ஆக மொத்தம் 106 நாடக வகைகளைத் தொகுத்து அளித்துள்ளார்.*

**689. வா.செ.கு. என்ற ஆளுமையாளர், இரா. மோகன், (அ.சொ.), பக். 104, ரூ. 50**

*வா.செ. குழந்தைசாமியின் பேச்சு, எழுத்து, கவிதை, உரைநடை எழுத்துச் சீர்திருத்தம் ஆகியவை படைப்பாளியின் பன்முகப் பார்வையில் விளக்கப்பட்டுள்ளது.*

**690. உ.வே.சா.வின் குறுந்தொகைஉரைத்திறன், நிர்மலா மோகன், (அ.சொ.), பக். 96, ரூ. 45**

*உ.வே.சா. என்றோர் ஆளுமை, உ.வே.சாவின் குறுந்தொகைப் பதிப்பு நெறி, உரைத்திறன் ஆகிய பின்னிணைப்புகளுடன் இந்நூல் விவரித்துள்ளது.*

**691. மருதத்தில் மக்கள் வாழ்வியல், எ. பாலுச்சாமி, (அ.சொ.), பக்.88, ரூ. 40**

*மருத நில மக்களின் வாழ்வியலை சமூகவியல் நோக்குடன் படம் பிடித்துக் காட்டுகிறது இந் நூல்.*

**692. நன்னூல் உரைவளம் பாயிரம்–2, தொகுதி–2, இரா. கண்ணன், பக். 176, ரூ. 75**

*பாயிரம் 2இல் ஆசிரியரின் இயல்புகள் குறித்து விளக்கப் பட்டுள்ளன.*

**693. நன்னூல் உரைவளம் பதவியல், தொகுதி–5, இரா. கண்ணன் பக். 318, ரூ. 140**

*நன்னூல் எழுத்ததிகாரம் பதவியில் 127ஆவது நூற்பாவிலிருந்து 149வது நூற்பா வரை பல்வேறு உரைகள் தொகுத்து வழங்கப் பட்டுள்ளன.*

**694. நன்னூல் உரைவளம் உயிரீற்றுப் புணரியல்–1, தொகுதி–6, இரா. கண்ணன், பக். 288, ரூ. 125**

*150ஆவது நூற்பாவிலிருந்து 165வது நூற்பா வரை பல்வேறு உரைகள் தொகுத்து வழங்கப்பட்டுள்ளன.*

**695. நன்னூல் உரைவளம் உயிரீற்றுப் புணரியல்–2, தொகுதி–7, இரா. கண்ணன், பக். 368, ரூ. 160**

*166வது நூற்பாவிலிருந்து 202ஆவது நூற்பா வரை உரைவளம் தொகுத்து வழங்கப்பட்டுள்ளன.*

**696. நன்னூல் உரைவளம் மெய்யீற்றுப் புணரியல், தொகுதி–8, இரா. கண்ணன், பக். 358, ரூ. 160**

*203ஆவது நூற்பாவிலிருந்து 238ஆவது நூற்பா வரை உரை விளக்கம் வழங்கப்பட்டுள்ளது.*

697. நன்னூல் உரைவளம் உருபு புணரியல்–1, தொகுதி–9, இரா. கண்ணன், பக். 216, ரூ. 95

*எழுத்ததிகாரத்தில் உருபு புணரியல் எனும் இயலில் 234ஆவது நூற்பாவிலிருந்து 256ஆவது நூற்பா வரை உரை விளக்கம் வழங்கப்பட்டுள்ளது.*

698. நன்னூல் உரைவளம், பெயரியல்–1, தொகுதி–10, இரா. கண்ணன், பக். 456, ரூ. 200

*பெயரியல் 1, 257ஆவது நூற்பா முதல் 289ஆவது நூற்பா வரை பல்வேறு உரைகள் தொகுத்து வழங்கப்பட்டுள்ளன.*

699. நன்னூல் உரைவளம், பெயரியல்–2, தொகுதி–11, இரா. கண்ணன், பக். 408, ரூ. 180

*பெயரியல் - 2, 290ஆவது நூற்பா முதல் 318ஆவது நூற்பா வரை அறிஞர்களின் விளக்க உரைகள் இடம்பெற்றுள்ளன.*

700. நன்னூல் உரைவளம், வினையியல், தொகுதி–12, இரா. கண்ணன், பக். 444, ரூ. 190

*சொல்லதிகாரம் வினையியலில் 319ஆவது நூற்பாவிலிருந்து 349ஆவது நூற்பா வரை உரை விளக்கம் வழங்கப்பட்டுள்ளன.*

701. நன்னூல் உரைவளம், பொதுவியல்–1, தொகுதி–13, இரா. கண்ணன், பக். 320, ரூ. 140

*சொல்லதிகாரம் பொதுவியல் 351 நூற்பாவிலிருந்து 373ஆவது நூற்பா வரை உரை விளக்கம் வழங்கப்பட்டுள்ளன.*

702. நன்னூல் உரைவளம், பொதுவியல்–2, தொகுதி–14, இரா. கண்ணன், பக். 264, ரூ. 115

*374ஆவது நூற்பா முதல் 394 நூற்பா வரை இலாசரசு ஆங்கில மொழிபெயர்ப்புடன் இரா. கண்ணன் விளக்க உரை இடம் பெற்றுள்ளது.*

703. நன்னூல் உரைவளம், பொதுவியல்–3, தொகுதி–15, இரா. கண்ணன், பக். 272, ரூ. 120

*நன்னூல் உரைவளம், பொதுவியல் - 3, 395ஆவது நூற்பாவிலிருந்து 418ஆவது நூற்பா வரை உரை விளக்கம் வழங்கப் பட்டுள்ளது.*

**704. நன்னூல் உரைவளம், இடைச் சொல்லியல் தொகுதி–16, இரா. கண்ணன், பக். 208, ரூ. 90**

*சொல்லதிகாரம் இடைச் சொல்லியலில் 419ஆவது நூற்பா முதல் 440ஆவது நூற்பா வரை உரை விளக்கம் வழங்கப்பட்டுள்ளது.*

**705. நன்னூல் உரைவளம், உரிச் சொல்லியல், தொகுதி–17, இரா. கண்ணன், பக். 128, ரூ. 55**

*சொல்லதிகாரம் உரிச் சொல்லியலில் 441 நூற்பா முதல் 461ஆவது நூற்பா வரை உரை விளக்கம் வழங்கப்பட்டுள்ளது.*

**706. நன்னூல் உரைவளம், தொல்காப்பிய – நன்னூல், தொகுதி–18, இரா. கண்ணன், பக். 280, ரூ. 120**

*சாமுவேல் பிள்ளையின், 'தொல்காப்பிய - நன்னூல் ஒப்பீடு' என்ற நூலினைப் பதிப்பித்துள்ளார்.*

707. நன்னூல் இலகுபோதம், தொகுதி–19, இரா. கண்ணன், பக். 296, ரூ. 130

*எழுத்தியல் தொடங்கி புறனடை வரை விளக்க உரை வழங்கப் பட்டுள்ளது.*

708. நன்னூல் உரை வளம், தமிழ் இலக்கணம், தொகுதி–20, இரா. கண்ணன், பக். 216, ரூ. 95

*நன்னூல் காட்டும் தமிழ்ச் சொற்களின் வகைகளும், பிரிவுகளும் குறித்து ஆங்கிலத்திலும், தமிழிலும் விளக்கம் இடம் பெற்றுள்ளது.*

709. நன்னூல் காண்டிகையுரை தொகுதி–21, இரா. கண்ணன், பக். 709, ரூ. 395

*நன்னூல் பொதுப்பாயிரம் முதல் 462ஆவது நூற்பா வரை ஜி.யு. போப் வழங்கியுள்ள காண்டிகை உரை ஆங்கிலத்தில் விளக்கத்துடன் வழங்கப்பட்டுள்ளது.*

710. நன்னூல் செம்பதிப்பு, தொகுதி–22, இரா. கண்ணன், பக். 392, ரூ. 170

*நன்னூல் மூலம் 462 நூற்பாக்களும், சொல்லைடைவும், சொல் விளக்கங்களும் இடம் பெற்றுள்ளன.*

# 2011

711. வல்லம் தலபுராணம், ச. கிருஷ்ணமூர்த்தி, (அ.சொ.), பக். 464, ரூ. 200

*வல்லம் எனும் ஊரின் தலபுராண வரலாற்றைக் கூறும் நூல்.*

712. இதழியல் உலகம், முகிலை இராசபாண்டியன், (அ.சொ.) ப. 262, ரூ. 120

*இதழியல் தோற்றம் வளர்ச்சி குறித்து வரலாற்று நோக்குடன் வழங்கப்பட்ட நூல்.*

713. தமிழும் தமிழ்க் கற்பித்தலும், சீதாலட்சுமி, (அ.சொ.), பக். 126, ரூ. 160

*தொடக்கப் பள்ளி மாணவர்களுக்கு கற்றல் கற்பித்தல் முறையைக் கூறும் நூலாகும்.*

714. படைப்பிலக்கியம் – விளிம்புநிலை மக்கள் ஆய்வு நோக்கு, மகலின் சந்திரா (அ.சொ.), பக். 218, ரூ. 100

*சோலை சுந்தரபெருமாள் படைப்புகளில் விளிம்புநிலை மக்களின் வாழ்க்கைச் சிக்கல்களை எடுத்துக்காட்டும் நூல்.*

715. அண்ணா ஒரு சமூகக் குறியீடு, மு. ஜீவா (அ.சொ.), பக். 82, ரூ. 40

*பேரறிஞர் அண்ணாவின் பன்முகப் பார்வையை விளக்கும் நூலாகும்.*

716. பழந்தமிழும் கிளைமொழிகளும், ந. கலைவாணி (அ.சொ.), பக். 144, ரூ. 70

*தென் திராவிட மொழிகளின் கிளைமொழிகள் குறித்து விளக்கும் நூல்.*

717. சுவடிப் பதிப்பாசிரியர்கள், சி. இலட்சுமணன் (அ.சொ.), பக். 95, ரூ. 45

*சுவடிப் பதிப்பாசிரியர்கள், உரையாசிரியர்கள் குறித்த நூல்.*

718. உலக மொழிகளில் தமிழ்ச் சொற்களும் இலக்கணக் கூறுகளும், ப. சண்முகசுந்தரம் (அ.சொ.), பக். 184, ரூ. 85

*உலக மொழிகளின் வரலாற்றுச் சுவடுகளை அரிய சான்றுகளுடன் எடுத்துக்காட்டும் நூல்.*

**719. பத்துப்பாட்டு தொடரடைவு, இரா. கண்ணன், பக். 400, ரூ. 175 (அச்சில்)**

**720. தொல்காப்பிய அகராதியியல் கூறுகள், ந. கலைவாணி, பக். 288, ரூ. 125 (அச்சில்)**

**721. அரசகுலம் சான்றோர் வரலாறும் மதுரைக் காஞ்சியும், நெல்லை நெடுமாறன், அ. தசரதன், (அ.சொ.), பக். 240, ரூ. 115.**

*செப்பேடுகள், நடுகல் செய்திகள், கல்வெட்டுகள் எனப் பல நிலைகளில் இருந்து சான்றாதாரங்கள் காட்டி ஆய்ந்துள்ளது இந்த ஆய்வு நூல்.*

**722. கண்ணதாசனின் ஆளுமைத் திறன், மா. செந்தில்குமார் (அ.சொ), பக். 224, ரூ. 100 (அச்சில்)**

**723. மதங்களும் மனிதநேயமும், இரா. சிகாமணி (அ.சொ.), பக். 194, ரூ. 90**

*தமிழகத்தில் நிலவி வரக்கூடிய பல்வேறு மதங்களும், அவற்றின் வரலாறு, தத்துவம் குறித்து விளக்கும் நூல்.*

**724. பெயரியல், இரா. கண்ணன், பக். 128, ரூ. 55**

*தமிழ் இலக்கணத்தில் பெயர்ச்சொற்களின் பயன்பாடு, அதன் இலக்கணம் பற்றிய தெளிவான விளக்கம் எடுத்துக்காட்டுகளுடன் தரப்பட்டுள்ளது.*

**725. சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல், க. காந்திதாசன், (அ.சொ.), பக். 165, ரூ. 80**

*டாக்டர் ஜெ. ஜெயலலிதா அறக்கட்டளைச் சொற்பொழிவு, நூலாக இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது. சங்க இலக்கியத் திணைசார் மக்களை அண்டி சார்ந்து இன்றும் வாழ்ந்து வருகின்ற கலைவாழ் மிதவை மக்களான பாணர் அவர்தம் வழித்தோன்றல்களை, இன்றும் வாழ்ந்து வருகின்ற கலைஞர்களை, அவர்தம் கலைகளை மீளாய்வு செய்து இந்நூல் வழங்கப்பட்டுள்ளது.*

**726. தமிழ் இசுலாம் உருவாக்கமும் திருக்குர்ஆன் தமிழ் வாசிப்பும் (ஆய்வியல் சிந்தனை), எம். ஹாமீம் முஸ்தபா, (அ.சொ.), பக். 96, ரூ. 45**

*இஸ்லாமிய இலக்கிய வரலாற்றில் தமிழிசுலாம் எனும் கருத்தியலைக் கொண்டுள்ளது.*

727. **தலித் அறம், அரங்க மல்லிகா, (அ.சொ.), பக். 102, ரூ. 45**

*தலித்துகளுக்கான அரசியல், கல்வி, சமத்துவம், நிலம், பெண்கள் முன்னேற்றம் பற்றிய விவாதமும், ஆய்வும் தரப்பட்டுள்ளது. தமிழிலக்கியத்தில் தலித்துகளின் சூழல் ஆராயப்பட்டுள்ளது. குறிப்பாக பெண் விடுதலை குறித்த செய்திகள் இடம்பெற்றுள்ளன.*

728. **உலகச் செம்மொழிகள் (பன்னாட்டுக் கருத்தரங்கக் கட்டுரைகள்), கரு.அழ. குணசேகரன், ஜீன் லாறன்ஸ், (பதி), பக். 208, ரூ. 90**

*உலகத்தில் உள்ள செம்மொழிகளின் திறன் குறித்த பல்வேறு கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.*

729. **பொதுவுடைமை இயக்க இதழ்கள், இ. சுந்தரமூர்த்தி, மா.ரா. அரசு (பதி), பக். 258, ரூ. 115**

*1934ஆம் ஆண்டு முதல் 1975ஆம் ஆண்டு வரை வெளிவந்த இதழ்களின் கருத்தாக்கங்களை உள்ளடக்கிய கட்டுரைகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.*

730. **தமிழில் இதழியல், இ. சுந்தரமூர்த்தி, மா.ரா. அரசு, (பதி), பக். 606, ரூ. 270**

*பன்னாட்டுத் தமிழ் இதழ்களை, 1831-1881, 1882-1941, 1942-2000 எனக் காலமுறைப் பகுப்பில் அமைத்து அவற்றின் கருத்தியல் கோட்பாடு, அமைப்பும் ஆக்கமும், மொழி ஆகியவற்றை எடுத்துக்காட்டும் நூலாக அமைகின்றது.*

## 2012

731. **சேக்கிழாரும் இசைத்தமிழும், ம.அ. பாகீரதி (அ.சொ.). பக். 112, ரூ. 50**

*பெரியபுராணத்தை இயற்றிய சேக்கிழாரின் இசைத் திறத்தை போற்றும் வகையில் பாடல்களில் பண்களின் அமைப்பு, பயன்படுத்திய இசைக் கருவிகள், இசையமைப்பு போன்ற செய்திகள் காணப்படுகின்றன.*

732. **சித்தர்களின் நெறியில் வேதாத்திரிய யோகம் ஓர் ஒப்பாய்வு, ச. ஞானசம்பந்தன் (அ.சொ.), பக். 232, ரூ. 105**

*சித்தர்களின் நெறியில் வேதாத்திரிய யோகம் 12 பொருண்மைகளில் ஒப்பீடு செய்து விளக்கப்பட்டுள்ளது.*

**733. கவிஞர் புதுவைச்சிவத்தின் சீர்திருத்த நாடகங்கள், சிவ. இளங்கோ (அ.சொ.), பக். 262, ரூ. 120**

*கவிஞர் புதுவைச் சிவம் எழுதிய திராவிட இயக்கக் கொள்கை களை விளக்கும் சீர்திருத்த நாடகங்களை எடுத்துக்காட்டும் நூல்.*

**734. அறிஞர் பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள் தொகுதி–3, (தொகு) மு. வளர்மதி, பக். 506, ரூ. 230**

*அறிவியல் (பொது), இயற்பியல், வேதியியல், உயிரியியல், அணு விஞ்ஞானம், வானவியல், கல்வியியல், கணினியியல், மருத்துவம், நீர், உணவுப் பொருட்கள், போக்குவரத்து ஆகிய துறைகள் தொடர்பான பல்வேறு இதழ்களில் வெளியான 100 கட்டுரைகள் தொகுத்து வழங்கப்பட்டுள்ளன.*

**735. சிந்தனைச் சிற்பி ம. சிங்காரவேலரும் தந்தை பெரியாரும், முத்து குணசேகரன் (அ.சொ.), பக். 230, ரூ. 105**

*பொதுவுடைமை இயக்க முன்னோடி ம. சிங்காரவேலர் பகுத்தறிவு இயக்கச் சிந்தனையாளர் தந்தை பெரியார் ஆகிய இருவர் குறித்த வரலாற்று ஒப்பீட்டு நூல்.*

**736. மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் பன்முக ஆளுமை, கா.மு. பாபுஜி (அ.சொ.), பக். 102, ரூ. 50**

*மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரை உரையாசிரியர், வரலாற்று ஆய்வாளர், மொழியியல் வல்லுநர், திறனாய் வாளர் என பன்முக நோக்கில் ஆய்ந்துள்ள நூலாகும்.*

**737. நரம்புக் கருவிகள், செ. சுப்புலட்சுமி மோகன் (அ. சொ.), பக். 102, ரூ. 50**

*நரம்புக் கருவிகளின் தோற்றம், வகைகள், சிறப்பியல்புகள் குறித்து விளக்கும் நூலாகும்.*

**738. திணை வரலாறு, வெ.மு. ஷாஜகான் கனி (அ.சொ.), பக். 150, ரூ. 70**

*திணை விளக்கம் மற்றும் தமிழரின் திணை வரலாற்று இலக்கியங்கள் குறித்த நூலாகும்.*

**739. பெரியாரிய நோக்கில், மு.வ., இரா. அறவேந்தன் (அ.சொ.), பக். 110, ரூ. 55**

*பெண்ணுரிமை, சாதி, சமயம், கல்வி, மொழி, இலக்கியம், பொருள் எனும் அடிப்படையில் பெரியாரிய நோக்கில் மு.வ. குறித்த நூலாகும்.*

**740. திருமுறைகளில் அகப்பொருள் மரபுகளும் தொண்டு நெறிகளும், க. முருகேசன், (அ.சொ.), பக். 168, ரூ. 75**

*சைவ சமய நாயன்மார்களின் அகப்பொருள் நெறியும், சுந்தரமூர்த்தி நாயனாரின் தொண்டுள்ளமும், சைவ சமயம் திருவைந்தெழுத்து, திருநீறு, கண்டிகை என்னும் மூன்று முக்திச் சாதனங்களின் பெருமைகளை எடுத்துக்காட்டும் நூலாகும்.*

**741. சுவடிப் பதிப்பு முன்னோடிகள், ம.சா. அறிவுடை நம்பி, (அ.சொ.), பக். 136, ரூ. 60**

*சுவடிகளாக இருந்த தமிழ் நூல்களை அச்சில் கொண்டு வந்தோருள் ஆறுமுக நாவலர், சி.வை. தாமோதரம் பிள்ளை, உ.வே. சாமிநாதையர், ச. வையாபுரிப்பிள்ளை ஆகியோரின் பதிப்பு முயற்சிகள் மற்றும் பணிகள் குறித்த நூலாகும்.*

**742. விடுதலை சிந்தனையாளர் வ.உ. சிதம்பரனார் தமிழியற் பண்புகள், பூவை சு. ஜெயராமன், (அ.சொ.), பக். 176, ரூ. 80**

*வ.உ. சிதம்பரனாரின் பிறப்பும் பண்பும் நாடக மாண்பும் கூறப்பட்டுள்ளது. 'விடுதலைச் சிந்தனையாளர் வ.உ. சிதம்பரனார்' என்னும் நாடகத்தின் வாயிலாக வ.உ.சி.யின் தமிழியிற் பண்புகளையும் எடுத்துக்காட்டுவதாக இந்நூல் அமைந்துள்ளது.*

**743. அயல்நாட்டுத் தமிழ் இலக்கியங்கள், தொகுதி–1, கோ. விசயராகவன், மு. வளர்மதி, கு. சிதம்பரம், து. ஜானகி, (பதி), பக். 400, ரூ. 175**

*2013ஆம் ஆண்டு பிப்ரவரித் திங்கள் 14, 15 ஆகிய இரு நாள்களில் அயல் நாட்டுத் தமிழ் இலக்கியங்கள் எனும் பொருண்மையில் நடைபெற்ற கருத்தரங்கில் வழங்கிய 36 கட்டுரைகளின் தொகுப்பு.*

**744. அயல்நாட்டுத் தமிழ் இலக்கியங்கள், தொகுதி–2, (பதி) கோ. விசயராகவன், மு. வளர்மதி, கு. சிதம்பரம், து. ஜானகி, (பதி), பக். 456, ரூ. 200**

*மேற்படி பொருண்மையில் நடைபெற்ற கருத்தரங்கில் வழங்கிய 39 கட்டுரைகளின் தொகுப்பு.*

745\. **உதயண குமார காவியம் உணர்த்தும் வாழ்வியல் நெறிகள், இரா. சிவக்குமார், பக். 104, ரூ. 50**

*பதினைந்தாம் நூற்றாண்டிற்குரியதாகக் கருதப்படும் உதயண குமார காவியம் காதல், வீரம், அவலம், நகை எனப் பல்வேறு சுவைகளை உணர்த்தும் இக்காப்பியத்தை அடிப்படையாகக் கொண்டு வாழ்வியல் நெறிகளைக் காட்டுகிறது இந்நூல்.*

746\. **சங்க பெண்பாற் புலவர்களின் மொழிநடை, ரேணுகாதேவி, பக். 160, ரூ. 70 (அச்சில்)**

747\. **ஆதி சைவம் (அச்சில்)**

748\. **பாணர் இன வரைவியல், பக்தவத்சல பாரதி, பக். 248, ரூ. 110**

*பாணர், பொருநர், கூத்தர், கோடியர், வயிரியர், கண்ணுளர், விறலியர் முதலான பாண் சமூகத்தாரின் பழந்தமிழ் முறைகளை இனவரைவியல் அடிப்படையில் இந்நூல் ஆராய்கின்றது.*

749\. **திராவிட மொழிகளும் திராவிட மொழி ஆய்வுகளும், சு. மனோகரன், பக். 208, ரூ. 90**

*இந்தியத் துணைக்கண்டத்தில் காலத்தால் தொன்மையான, மிக முக்கியமாகப் பேசப்படும் மொழிக் குடும்பமான திராவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளின் ஆய்வுகளைப் பற்றியும் கள ஆய்வுகளின் அடிப்படையில் கண்டறியப் பட்டுள்ள திராவிட மொழிகளைப் பற்றியும் இந்நூலில் எடுத்துக்காட்டுகளுடன் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.*

750\. **சுவடிப் பதிப்புகளில் உரை வேறுபாடுகள், தொகுதி–1, (பதி) கோ. விசயராகவன், தி. மகாலட்சுமி, பக். 295, ரூ. 135**

*2013, மார்ச் 6, 7 ஆகிய நாள்களில் சுவடிப் பதிப்புகளில் உரை வேறுபாடுகள் எனும் தலைப்பில் நடைபெற்ற பன்னாட்டுக் கருத்தரங்கில் வழங்கிய 29 கட்டுரைகளின் தொகுப்பு.*

751\. **சுவடிப் பதிப்புகளில் உரை வேறுபாடுகள், தொகுதி–2, (பதி) கோ. விசயராகவன், தி. மகாலட்சுமி, பக். 295, ரூ. 140**

*2013, மார்ச் 6, 7 ஆகிய நாள்களில் சுவடிப் பதிப்புகளில் உரை வேறுபாடுகள் எனும் தலைப்பில் நடைபெற்ற பன்னாட்டுக் கருத்தரங்கில் வழங்கிய 35 கட்டுரைகளின் தொகுப்பு.*

# கல்விப் பணியாளர்கள்

முனைவர் மு. வளர்மதி
இணைப் பேராசிரியர்
அயல்நாட்டுத் தமிழர் புலம்

## இயக்குநர்கள்

### முனைவர் கா. மீனாட்சி சுந்தரம்

கா. மீனாட்சி சுந்தரம் 11.07.1925ஆம் நாள் கோவை வெள்ளக்கிணறு எனும் ஊரில் பிறந்தார். பெற்றோர் காளியப்ப கவுண்டர், காளியம்மாள். பி.எஸ்சி. (கணிதம்), முதுகலை (தமிழ்) பட்டம் பெற்றார். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 1950-1957 வரை தமிழ் விரிவுரையாளர், சென்னை மாநிலக் கல்லூரியில் தலைமைப் பேராசிரியராக 1957 முதல் 1965 வரை பணியாற்றினார். கோவை கலைக் கல்லூரியில் 1965 முதல் 1969 வரை தமிழ்ப் பேராசிரியராகவும், 1969 முதல் 1971 வரை சேலம் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகவும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 1971 முதல் 1974 வரை முதல் முதன்மை நிருவாக அலுவலராகவும் பணியாற்றினார். 1975 முதல் 1976 வரை திருப்பூர் கல்லூரி முதல்வராகவும், 1976 முதல் 1978 வரை தஞ்சை சரபோசி மன்னர் அரசு கல்லூரியின் முதல்வராகவும், 1978 முதல் 1981 வரை கோவை அரசு கலைக் கல்லூரியின் முதல்வராகவும் பணியாற்றினார். மேலும் 1981 முதல் 1982 வரை கல்லூரிக் கல்வித் துறையின் இணை இயக்குநராகவும், 1982 முதல் 1983 வரை இயக்குநராகவும் பணியாற்றி ஓய்வுப் பெற்றார். தமிழக அரசின் பாடத் திட்டக் குழு மற்றும் பரிசுக் குழு உறுப்பினராகவும் பல்வேறு பொறுப்புகளை வகித்துள்ளார்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் எம்.லிட். ஆய்வுப் பட்டம் (A study of the Poetical works of Subramania Bharathi), சென்னைப் பல்கலைக்கழகத்தில் டாக்டர் பட்டம் (The contribution of

European Scholars of Tamils) பெற்றார். பன்மையில் ஒருமை, சிலம்பில் துணைப் பாத்திரங்கள், அகராதிக்கு அப்பால், பாரதி பா நிலை, மொழிபெயர்ப்பு சாகித்திய அகாதெமிக்காக மகரிஷி, தேவேந்திரநாத் தாகூர், கம்பன், A study of the achievment of Bharathi as a Poet, *1263* பழமொழிகளின் தொகுப்பு, ஆங்கில வினாக்களுடன் கூடிய நூல் இவரது படைப்புகளாகும். பாரதி ஆய்வுக்காக 1970இல் சென்னைப் பாரதி சங்கம் ‘கேடயம்’ வழங்கியது. 1980இல் தமிழக அரசின் சிறந்த முதல்வருக்கான முதல் விருதினைப் பெற்றார்.

## முனைவர் ச.வே. சுப்பிரமணியன்

ச.வே. சுப்பிரமணியன் திருநெல்வேலி மாவட்டம் தென்காசி வட்டம் வீரகேரளன்புதூரில் 31.12.1929இல் பிறந்தார். பெற்றோர் சண்முக வேலாயுதம் பிள்ளை, ச. இராமலட்சுமி அம்மாள். இவர் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சிறப்புத் தமிழில் இளங்கலைப் பட்டம் பெற்றார். பின்னர் முதுகலை மற்றும் முனைவர் (தமிழ்) பட்டம் பெற்றார்.

இவர் இலக்கியம் மற்றும் சுவடிப்புலத்தில் பணியாற்றி யுள்ளார். மொழியியல் துறையிலும், இலக்கியத் துறையிலும் 30 ஆண்டுகளுக்கு மேல் அனுபவம் பெற்றவர்.

இலக்கியம், மொழியியல், திறனாய்வு, மொழிபெயர்ப்பு ஆகிய துறைகளில் பன்னாட்டுக் கருத்தரங்குகள் பல கண்டவர். மேலும் பல பன்னாட்டுக் கருத்தரங்குகளை நடத்தியவர். இவர் மேற்பார்வையில் 44 மாணவர்கள் முனைவர் பட்டம் பெற்றுள்ளனர்.

1969இல் திருநெல்வேலியில் உள்ள பாபநாசத்தில் திருவள்ளுவர் கல்லூரியை உருவாக்கினார். தமிழகமெங்கும் மட்டுமல்லாது ஜப்பான், ஹாங்காங், தாய்லாந்து, மணிலா, சிங்கப்பூர், மலேசியா போன்ற கீழை நாடுகளிலும், பாரீஸ், லண்டன், உரோம், ஏதென்ஸ், கேய்ரோ, செக்கோஸ்லோவேக்கியா, போலந்து, மேற்கு ஜெர்மனி ஆகிய மேலை நாடுகளிலும் சொற்பொழி வாற்றியுள்ளார்.

தமிழ், மலையாளம், ஆங்கிலம் ஆகிய மும்மொழியிலும் எழுபதுக்கும் மேற்பட்ட நூல்களைப் படைத்தவர். இருபதிற்கும் மேற்பட்ட அறக்கட்டளைச் சொற்பொழிவுகள், நூற்றிற்கும் மேற்பட்ட வானொலிச் சொற்பொழிவுகள், முந்நூற்றுக்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை வழங்கியவர்.

இலக்கிய நினைவுகள், சிலம்பின் சில பரல்கள், இலக்கியக் கனவுகள், மாந்தர் சிறப்பு, ஒன்று நன்று, அடியார்க்கு நல்லார் உரைத் திறன், இலக்கிய உணர்வுகள், கம்பன் கற்பனை, காப்பியப் புனைத் திறன், கம்பனும் உலகியல் அறிவும், கம்பன் இலக்கிய உத்திகள், இளங்கோவின் இலக்கிய உத்திகள் போன்ற திறனாய்வு நூல்களும், இலக்கணத் தொகை, எழுத்து, இலக்கணத் தொகை சொல், மொழி கட்டுரைகள், வீரசோழியயுரை, யாப்புப் பாட்டியல், தொன்னூல் விளக்கம், தொல்காப்பியப் பதிப்புகள், தொல்காப்பியம் தெளிவுரை ஆகிய இலக்கணம் மற்றும் மொழியியல் சார்ந்த நூல்களும், இலக்கிய வகையும் வடிவமும், தமிழ் இலக்கிய வரலாறு போன்ற சிறந்த நூல்களை வழங்கியவர்.

திருப்பத்தூர், தமிழ்ச் சங்கத்தின் வழி குன்றக்குடி ஆதினம் வழங்கிய 'தமிழாகரர்' எனும் விருது, தமிழகப் புலவர் குழு வழங்கிய 'செந்தமிழ்ச் செம்மல்' எனும் விருது, சாகித்திய அகாதெமி வழங்கிய 'பாஷா சம்மான்' எனும் விருது, இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் வழங்கிய 'நல்அறிஞர்' எனும் விருது, தமிழக அரசு வழங்கிய 'கி.ஆ.பெ. விசுவநாதம்' பெயரால் அமைந்த விருது, இராஜா சர் முத்தையா செட்டியார் அறக்கட்டளை வழங்கிய 'இராஜா சர் அண்ணாமலை செட்டியார்' விருது, சிதம்பரம் மெய்யப்பன் தமிழாய்வகம் வழங்கிய 'தமிழ் இயக்கச் செம்மல்' விருது, குமரப்பா படிப்பகம் வழங்கிய 'தமிழ் இலக்கியச் சிந்தனையாளர்' விருது ஆகியவை இவர் பெற்ற விருதுகளாகும். பேராசிரியர் , முனைவர் வ.அய். சுப்பிரமணியன் அவர்களின் மாணவர் இவர்.

**முனைவர் அ.நா. பெருமாள்**

அ.நா. பெருமாள் கன்னியாகுமரி மாவட்டத்தில் உசரவிளை என்ற ஊரில் 14.04.1930 அன்று பிறந்தார். பெற்றோர் அரிகிருஷ்ண நாடார், தங்கபழம். இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றவர்.

எல்.எம்.இ.சி. உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியராகவும், அகத்தீச்சுரம் விவேகானந்தர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராகவும் பணியாற்றிய இவர், 1975 மே முதல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் இணைப் பேராசிரியராகப் பணியில் அமர்ந்து பிறகு இயக்குநராக நியமிக்கப்பட்டார்.

நாடகமும் நாட்டுப்புறவியலும் இவருடைய ஆய்வுக் களங்களாக அமைந்தன. இவ்விருத் துறைகளிலும் பல படைப்பு களைப் படைத்துள்ளார். நூற்றுக்கும் மேற்பட்ட கட்டுரைகளைத் தமிழிலும், ஆங்கிலத்திலும் படைத்துள்ளார். தமிழக நாட்டுப்புறக் கலைகள், தமிழர் இசை, படைப்பாளர்களில் தமிழர் பண்பாடு, தமிழ் நாடகக் கலைக்களஞ்சியம், தமிழ் நாடகத்தின் தோற்றமும் வளர்ச்சியும் ஆகிய பத்துக்கும் மேற்பட்ட சிறந்த நூல்களை உருவாக்கியுள்ளார்.

நாடகச் செம்மல், எழுத்து ஏந்தல் பட்டங்களும், வி.ஜி.பி. சிறந்த எழுத்தாளர் பரிசும், இலக்கிய வீதி 'சிறந்த திறனாய்வாளர்' பரிசும் பெற்றுள்ளார்.

## முனைவர் க.த. திருநாவுக்கரசு

க.த. திருநாவுக்கரசு செங்கற்பட்டு மாவட்டத்தில் கருங்குழி என்ற கிராமத்தில் 20.11.1931 அன்று பிறந்தார். முதுகலை (தமிழ், வரலாறு), எம்.லிட்., மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார்.

தமிழ் இலக்கியம் மற்றும் வரலாற்றுப் புலத்தில் புலமைப் பெற்றவர். புதுக்கோட்டை மன்னர் கல்லூரியில் தம்முடைய பணியைத் தொடங்கினார். பின்னர் சென்னை, மாநிலக் கல்லூரியில் தமிழ்த் துறையில் துணைப் பேராசிரியராகவும், மணலி தமிழ்க் கல்லூரியில் முதல்வராகவும் பணியாற்றினார். இவர் சென்னைப் பல்கலைக்கழகத்தில் திருக்குறள் ஆராய்ச்சித் துறையில் தலைவராக வும் பணியாற்றியுள்ளார். பின்னர் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் இணைப் பேராசிரியராகப் பணியாற்றி, பின்பு இயக்குநராகவும் பணியாற்றினார்.

இலக்கியம், வரலாறு, கல்வெட்டு, மொழியியல், சமூக வியல், மானுடவியல், தத்துவம் ஆகியவற்றில் பல்துறை புலமைப் பெற்றவராகத் திகழ்ந்தார்.சமஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் புலமைப் பெற்றவர்.

வரலாறு 9, திறனாய்வு 8, உரையும் பதிப்பும் 3, தொகுப்பு 2, படைப்பிலக்கிய நாடகம் 2, மொழிபெயர்ப்பு 5 இவ்வாறு பல நிலைகளிலும் தன் படைப்பை வழங்கியவர். தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தமிழ்ப் பண்பாடு, தமிழக வரலாற்றின் இருண்ட காலம், சிந்துவெளிதரும் ஒளி - வாழ்வும் வரலாறும், வரலாற்று வஞ்சி இனமரபு வரலாறு, முதலாம் இராஜராஜன், இலங்கையின் தமிழ்ப்

பண்பாட்டு வரலாற்றுச் சுடர், திருக்குறள் நீதி இலக்கியம், திருக்குறளும் இந்திய அற நூல்களும், திருக்குறள் நூலடைவு ஆகிய சிறந்த நூல்களை வழங்கியவர்.

1974இல் 'திருக்குறள் நீதி இலக்கியம்' என்ற நூலிற்காக சாகித்திய அகாதெமி விருதினைப் பெற்றவர். திருக்குறள் மணி, திருக்குறள் சித்தர், குறள்நெறித் தோன்றல் ஆகிய பட்டங்களையும், திரு.வி.க . விருதினையும் பெற்றவர்.

## முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன்

சிலம்பொலி சு. செல்லப்பன் நாமக்கல் மாவட்டத்தைச் சேர்ந்த சிவியம்பாளையத்தில் 22.12.1929இல் பிறந்தார். பெற்றோர் சுப்பராயன், பழனியம்மாள்.

இவர் இளங்கலை அறிவியல் (கணிதம்), முதுகலை (தமிழ்), ஆய்வியல் நிறைஞர், முதுகலை (சட்டம்) மற்றும் முனைவர் பட்டம் பெற்றவர். இவர் நாமக்கல் பள்ளியில் கணித ஆசிரியராகத் தன் பணியைத் தொடங்கி தலைமையாசிரியராகப் பதவி உயர்வு பெற்று, பல மாவட்டங்களில் மாவட்டக் கல்வி முதன்மை அலுவலராகப் பொறுப்பு வகித்தார்.

தமிழ் வளர்ச்சித் துறையில் முதல் இயக்குநராகப் பணி யாற்றினார். தஞ்சாவூர் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் முதல் பதிவாளராகவும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் ஒன்றரை ஆண்டுகள் இயக்குநராகவும் பணியாற்றினார்.

சிறந்த எழுத்தாளராகவும், சொற்பொழிவாளராகவும், ஆய்வாளராகவும் திகழுபவர். சிலப்பதிகாரத் தெளிவுரை, மணிமேகலைத் தெளிவுரை, நாலடியார் தெளிவுரை, நெஞ்சை யள்ளும் சீறா, குறுந்தொகையில் நானிலம், சிலம்பொலி, மலர் நீட்டம், பெருங்கதை ஆராய்ச்சி, பாரதிதாசன் ஓர் உலகக் கவிஞர், காப்பியக் கம்பரும் புரட்சிக் கவிஞரும் என மேற்பட்ட ஆராய்ச்சி நூல்களைப் படைத்துள்ளார். இவர் நூற்றுக்கணக்கான நூல்களுக்கு அணிந்துரைகளும், முன்னுரைகளும் எழுதியுள்ளார்.

கணித ஆசிரியராகப் பணியாற்றியக் காலத்தில் 'கணிதப் பாட நூல்' ஒன்றை எழுதியுள்ளார். அந்நூலில் அனைத்துக் கணிதச்

சொற்களையும் தமிழிலேயே குறிப்பிட்டுள்ள 'கணிதத் தமிழ் மேதை' இவர்.

சொல்லின் செல்வர் ரா.பி. சேதுப்பிள்ளை 'சிலம்பொலி' என்ற சிறப்புப் பட்டத்தையும், குன்றக்குடி அடிகளார் 'நூலறிப் புலவர்' என்ற சிறப்பினையும் வழங்கினர். தமிழக அரசின் கலைமாமணி பட்டமும், பாரதிதாசன் விருதையும் பெற்றவர். 'நெஞ்சையள்ளும் சீறா' தொடர் சொற்பொழிவு நிகழ்த்தியதற்காக மீரா அற நிறுவனம் 'சீறாச்செல்வர்' என்ற பட்டத்தை வழங்கியது. மலேசியத் தமிழ்க் கழகம் 'தமிழ் நலக்காவலர்' என்ற பட்டத்தை வழங்கிச்சிறப்பித்தது. இராவண காவியம் தொடர்சொற்பொழிவினை நிகழ்த்திய பெருமைக்குரியவர்.

## முனைவர் அன்னிதாமசு

அன்னி மிருதுலகுமாரி தாமசு அவர்கள் நாகர்கோவிலில் 2.03.1949ஆம் ஆண்டு பிறந்தார். பெற்றோர் கிளாரன்ஸ் தாமஸ், அம்புஜம் தாமஸ்.

இவர் முதுகலை (தமிழ்), முனைவர் (தமிழ்), ஆங்கிலம், உளவியல், சமூகவியல் (முதுகலை) மற்றும் மானிடவியல் (சான்றிதழ்) பட்டம் பெற்றவர்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் இளநிலை ஆய்வாளராகப் பணியில் சேர்ந்து, முதுநிலை ஆராய்ச்சியாளராகவும், இணைப் பேராசிரியராகவும் பதவி உயர்வு பெற்றுப் பணியாற்றினார். இவர் இரண்டு முறை இயக்குநர் (பொறுப்பு) வகித்த சிறப்புக்குரியவர். முதல் பெண் இயக்குநர் (பொறுப்பு) என்பது குறிப்பிடத்தக்கது.

இருபதுக்கும் மேற்பட்ட ஆய்வு நூல்கள் வெளியிட்டுள்ளார். நூற்றுக்கும் மேற்பட்ட கருத்தரங்குகளிலும், இருபதுக்கும் மேற்பட்ட அறக்கட்டளைச் சொற்பொழிவு நிகழ்வுகளிலும் பங்கேற்றவர்.

பரிபாடலில் இயற்கை, பாரதிதாசன் தமிழுணர்வு, இருபதில் தமிழ் வளர்ச்சி, பதிப்பியல், யாப்பியல், தமிழியல், இலக்கியவியல் கோட்பாடுகளும் அணுகுமுறையும், மொழியியல், தமிழர் கொடிகள், தமிழர் சமூகவியல், தமிழ் இலக்கியத்தில் ஊனமுற்றோர் ஆகிய பல சிறந்த நூல்களை வழங்கியவர்.

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் சிறந்த நூலுக்கானப் (1995) பரிசினையும், வ.சுப. மாணிக்கனார் அறக்கட்டளையின் சிறந்த சிறுகதைக்கானப் (1998) பரிசினையும் பெற்றுள்ளார்.

## முனைவர் ச.சு. இராமர் இளங்கோ

ச.சு. இராமர் இளங்கோ 10.09.1944 அன்று தேனி மாவட்டம் ஆனைமலையான்பட்டி என்ற ஊரில் பிறந்தார். பெற்றோர் சுருளி, வீரம்மாள். இவர் முதுகலை, முனைவர் மற்றும் முதுமுனைவர் பட்டம் பெற்றவர். குடியாத்தம் அரசு திருமகள் ஆலைக் கல்லூரி, பெங்களூர் நிஜலிங்கப்பா கல்லூரி, மாநிலக் கல்லூரிகளில் பணியாற்றியுள்ளார். பாரதிதாசன் பற்றிய ஆய்வினை மேற்கொண்ட முதல் ஆய்வாளராகத் திகழ்பவர். 1994ஆம் ஆண்டு உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநராகப் பொறுப்பேற்றார்.

பாரதிதாசன் கதைப் பாடல்கள், பாரதிதாசன் இலக்கியம், பாரதிதாசன் ஒரு நோக்கு, பாரதிதாசன் பார்வையில் பாரதி, குடிஅரசு இதழில் பாரதிதாசன் பாடல்கள், பாரதிதாசன் படைப்புக் கலை, பாரதிதாசன் நாடகங்கள் ஓர் ஆய்வு, பாரதிதாசன் திருக்குறள் உரை, நகரத்தூதனில் பாரதிதாசன் படைப்புகள், பாரதிதாசன் தலையங்கங்கள் ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார். 16 தொகுப்பு நூல்களை வெளியிட்டுள்ளார்.

பாரதிதாசன் ஆய்விற்காக 1978ஆம் ஆண்டு முன்னாள் முதலமைச்சர் எம்.ஜி.ஆர். அவர்களின் பாராட்டைப் பெற்றவர். 1978இல் 'பாரதிதாசன் கதைப் பாடல்' என்ற நூலிற்காக தமிழக அரசின் பாவேந்தர் பாரதிதாசன் விருதைப் பெற்றவர். பாரதிதாசன் ஆய்விற்காக பல்வேறு பாராட்டுகளைப் பெற்றுள்ளார்.

## முனைவர் சா. கிருட்டினமூர்த்தி

சா. கிருட்டினமூர்த்தி 31.3.1951இல் கடலூர் மாவட்டத்தில் வளையமாதேவி என்னும் கிராமத்தில் பிறந்தார். பெற்றோர் மு. சாமிநாதன், சா. சானகியம்மாள். இளங்கலை, எம்.ஓ.எல்., பி.எட்., முனைவர் பட்டங்களைப் பெற்றுள்ளார். 1984 முதல் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் ஓலைச் சுவடித் துறை, பெருஞ்சொல் அகராதி, அறிவியல் தமிழ்த்துறை ஆகியவற்றில்

விரிவுரையாளராகவும், இணைப் பேராசிரியராகவும் பணிபுரிந்தார். இவருடைய மேற்பார்வையில் 15 முனைவர் பட்ட மாணவர்களும், 10க்கும் மேற்பட்ட ஆய்வியல் நிறைஞர் மாணவர்களும் பட்டங்கள் பெற்றுள்ளனர். சுவடியியல், இலக்கணம், அறிவியல் தமிழ்க் கலைச்சொல்லாக்கம் ஆகிய பொருண்மைகளில் 60க்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை வழங்கியுள்ளார். 2002ஆம் ஆண்டு உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநராகப் பொறுப்பேற்றார்.

உரைச் சொற் களஞ்சியம், இலக்கணச் சூடாமணி, அகத்திரட்டு போன்ற பதினைந்துக்கும் மேற்பட்ட நூல்களைப் பதிப்பித்துள்ளார். இளம்பூரணர் உரை என்ற நூலை எழுதியுள்ளார். அனைத்திந்திய அறிவியல் தமிழ்க் கழகத்தின் இணைச் செயலாளராகவும், தமிழ்நாடு அறிவியல் இயக்கத்தின் தமிழ்ப் பல்கலைக்கழகக் கிளையின் செயலாளராகவும் இருந்து பல கருத்தரங்குகளை நடத்தியுள்ளார்.

## முனைவர் ம. இராசேந்திரன்

ம. இராசேந்திரன் 3.3.1951ஆம் ஆண்டு திருவாரூர் மாவட்டத்தில் எட. அன்னவாசல் என்ற ஊரில் பிறந்தார். பெற்றோர் மகாதேவன், ஞானாம்பாள். இவர் முதுகலை, ஆய்வியல் நிறைஞர் மற்றும் புலவர் பட்டம் பெற்றுள்ளார். நிருவாகம், ஆய்வுப் பணியில் 34 ஆண்டுகள் அனுபவம் பெற்றவர்.

அரசினர் கீழ்த்திசைச் சுவடி நூலகத்தில் தமிழ்ப் புலவராகப் (1974-1980) பணியாற்றினார். 1980 முதல் 1981 வரை சென்னை, பச்சையப்பன் கல்லூரியில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றினார். 1986 முதல் 1989 வரை தஞ்சை, தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராக வும், சிறப்பு ஆய்வாளராகவும் பணியாற்றினார். 1991 முதல் 1993 வரை குறள்பீடம், மற்றும் தனி அலுவலராகப் (பொறுப்பு) பணி யாற்றினார். 1996 முதல் 1999 வரை சென்னை, தலைமைச் செயலகத்தில் மொழிபெயர்ப்புத் துறையில் இயக்குநராகப் பணியாற்றினார்.

1999 முதல் 2008 வரை தமிழ் வளர்ச்சித் துறை இயக்குநராகப் பதவி வகித்தார். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 2006 முதல் 2008 வரை இயக்குநராக (முழு பொறுப்பு) இருந்தார். 2008 முதல் 2010ஆம் ஆண்டு வரை தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தராகப் பதவி வகித்தார்.

பல்வேறு பல்கலைக்கழகக் குழுக்களின் உறுப்பினராக இருந்துள்ளார்.

நினைக்கப்படும், 1816இல் பழவேற்காடு, மெக்கன்சியின் சுவடிகளில் தமிழ்ப் பழங்குடி மக்கள், நின்ற சொல், காலின் மெக்கன்சி - வரலாறும் சுவடிகளும், கணையாழி தலையங்கங்கள் ஆகிய இவருடைய நூல்கள் குறிப்பிடத்தக்கவையாகும்.

அந்திப் பொழுதில், விடிகிற வேளையில், குற்றவாளிகள், வளர்ப்பு, ஊமை நதி, சிற்பியின் விதி ஆகியவை இவரின் சிறுகதைத் தொகுப்புகளாகும்.

தமிழ் மொழி வரலாறு, குறளமுதம், திருக்குறள் மதுரக் கீர்த்தனை, திருக்குறளின் விவரப் பட்டியல் ஆகிய நூல்களுக்குப் பொதுப் பதிப்பாசிரியராகவும், 9 நூல்களுக்குப் பதிப்பாசிரியராகவும் இருந்து வெளியிட்டுள்ளார். தற்போதும் தொடர்ந்து தமிழ்ப் பணியாற்றி வருகிறார்.

**முனைவர் செ. ஜீன் லாறன்ஸ்**

ச. ஜீன் லாறன்ஸ் 19.6.1950 அன்று கன்னியாகுமரி மாவட்டம் நெய்யூரில் பிறந்தார். இவர் முதுகலை (மொழியியல்) மற்றும் முனைவர் (மொழியியல்) பட்டம் பெற்றுள்ளார்.

இந்நிறுவனத்தில் 15.2.1984 அன்று முதல் முதுநிலை ஆராய்ச்சியாளராகப் பணியில் சேர்ந்து, இணைப் பேராசிரியர், பேராசிரியராகப் பணியாற்றினார். இயக்குநர் (பொறுப்பு) பதவி வகித்து ஓய்வு பெற்றார். இவர் நிறுவனத்தில் பணியாற்றிய காலம் 24 ஆண்டுகளாகும்.

பல்வேறு தேசியக் கருத்தரங்கு, பன்னாட்டுக் கருத்தரங்குகளில் கலந்து கொண்டு 33 ஆய்வுக் கட்டுரைகளை வழங்கியுள்ளார். அமெரிக்கா, மலேசியா ஆகிய நாடுகளுக்குப் பயணம் சென்று வந்துள்ளார். இவர் 12 நூல்களுக்கு மேல் பதிப்பாசிரியராக இருந்து வெளியிட்டுள்ளார். ஆசிரியர் கைவிளக்கு, பட்டோல - பணியர் மழலையர் நூல், Hand Book Tamil - Auto Instructional Course (Co-Author), Work Book - Written Tamil - Auto Instructional Course, Tamil Scripts - Work Book (Tamil Introductory Course), பதிப்பாசிரியர் நிலையில் தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள், தாய் நாட்டிலும் மேலை

நாடுகளிலும் தமிழியல் ஆய்வு, தொல்காப்பிய இலக்கணக் கோட்பாடுகள், இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள், (1) தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் : இலக்கியம், (2) தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் : இலக்கணம் & மொழியியல், (3) தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் : நாட்டுப்புறவியல், கலை மற்றும் பண்பாடு, (4) தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் : தொல்லியல், வரலாறு மற்றும் சமூகவியல், (5) தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் : சமயம், தத்துவம் மற்றும் உளவியல், (6) தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் : அறிவியல் மற்றும் தகவல் தொடர்பியல் ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார்.

**முனைவர் கரு.அழ. குணசேகரன்**

கரு.அழ. குணசேகரன் சிவகங்கை மாவட்டத்தில், மாராந்தை இளையான்குடியில் 12.05.1955 அன்று பிறந்தார். இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றவர். நாடகக் கலை மற்றும் நாடகவியல் பட்டயம் பெற்றுள்ளார். உதகமண்டலம் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் விரிவுரையாளராகவும், புதுவைப் பல்கலைக் கழகத்தில் இணைப் பேராசிரியராகவும், பேராசிரியர் மற்றும் துணைத் தலைவராகவும், பின்னர் 2008 முதல் 2011 வரை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குராகப் பணியாற்றினார்.

திரைத் துறைக் கலைஞராகவும், நாட்டுப்புறக் கலைஞராகவும் விளங்கி வருகிறார். சிறந்த நடிகருக்கானப் பரிசு (நாடகம் 1974-75), சிறந்த நகைச்சுவை நடிகர் (நாடகம் 1976-77), தனி நடிப்புக்கானப் பரிசு (நாடகம் 1974), பாரதி (திரைப்படம் - தேசிய விருது, 2000), நாட்டுப்புற மண்ணும் மக்களும் என்ற நூலுக்கு தமிழக அரசின் பரிசினைப் பெற்றவர்.

100க்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகள் வழங்கியுள்ளார். நாட்டுப்புற இசைக் கலை, நாட்டுப்புற நடனங்களும் பாடல்களும், நாட்டுப்புற நிகழ்கலைகள், தமிழக மலையின மக்கள், தலித் அரங்கியல், தலித் கலை கலாச்சாரம், வடு, தொட்டில் தொடங்கி தொடுவானம் போன்ற பல சிறந்த நூல்களை வழங்கியவர்.

**முனைவர் கூ.வ. எழிலரசு**

கூ.வ. எழிலரசு 1.10.1952 அன்று திருவண்ணாமலை மாவட்டத்தில் கூழமந்தலில் பிறந்தார். தந்தை கி. வரதன், தாய் சரோஜா. இவர்

முதுகலை, ஆய்வியல் நிறைஞர், கல்வியியல் ஆகிய பட்டங்களைப் பெற்றுள்ளார்.

தமிழ் வளர்ச்சித் துறையில் 39 ஆண்டுகள் பணி புரிந்துள்ளார். அந்நிறுவனத்தின் இயக்குநராக 1.4.2009 முதல் 30.09.2011 வரையில் பணியாற்றினார்.

'பாரதிதாசன் நாடகத் திறன்', 'இன்னொரு விடுதலை', 'நீதிக்கட்சித் தலைவர் டி.எம். நாயர் வாழ்வும் தொண்டும்' ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார். பல தேசியப் பன்னாட்டுக் கருத்தரங்குகளில் பங்கேற்றுள்ளார்.

**முனைவர் கா.மு. சேகர்**

கா.மு. சேகர் 3.10.1960 அன்று கொடிவலசை என்னும் சிற்றூரில் பிறந்தார். பெற்றோர் காட்டுப்பாக்கம் முனுசாமி, ரோசம்மா. இவர் முதுகலை, ஆய்வியல் நிறைஞர் மற்றும் முனைவர் பட்டம் பெற்றவர். இவர் தமிழ் வளர்ச்சித் துறையில் உதவி இயக்குநராக 18.10.1990 அன்று பணியில் சேர்ந்தார். துணை இயக்குநராகவும், இயக்குநராகவும் பதவிவழி உயர்வுப் பெற்றார். 1.10.2011 முதல் 22.11.2012 வரை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் கூடுதல் பொறுப்பில் இருந்தார்.

**முனைவர் கோ. விசயராகவன்**

கோ. விசயராகவன் 15.2.1964 திருவள்ளூர் மாவட்டம், திருவாலங்காடு (வட்டம்), மணவூர் குப்பம் கண்டிகை என்னும் சிற்றூரில் பிறந்தார். பெற்றோர் கோவிந்தசாமி, சின்னம்மாள். இவர் முதுகலை, கல்வியியல், ஆய்வியல் நிறைஞர், முனைவர் மற்றும் கூட்டுறவியல் (பட்டயம்) பட்டம் பெற்றுள்ளார்.

கற்பித்தல் பணியில் 6 ஆண்டு காலம் ஈடுபட்டவர். பாரதிதாசனும் தன்மான இயக்கமும், சங்க இலக்கியங்கள் ஓர் ஆய்வு, நான் படித்தேன் காஞ்சியிலே, சமூக நாட்குறிப்புகள், இனமுரசின் இடிமுழக்கம், தலைவனா! தத்துவமா! ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார்.

தமிழ் வளர்ச்சித் துறையின் சார்பில் மாநில முழுமையும் நடைபெற்ற ஆட்சி மொழிப் பயிலரங்குகள், கருத்தரங்குகள்,

பல்வேறு தமிழ் அமைப்புகள், பள்ளிகள், கல்லூரிகள் ஏற்பாடு செய்த நிகழ்வுகளில் கலந்துகொண்டு விரிவுரை நிகழ்த்தியுள்ளார்.

மாண்புமிகு முதலமைச்சர் அம்மா அவர்களின் தமிழ்த் தொண்டினை பறைசாற்றும் வகையில் 'அம்மாவும் அன்னைத் தமிழும்', 'தமிழின் ஆட்சி' ஆகிய குறும்படத் தயாரிப்பு. திருக்குறள், பாரதியார், பாரதிதாசன் பாடல்களை அரபு மொழியில் மொழிபெயர்க்கும் திட்டம், ஆட்சி மொழி குறித்த வகுப்புகள், சொல் வங்கித் திட்டம், ஆங்கிலக் கருத்துருக்கள் வரைவுகளை தமிழாக்கம் செய்தல், கலைச்சொல்லாக்கம் ஆகிய தமிழ் வளர்ச்சித் துறை சார்ந்தப் பணிகளில் பங்கேற்று வருகிறார்.

தமிழ்நாடு மாண்புமிகு முதலமைச்சர் புரட்சித்தலைவி அம்மா அவர்கள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கு வழங்கியுள்ள வளர்ச்சித் திட்டங்களான பேரறிஞர் அண்ணா தமிழ் மேம்பாடு அறக்கட்டளை, நிறுவனத்திற்கென புதிய கட்டடம் கட்டுதல், சுற்றுச்சுவர் அமைத்தல், தொல்காப்பிய ஆய்விருக்கை அமைத்தல், திருக்குறள் ஓவியக் காட்சிக் கூடம் அமைத்தல், உலகத் தமிழர் பண்பாட்டு வரவேற்பு (ம) தகவல் மையம் அமைத்தல், கல்வி மற்றும் நிருவாக அமைப்பில் காலிப் பணியிடங்களை நிரப்புதல் போன்ற பல பணிகளைச் சிறப்புற செய்து வருகிறார்.

## பேராசிரியர்கள்

### முனைவர் பொன். கோதண்டராமன்

பொன் கோதண்டராமன் 9.6.1941 அன்று பிறந்தார். சொந்த ஊர் இரும்புலிக்குறிச்சி. இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றவர். இவர் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் மொழியியல் புலத்தில் பணியாற்றினார். மொழியியல், மொழிபெயர்ப்பு, இலக்கியத் துறைகளில் 30 ஆண்டுகளுக்கு மேல் அனுபவம் பெற்றவர். படைப்பாளர் என்ற நிலையில் மொழியியல் புலம் சார்ந்து 20 நூல்களும், இலக்கண ஆய்வில் 15 நூல்களும், சுமார் 60 நூல்களுக்கு மேல் எழுதியுள்ளார்.

இலக்கியம், மொழியியல், திறனாய்வு, மொழிபெயர்ப்பு ஆகிய துறைகளில் பன்னாட்டுக் கருத்தரங்குகள் பல கண்டவர். பல பன்னாட்டுக் கருத்தரங்குகளை நடத்தியவர். இவருடைய மேற்

பார்வையில் 80 ஆய்வியல் நிறைஞர் மாணவர்கள், 80க்கும் மேற்பட்ட முனைவர் பட்ட மாணவர்கள் பட்டம் பெற்றுள்ளனர்.

முதுநிலை ஆராய்ச்சியாளராக யூனெஸ்கோ நிதியுதவிப் பெற்று நியூயார்க் பல்கலைக்கழகத்திற்கு நிறுவனத்தின் மூலம் 1972ஆம் ஆண்டு ஆய்வுக்காகச் சென்றார்.

நிறுவனத்திலிருந்து விலகி சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றி, சென்னைப் பல்கலைக் கழகத்தில் துணைவேந்தராகிப் பணி நிறைவு செய்தார். இவர் சென்னைப் பல்கலைக்கழகத்தில் துணைவேந்தராகப் பணியாற்றிய போதுதான் பல்கலைக்கழகத்தின் செயல்பாடுகளை விரிவாக்கி ஐந்து நட்சத்திர மதிப்பீட்டைப் பெற்றது. நாடு போற்றும் சிறந்த பல்கலைக்கழகம் என்ற உயர் நிலைக்கு உரியதாக அதனை ஆக்கி நிதி வளத்தைப் பெருக்கித் தமிழகத்திற்குப் பெருமை சேர்த்தார்.

தொல்காப்பிய அறிமுகம், பொது மொழியியல், இக்காலத் தமிழ் இலக்கணம், இலக்கண உலகில் புதிய பார்வை, இலக்கணக் கலைக் களஞ்சியம், இலக்கண உலகில் புதிய பார்வை 1, 2, 3 போன்ற நூல்களைப் படைத்துள்ளார்.

இவர் அமெரிக்கா, இங்கிலாந்து, பிரான்சு, இத்தாலி, செர்மனி, ஹாலந்து, ரசியா, ஜப்பான், மலேசியா, தென் ஆப்பிரிக்கா போன்ற பத்துக்கும் மேற்பட்ட வெளிநாடுகளுக்குப் பயணம் செய்துள்ளார். தனது தமிழ்ப்பணியை இன்றும் தொடர்ந்து வருகிறார்.

### முனைவர் சு. பாலச்சந்திரன்

சு. பாலச்சந்திரன் இராசபாளையத்தில் 15.6.1938 அன்று பிறந்தார். இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றவர். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் இலக்கியப் புலத்தில் பணியாற்றினார். இலக்கியத் திறனாய்வுத் துறையில் 20 ஆண்டுகள் அனுபவம் பெற்றவர். படைப்பாளர் என்ற நிலையில் 20 நூல்கள் வெளியிட்டுள்ளார். கட்டுரையாளராக இலக்கியம், இலக்கியத் திறனாய்வு, மொழிபெயர்ப்பு ஆகிய துறைகளில் 100க்கும் மேற்பட்ட கட்டுரைகள் வெளியிட்டுள்ளார். பன்னாட்டுக் கருத் தரங்குகளில் பல கலந்து கொண்டவர். பன்னாட்டுக் கருத்தரங்குகள்

பல எடுத்து நடத்தியவர். இவருடைய மேற்பார்வையில் 20 மாணவர்கள் ஆய்வியல் நிறைஞர் பட்டமும், 20 மாணவர்கள் முனைவர் பட்டமும் பெற்றுள்ளனர்.

இந்நிறுவனத்தில் முதுநிலை ஆராய்ச்சியாளராகப் பணி யாற்றும்பொழுது யுனெஸ்கோ நிதியுதவிப் பெற்று 1972ஆம் ஆண்டு நியூயார்க் பல்கலைக்கழகத்திற்குச் சென்றார்.

இந்தியப் பண்பாடு, சமய நெறி, வள்ளலார் நெறி ஆகிய வற்றில் பல நூறு மேடைகள் கண்டவர். பல்கலைக்கழக முதல் மாணவராக, தமிழ் முதுகலையில் வெற்றி பெற்றவர். டாக்டர் மு.வ.வின் மாணவர்.

## முனைவர் த.வே. வீராசாமி

கோவை மாவட்டம் தாராபுரத்தில் 1.2.1931 அன்று த.வே. வீராசாமி பிறந்தார். இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றவர். இவர் நிறுவனத்தில் இலக்கியப் புலத்தில் 1975ஆம் ஆண்டு முதல் இணைப்பேராசிரியராகப் பணியாற்றினார். படைப்பாளர் என்ற நிலையில் 20 நூல்களையும், கட்டுரையாளராக இலக்கியம், இலக்கியத் திறனாய்வு ஆகிய துறைகளில் 100க்கும் மேற்பட்ட கட்டுரைகளையும் வெளியிட்டுள்ளார். பன்னாட்டுக் கருத்தரங்குகள் பலவற்றில் கலந்து கொண்டவர். பன்னாட்டுக் கருத்தரங்குகள் பல நடத்தியவர். இவருடைய மேற்பார்வையில் 20 மாணவர்கள் ஆய்வியல் நிறைஞர் பட்டமும், 20 மாணவர்கள் முனைவர்பட்டமும் பெற்றுள்ளனர். தற்காலப் படைப்பிலக்கியத் திறனாய்வுகளில் அதிக கவனம் செலுத்தித் தன்னை முதன்மைப் படுத்திக் கொண்டவர். பொன்குஞ்சு, ஓரங்க நாடகங்கள், பட்டறையில் பாரதிதாசன், தமிழ் நாவல் இயல், தமிழ் நாவல் முன்னோட்டம், தமிழில் சமூக நாவல், கல்கி - அகிலன் கதைக்கலை, தமிழ் நாடக வரலாற்றில் பாரதிதாசன், ஆய்வுக் கதிர், வெற்றியின் இருமுகம், உழைப்பின் வெற்றி, பாரதி இலக்கியம் - ஒரு பார்வை ஆகியவை இவருடைய குறிப்பிடத்தக்க வெளியீடு களாகும். பதிப்பு நிலையில் பல நூல்களை உருவாக்கியுள்ளார்.

## முனைவர் ம.ரா.போ. குருசாமி

ம.ரா.போ. குருசாமி 15.6.1922 அன்று இராமநாதபுரம் மாவட்டம் மம்சாபுரத்தில் பிறந்தார். இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். இவர் நிறுவனத்தில் இலக்கியப்

புலத்தில் சிறப்புநிலைப் பேராசிரியராகப் பணியாற்றினார். படைப்பாளர் என்ற நிலையில் 20 நூல்கள் வெளியிட்டுள்ளார். குறிப்பாக இஸ்லாமிய இலக்கிய வரலாறு போற்றுதற்குரியது. டாக்டர் மு.வ.வின் மாணவர். பழந்தமிழ் இலக்கியத்தில் பல நூல்கள் கண்டவர். மொழிபெயர்ப்பில் 'நேருவின் எழுத்துகளும், கருத்துகளும்' என்ற நூலை உருவாக்கியவர்.

## முனைவர் அ.அ. மணவாளன்

அ.அ. மணவாளன் தென்னார்க்காடு அரும்பராம்பட்டு என்ற ஊரில் 6.9.1935ஆம் நாளன்று பிறந்தார். பெற்றோர் அப்பாவு, ஆதிலெட்சுமி. இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றவர். 1959 முதல் 1967 வரை உயர்நிலைப்பள்ளி தமிழாசிரியராகவும், 1969 முதல் 1973 வரை காஞ்சிபுரம் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்த்துறைப் பேராசிரியராகவும், 1973 முதல் 1978 வரை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் முதுநிலை ஆராய்ச்சியாளராகவும் இணைப் பேராசிரியராகவும் பணியாற்றினார். நிறுவன தமிழியல் ஆய்விதழில் சிறந்த கட்டுரைகளை வழங்கியுள்ளார்.

சென்னைப் பல்கலைக்கழகத்தின் தமிழ்த்துறைத் தலைவராகப் பணியாற்றி பணி நிறைவு செய்தார். இவர் சரஸ்வதி சம்மான் விருது, தமிழ் மாமணி விருது, கபிலர் விருது ஆகிய சிறப்புகளைப் பெற்றவர்.

பதிப்பாசிரியர் என்ற வகையில் 80 நூல்களையும், படைப்பாளர் என்ற நிலையில் 20 நூல்களையும் வெளிகொணர்ந்துள்ளார். இலக்கியம், மொழியியல், திறனாய்வு, மொழிபெயர்ப்பு ஆகிய துறைகளில் 70க்கும் மேற்பட்ட கட்டுரைகள் வெளியிட்டுள்ளார். தேசியக் கருத்தரங்கம் 17, பன்னாட்டுக் கருத்தரங்கம் 10க்கும் மேல் நடத்தியுள்ளார். 100க்கும் மேற்பட்ட கருத்தரங்களில் கட்டுரை வழங்கியுள்ளார்.

தொல்காப்பியப் பொருளதிகாரம் (கருத்துரையும் ஆங்கில மொழிபெயர்ப்பும்), இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள், பொருள் புதிது (பதி), இலக்கியக் கொள்கைகள் (தொகுதி 3), Tamil Research Through Journals ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார். இராம காதையும் இராமாயணங்களும், தமிழ்ப் பக்தி இயக்கம், அரிஸ்டாட்டிலின் கவிதை இயல், இலக்கிய

ஒப்பாய்வு - சங்க இலக்கியம் ஆகிய நூல்கள் குறிப்பிடத்தக்கன வாகும்.

**முனைவர் ஜி. ஜான் சாமுவேல்**

ஜி. ஜான் சாமுவேல் 2.4.1948 அன்று கன்னியாகுமரி மாவட்டத்தில் நெய்யூரில் பிறந்தார். இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றவர். 1972இல் நிறுவனத்தில் முதுநிலை ஆராய்ச்சியாளராகப் பணியாற்றினார். படைப்பாளர் என்ற நிலையில் தமிழில் 11 நூல்களும், ஆங்கிலத்தில் 5 நூல்களும் வெளியிட்டுள்ளார். நிறுவனத்திலிருந்து வெளியேறி ஆசியவியல் ஆய்வு நிறுவனம் என்ற தமிழ் மேலாய்வு நிறுவனத்தை உருவாக்கி இன்றுவரை நடத்தி வருகிறார். பல பன்னாட்டுக் கருத்தரங்குகளில் கலந்து கொண்டவர். பன்னாட்டுக் கருத்தரங்குகள் பல நடத்தியவர். இவருடைய மேற்பார்வையில் 16 மாணவர்கள் ஆய்வியல் நிறைஞர் பட்டமும், 16 மாணவர்கள் முனைவர் பட்டமும் பெற்றுள்ளனர். ஒப்பிலக்கிய ஆய்வில் பல சிறப்புறு நூல்களை வெளியிட்டுள்ளார்.

திராவிட மொழிகளின் ஒப்பாய்வு - ஓர் அறிமுகம், இலக்கியத் திறனாய்வு - முதற்பகுதி, ஷெல்லியின் கவிதைக் கலை, திறனாய்வுச் சிந்தனைகள், ஷெல்லியும் பாரதியும் - ஒரு புதிய பார்வை, இலக்கியத்தில் சமுதாயப் பார்வை, இலக்கிய ஒப்பாய்வுக் களங்கள், கலையும் கலைக்கோட்பாடுகளும், பண்பாட்டுக் கலப்பும் இலக்கிய ஒருமையும், பண்பாட்டுப் பயணங்கள், தமிழும் நானும், Studies in Comparative Literature, Comparative Literature Vol. 1, Studies in Tamil Poetry, Collected papers on Tamil Literature போன்ற பல நூல்களை எழுதியுள்ளார்.

**முனைவர் ச. சிவகாமி**
(தமிழ் இலக்கியம் மற்றும் சுவடிப்புலம்)

ச. சிவகாமி 15.11.1951 மதுரையில் பிறந்தார். பெற்றோர் சங்கரலிங்கம், மீனாட்சி. இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றவர். நிறுவனத்தில் இலக்கியம் மற்றும் சுவடிப் புலத்தில் 1981இல் ஆய்வு உதவியாளராகப் பணியேற்று, பின் பேராசிரியராகப் பணி நிறைவு செய்தார். பதிப்பாசிரியர் என்ற வகையில் 80 நூல்கள் வெளியிட்டுள்ளார். படைப்பாளர் என்ற நிலையில் 30 நூல்களை வெளியிட்டுள்ளார். இலக்கியம், மொழியியல், திறனாய்வு, மொழிபெயர்ப்பு ஆகிய துறைகளில் 70க்கும் மேற்பட்ட கட்டுரைகள் எழுதியுள்ளார். தேசிய, பன்னாட்டுக் கருத்தரங்கம் ஆகியவற்றில்

கலந்து கொண்டு 100க்கு மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை வழங்கியுள்ளார்.

தொடக்கம் முதல் நிறுவனத்தின் அறக்கட்டளைப் பொறுப்பாளராக இருந்து 60க்கும் மேற்பட்ட நிகழ்வுகளை நடத்தி, நூல்களை வெளியிட்டுள்ளார். நிறுவனத்தில் 'தமிழறிஞர் வரிசை' என்ற பெயரில் திங்கள் கருத்தரங்கம் நடத்தியுள்ளார். இவருடைய மேற்பார்வையில் 20 மாணவர்கள் ஆய்வியல் நிறைஞர் பட்டங்கள் பெற்றுள்ளனர்.

'கம்பன் ஆய்வடங்கல்' என்ற நூலுக்குக் கம்பன் கழகம் விருதினைப் பெற்றுள்ளார். 'அனுமன் ஆய்வும் வழிபாடும்' எனும் முதுகலைப் பட்டத்திற்கான ஆய்வேடு தொடங்கி, கம்பன் ஆய்வடங்கல், இராமாயணக் குறியீடுகள், இருபதில் கம்பன், கம்பன் களஞ்சியம் எனத் தொடர்ந்து கம்பன் ஆய்வில் ஈடுபட்டு வருகிறார்.

சென்னைக் கம்பன் கழகம் வழங்கும் கம்பன் அடிப்பொடி ச. கணேசன் நினைவு விருதினை முதன்முதலாகப் பெற்றுள்ளார்.

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் இவரின் சங்கத் தமிழியல், தமிழிலக்கியத்தில் எதிர்காலவியல் எனும் இரு நூல்களுக்கும், மூன்று போட்டிக் கட்டுரைகளுக்கும் பரிசு வழங்கிச் சிறப்பித்துள்ளது.

தமிழ்ச் சோலை, தமிழர் வாழ்வியல், செவ்வியல் தமிழ் ஆய்வுகள், சிலம்பில் தொல்காப்பியம், தமிழ்ச் சதக இலக்கியம், திறனாய்வியல், காலச் சூழலில் பெண்கள், பன்முகப் பார்வையில் பழமொழிகள், பழந்தமிழ்ப் புதுமை, கம்பன் காட்டும் உறவும் நட்பும் போன்ற நூல்கள் குறிப்பிடத்தக்கவையாகும். நிறுவனப் பணியிலிருந்து இவர் 2009ஆம் ஆண்டு பணி நிறைவு செய்து தொடர்ந்து தமிழ்ப் பணியாற்றி வருகிறார்.

**முனைவர் கு. இராசேந்திரன்**
**(தமிழ் இலக்கியம் மற்றும் சுவடிப்புலம்)**

கு. இராசேந்திரன் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றவர். அண்ணாமலை பல்கலைக்கழகத்தில் ஐந்தாண்டுகள் பயிற்றுவிப்பு பணியில் ஈடுபட்டவர். 1984ஆம் ஆண்டு முதுநிலை ஆராய்ச்சியாளராக நிறுவனத்தில் சேர்ந்தார். அயற்புலம் மாணவர் களுக்குத் தமிழ்க் கற்பித்தல் பணியில் ஈடுபட்டார். 1984 முதல் 1986 வரை இணைப் பேராசிரியராகப் பணியாற்றினார். தமிழர் மரபுச்

செல்வம், கோயிற்கலை (பதி), கால் அடி-தாள் - சொல் வரலாறு, உயிர் கதறல் ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார்.

கங்கை கொண்ட சோழபுரம், ஊர்ப் பெயர் மற்றும் வரலாற்றுப் பார்வை, எழுத்தும் சொல்லும் ஆகிய நிறுவன ஆய்வுப் பணிகளை மேற்கொண்டவர். 30க்கும் மேற்பட்ட தமிழியல் சார்ந்த ஆய்வுக் கட்டுரைகளை வழங்கியுள்ளார்.

**முனைவர் வி.சி. சசிவல்லி**
**(தமிழ் இலக்கியம் மற்றும் சுவடிப்புலம்)**

வி.சி. சசிவல்லி 21.2.1939 அன்று சென்னையில் பிறந்தார். பெற்றோர் செங்கல்வராய பிள்ளை, சாரதா. இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். இவர் நிறுவனத்தில் இலக்கியம் மற்றும் சுவடிப் புலத்தில் ஆய்வு உதவியாளராக 1981இல் பணியேற்று, முதுநிலை ஆராய்ச்சியாளராகப் பணி நிறைவு செய்தார்.

பதிப்பாசிரியர் என்ற வகையில் 5 நூல்களும், படைப்பாளர் என்ற நிலையில் ஐந்து நூல்களும் வெளியிட்டுள்ளார். 50க்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளைத் தேசியப் பன்னாட்டுக் கருத்தரங்குகளின் வழியாக வழங்கியுள்ளார்.

அறக்கட்டளைச் சொற்பொழிவில் 1992இல் 'அழகியல் சிந்தனைகள்' என்ற நூலை வெளியிட்டார். இந்நூலுக்கு தமிழக அரசின் சிறந்த நூலுக்கான இரண்டாம் பரிசைப் பெற்றார்.

'தமிழர் திருமணம்' என்ற நூலுக்குத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தினுடைய சிறந்த நூலுக்கானப் பரிசைப் பெற்றார்.

திருப்புகழ் ஒளிநெறி, தமிழர் தொழில்கள், சமயச் சொல்லகராதி, முல்லை, Misticism of Love in Saiva Thirumurais, Karaikkal Ammaiyar, The contribution of the Tamils to Indian Culture (Ed) போன்ற நூல்களை வெளியிட்டுள்ளார்.

செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தில் 'நற்றிணை - தொடரடைவு' திட்டப் பணியினை நிறைவு செய்துள்ளார். 2012ஆம் ஆண்டு இவர் சிறந்த தமிழ்ப் பணிக்காக 'அண்ணாமலை செட்டியார்' விருது பெற்றுள்ளார்.

**முனைவர் தி. மகாலட்சுமி**
**(தமிழ் இலக்கியம் மற்றும் சுவடிப்புலம்)**

மகாலட்சுமி 20.5.1954 அன்று மேட்டுப்பாளையத்தில் பிறந்தார். பெற்றோர் எஸ். திம்மே கவுடர், தி. கௌரம்மாள். இவர்

முதுகலை, ஆய்வியல் நிறைஞர் மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். மொழிபெயர்ப்பியல், சுவடியியல் மற்றும் இதழியல் பட்டயம் பெற்றுள்ளார். இவர் நிறுவனத்தில் இலக்கியம் மற்றும் சுவடிப் புலத்தில் 3.5.1989இல் ஆராய்ச்சி உதவியாளராக இணைந்து, முதுநிலை ஆராய்ச்சியாளராகவும், இணைப் பேராசிரி யராகவும் பணியாற்றினார்.

சுவடிப் புலத்தில் பயிற்சியாளராகவும், அமைப்பாளராகவும், கருத்தரங்க ஒருங்கிணைப்பாளராகவும் 25 ஆண்டுகள் பணியாற்றி யுள்ளார். பல சுவடிப் பயிலரங்குகளுக்குச் சென்று பொழிவுகள் வழங்கியுள்ளார். மலேசியாவிற்கு 2009இல் மதிப்புறு நிலையில் அழைக்கப்பட்டு சுவடியியல் குறித்த பொழிவை மலாயாப் பல்கலைக்கழகத்தில் நிகழ்த்தியுள்ளார்.

இவர் 55 நூல்களை வெளியிட்டுள்ளார். இலக்கியம், சுவடி, மருத்துவம், சோதிடம் ஆகிய துறைகளில் 140க்கும் மேற்பட்ட கட்டுரைகள் வழங்கியுள்ளார். தேசியக் கருத்தரங்கம், தேசியப் பயிலரங்கம், பன்னாட்டு கருத்தரங்கம் பல நடத்தியுள்ளார். இவருடைய மேற்பார்வையில் 33 ஆய்வியல் நிறைஞர் மாணவர்கள், 25 முனைவர் பட்ட மாணவர்கள் பட்டம் பெற்றுள்ளனர். 20 மாணவர்கள் சுவடிப் பட்டயம் பெற்றுள்ளனர். 15 முனைவர் பட்ட ஆய்வாளர்கள் இவரிடம் தற்போது ஆய்வு செய்து வருகின்றனர்.

இலக்கியத்தில் சோதிடம், சோதிட ரத்னாகரம் (வடமொழி யின் தமிழ் மொழிபெயர்ப்பு), சாதக அலங்காரம் மூலமும் உரையும், உலகத் தமிழ் மாநாட்டுக் கட்டுரைகள் அடைவு, சித்த மருத்துவ மணிகள் மூலமும் உரையும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனச் சுவடிகளின் விளக்க அட்டவணை தொகுதி 1 (சித்த மருத்துவம்), தொகுதி 2 (இலக்கியம்), தொகுதி 3 (மெய்யியல், நாட்டுப் புறவியல்), தொகுதி 4 (மொழி, கணிதம், சோதிடம், பண்பாடு), தட்சிணாமூர்த்தி குருமுகம் நூறு மூலமும் உரையும், சிலப்பதிகார ஆய்வுகள் ஓர் ஒப்பாய்வு, சோதிட நட்சத்திர மாலை, சித்த மருத்துவ விளக்கம், கோவைத் தமிழ் இலக்கணம், கோவை மாவட்ட வழக்குச் சொல்லகராதி (தொகுதி 1), சுவடியியல் ஆய்வு போன்ற நூல்கள் குறிப்பிடத்தக்கவையாகும்.

சோதிடவியல் என்ற நூலுக்கு 1997இல் தமிழக அரசின் முதல் பரிசினைப் பெற்றுள்ளார். பைந்தமிழ்ப் பேரொளி, அன்னை தெரசா, அவ்வை விருது (சிறந்த தமிழறிஞர்களுக்கான), செந்தமிழ்த் திலகம்

(சிறந்த தமிழ்ப் பணியாளருக்கான) போன்ற விருதுகளைப் பெற்றுள்ளார். 2012ஆம் ஆண்டு பணி நிறைவு செய்து, தற்போது ஆய்வு அலுவலராகத் தொடர்ந்து பணியாற்றி வருகிறார்.

**முனைவர் சூ. நிர்மலாதேவி**
**(இலக்கியம் மற்றும் சுவடிப்புலம்)**

சூ. நிர்மலாதேவி 20.10.1953 அன்று மதுரை மாவட்டத்தில் தென்னமநல்லூரில் பிறந்தார். பெற்றோர் இராசமாணிக்கம், இருளாயம்மாள். இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். கல்வெட்டியல் மற்றும் தொல் பொருளியல் பட்டயமும் பெற்றவர். நாட்டுப்புற இலக்கியத்தில் ஈடுபாடு மிக்கவர்.

'கேரளப் பல்கலைக்கழகக் கீழ்த்திசைச் சுவடிகள் விளக்க அட்டவணை' தயாரிப்புப் பணியில் நான்கு ஆண்டுகள் பணி யாற்றியுள்ளார். இவர் இந்நிறுவனத்தில் சுவடிப் புலத்தில் 1995இல் ஆராய்ச்சி உதவியாளராக இணைந்து முதுநிலை ஆராய்ச்சி யாளராகவும், இணைப் பேராசிரியராகவும் பணியாற்றினார்.

பதிப்பாசிரியர் என்ற வகையில் நாட்டுப் புற இலக்கியம் சார்ந்த சுவடிகளிலிருந்து நூல்களைத் தெரிவு செய்து பதிப்பித்துள்ளார். படைப்பாளர் என்ற நிலையில் 13 நூல்களை வெளியிட்டுள்ளார். நாட்டுப்புறவியல், இலக்கியம், சுவடியியல் ஆகிய துறைகளில் 25க்கும் மேற்பட்ட கட்டுரைகளை வழங்கியுள்ளார். தேசியக் கருத்தரங்கம் 4, 10க்கும் மேற்பட்ட பன்னாட்டுக் கருத்தரங்குகளில் பங்கேற்றுள்ளார். 16 கருத்தரங்குகளில் பங்கேற்று கட்டுரைகள் வழங்கியுள்ளார். பல அறக்கட்டளைச் சொற்பொழிவுகள், பயிலரங்கங்கள் நடத்தியுள்ளார். இவருடைய மேற்பார்வையில் 20 ஆய்வியல் நிறைஞர் மாணவர்களும் , 8 முனைவர் பட்ட மாணவர்களும் ஆய்வினை நிகழ்த்தியுள்ளனர்.

'கருவூரார் பல திரட்டு' (சித்த மருத்துவம்) என்ற நூலுக்காக 1982இல் தமிழக அரசின் சிறந்த நூலுக்கான இரண்டாம் பரிசினைப் பெற்றுள்ளார். 'அந்த ஆடு' என்ற சிறுகதைக்கு இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றத்தின் முதற் பரிசினைப் பெற்றுள்ளார். முத்தாரம்மன் கதை, சின்னணைஞ்சான் கதை, கோவலன் கதை, அழகன் பெருமாள் கதை ஆகிய நூல்களைச் சுவடிப் பதிப்பின்வழி வெளியிட்டுள்ளார். இவர் 2011ஆம் ஆண்டு பணி ஓய்வுபெற்றார்.

**முனைவர் த. பூமிநாகநாதன்**
**(இலக்கியம் மற்றும் சுவடிப்புலம்)**

த. பூமிநாகநாதன் 15.1.1949 அன்று பரமக்குடியில் பிறந்தார். பெற்றோர் சு. தசரத ராமராஜு, த. ஜானகி அம்மாள். இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார்.

1985 தொடக்கத்தில் ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தில் ஆராய்ச்சி உதவியாளராகப் பணியாற்றினார். 1995ஆம் ஆண்டு முதல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் இலக்கியம் மற்றும் சுவடிப் புலத்தில் ஆராய்ச்சி உதவியாளராகப் பணியாற்றி வந்தார்.

சுவடிப் பாதுகாப்பு மற்றும் பராமரிப்புக் குறித்து லக்னோவில் இவர் பெற்ற பயிற்சியின் பயனாக இந்நிறுவனத்தின் சுவடிகளைப் பராமரிக்கும் பணியையும் செய்து வந்தார்.

நிறுவனத்தின் செய்திக்கதிருக்கு 1997ஆம் ஆண்டு முதல் பொறுப்பாசிரியராக இருந்து வந்தார். அமிர்தமதன கூத்து நாடகம், வேதகிரியார் சூடாமணி நிகண்டு, எட்டையபுர பள்ளு, சாமிநாதப் பள்ளு போன்ற இவருடைய நூல்கள் குறிப்பிடத்தக்கவையாகும்.

பதிப்பாசிரியர் என்ற வகையில் 10 நூல்கள் வெளிக் கொணர்ந்துள்ளார். இலக்கியம், மொழியியல், திறனாய்வு, மொழிபெயர்ப்பு ஆகிய துறைகளில் 60க்கும் மேற்பட்ட கட்டுரைகள் வழங்கியுள்ளார். தேசிய மற்றும் பன்னாட்டுக் கருத்தரங்கம் பலவற்றில் பங்கேற்றுள்ளார். 2007இல் பணி நிறைவு செய்து தொடர்ந்து தமிழ்ப் பணியாற்றி வருகிறார்.

**முனைவர் ர. விஜயலட்சுமி**
**(அயல்நாட்டுத் தமிழர் புலம்)**

ர. விஜயலட்சுமி 18.6.1942 அன்று பிறந்தார். பெற்றோர் முத்துக்குமரன், ச. பாக்கியம். இவர் முதுகலை, ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். 1981இல் அயல்நாட்டுத் தமிழர் புலத்தில் முதுநிலை ஆராய்ச்சியாளராகப் பணியில் சேர்ந்து, இணைப் பேராசிரியராகப் பணி நிறைவு செய்தார்.

ஆங்கிலம், ஜெர்மன், சமஸ்கிருதம், பிராகிருதம், பாலி, சிங்களம் போன்ற மொழிகளில் சிறந்த பயிற்சி உடையவர். பன்மொழிப் புலமை பெற்றமையால் நிறுவனத்தில் அயல்நாட்டுத் தமிழர் புலத்தில்பணியாற்றியதோடு மொழிபெயர்ப்புப் பட்டய வகுப்புப் பொறுப்பாளராகவும் இருந்து பணியாற்றி வந்தார்.

பதிப்பாசிரியர் என்ற வகையில் 5 நூல்களும், படைப்பாளர் என்ற நிலையில் 3 நூல்களும் வெளிக்கொணர்ந்துள்ளார். இலக்கியம், சமயம், பெண்ணியம், மொழிபெயர்ப்பு ஆகிய துறைகளில் 30க்கும் மேற்பட்ட கட்டுரைகளை வெளியிட்டுள்ளார்.

20க்கும் மேற்பட்ட தேசியக் கருத்தரங்குகள், 20க்கும் மேற்பட்ட பன்னாட்டுக் கருத்தரங்குகளில் பங்கேற்றுள்ளார். 100க்கும் மேற்பட்ட ஆய்வுக் கருத்தரங்குகளில் கலந்து கொண்டு ஆய்வுக் கட்டுரைகள் வழங்கியுள்ளார்.

A Seminar on the Philosophical Heritage of Tamils (1983), Eighteen Special Lectures During the Silver Jubilee Celebrations (1996), A Seminar on Translation போன்ற 3 கருத்தரங்குநிகழ்வுகளை நடத்தியுள்ளார். இவருடைய மேற்பார்வையில் 6 மாணவர்கள் ஆய்வியல் நிறைஞர் பட்டமும், 3 மாணவர்கள் முனைவர் பட்டமும் பெற்றுள்ளனர்.

தமிழக அரசின் சிறந்த நூல்களுக்கான இரண்டு இரண்டாம் பரிசுகளை 1981இல் A Study of the Perunkathai என்ற நூலுக்கும், 1988இல் 'ஆசீவகம்' என்ற சமண சமய நூலுக்கும் பெற்றுள்ளார்.

'தமிழக மகளிர்' (தொடக்க காலம் முதல் 6ஆம் நூற்றாண்டு வரை) என்ற நூலை வெளியிட்டுள்ளார்.

உலகளாவிய அளவில் இவர் பெற்ற ஆய்வு உதவித்தொகை குறிப்பிடத் தகுந்தவையாகும். 1975-77 இல் 1984 ஆகிய ஆண்டுகளில் ஆய்வு மேற்கொண்டமை. (1972இல் Fellowship in the Dept. of Praqkirt Studies, University of Mysore, 1991இல் Reserch Fellow ship, Indian Institute of Advanced Studies, Simla (India) Spalding Fellowship University of Oxford Alexander - Von Humbolat Fellowship, Germany)

சுவீடன் நாட்டு உப்சலா பல்கலைக் கழகம், பிரெஞ்சு நாட்டு பாரீசில் உள்ள சொர்பான் பல்கலைக்கழகம் (University of Sorponne) போன்ற அயலகப் பல்கலைக் கழகங்களின் அழைப்பை ஏற்று இவர் ஆற்றிய சொற்பொழிவுகள் குறிப்பிடத்தக்கவை.

உலகளாவிய அளவில் பல கருத்தரங்குகளில் கலந்து கொண்டார். நிறுவனத்திற்குப் பெருமை சேர்த்த கருத்தரங்கங்கள் : Third world Tamil Conference, Parris (1970), British Orientalists Conference University of Oxford England (1970), Forth World Tamil Conference, SriLanka

(1974), German Orientalists Conference Fviburg Germany (1975), Fifth World Sanskrit Conference Varanasi (India, 1981), World Hindu Conference SriLanka, (1982), Eighth World Tamil Conference Tanjavur (1995).

2000ஆம் ஆண்டில் நிறுவனத்தில் பணி நிறைவு செய்து, தற்போதும் தொடர்ந்து தமிழ்ப் பணியாற்றி வருகிறார்.

**முனைவர் ந. கடிகாசலம்**
**(அயல்நாட்டுத் தமிழர் புலம்)**

ந. கடிகாசலம் 10.9.1948இல் வேலூர் மாவட்டத்தில் ரெண்டாடி யில் பிறந்தார். பெற்றோர் நரசிம்மன், தாயாரம்மாள். இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். இவர் நிறுவனத்தில் அயல்நாட்டுத் தமிழர் புலத்தில் முதுநிலை ஆராய்ச்சி யாளராகவும், இணைப் பேராசிரியராகவும் பணியாற்றியுள்ளார்.

பதிப்பாசிரியர் என்ற வகையில் 80 நூல்கள் வெளிக் கொணர்ந்துள்ளார். படைப்பாளர் என்ற நிலையில் 20 நூல்கள் வெளியிட்டுள்ளார். இலக்கியம், மொழியியல், திறனாய்வு, மொழிபெயர்ப்பு ஆகிய துறைகளில் 70க்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகள் வழங்கியுள்ளார்.

15க்கும் மேற்பட்ட தேசியக் கருத்தரங்குகள், 10க்கும் மேற்பட்ட பன்னாட்டுக் கருத்தரங்குகளில் கலந்து கொண்டுள்ளார். 45க்கும் மேற்பட்ட பிற கருத்தரங்குகளில் கலந்து கொண்டு ஆய்வுக் கட்டுரைகள் வழங்கியுள்ளார். சீனாவில், பீகிங் வானொலியில் ஐந்தாண்டுகள் தமிழ்ப் பணியாற்றியவர். 'சொற்பொருட் கோட்பாடுகள்' எனும் நூலுக்கு 1996 ஆம் ஆண்டில் தமிழக அரசின் சிறந்த நூலுக்கான முதற்பரிசினைப் பெற்றுள்ளார்.

பெய்ஜிங் மாநகரில் 29.09.2004 அன்று சீன அரசாங்கத்தின் நட்புறவு விருதினைப் (Friendship Award) பெற்றுள்ளார்.

தமிழும் பிற துறைகளும், தமிழ் ஆய்வுக் களங்கள், சீனத்து விந்தைக் கதைகள், சீன நவ தந்திரக் கதைகள், சங்கச் சமூகம், மந்திரப் பறவை, சொற்பொருட் கோட்பாடுகள், பிறை நிலா (சீன நாவல்) போன்ற நூல்கள் குறிப்பிடத்தக்கவையாகும். சீன இலக்கியங்களைத் தமிழில் தருவதில் முதன்மையானவர். இவர் நிறுவனத்தில் பணி நிறைவு செய்து, தற்போதும் தமிழ்ப் பணியாற்றி வருகிறார்.

**முனைவர் மு. வளர்மதி**
**(அயல்நாட்டுத் தமிழர்புலம்)**

மு. வளர்மதி 16.4.1956 அன்று தர்மபுரி மாவட்டம், பாப்பி ரெட்டிப்பட்டியில் பிறந்தார். பெற்றோர் க. முத்து, செல்லம்மாள். இவர் முதுகலை, முனைவர் பட்டமும், மொழிபெயர்ப்பியல் பட்டயமும் பெற்றுள்ளார். இவர் 1983இல் நிறுவனத்தில் மொழிபெயர்ப்புத் துறையில் ஆராய்ச்சி உதவியாளராகப் பணியில் சேர்ந்து முதுநிலை ஆராய்ச்சியாளராகப் பணியாற்றி தற்போது இணைப் பேராசிரியராகப் பணிபுரிந்து வருகிறார்.

இவர் 22 நூல்களை வெளியிட்டுள்ளார். இலக்கியம், மொழியியல், திறனாய்வு, மொழிபெயர்ப்பு, பெரியாரியல் சிந்தனைகள் (திராவிடவியல்) ஆகிய துறை சார்ந்த 80க்கும் மேற்பட்ட கட்டுரைகளைக் கருத்தரங்குகளிலும், இதழ்களிலும் வெளியிட்டுள்ளார்.

இவருடைய மேற்பார்வையில் 25 ஆய்வியல் நிறைஞர் மாணவர்கள் பட்டம் பெற்றுள்ளனர். 8 முனைவர் பட்ட மாணவர்களுக்கு நெறியாளராக இருந்து வருகிறார்.

On Translation, தமிழ் மொழிபெயர்ப்பு முன்னோடிகள், பெ.நா. அப்புசுவாமியின் அறிவியல் கட்டுரைகள், காண்டேகரும் கா.ஸ்ரீ.ஸ்ரீ.யும், சுயமரியாதை இயக்க வீராங்கனைகள், மொழி பெயர்ப்புக் கலை, பறை - இசைக்கருவி ஓர் ஆய்வு, இலக்கியப் பயணங்கள், மூவலூர் இராமாமிர்தம் அம்மையார், அன்னை நாகம்மையாரும் தோழர் கண்ணம்மாவும் ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார்.

அண்ணா நூற்றாண்டு விழாவையொட்டி 2009ஆம் ஆண்டு 12 திங்கள் கருத்தரங்குகள் தொடர்ந்து நடத்தி 'அறிஞர்கள் பார்வையில் பேரறிஞர் அண்ணா' என்ற நூலை வெளியிட்டுள்ளார்.

**முனைவர் கு. பகவதி**
**(சமூகம், கலை மற்றும் பண்பாட்டுப் புலம்)**

கு. பகவதி 2.6.1950 அன்று கன்னியாகுமரி மாவட்டம் இரணியல் கிராமத்தில் பிறந்தார். தந்தை குற்றாலம் பிள்ளை, தாய் மீனாட்சி. இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். இவர் சமூகவியல் மற்றும் கலைப் பண்பாட்டுப் புலத்தில் 14.01.1980இல்

ஆராய்ச்சி உதவியாளராகப் பணியேற்று, முதுநிலை ஆராய்ச்சி யாளராகவும் இணைப் பேராசிரியராகவும் பேராசிரியாகப் பணியாற்றி பணி நிறைவு செய்தார்.

பதிப்பாசிரியர் என்ற வகையில் 8 நூல்களையும்,படைப்பாளர் என்ற நிலையில் 7 நூல்களையும் வெளியிட்டுள்ளார். 4 தேசியக் கருத்தரங்கம், 10 பன்னாட்டுக் கருத்தரங்குகளில் கலந்து கொண்டுள்ளார். 85க்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகள் வழங்கியுள்ளார். இவருடைய மேற்பார்வையில் 20 மாணவர்கள் ஆய்வியல் நிறைஞர், 5 மாணவர்கள் முனைவர் பட்டமும் பெற்றுள்ளனர்.

தேசிய, பன்னாட்டுக் கருத்தரங்குகள் பலவற்றை நடத்தியுள்ளார். தேசிய நாடகப் பள்ளி (புதுதில்லி) நடத்திய நாடகத் தயாரிப்புப் பட்டறைக்கு ஒருங்கிணைப்பாளராக இருந்து செயலாற்றியுள்ளார்.

செம்மொழித் தமிழாய்வு நிறுவனமும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனமும் இணைந்து நடத்தியப் பயிலரங்கில் சங்க இலக்கியப் பாடல்களுக்கு ஏற்ற வகையில் கவின் கலைக் கல்லூரி மாணவர்களுக்கு ஓவியப் பயிற்சி அளித்தார்.

1996-97இல் நிறுவன 'தமிழியல்' இதழுக்கு இணைப் பதிப்பாசிரியராக இருந்து பணியாற்றியுள்ளார்.

கணினி இணைய மாநாடு தொடர்பாக மலேசியாவில் நடைபெற்ற இணையம் 2001 மாநாடு மற்றும் அமெரிக்க ஐக்கிய நாட்டில் உள்ள சான்பிரான்சிஸ்கோ நகரில் நடைபெற்ற இணையம் 2002 மாநாட்டிலும் கலந்து கொண்டு நிறுவனத்திற்குச் சிறப்பு சேர்த்துள்ளார்.

தமிழர் ஆடைகள், தமிழர் அளவியல், தமிழக ஊர்ப் பெயர்கள், சென்னை (1639க்கு முன் பின்), மணப்பொருட்கள் (சிலப்பதி காரத்தில்), தமிழர் பண்பாட்டுச் சொற்கோவை, தொல்காப்பிய உரைவளம் (மரபியல்) ஆகிய இவருடைய நூல்கள் குறிப்பிடத்தக்கவையாகும்.

தமிழர் ஆடைகள், சென்னை (1639க்கு முன் பின்) என்ற இரு நூல்களுக்கு தமிழ் வளர்ச்சித் துறையின் பரிசினைப் பெற்றுள்ளார். இடப் பெயராய்வு, ஊர்ப் பெயராய்வு, சங்க காலப் பண்பாடு பற்றிய ஆய்வு போன்ற உயராய்வுகளில் பணியாற்றி வந்தார். இவர் 2008ஆம் ஆண்டு பணி நிறைவு செய்தார்.

**முனைவர் துளசி இராமசாமி**
(சமூகம், கலை மற்றும் பண்பாட்டுப் புலம்)

துளசி இராமசாமி 3.8.1942 அன்று தூத்துக்குடி, விளாத்திக்குளம் வட்டத்தில் மேலக்கல்லூரணியில் பிறந்தார். பெற்றோர் துளசி ராமு, சீனியம்மாள். இவர் முதுகலை, முனைவர் பட்டமும், மொழியியலில் பட்டயமும் பெற்றவர்.

1968 முதல் 1969 வரை திருநெல்வேலியில் உள்ள ம.தி.தா. இந்துக் கல்லூரியில் தமிழ்ப் பயிற்றுநராக ஓராண்டு பணியாற்றினார். பின் பெங்களூர் நிஜலிங்கப்பா கல்லூரியில் தமிழ் விரிவுரையாளராக 1969 முதல் 1976 வரை 7 ஆண்டுகள் பணி புரிந்துள்ளார்.

இந்நிறுவனத்தில் 1984ஆம் ஆண்டு சமூகவியல், கலை மற்றும் பண்பாட்டுப் புலத்தில் முதுநிலை ஆய்வாளராகப் பணியில் சேர்ந்தார். இவர் நாட்டுப்புற இலக்கியத்தில் ஈடுபாடு உடையவர்.

25க்கும் மேற்பட்ட ஆய்வு நூல்களும், 150க்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளும் எழுதியுள்ளார். தமிழ் யட்சகானம், நெல்லை மாவட்ட நாட்டுப்புறத் தெய்வங்கள், மங்கலதேவி கண்ணகிக் கோட்டம், சமண முனிவர்கள் எழுதியது திருக்குறள், பழந்தமிழ் இலக்கியங்கள் நாட்டுப்புறப் பாடல்களே ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார். முனைவர் பட்ட ஆய்வு மாணவர்கள் பலருக்கு நெறியாளராக இருந்துள்ளார். 2001ஆம் ஆண்டு பணி நிறைவு செய்து தமிழ் ஆய்வுப் பணிகளில் ஈடுபட்டு வருகிறார்.

**முனைவர் கு. சுப்பையா பிள்ளை**
(தமிழ்மொழி மற்றும் மொழியியல் புலம்)

கு. சுப்பையா பிள்ளை 31.05.1950 அன்று கன்னியாகுமரி மாவட்டத்தில் பிறந்தார். பெற்றோர் குற்றாலம் பிள்ளை, கு. பொன்னம்மாள். இவர் முதுகலை (ஆங்கிலம்), முதுகலை (மொழியியல்), முதுகலை (தமிழ்), கல்வியியல், முனைவர் (மொழியியல்) பட்டமும், கன்னடம், பிரெஞ்சு பட்டயமும் பெற்றுள்ளார். இவர் மொழியியல் புலத்தில் 1986இல் முதுநிலை ஆராய்ச்சியாளராகப் பணியில் சேர்ந்து இணைப் பேராசிரியராகப் பணியாற்றினார். கணினி மொழியியல் ஆய்வில் ஈடுபாடு உடையவர்.

இலக்கியம், மொழியியல், திறனாய்வு, மொழிபெயர்ப்பு ஆகிய துறைகளில் தேசிய, பன்னாட்டுக் கருத்தரங்குகளில் பங்கேற்று

35க்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை வழங்கியுள்ளார். பல பயிலரங்குகள் திறம்பட நடத்தியுள்ளார். இவருடைய மேற்பார்வையில் 2 ஆய்வியல் நிறைஞர் மாணவர்கள், 2 மாணவர்கள் முனைவர் பட்டம் பெற்றுள்ளனர்.

Tamilnadu Bengal Cultural Relation (1987), Language and Literature (ed) (1995), 'இயற்கை மொழியாய்வு' (தமிழ் - 1998) ஆகிய இவருடைய நூல்கள் குறிப்பிடத்தக்கனவாகும். கணினி மொழி யியல் கலைச்சொல் அகராதி (Technical Terms Dictionary of Comparational Linguistics) என்ற நூலுக்கான எழுத்துரு இவரால் வழங்கப்பட்டுள்ளது.

15 முறை தமிழக அரசுத் துறையில் பணிபுரியும் மொழிச் சிறுபான்மையினருக்குத் தமிழ் வகுப்புகள் நடத்தியுள்ளார். 1995இல் நடந்த எட்டாவது உலகத் தமிழ் மாநாட்டு கண்காட்சி அரங்கில் நிறுவனம் தொடர்பான ஆராய்ச்சி அரங்கை வடிவமைத்தவர். இம்மாநாட்டையொட்டி நம் மரபுச் செல்வங்களை ஒளிநாடாவில் ஆவணப்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டவர்.

முதல் முறையாக உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் தொடர்பான பணிகளைப் பல்கலைக்கழக மானியக் குழுவிடம் விளக்கி நிதி நல்கையைப் பெற்றுத் தந்த பெருமை இவரைச் சாரும். 'தமிழியல்' 11 இதழின் இணை ஆசிரியராகப் பணியாற்றியுள்ளார். 2008ஆம் ஆண்டு பணி நிறைவு செய்தார்.

### முனைவர் தா. ரெங்கநாதன்

(தமிழ்மொழி மற்றும் மொழியியல் புலம்)

தா. ரெங்கநாதன் 1.11.1954 அன்று கன்னியாகுமரி மாவட்டம் சொத்தவிளையில் பிறந்தார். பெற்றோர் த. தானியல், தா. காசித் தங்கம். இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். இவர் மொழியியல் புலத்தில் 1986இல் முதுநிலை ஆராய்ச்சியாள ராகப் பணியில் சேர்ந்து இணைப் பேராசிரியராகவும், பேராசிரியராக வும் பணியாற்றினார்.

24 ஆண்டுகள் வெளிநாட்டு மாணவர்களுக்கு அறிமுக நிலை வகுப்பு, உயர்நிலை மற்றும் செறிவு நிலை பயிற்சிகளை வழங்கி யுள்ளார். மொழி சிறுபான்மையினருக்குத் தமிழ்ப் பயிற்சி (15 ஆண்டுகள் 15 குழுக்கள்), பாண்டிச்சேரி பிரெஞ்சு நிறுவனத்தின் (1998 முதல் 2000ஆம் ஆண்டு வரை) தமிழ்ப் பயிற்றுவித்தல் மற்றும் பொது

பதிப்பாசிரியராக ஏழு நூல்கள், இணைப் பதிப்பாசிரியராகத் 'தமிழியல்' இதழின் 7 இதழ்களையும் வெளியிட்டுள்ளார்.

தேசிய, பன்னாட்டுக் கருத்தரங்களில் கலந்து கொண்டு 30க்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை வழங்கியுள்ளார். இவருடைய மேற்பார்வையில் 25 ஆய்வியல் நிறைஞர் மாணவர்களும், 5 முனைவர் பட்ட மாணவர்களும் பட்டம் பெற்றுள்ளனர். Hand Book - Tamil An Auto Instructional Course (Co-author), Work Book Spoken Tamil ஆகியன இவருடைய வெளியீடுகளாகும். இவர் 2012ஆம் ஆண்டு பணி நிறைவு செய்தார்.

## நிறுவனத்தின் நான்கு புலங்களிலும் பேராசிரியர்கள் பலர் பணி நிறைவு பெற்றமையால் 2010ஆம் ஆண்டு அப்பணியிடங்களில் முதுநிலை ஆராய்ச்சியாளர், இணைப் பேராசிரியர், பேராசிரியர் ஆகிய பணியிடங்களில் பணி நியமனம் செய்யப்பட்ட கல்விப் பணியாளர்கள் குறித்த விவரங்கள்

### முனைவர் பத்மாவதி விவேகானந்தன்

(பேராசிரியர், சமூகம் கலை மற்றும் பண்பாட்டுப்புலம்)

பத்மாவதி விவேகானந்தன் 27.1.1954 அன்று சென்னையில் பிறந்தார். பெற்றோர் வி. ராஜகோபால், வேதம்மாள். இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். இவர் 2009ஆம் ஆண்டில் சமூகவியல், கலை மற்றும் பண்பாட்டுப் புலத்தில் பேராசிரியராகப் பணியாற்றினார். 2011ஆம் ஆண்டு மீண்டும் மீனாட்சிக் கல்லூரிக்குச் சென்று பணியாற்றி ஓய்வு பெற்றார். தற்போது தொடர்ந்து தமிழ்ப் பணியாற்றி வருகிறார்.

தேசியக் கருத்தரங்கம், பன்னாட்டுக் கருத்தரங்கம் மற்றும் தமிழியல் சார்ந்த பல்வேறு கருத்தரங்குகளில் கலந்து கொண்டு 100க்கும் மேற்பட்ட கட்டுரைகளை வழங்கியுள்ளார்.

தகழியின் நாவல்கள் (தமிழில்) ஓர் ஆய்வு, தமிழாக்கம் பெற்றுள்ள மலையாள நாவல்களின் போக்குகள், காலந்தோறும் மானுடம், தலித் இலக்கியம், இக்கால இலக்கியம், உன்னை அறிந்தால் (கவிதை), காயம் (சிறுகதை), பெண் கவிதை மொழியும் பெண் கவிஞர்களும், எனது பார்வையில் சமகால எழுத்துகள், பெரியாரும் நவீனப் பெண்ணியமும், பாரதியின் பார்வையில்

நால்வருணம், சிறுகதைகள் 2000-2001 திறனாய்வு, சமூகப் பயன்பாட்டில் இலக்கியக் கல்வி போன்ற நூல்கள் குறிப்பிடத் தக்கவையாகும். இவர் 18 நூல்களை வெளியிட்டுள்ளார்.

சிறந்த புதுக்கவிதை நூலுக்கான தமிழ்நாடு அரசு பரிசு, 2012ஆம் ஆண்டு 'பெரியார் விருது' பெற்றுள்ளார். காசியூர் ரெங்கம்மாள் இலக்கிய விருது, பி.எம்.எஸ். அறக்கட்டளையின் இலக்கிய பரிசு, இலக்கிய சாதனையாளர் விருது, சக்தி 2004 விருது, திருப்பூர் தமிழ்ச் சங்க விருது, பெண் சாதனையாளர் 2005 விருது, சான்றோர் விருது, தமிழ்ச் சான்றோர் விருது எனப் பல பரிசுகள், பாராட்டுகள் பெற்றுள்ளார்.

**முனைவர் பெ. செல்வக்குமார்**
(இணைப் பேராசிரியர், தமிழ்மொழி மற்றும் மொழியியல் புலம்)

பெ. செல்வக்குமார் 19.4.1967 அன்று சேலம் மாவட்டம் மேட்டூரில் பிறந்தார். பெற்றோர் பெருமாள், ராஜம்மாள். இவர் முதுகலை, ஆய்வியல் நிறைஞர் மற்றும் முனைவர் (மொழியியல்) பட்டம் பெற்றுள்ளார். இவர் 1996 முதல் 2000 வரை தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் மொழியியல் துறையில் பல்கலைக்கழக மானியக் குழு நிதியில் குறுந்திட்ட உதவியாளராகவும், 2000 முதல் 2002 வரை மொழிபெயர்ப்புத் துறையில் இளநிலை ஆய்வுத் தகைமையராகவும் பணியாற்றினார்.

மைசூர், இந்திய மொழிகள் நடுவண் நிறுவனத்தில் 2002 முதல் 2004 வரை தென்னிந்திய மொழிகள் மையத்தில் தமிழ் விரிவுரையாளராகவும், நீலகிரிப் பழங்குடி மொழிகள் ஆய்வில் திட்ட உதவியாளராகவும் (2 மாதங்கள்) பாஷா மந்தாகினி (ஆவணக் காட்சிப் படம் தயாரித்தல் திட்டம்) ஒருங்கிணைப்பாளர் மற்றும் ஆய்வு ஆலோசகராகவும் பணியாற்றினார்.

2006 முதல் 2007 வரை மைசூர் , செம்மொழித் தமிழ் உயராய்வு மையத்தில் ஆய்வு வளமையராகப் பணியாற்றினார். கோயம்புத்தூர், பாரதியார் பல்கலைக்கழகத்தில் 2007 முதல் 2010 வரை உதவிப் பேராசிரியராகப் பணியாற்றினார். தற்போது உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் தமிழ்மொழி (ம) மொழியியல் புலத்தில் 2010 முதல் இணைப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

பதிப்பாசிரியர் என்ற வகையில் நான்கு நூல்களும், படைப்பாளர் என்ற நிலையில் ஒரு நூலையும் வெளியிட்டுள்ளார். தேசிய அளவில் 12 ஆய்வுக் கட்டுரைகளும், பன்னாட்டு அளவில் 4 கட்டுரைகளும் வழங்கியுள்ளார். 30க்கும் மேற்பட்ட கருத்தரங்குகளில் கலந்து கொண்டு ஆய்வுக் கட்டுரைகளை வழங்கியுள்ளார். தேசியக் கருத்தரங்கம், புத்தாக்கப் பயிற்சி, பயிற்சிப் பட்டறை, பயிலரங்கம், அறக்கட்டளைச் சொற்பொழிவு ஆகியவற்றை நடத்தி வருகிறார். இவருடைய மேற்பார்வையில் 6 ஆய்வியல் நிறைஞர் மாணவர்களும், 4 மாணவர்கள் முனைவர் பட்டமும் பெற்றுள்ளனர்.

**முனைவர் க. சுசீலா**
**(முதுநிலை ஆராய்ச்சியாளர், தமிழ்மொழி மற்றும் மொழியியல் புலம்)**

க. சுசீலா 11.03.1976 அன்று திருவாரூர் மாவட்டம் திருத்துறைப்பூண்டி வட்டம் கோமாளப்பேட்டை கிராமத்தில் பிறந்தார். பெற்றோர் கூ. கணேசன், க. ஆச்சியம்மாள். முதுகலை (மொழியியல்), முதுகலை (தமிழ்), முனைவர் (மொழியியல்) பட்டம் பெற்றுள்ளார். மைசூர், இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனத்தில் இணையவழி தமிழ் கற்பித்தல் (Tamil Online Teaching 2005 - 2008), இளநிலை ஆய்வாளர், இந்திய தேசிய நுண்தேர்வு மையம் (2008-2010) ஐந்து ஆண்டுகள் விரிவுரையாளராகப் பணியாற்றியுள்ளார். 'திராவிட மொழிகளில் தமிழ்' என்ற நூலை வெளியிட்டுள்ளார். பல தேசியப் பன்னாட்டுக் கருத்தரங்குகளில் பங்கேற்றுள்ளார். 2010 ஆம் ஆண்டு முதல் நிறுவனத்தில் உதவிப் பேராசிரியராக மொழியியல் புலத்தில் பணியாற்றி வருகிறார். செம்மொழித் தமிழாய்வு மத்திய நிறுவனத்தின் நிதி நல்கையில் 'பண்டைய தமிழக ஊழிய மாந்தர்' எனும் தலைப்பில் ஆய்வுத் திட்டத்தை முடித்தார். இவருடைய மேற்பார்வையில் 8 மாணவர்கள் ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றுள்ளனர். 8 ஆய்வியல் நிறைஞர் மாணவர்களுக்கும் 8 முனைவர் பட்ட மாணவர்களுக்கும் நெறியாளராக உள்ளார். இவர் கல்வியியல் சார் கருத்தரங்கிற்காக வெளிநாட்டுப் பயணமாக கோலாலம்பூர், சிங்கப்பூர் சென்று வந்துள்ளார்.

**முனைவர் நா. சுலோசனா**
**(முதுநிலை ஆராய்ச்சியாளர், தமிழ்மொழி மற்றும் மொழியியல் புலம்)**

நா. சுலோசனா 11.04.1975 அன்று விருதுநகர் மாவட்டம், சிவகாசி வட்டம், காக்கிவாடன்பட்டி கிராமத்தில் பிறந்தார்.

பெற்றோர் ச. நாராயணசாமி, நா. ஜெயலட்சுமி. இவர் முதுகலை, ஆய்வியல் நிறைஞர் மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். இவர் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் தமிழ் மொழி (ம) மொழியியல் புலத்தில் 2013ஆம் ஆண்டு சூன் திங்களிலிருந்து உதவிப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

இவர் கோ. வெங்கடசாமி நாயுடு கல்லூரி (கோவில்பட்டி, தூத்துக்குடி மாவட்டம்), செ.சீ. துரைசாமி நாடார் மாரியம்மாள் கல்லூரிகளில் (கோவில்பட்டி, தூத்துக்குடி மாவட்டம்) விரிவுரை யாளராகப் பணியாற்றியுள்ளார். அய்யநாடார் ஜானகி அம்மாள் கல்லூரியில் (சிவகாசி) மூன்றாண்டு உதவிப் பேராசிரியராகப் பணியாற்றியுள்ளார். 'திராவிட வேரும் விழுதுகளும்' என்ற நூலை வெளியிட் டுள்ளார். தேசியக் கருத்தரங்கம், பன்னாட்டுக் கருத்தரங்குகளில் கலந்து கொண்டு 32 ஆய்வுக் கட்டுரைகளை வழங்கியுள்ளார். 2010இல் பெரியாரியல் சிந்தனை மையம் வழங்கிய 'பெரியாரியல்' விருதினைப் பெற்றுள்ளார்.

**முனைவர் அ. சதீஷ்**
**(இணைப் பேராசிரியர், தமிழ் இலக்கியம் மற்றும் சுவடிப்புலம்)**

அ. சதீஷ் 10.10.1980 அன்று திருவண்ணாமலை மாவட்டம், தென்மகாதேவமங்கலம் என்ற ஊரில் பிறந்தார். பெற்றோர் இரா. அப்பு, அ. ஜோதி. இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டமும், சுவடியியல் மற்றும் பதிப்பியலில் பட்டயமும் பெற்றுள்ளார். சித்தூர் அரசுக் கல்லூரியில் தமிழ்த் துறையில் உதவிப் பேராசிரியராக ஐந்தாண்டுகள் பணிபுரிந்துள்ளார். இவர் சுவடியியல் மற்றும் பதிப்பியல் புலத்தில் 2010 முதல் உதவிப் பேராசிரியராகப் பணியில் சேர்ந்து 2013ஆம் ஆண்டில் ஜூன் மாதம் முதல் இணைப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

15க்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளை வெளியிட்டுள்ளார். தேசியக் கருத்தரங்கம் 18, பன்னாட்டுக் கருத்தரங்கம் 3 ஆகியவற்றில் பங்கேற்றுள்ளார். புத்தாக்கப் பயிற்சி, புத்தொளிப் பயிற்சி, பயிற்சிப் பட்டறையில் பங்கேற்றுள்ளார். 10 ஆய்வியல் நிறைஞர் மாணவர் களுக்கு இவர் மேற்பார்வையாளராக உள்ளார். இவர் 9 நூல்களை வெளியிட்டுள்ளார். சங்க இலக்கிய உரைகள், நூல் பதிப்பும் நுண் அரசியலும், கு.ப.ரா. படைப்புகள் - ஆய்வுப் பதிப்புகள் (4 தொகுதிகள்), ரசிகன் கதைகள் - ஆய்வுப் பதிப்பு, காமன் கதைப்

பாடல் - சுவடிப் பதிப்பு ஆகிய நூல்கள் இவருடைய குறிப்பிடத்தக்க வெளியீடுகளாகும்.

மாற்றுவெளி, ரோஜா இதழ், வல்லினம் ஆகிய ஆய்விதழ் களில் ஆசிரியர் குழுவில் ஒருவர். நிறுவனத்தில் வலைதள ஒருங்கிணைப்பாளர், ரோஜா முத்தையா ஆராய்ச்சி நூலகத்தில் 3 மாத கால தொல்காப்பியம் முழுமையும் சிறப்பு வகுப்புகளை நடத்தியுள்ளார்.

### முனைவர் கோ. பன்னீர்செல்வம்

(முதுநிலை ஆராய்ச்சியாளர், தமிழ் இலக்கியம் மற்றும் சுவடிப்புலம்)

கோ. பன்னீர்செல்வம் 10.04.1977 அன்று திண்டுக்கல் மாவட்டம் சில்க்வார்பட்டியில் பிறந்தார். பெற்றோர் கோவிந்த ராஜன், வெள்ளையம்மாள். இவர் முதுகலை, ஆய்வியல் நிறைஞர் (நாட்டுப்புறவியல்) மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். இந்நிறுவனத்தில் 2010 முதல் இலக்கியம் மற்றும் சுவடிப் புலத்தில் உதவிப் பேராசிரியராகப் பணியில் சேர்ந்தார். இவருடைய மேற்பார்வையில் இரண்டு மாணவர்கள் ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றுள்ளனர்.

தஞ்சை பாரத் அறிவியல் - மேலாண்மையியல் கல்லூரியிலும், திருநெல்வேலி மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகக் கல்லூரியான நாகம்பட்டி மனோ கல்லூரியிலும் விரிவுரையாளராகப் பணியாற்றியவர். பல தேசிய, பன்னாட்டுக் கருத்தரங்குகளில் கலந்து கொண்டு கட்டுரைகளை வழங்கியுள்ளார்.

மீள் : தமிழியல் ஆய்வுகள், தொடரும் காலனியக் குற்றம், தமிழ் மலைக்குறவர் வாழ்வியல், சனங்களின் பாட்டு : சமூக மாற்றத்தை நோக்கி அரசியல் மயமாகும் நாட்டுப்புறப் பாடல்கள், பாவேந்தரும் விளிம்புநிலை மக்களும், குறவர் பழங்குடி : இனவரைவியல் ஆய்வு, மக்கள் பண்பாடு (இதழ் தொகுப்பு), அம்பேத்காரைப் பாடிய பாரதிதாசன், இரவின் மரணம் : நாடோடிகளின் மீளாத் துயரம், மணிக்குறவர் மாண்டக் கதையும் மீண்ட வரலாறும் ஆகியவை இவருடைய வெளியீடுகளாகும்.

**முனைவர் சு. தாமரைப்பாண்டியன்**
(முதுநிலை ஆராய்ச்சியாளர், தமிழ் இலக்கியம் மற்றும் சுவடிப்புலம்)

சு. தாமரைப்பாண்டியன் 09.04.1976 அன்று திருநெல்வேலி மாவட்டத்தில் சிவசுப்பிரமணியபுரம் எனும் ஊரில் பிறந்தார். பெற்றோர் வே. சுப்பிரமணியன், சு. அன்னபாக்கியம். இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார்.

இமயம் கலை அறிவியல் கல்லூரி (திருச்சி - துறையூர்), பி.ஜி.பி. கலை அறிவியல் கல்லூரி (நாமக்கல்), டாக்டர் என்.ஜி.பி. கலை அறிவியல் கல்லூரி (கோவை) ஆகிய கல்லூரிகளில் ஆறு ஆண்டுகள் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றியுள்ளார். இவர் தற்பொழுது 14.06.2013 முதல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் தமிழிலக்கியம் (ம) சுவடியியல் புலத்தில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

இவர் வெளியிட்டுள்ள நூல்கள் 18. கட்டறுந்த சலனங்கள், கருவறையே கல்லறையாக, திரை இசைக்கேற்ற இனிய பாடல்கள் (கவிதை), இருளன் (சிறுகதை), வல்லாள மகாராசன் கதை, சங்கிலி பூதத்தான் கதை, குயிலவண்ணான் கதை, களியலாட்டப் பாடல்கள் - பதிப்பும் ஆய்வும், கபாலக்காரன் பிறவி - போர்க்கதை, வள்ளித் திருமணம் கதை, மன்னன் கருங்காளி வாதை கதை, அபிமன்னன் போர்க்கதை, கதைப்பாடல் சுவடித்திரட்டும் பதிப்பும் (பகுதி 1, 2, 3) ஆகிய ஓலைச் சுவடி பதிப்பு நூல்கள், நாட்டார் வழக்காறுகளில் மக்கள் இடம் பெயர்வும் வரலாறும், தென்தமிழக நாட்டுப்புற வழக்காறுகளில் இடம் பெயர்வு, சங்க இலக்கியத்தில் பெண் மறுப்பு ஆகிய வரலாற்றுசார் நூல்களை வெளியிட்டுள்ளார்.

இவர், திருவள்ளுவர் விருது, கவிமுரசு விருது, தமிழ்த் தென்றல் விருது, நல்ஆசான் விருது, இசக்கி விருது ஆகிய விருதுகளைப் பெற்றுள்ளார்.

**முனைவர் ஆ. மணவழகன்**
(இணைப் பேராசிரியர், சமூகம் கலை மற்றும் பண்பாட்டுப் புலம்)

ஆ. மணவழகன் 12.06.1977 அன்று சேலம் மாவட்டம் கெங்கவல்லியில் பிறந்தார். பெற்றோர் மா. ஆறுமுகம், ச. பெரியக்காள். இவர் முதுகலை, ஆய்வியல் நிறைஞர் மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். கல்வெட்டியியல் பயிற்சியும்

சென்னை, அண்ணா பல்கலைக்கழகத்தில் 2000 முதல் 2004 வரை கணினித் தமிழ் ஆராய்ச்சியாளராகவும், டி.ஆர்.பி.சி.சி.சி. இந்துக் கல்லூரியில் மூன்று மாதங்கள் விரிவுரையாளராகவும், எஸ்.ஆர்.எம். பல்கலைக்கழகத்தில் 2005 முதல் 2011 வரை தமிழ்த் துறைத் தலைவராகவும் பணியாற்றியுள்ளார்.

தற்போது நிறுவனத்தில் இவர் சமூகவியல், கலை (ம) பண்பாட்டுப் புலத்தில் 2011ஆம் ஆண்டில் உதவிப் பேராசிரியராக பணியில் சேர்ந்தார். 2013ஆம் ஆண்டு ஜூன் மாதம் முதல் இணைப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

நூலாசிரியர் என்ற நிலையில் எட்டு நூல்களும், பொதுப் பதிப்பாசிரியர் என்ற நிலையில் ஐந்து நூல்களும் வெளி யிட்டுள்ளார். படைப்பாளர் என்ற நிலையில் ஒரு கவிதை நூல் வெளிக்கொணர்ந்துள்ளார். தேசிய அளவில் 19, பன்னாட்டு அளவில் 23 ஆய்வுக் கட்டுரைகளை வழங்கியுள்ளார். 100க்கு மேற்பட்ட கருத்தரங்குகளில் கலந்து கொண்டுள்ளார். கருத்தரங்குகள், பயிலரங்குகள், பயிற்சி வகுப்புகள் பலவற்றை நடத்தியுள்ளார். இவருடைய மேற்பார்வையில் 12 மாணவர்கள் ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றுள்ளனர். 6 ஆய்வியல் நிறைஞர், 10 முனைவர் பட்ட மாணவர்களுக்கு நெறியாளராக இருந்து வருகிறார்.

பண்டைத் தமிழரின் தொலைநோக்குப் பார்வை, சங்க இலக்கியத்தில் மேலாண்மை, தொலைநோக்கு, பழந்தமிழர் தொழில்நுட்பம், கூடாகும் சுள்ளிகள், பதினெண் கீழ்க்கணக்கில் தமிழரின் மரபு அறிவு, தமிழ்ச் செவ்வியல் நூல்களில் அறம் - அறிவியல் - சமூகம், திருமணம் செல்வக்கேசவராய முதலியார் படைப்புத் திறன் ஆகிய நூல்கள் இவருடைய படைப்புகளாகும்.

மேலும், கணினித் தமிழ் உருவாக்கங்கள் 3 (குறுந்தகடுகள்), கணினி மொழியியல் தொகுப்புகள் 8, கணினித் தமிழ் பல்லூடகத் தொகுப்புகள் 7 வெளியிட்டுள்ளார். செம்மொழித் தமிழுக்கான குடியரசுத் தலைவரின் 'இளம் ஆய்வறிஞர் விருது' (2007-08) பெற்றவர். இலட்ச ரூபாய் பரிசும் குடியரசுத் தலைவரின் பாராட்டுச் சான்றிதழும் உள்ளடக்கியது. இந்திய மொழிகள் நடுவண் நிறுவனத்தால் கவிதைத் துறைக்கான 'இளம் படைப்பாளி'யாகத் தேர்வு (2005) செய்யப் பட்டார்.

**முனைவர் கா. காமராஜ்**
(முதுநிலை ஆராய்ச்சியாளர், சமூகவியல் கலை மற்றும் பண்பாட்டுப்புலம்)

கா.காமராஜ் 03.02.1981 அன்று மதுரை மாவட்டம் அணைக்கரைப்பட்டி என்ற ஊரில் பிறந்தார். பெற்றோர் கு. காமையன், கா. முத்தம்மாள். இவர் முதுகலை மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். மைசூரில் உள்ள இந்திய மொழிகள் நடுவண் நிறுவனத்தில் ஆறுமாத கால குறுகிய ஆராய்ச்சிப் பணியில் ஈடுபட்டவர். Mother Tounge Servey of India, Kolkata. Language Divison திட்டத்தில் பணியாற்றியுள்ளார். நாட்டுப்புறவியல் பழங்குடிகள், மொழியியல் ஆகிய துறைகளில் சிறப்புப் புலமைப் பெற்றவர். "பழங்குடி மாணவர்களுக்கான தமிழ்மொழிப் பாடநூல் மதிப்பீட்டு- ஆய்வு" என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வினை நிகழ்த்தியுள்ளார். பத்துக்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகள் எழுதியுள்ளார். முப்பதுக்கும் மேற்பட்ட தேசிய மற்றும் பன்னாட்டுக் கருத்தரங்குகளில் கலந்துகொண்டுள்ளார். பல்கலை ஆர்வலர் விருது (நேரு யுவகேந்திரா, திருச்சி), சிறந்த சமூக சேவைக்கான ஹரிஜன் பந்து ஆகிய விருதுகளைப் பெற்றுள்ளார். 19.11.2013 முதல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் சமூகவியல் கலை மற்றும் பண்பாட்டுப் புலத்தில் பணியாற்றி வருகிறார்.

**முனைவர் கு. சிதம்பரம்**
(முதுநிலை ஆராய்ச்சியாளர், அயல்நாட்டுத் தமிழர்புலம்)

கு. சிதம்பரம் 04.07.1975 அன்று தருமபுரி மாவட்டம், பென்னாகரம் வட்டம், புதுப்பட்டியில் பிறந்தார். பெற்றோர் குப்புசாமி, முனியம்மாள். இவர் முதுகலை (மொழியியல்), முதுகலை (தமிழ்), முனைவர் (மொழியியல்), பி.ஜி.டி. எச்.ஆர். (மனித உரிமைகள்) பட்டம் பெற்றுள்ளார்.

கோயம்புத்தூர், பாரதியார் பல்கலைக்கழகத்தில் 2004 முதல் 2005 வரை மொழியியல் துறையில் ஆய்வு வளமையராகவும், 2006 முதல் 2008 வரை சீனாவில் ரேபில்ஸ் பன்னாட்டுக் கல்லூரியில் மொழியியல் விரிவுரையாளராகவும், 2009 முதல் 2010 வரை மைசூர், இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனத்தில் தென்னிந்திய மொழி களின் மையத்தில் தமிழ் விரிவுரையாளராகவும் பணியாற்றினார். இந்நிறுவனத்தில் 2010ஆம் ஆண்டு முதல் அயல்நாட்டுத் தமிழர்

புலத்தில் உதவிப் பேராசிரியராகவும், உலகத் தமிழர் பண்பாட்டு வரவேற்பு (ம) தகவல் மையத்தின் பொறுப்பாளராகவும் செயலாற்றி வருகிறார்.

பதிப்பாசிரியர் என்ற வகையில் 2 நூல்களை வெளி யிட்டுள்ளார். படைப்பாளர் என்ற நிலையில் 2 நூல்களை வெளியிட் டுள்ளார். தேசியக் கருத்தரங்கு, பன்னாட்டுக் கருத்தரங்குகளில் கலந்து கொண்டு ஆய்வுக் கட்டுரைகள் வழங்கியுள்ளார். இவருடைய மேற்பார்வையில் 11 ஆய்வியல் நிறைஞர் மாணவர்கள் உள்ளனர். 3 மாணவர்கள் ஆய்வியல் நிறைஞர் பட்டம் பெற்றுள்ளனர்.

*இணைய நூல்கள்:* (1) A Study on the Learning Process of English by Higher Secondary Students, with Special Reference to Dharamapuri District, Tamil Nadu. (2) A Study on Code Switching Behaviour Among Cochin Tamils ஆகியனவாகும்.

**முனைவர் து. ஜானகி**
(முதுநிலை ஆராய்ச்சியாளர், அயல்நாட்டுத் தமிழர்புலம்)

து. ஜானகி 19.7.1975 அன்று திண்டுக்கல் மாவட்டம், பெத்தாம்பட்டி எனும் கிராமத்தில் பிறந்தார். பெற்றோர் சு. துரைப்பாண்டி, து. பழனியம்மாள். இவர் முதுகலை, ஆய்வியல் நிறைஞர் மற்றும் முனைவர் பட்டம் பெற்றுள்ளார். 2006 முதல் 2011 வரை மைசூர், இந்திய மொழியியல் நடுவண் நிறுவனத்தில் தேசிய நுண்தேர்வு மையத்தில் ஆய்வு வளமை யாளராகப் பணியாற்றினார். இவர் இந்நிறுவனத்தில் அயல்நாட்டுத் தமிழர் புலத்தில் 2011 முதல் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

பதிப்பாசிரியர் என்ற வகையில் இரண்டு நூல்களையும், பொதுப் பதிப்பாசிரியர் என்ற வகையில் இரண்டு நூல்களையும் வெளியிட்டுள்ளார். படைப்பாளர் என்ற நிலையில் கவிஞர் கண்ணதாசனின் ஆளுமைத்திறன், சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழிநடை ஆகிய இரண்டு நூல்களை வெளியிட்டுள்ளார்.

தேசியக் கருத்தரங்கம், பன்னாட்டுக் கருத்தரங்கம் ஆகியவற்றில் கலந்து கொண்டு 15க்கும் மேற்பட்ட கட்டுரைகளை வழங்கியுள்ளார். 14 ஆய்வியல் நிறைஞர் மாணவர்களுக்கு நெறி யாளராக உள்ளார். 2004ஆம் ஆண்டு திருவாரூர் தமிழய்யா கல்விக் கழகம் தொல்காப்பியரின் புவியியல் வானியல் சிந்தனைகள் என்ற கட்டுரைக்காக ‘செந்தமிழ்ச் செம்மல்’ என்ற விருது வழங்கியது.

# தொகுப்பூதியப் பணியாளர்கள்

## ஆர். ஆளவந்தார்

ஆர். ஆளவந்தார் 14.8.1920 அன்று கடலூர் மாவட்டத்தில் குறிஞ்சிப்பாடியில் பிறந்தார். பெற்றோர் கி. இராமாநுஜலு நாயுடு, அம்புஜவல்லி. இவர் பள்ளிப் படிப்பை முடித்த பின், 1941இல் சென்னைப் பல்கலைக்கழகத்தில் வித்துவான் பட்டம் பெற்றார். 1941ஆம் ஆண்டு முதல் மதுரையிலும், பண்ணைக்காடு, குறிஞ்சிப் பாடி, திண்டிவனம் ஆகிய ஊர்களில் உயர்நிலைப் பள்ளிகளில் 20 ஆண்டுகள் தமிழாசிரியராகப் பணி புரிந்தவர்.

வித்துவானாகத் தொடக்க காலத்தில் பணியாற்றி வந்த இவர் பி.ஏ., எம்.ஏ., பி.டி. முடித்தார். உயர்நிலைப் பள்ளிகளில் தலைமை யாசிரியராகப் பணியாற்றி 1978இல் ஓய்வு பெற்றார். பின்னர் 14.11.1980இல் நிறுவனத்தில் ஆராய்ச்சி அலுவலராகப் பணியில் சேர்ந்தார். 1973 - 74ஆம் ஆண்டிற்குரிய மாநில அரசு வழங்கும் நல்லாசிரியர் விருது பெற்றவர். தமிழ் இலக்கணம் (உயர்நிலைப் பள்ளி மேல் வகுப்பு மாணவர்களுக்குரியது). தமிழர் தோற்கருவிகள் - கல்வெட்டியியல் ஊர்ப்பெயர்கள் - இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் தொகுதி 1 (சங்க இலக்கியம்), புருஷோத்தம நாயுடுவின் தமிழ் - வைணவத் தொண்டு ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளார். பல கருத்தரங்குகளில் கலந்து கொண்டு கட்டுரைகள் வழங்கியுள்ளார். முதியப் பருவத்தில் நிறுவனத்தில் முனைவர் பட்ட ஆய்வு மாணவராகச் சேர்ந்து முனைவர் பட்டம் பெற்றவர்.

## வித்துவான் ஆ. சிவலிங்கனார்

ஆ. சிவலிங்கனார் 30.11.1922இல் திரிப்பாதிரிப் புலியூர் அருகில் புது வண்டிப்பாளையம் எனும் கிராமத்தில் பிறந்தார். பெற்றோர் ஆறுமுகம், பொன்னம்மாள். 1936 முதல் 1940 வரை திருவையாறு அரசர் கல்லூரியில் புலவராகப் பயின்றார்.

1941 முதல் 1942 வரை நெல்லை வீரவநல்லூர் இந்து நடுநிலைப் பள்ளியில் தமிழாசிரியராகவும், 1942 முதல் 1971 வரை மயிலம் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ்க் கல்லூரியில் விரிவுரையாள

ராகவும், பேராசிரியராகவும், முதல்வராகவும் பணியாற்றினார். 1979இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் சிறப்பு நிலையில் தொல்காப்பிய உரைவளத்திட்ட முதுநிலை அலுவலர் ஆகப் பணியில் சேர்ந்தார்.

தொல்காப்பியம் முழுமைக்கும் உரைவளம் கண்டார் (மரபியல் நீங்கலாக). அவைகளாவன: **எழுத்ததிகாரம்** - நூன்மரபு, மொழிமரபு, பிறப்பியல், புணரியல், தொகைமரபு, உருபியல், உயிர் மயங்கியல், புள்ளி மயங்கியல், குற்றியலுகரப் புணரியல், **சொல்லதிகாரம்** - கிளவியாக்கம், வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல், விளிமரபு, பெயரியல், வினையியல், இடையியல், உரியியல், எச்சவியல், **பொருளதிகாரம்** - அகத்திணையியல், புறத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப் பாட்டியல், உவமவியல், செய்யுளியல் வரை ஒவ்வோர் இயலும் தனித்தனியே வெளிவந்துள்ளது. ஒவ்வொரு நூற்பாவுக்கும் இன்று வரை வந்து பல அறிஞர் கருத்துகள் மற்றும் அவற்றைப் பற்றிய இவரின் கருத்து என்ற நிலையில் விரிவான உரை வளங்களை வெளியிட்டுள்ளார்.

அகத்தியர் யார்?, பெரியபுராணப் பெண்மணிகள், கட்டுரைப் பூங்கா, வள்ளுவரைப் பற்றி, சிலம்பு மணிகள், சிவஞான போதச் சொற்பொழிவு, தமிழ்த்தாய் திருப்பள்ளியெழுச்சி, மயிலம் கார்த்திகைக் கதம்பம், சிவஞான பாலய தேசிகர் ஆற்றுப்படை ஆகிய நூல்கள் இவருடைய படைப்புகளாகும்.

### முனைவர் பூ. சுப்பிரமணியன்

அரசினர் கீழ்த்திசை சுவடி நூலகத்தில் காப்பாளராகவும், ஆசியவியல் நிறுவனத்தில் சுவடியியல் துறைத் தலைவராகவும் பணியாற்றியவர். உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் 6.10.1970 இல் பணியில் சேர்ந்தார். சுவடிப் புலத்தில் பணி செய்யும் காலத்துச் சிறந்த நூல்களை வெளிக் கொணர்ந்தவர். இவருடைய 'சுவடியியல்' எனும் முனைவர் பட்ட ஆய்வேடு நிறுவனத்தில் நூலாக வெளியிடப்பட்டு சுவடிப் பட்டய வகுப்பு மாணவர்களுக்குப் பாடத் திட்டமாக உள்ளது. பல சுவடிகளைப் பதிப்பித்தவர். வர்ம நூல், யட்சகானம், மனை நூல், மெய்க்கீர்த்தி ஆகியன இவருடைய சிறந்த படைப்புகளாகும்.

**முனைவர் வே.இரா. மாதவன்**

இவர் 16.10.1981இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் பணியிற் சேர்ந்தார். நிறுவனத்தில் சுவடியியல் ஆராய்ச்சி உதவியாளராகப் பணியாற்றி வரும் காலத்து, சிறப்புறு நூல்களை வெளிக் கொணர்ந்தவர்.

இவர் படைத்த நூல்கள் கண் மருத்துவம் (1982), மீனாட்சி யம்மன் திருப்புகழ், சித்திரக் கவிகள் 1983. சித்திரக் கவிகள் முதற் பரிசு பெற்ற நூலாகும்.

நிறுவனத்தை விட்டு விலகிய பின் தற்போது தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் சுவடிப் புலத்தில் இணைப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

**செல்வி க. லலிதாம்பிகா** : சுவடிப்புலத்தில் பணியாற்றும் போது 'தன்வந்திரி குழந்தை வாகடம்' என்ற நூலை 1984 இல் பதிப்பித்துள்ளார்.

**மா. சத்தியபாமா** : 1.6.1983 இல் சுவடியியல் உதவி நிலை ஆய்வாளராகப் பணியிற் சேர்ந்து மூலிகை கற்பங்கள் என்ற சுவடிப் பதிப்பு நூல் அவரால் நிறுவன வெளியீடாக 1996ல் வெளியிடப் பட்டது.

**திரு. சு. சண்முக வேலாயுதம்** : மொழிபெயர்ப்பியல் என்ற நூலை, 1985இல் வெளிக் கொணர்ந்துள்ளார். மொழிபெயர்ப்பியல் பயிற்சிக்கு இன்று இந்நூல் சிறந்த கையேடாக விளங்குகிறது என்பது இதன் சிறப்பாகும்.

**பேராசிரியர் டாக்டர் ஆல்பர்ட்** : 1.8.1983இல் உயர்நிலை ஆய்வாளராகப் பணியிற் சேர்ந்து "Tolkappiyam - Morphology & Phonology - An English Translation" என்ற திட்டப்பணியில் பணியாற்றினார். வெளிநாட்டினர்க்குத் தமிழ்ப் பாடம் கற்பித்தல் பணியும் மேற்கொண்டவர்.

**டாக்டர் என். தெய்வசுந்தரம் மற்றும் டாக்டர் ஏ. கோபால்** ஆகியோர் உயர்நிலை ஆய்வாளராகப் பணியாற்றினார். இவ்விருவரும்இணைந்து தங்கள் பணிக்காலத்தில் Tamil Text (An Auto Instructional Course) என்ற நூலை 1984ஆம்ஆண்டில் வெளியிட்டுள்ளனர்.

**பேராசிரியர் திரு. க. இராஜசிங்கம்:** யாழ்ப்பாணப் பல்கலைக் கழகத்திலும், அயல்நாடுகளில் வெளிவந்த இதழ்களிலும் (Interalia, Depth News, Gulf Times, Sun, Ceylon Daily News) பலவற்றில் பணியாற்றிய அனுபவம் மிக்கவர். 1984ஆம் ஆண்டு முதல் மொழிபெயர்ப்பு உதவியாளர் என்ற நிலையில் 1991ஆம் ஆண்டு வரை பணியாற்றினார். (1) The Cultural Contribution of the Tamils (ed), (2) Thirukkural the Daylight of the psyche என்ற நூல்களை வழங்கியுள்ளார்.

**டாக்டர் பா. கிருஷ்ணன் :** இளநிலை ஆராய்ச்சி உதவியாள ராகப் பணியேற்ற இவர் 'சான்றோர் கண்ட தமிழ்' என்ற நூலை எழுதிவரும் பணியில் பணியாற்றி வந்துள்ளார்.

**முனைவர் ஆ. தசரதன்**

நெல்லை மாவட்டம் தென்காசி அருகேயுள்ள குறும்பலாப் பேரி என்ற ஊரில் 7.5.1950 அன்று இவர் பிறந்தார். இவர்தம் பெற்றோர் திரு. ஆறுமுகம் பாண்டிய நாடார், திருமதி திருமலை முத்தம்மாள் ஆவர். இவர், முதுகலை, முனைவர் பட்டமும், மொழியியல் பட்டயமும் பெற்றவர்.

1980களில் திருவனந்தபுரம் திராவிட மொழியியல் நிறுவனத் தில் இளநிலை ஆராய்ச்சியாளராகவும் (Junior Fellow) 1984 முதல் 1994 வரை சென்னை ஆசியவியல் ஆய்வு நிறுவனத்தில் தமிழ்த் துணைப் பேராசிரியராகவும், ஓலைச் சுவடித்துறைத் தலைவராகவும், இவர் பணியாற்றியுள்ளார். 1996 முதல் 1998 வரை திராவிட மொழியியல் கழகத்தின் முதுநிலை ஆய்வறிஞராகவும் பணியாற்றினார். 1998 இல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் தொகுப்பூதியத் திட்டப் பணியில் சிறப்புநிலை ஆய்வாளராகப் பணியாற்றி, சென்னை கீழ்த்திசைச் சுவடி நூலகச் சுவடிகளுக்கு விளக்க அட்டவணைத் தயாரித்து அவற்றை நூல் வடிவமாக்கி 4 நூல்களாக வெளியிட்டுள்ளார்.

ஓலைச் சுவடிப் பாதுகாப்பு மையம் என்ற ஓர் அமைப்பினை ஏற்படுத்தி அதன் வழியாக ஆசிரியராகவும் பதிப்பாசிரியராகவும் இருந்து, மத்திய மாநில அரசுகளின் நிதி நல்கையினைப் பெற்று 23 நூல்களை வெளிக் கொணர்ந்தவர். மத்திய அரசின் (I.C.S.S.R.) நிறுவனத்தின் குறுகிய காலத் திட்டப்பணியை ஏற்று, 'மானவீர

வளநாட்டுச் சமூக வரலாறு' என்ற நூலை ஆங்கிலத்தில் வெளியிட்டுள்ளார். கபாலக்காத சுவாமி கதை, மதுரை வீரய்யன் கதை ஆகியன தமிழக அரசின் நிதியுதவியோடு வெளிவந்துள்ளன.

1978ஆம் ஆண்டு மேற்கு ஜெர்மனி கோலோன் பல்கலைக் கழகம் இந்தியவியல் துறையில் விரிவுரையாளராகப் பணி யாற்றியவர். பேராசிரியர் ஆபிரகாம் அருளப்பனார் பரிசையும் திரு. சாஸ்தான் குட்டிப்பிள்ளை தங்கப் பதக்கப் பரிசையும் பெற்றவர்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் கீழ்த்திசைச் சுவடிகள் விளக்க அட்டவணைத் தயாரிப்புத் திட்டத்தில் பணியிற்சேர்ந்து கீழ்த்திசைச் சுவடிகள் விளக்க அட்டவணைத் தொகுதிகள் 1,2,3,4 வெளிவரப் பணியாற்றினார். மேலும் பல்கலைக்கழக மானியப் பெருந்திட்ட ஆய்வுப்பணியில் திட்டக் கல்வியராக - சிறுவர் இலக்கியம் நூற்றொகை, 1.7.2003 முதல் பணியாற்றினார். இத்திட்டப்பணி நிறைவுற்ற நிலையில் தொடர்ந்து நிறுவனத்தின் மெய்ப்புத் திருத்துநராகப் பணியாற்றி வருகிறார்.

## ஓய்வு பெற்ற நிருவாகப் பாணியாளர்கள்

நிருவாகப் பணிநிலையில் திரு. க.ந. வீரபாகு சுப்பிரமணியன் (துணை இயக்குநர்), திரு. ச. குணசீலன் (சுருக்கெழுத்து, தட்டச்சர்), திரு. லோகநாதன் (கண்காணிப்பாளர்), திரு. வி.வாசுதேவன் (தட்டச்சர்), திரு. இராமமூர்த்தி (உதவியாளர்), திரு செ. பெரியநாடான் (இளநிலை உதவியாளர்), அலுவலக உதவியாளர்கள் - திரு மு. சங்கர், திரு சி. ஏகாம்பரம், திரு பொ. ஆதிகேசவன், திரு. முனிரத்தினம், திருமதி மகாலட்சுமி (துப்புரவுப் பணியாளர்) ஆகியோரும் இந்நிறுவனத்திற்கு அயராது பணியாற்றி ஓய்வு பெற்றுள்ளனர்.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் – நிருவாக நோக்கில்

திரு. க. ந. வீரபாகு சுப்பிரமணியன்
துணை இயக்குநர் (நிருவாகம்)

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சங்கங்கள் பதிவுச்சட்டத்தின் கீழ் 1970ஆம் ஆண்டு அக்டோபர் திங்கள் 21ஆம் நாளில் தமிழ்நாடு அரசு அலுவல் வழி உறுப்பினர்கள் மற்றும் ஐ.ஏ.டி.ஆர். உறுப்பினர்களைக் கொண்டு பதிவு செய்யப் பெற்றது. International Institutue of Tamil Studies - Memorandum of Association and Rules and Regulation - Oct 21, 1970 தயாரித்து அளிக்கப் பெற்றது.

தொடர்ந்து 10-02-1972 அன்று கூடிய நிறுவன ஆளுகைக் குழுவில் இந்நிறுவனத்திற்குக் கிளை விதிகள் வகுத்திட முனைவர் நெ.து. சுந்தரவடிவேலு, துணைவேந்தர், சென்னைப் பல்கலைக் கழகம், திரு. கா. திரவியம், சிறப்புச் செயலர், கல்வித் துறை, தமிழ்நாடு அரசு மற்றும் முனைவர் கா. மீனாட்சி சுந்தரம், முதன்மை அலுவல் ஆட்சியர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஆகியவர் களைக் கொண்டு 27-10-1978 அன்று குழு அமைக்கப்பட்டது.

இக்குழு, இந்நிறுவனத்தின் கிளை விதிகள் (Bye Laws) மற்றும் துணையாகு வருங்காலச் சேமநலநிதி விதிகளை வகுத்தது (Contributing Provident Fund Rules). தொடர்ந்து ஆளுகைக் குழுவின் ஆற்றுப்படுத்தலில் இவ்வுட்குழு இந்நிறுவனக் கிளை விதிகள் மற்றும் து.வ.சே. நிதி விதிகளுக்கு ஒப்புதல் அளித்தது. 27-10-1978 அன்று நிகழ்ந்த ஆளுகைக் குழு இதற்குப் பின்னேற்பு வழங்கியது.

இதனைத் தொடர்ந்து "உலகத் தமிழாராய்ச்சி நிறுவனப் பணியாளர் விதிமுறைகள்" அமைத்திட 17-01-1990 அன்று கூடிய ஆளுகைக்குழு ஓர் அறிஞர் குழுவினை அமைத்தது.

முனைவர் வா.செ. குழந்தைசாமி - துணைவேந்தர், அண்ணா பல்கலைக்கழகம்

முனைவர் சி. பாலசுப்பிரமணியன் - துணைவேந்தர், தமிழ்ப் பல்கலைக்கழகம்

முனைவர் இ. அண்ணாமலை - துணை இயக்குநர், இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனம்

திரு. சி.என். இராமச்சந்திரன் - ஓய்வு பெற்ற அரசு இணைச் செயலாளர், பணியாளர் (ம) நிருவாகச் சீர்திருத்தத் துறை, தமிழ்நாடு அரசு முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன், இயக்குநர் - உறுப்பினர் செயலர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

இவ்வல்லுநர் குழு வகுத்த விதிகள் இந்நிறுவன 25ஆவது ஆளுகைக் குழுவால் 12-07-1990 அன்று "உலகத் தமிழாராய்ச்சி நிறுவனப் பணியாளர் விதிமுறைகள் 1990" என ஒப்பளிக்கப் பெற்றது.

இந்நிறுவனத்தின் பொதுக்குழு மூன்று முறையும், ஆளுகைக் குழு நாற்பத்து நான்கு முறையும், செயற்குழு நான்கு முறையும், செயற்குழுவிற்குப் பதிலியான நிருவாகக் குழு ஏழு முறையும் கூடியுள்ளது. கல்விக் குழுவின் பதிலியான அறிஞர் குழு நான்கு முறை கூடியுள்ளது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் செயற்பாடுகளை மேம்படுத்தும் நோக்கத்தில் ஆய்வு செய்து விரிவான அறிக்கை தர 15-05-1995 அன்று கூடிய ஆளுகைக் குழுவில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன ஆளுகைக் குழு மூத்த துணைத் தலைவர் முனைவர் வா.செ. குழந்தைசாமி அவர்கள் தலைமையில் 'அறிவுரைக் குழு' அமைக்கப் பெற்றது. இக்குழு 12-8-1995, 23-8-1995, 25-10-1995, 28-3-1996, 15-4-1996 மற்றும் 29-9-1996 ஆகிய நாட்களில் மொத்தம் ஏழு முறை கூடி விரிவான அறிக்கையினை அளித்துள்ளது.

உலகத்தமிழாராய்ச்சி நிறுவனக் கல்வி அலுவலர்களின் திட்டப் பணிகளை மதிப்பிட முனைவர் க.ப. அறவாணன் அவர்கள் தலைவராகவும், முனைவர் அ.அ. மணவாளன், முனைவர் சக்தி பெருமாள் ஆகியோரை உறுப்பினர்களாகவும் கொண்ட வல்லுநர் குழுவை 14-10-1996 அன்று கூடிய ஆளுகைக் குழு அமைத்தது. அக்குழு உலகத் தமிழாராய்ச்சி நிறுவனக் கல்வி அலுவலர்களின் பணியினை மதிப்பீடு செய்து அறிக்கை அளித்தது.

**உட்கட்டமைவு**

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் இப்போது இயங்கி வரும் கட்டடத்தைச் சுற்றியுள்ள வெற்றிடம் 1.20 ஏக்கர் மற்றும் அருகில் அரசால் கூடுதலாக வழங்கப் பெற்ற இடம் 1.05 ஏக்கர் மொத்தம் 2.25 ஏக்கர் பரப்பளவு. இதன் இன்றைய சந்தை மதிப்பு வெற்றிடம் மட்டும் ரூ. 40 கோடிகளாகும்.

இந்நிறுவனத்தில் கல்வி அலுவலர் அறைகள், ஆய்வாளர் அறைகள், நூலகம், கருத்தரங்க அறை, கூட்ட அறை, வகுப்பறைகள், நிருவாகப் பகுதி என கட்டப் பெற்ற இடத்தின் அளவு மொத்தம் சுமார் 16,000 சதுர அடி. இந்நிறுவனத்திற்கு இரண்டு வகுப்பறைகள் கட்ட நிதி ஒதுக்கீடு செய்து கட்டி முடிக்கப்பட்டு பயன்பாட்டில் உள்ளன. கட்டடத்தின் கழிவறைகள் மற்றும் நீரிணைப்புகள் முறையாக நீர்த்தாரைகள் வழி இணைக்கப் பட்டுள்ளன. இந்நிறுவனத்திற்கு 100 கிலோ வாட் திறனுடைய எல்.டி. மின் இணைப்பு உள்ளது.

**ஆய்வு நிறுவனமாக செயல்படல்**

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் முனைவர் பட்ட ஆய்வு நடத்திட சென்னைப் பல்கலைக்கழகம் 1975இல் இசைவளித் துள்ளது. அது முதல் இன்றுடன் 160க்கும் மேற்பட்டவர்கள் இந்நிறுவன வழி முனைவர் பட்ட ஆய்வினை முடித்துள்ளனர்.

2004ஆம் ஆண்டு முதல் தமிழ் ஆய்வியல் நிறைஞர், தமிழ் முதுகலை வகுப்புகள் தமிழ்ப் பல்கலைக்கழக இசைவுடன் நடத்தப் பெற்று வருகின்றன. 56 பேர் முதுகலை வகுப்பு வழியும், 180க்கும் மேற்பட்டவர்கள் ஆய்வியல் நிறைஞர் வகுப்பு வழியும் பட்டம் பெற்றுள்ளனர்.

பல்கலைக்கழக நல்கைக் குழுவின் அங்கீகாரம் பெற்றுள்ளது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பல்கலைக்கழக நல்கைக் குழுவின் விதி 2(எப்) என்ற பிரிவின் கீழ் 'ஆராய்ச்சி மையமாக' 1993இல் அங்கீகரிக்கப்பட்டது.

**ஓய்வூதியம்**

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனப் பணியாளர்களுக்கு 01-04-2003ஆம் ஆண்டுக்கு முன்னர் நியமனம் பெற்றுத் தொடர்ந்து பணியிலிருந்த 24 அலுவலர்களுக்கு அரசு அலுவலர்களுக்கான ஓய்வூதியம் வழங்கிட அரசாணை பெறப்பட்டுள்ளது.

**அரசு நல்கை**

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 1969-70ஆம் ஆண்டு முதல் அரசு நல்கையினைப் பெற்று வருகிறது. அரசு வழங்கும் நல்கை தொகுப்பு நல்கையாகும்.

1976ஆம் ஆண்டு முதல் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கு அரசு வழங்கும் நல்கை, நிகரப் பற்றாக்குறை நல்கையாகும். கல்வித் துறை அரசாணை எண் 1561, நாள், 20-07-1976 வழி இது உறுதி செய்யப்பட்டுள்ளது. அது முதல் இந்நிறுவனம் பெற்றுள்ள நிகரப் பற்றாக்குறைத் தொகுப்பு நல்கை ஆண்டுவாரியாக பின்வருமாறு அமைகின்றன.

| ஆண்டு | நல்கை வரவு |
|---|---|
| 1970 - 71 | 90,300 |
| 1971 - 72 | 20,000 |
| 1972 -73 | 88,000 |
| 1973 - 74 | 2,17,000 |
| 1974 - 75 | 3,15,000 |
| 1975 - 76 | 2,10,000 |
| 1976 - 77 | 3,00,000 |
| 1977 - 78 | 3,00,000 |
| 1978 - 79 | 3,00,000 |
| 1979 - 80 | 4,50,000 |
| 1980 - 81 | 5,50,000 |
| 1981 - 82 | 6,00,000 |
| 1982 - 83 | 6,00,000 |
| 1983 - 84 | 6,00,000 |

| | |
|---|---|
| 1984 - 85 | 6,00,000 |
| 1985 - 86 | 7,00,000 |
| 1986 - 87 | 7,00,000 |
| 1987 - 88 | 8,00,000 |
| 1988 - 89 | 8,50,000 |
| 1989 - 90 | 11,75,000 |
| 1990 - 91 | 14,00,000 |
| 1991 - 92 | 16,25,000 |
| 1992 - 93 | 16,25,000 |
| 1993 - 94 | 16,25,000 |
| 1994 - 95 | 23,25,000 |
| 1995 - 96 | 29,33,000 |
| 1996 - 97 | 76,21,000 |
| 1997 - 98 | 76,21,000 |
| 1998 - 99 | 48,50,000 |
| 1999 - 2000 | 69,02,515 |
| 2000 - 01 | 16,00,000 |
| 2001 - 02 | 48,04,472 |
| 2002 - 03 | 53,00,000 |
| 2003 - 04 | 53,00,000 |
| 2004 - 05 | 53,00,000 |
| 2005 - 06 | 65,00,000 |
| 2006 - 07 | 80,01,000 |
| 2007 - 08 | 70,82,000 |
| 2008 - 09 | 70,82,000 |
| 2009 -10 | 70,82,000 |
| 2010 - 11 | 70,82,000 |
| 2011 - 12 | 1,06,85,000 |
| 2012 - 13 | 1,42,11,000 |

**சிறப்பு நல்கைகள்**

அரசு தருகின்ற நிகரப் பற்றாக்குறை நல்கைகள் நீங்கலாக அவ்வப்போது சிறப்பு நல்கைகளும் பெறப் பெற்றுள்ளன. அவை

பேரறிஞர் அண்ணா தமிழ் மேம்பாடு அறக்கட்டளை சிறப்பு நல்கை ரூ. 10,00,000/-

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தைப் புத்துயிரூட்டும் செலவினங்களுக்கானது ரூ. 19,50,000/-

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் விருந்தோம்பல் நிறுவனமாக அமைந்த பன்னாட்டுத் திராவிட மொழியியல் கழக வெள்ளி விழாவிற்கான சிறப்பு நல்கை

அனைத்து இந்தியத் தமிழாசிரியர் மன்றக் கருத்தரங்கு நடத்துவதற்கான விருந்தோம்பல் நல்கை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனக் கட்டடச் சீரமைப்புக்கான நல்கை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் ஆழ்நிலை நீர்த்தொட்டி அமைத்திடச் சிறப்பு நல்கை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கு எல்.டி. மின் இணைப்பு பெற்றிடச் சிறப்பு நல்கை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன அலுவலகத்தைக் கணினி மயமாக்கச் சிறப்பு நல்கை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கு இரும்பு அடுக்குகள் வாங்கிடச் சிறப்பு நல்கை ரூ. 1.65 இலட்சம்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் முள்வேலி, வாகன நிறுத்தம் அமைத்திடச் சிறப்பு நல்கை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன சிறப்புப் பராமரிப்புக்கான சிறப்பு நல்கை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் தமிழ் ஆய்வியல் நிறைஞர் மற்றும் முனைவர் பட்ட வகுப்பு தொடங்குவதற்கான சிறப்பு நல்கை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகக் கட்டடம் பழுது நீக்க சிறப்பு நல்கை ரூ. 6.35 இலட்சம்

அரசு ஆண்டுதோறும் வழங்கும் தொகுப்பு நல்கை தவிர்த்து இத்தகு சிறப்பு நல்கைகள் மற்றும் தரவுகளின் அடிப்படையிலமைந்த கூடுதல் நல்கைகள் அரசால் வழங்கப்பட்டு வருகின்றன.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் பராமரிப்புப் பணியினை மேற்கொள்ள ஆண்டுதோறும் ரூ. 2.50 இலட்சம் என்ற கேட்பு கனியும் வகையில் 2008-09ஆம் ஆண்டு முதல் இத்தொகை கிடைக்கப் பெறுகிறது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் வேண்டுகோளின் அடிப்படையில் இந்நிறுவனத்தின் பல்கலைக்கழக நல்கைக் குழு "இணைய இணைப்பு மையத்திற்கு" நிதியுதவி அளித்துள்ளது. (ரூ. 1,40,000/-)

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் அலுவலகப் பயன்பாட்டிற்குக் கணினிகள், நிகரிகள், பல்செயல் அச்சுப் பொறிகள், நிழற்படிப் பொறிகள், இணைய இணைப்பு ஆகியன உள்ளன.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் தமிழியல் பருவ இதழைத் தொய்வின்றித் தொடர்ந்து வெளிக்கொணர தமிழ்நாடு அரசு சிறப்பு நல்கையாக ரூ. 3.75/- இலட்சம் வழங்கியுள்ளது.

**சிறப்பு நல்கை**

| | | |
|---|---|---|
| *2008 - 2009* | அரசு கூடுதல் நல்கை | *5,80,000* |
| *2009 - 2010* | 6வது ஊதியக் குழு நிலுவை - முதல் தவணைத் தொகை | *4,28,703* |
| | ஓ.கு.ஓ. | *2,08,188* |
| | அரசு கூடுதல் நல்கை | *55,37,000* |
| *2010 - 2011* | *(1)* கூடுதல் ஊதிய நல்கைத் தொகை | *34,96,834* |
| | *(2)* 6வது ஊதியக் குழு நிலுவைத் தொகை | *15,58,166* |
| | *(3)* உ.த.நி. இயக்குநர் முனைவர் கரு. அழ. குணசேகரன் விடுப்பூதிய உதவித் தொகை (ம) ஓய்வூதியப் பங்குத் தொகை | *5,03,149* |

(4) உ.த.நி. நான்கு ஆராய்ச்சி உதவியாளருக்கு ஐந்தாவது ஊதியக் குழுவின் ஊதிய நிர்ணய நிலுவைத் தொகை 4,43,376

2011 - 2012 (1) உ.த.நி. ஆய்வறிஞர் விடுதிக் கல்வி அலுவலர் & நிர்வாக அலுவலர் கட்டடம் கட்ட வரப் பெற்ற அரசின் சிறப்பு நல்கை 3,05,00,000

(2) 6வது ஊதியக் குழு நிலுவை - மூன்றாம் தவணைத் தொகை 16,65,087

(3) மேனாள் இயக்குநர் முனைவர் கரு.அழ. குணசேகரன் விடுப்பூதிய (ம) ஓய்வூதியப் பங்குத் தொகை 2,13,340

## பகுதி இரண்டு திட்ட நல்கைகள்

தமிழ்நாடு அரசு 2005-06ஆம் ஆண்டு முதல் பகுதி இரண்டு திட்டத்தின் கீழ் திட்ட நல்கைகள் வழங்கி வருகிறது.

அ. 2005-06ஆம் ஆண்டில்

1. 'தமிழரின் மரபுச் செல்வம்' எனும் கருத்தரங்கினை நடத்திட அமைந்த நல்கை ரூ. 1,00,000

ஆ. 2007-08ஆம் ஆண்டில்

1. உலகச் செம்மொழிகள் ஆய்வு - பன்னாட்டுக் கருத்தரங்கம் ரூ. 4,75,000
2. நூலகத்துக்கான கணிப்பொறி மற்றும் துணைப் பொருட்கள் வாங்க ரூ. 1,35,000
3. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கு இரண்டு நிழற்படி பொறிகள் மற்றும் ஒரு தொலை நகலி வாங்க ரூ. 1,50,000

இ. 2008-09ஆம் ஆண்டில்

1. இருபதாம் நூற்றாண்டின் சாதனைத் தமிழ்ப் பெண்மணிகள் தேசியக் கருத்தரங்கு ரூ.1,15,000
2. ஆய்வியல் நிறைஞர் மற்றும் முதுகலை மாணவர்கள் ரூ. 12,00,000

3. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் உள்ள கல்விப் புலங்களுக்குக் கணிப்பொறிகள் மற்றும் துணைப் பொருட்கள் வாங்குவதற்கு ரூ. 2,40,000.

ஈ. 2009 - 2010ஆம் ஆண்டில்

1. நிகழ்கலை மரபுச் செல்வங்கள் குறித்த தேசியக் கருத்தரங்கம் நடத்துவதுற்கு ரூ. 1,50,000
2. உ.த.நி. கூட்ட அரங்கினைச் சீர்வளி சாதன வசதி செய்வதற்கு ரூ. 4,50,000
3. உ.த.நி. தானியங்கி மசகு எண்ணெய் மின்னேற்றி வாங்குவதற்கு ரூ. 3,80,000

உ. 2010 - 2011ஆம் ஆண்டில்

1. உ.த.நி. நூலகத்தைச் சீர்வளி வசதியுடன் நவீன மின் விளக்குகள் இரும்பு அடுக்குகள் ரூ. 20,00,000
2. உ.த.நி. பதினைந்து நாட்கள் சுவடிப் பயிலரங்கு நடத்துவதற்கு ரூ. 3,25,000
3. உ.த.நி. கூட்ட அறை மற்றும் கருத்தரங்க அறைக்கு ச்சிவப்பு மேசைகள் மற்றும் நாற்காலிகள் வாங்குவதற்காக ரூ. 2,00,000
4. உ.த.நி. தமிழ் எழுத்தர்களை அழைத்து மூன்று நாட்கள் தேசியக் கருத்தரங்கு நடத்துவதற்கு ரூ. 1,50,000

ஊ. 2011 - 2012

1. உ.த.நி. வளாகத்தைச் சுற்றி பாதுகாப்புச் சுவர் கட்டுவதற்கு ரூ. 9,50,000
2. உ.த.நி. ஓலைச் சுவடிகள் சான்றிதழ் பயிற்சிப் பட்டறை நடத்துவதற்கு ரூ. 4,50,000
3. உ.த.நி. நிகழ்கலைகள் - கூத்து, கதை சொல்லும் முறைகள் தேசியக் கருத்தரங்கு மற்றும் காட்சியரங்கு நடத்துவதற்கு ரூ. 1,50,000
4. உ.த.நி. கல்வி அலுவலர்களுக்குக் கணினிகள் துணைப் பொருட்களுடன் கொள்முதல் செய்வதற்கு ரூ. 4,04,000
5. உ.த.நி. ஆய்வறிஞர் விடுதியின் அறைகளுக்கு அறை கலன்கள் வாங்குவதற்கு ரூ. 13,60,000

6. உ.த.நி. தமிழ்க் கலைச் சொல்லாக்கம் குறித்து தேசியப் பயிலரங்கு நடத்துவதற்கு ரூ. 1,40,000

ஏ. 2012 - 2013

1. உ.த.நி. தமிழியல் இதழ் அச்சிடுவதற்கு ரூ. 1,00,000
2. பள்ளிக் கல்வியில் தமிழ் கற்பிப்பதற்கு ரூ. 2,00,000
3. தமிழக மரபுசார் கலைகளும் கலைஞர்களும் குறித்த பயிலரங்கு நடத்துவதற்கு ரூ. 2,00,000
4. உ.த.நி. கல்வி அலுவலர்களுக்கு மேசை நாற்காலி வாங்குவதற்கு ரூ. 2,45,000
5. உ.த.நி. வெளியீடுகளை வரவேற்பறையில் காட்சிப்படுத்த மர அலமாரி வாங்குவதற்கு ரூ. 1,55,000
6. ஓலைச்சுவடிகள் - பன்னாட்டுக் கருத்தரங்கு நடத்துவதற்கு ரூ. 2,00,000
7. அயல்நாட்டுத் தமிழ் இலக்கியங்கள் தேசியக் கருத்தரங்கு நடத்துவதற்கு ரூ. 2,00,000
8. உ.த.நி. இரும்பு பீரோ வாங்குவதற்கு ரூ. 1,00,000

**ஒய்வூதிய நல்கை**

| | |
|---|---|
| 2007 - 08 | ரூ. 19,92,411 |
| 2008 - 09 | ரூ. 16,74,367 |
| 2009 - 10 | ரூ. 22,84,000 |
| 2010 - 11 | ரூ. 88,46,103 |
| 2011 - 12 | ரூ. 60,70,633 |
| 2012 - 13 | ரூ. 28,46,000 |

இந்நிறுவனத்திற்கு அரசு நல்கைகள் தவிர்த்துநன்கொடையாக வரப் பெற்ற வரவுகள் பல. அவற்றுள் குறிப்பிடத்தக்கன,

டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் கல்வி அறக்கட்டளை வழி கட்டி முடிக்கப் பெற்ற டாக்டர் பா. சிவந்தி ஆதித்தனார் நூலக அரங்கம் மற்றும் கருத்தரங்க அறை ரூ. 9.50 இலட்சம்

பாரத ஸ்டேட் வங்கி நிதியுதவியுடன் கணினிகள் மற்றும் ஒளியச்சுப் பொறி (மதிப்பு ரூ. 1.20 இலட்சம்) பெற்றமையாகும்.

இந்தியன் வங்கி உதவியுடன் நிழற்படிப்பொறி (மதிப்பு ரூ. 80,000)

இந்தியன் வங்கி உதவியுடன் தொலை நகலி (மதிப்பு ரூ. 20,000)

இவை தவிர இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, இந்தியன் வங்கி, பாரத ஸ்டேட் வங்கி ஆகியன இந்நிறுவனத்தில் பல்வேறு கருத்தரங்குகள் நடத்தியபோது அன்பளிப்புப் பைகள் வழங்கி யுள்ளன.

நிறுவனம் பல்கலைக்கழக நல்கைக் குழுவுடன் பெருந்திட்ட நல்கைகளாகக் கீழ்க்குறித்தத் திட்டப் பணிகளுக்கு நல்கைகள் பெற்றுள்ளன.

1. தேவாரமும் திவ்விய பிரபந்தமும்
2. தமிழ் இலக்கியத்தில் குறியீடுகள் அகராதி
3. தமிழில் சிறுவர் இலக்கியம் - நூற்றொகை
4. தமிழர் பண்பாட்டுக் கலைச் சொற்கோவை
5. கம்பன் களஞ்சியம்
6. பன்னாட்டுப் பயிற்றிப்பேழை பேச்சுத் தமிழ்
7. சித்த மருத்துவ நூல்கள் ஆய்வடங்கல்

## நூலகம்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் முதுகெலும்பாக நூலகம் விளங்குகிறது. 90,000 நூல்களுக்கு மேல் தன்னகத்தே கொண்டு அனைத்து தமிழ் ஆர்வலர்களுக்கும் பயன்படும் வகையில் இயங்குகிறது.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவன ஆளுகைக் குழு இந்நிறுவன நூலகத்தின் மேம்பாடு கருதி ஆண்டுதோறும் ரூ. 1,50,000/-க்கு நூல்கள் வாங்கிட அனுமதித்துள்ளது.

## வெளியீடுகள்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 1975-76 முதல் நூல் வெளியிடத் தொடங்கி நூல் விற்பனை செய்து வருகிறது. 1986-87ஆம் நிதியாண்டு முதல் வெளியீடுகளுக்குத் தனிக் கணக்குத் தொடங்கப் பெற்று அது

முதல் நூல் வெளியீட்டு விற்பனை வரவுகளும் நூல் வெளியீட்டுச் செலவினங்களும் இக்கணக்குத் தலைப்பில் அமையும் வகையில் சுழல்நிதி உருவாக்கப் பெற்று இன்றுவரை நூல் வெளியீட்டுப் பணி தொடர்ந்து சிறப்பாக நடைபெற்று வருகிறது. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் ஆண்டுதோறும் சென்னை நூல் கண்காட்சியிலும், பிற மாவட்ட கண்காட்சிகளிலும் கலந்து கொண்டு நூல் விற்பனை செய்து வருகிறது. பட்டியல்கள், இருப்பு மற்றும் நிலுவை குறித்த செயன்மைகளைக் கணினிப்படுத்த மென்பொருள் தயாரித்து பயன்பாட்டில் உள்ளது. இந்நிறுவனம் இதுவரை சுமார் 700 நூல்களை வெளியிட்டுள்ளது.

இந்நிறுவன வெளியீட்டு விற்பனை வரவு ஆண்டுவாரியாக பின்வருமாறு குறிக்கப் பெற்றுள்ளன.

| ஆண்டு | விற்பனை வரவு |
|---|---|
| 1975 - 76 | 6,964.64 |
| 1976 - 77 | 16,364.22 |
| 1977 - 78 | 25,352.73 |
| 1978 - 79 | 15,203.20 |
| 1979 - 80 | 7,067.98 |
| 1980 - 81 | 34,391.00 |
| 1981 - 82 | 42,345.19 |
| 1982 - 83 | 2,34,151.68 |
| 1983 - 84 | 2,00,692.47 |
| 1984 - 85 | 4,48,090.45 |
| 1985 - 86 | 1,77,396.15 |
| 1986 - 87 | 1,19,606.29 |
| 1987 - 88 | 1,83,592.15 |
| 1988 - 89 | 1,05,878.35 |
| 1989 - 90 | 1,16,688.90 |
| 1990 - 91 | 1,25,412.45 |
| 1991 - 92 | 1,04,955.20 |
| 1992 - 93 | 1,01,787.09 |

| | |
|---|---|
| 1993 - 94 | 1,96,248.65 |
| 1994 - 95 | 1,55,004.20 |
| 1995 - 96 | 2,61,634.25 |
| 1996 - 97 | 7,25,951.45 |
| 1997 - 98 | 10,68,640.65 |
| 1998 - 99 | 9,41,572.00 |
| 1999 - 2000 | 15,77,610.00 |
| 2000 - 01 | 24,75,030.00 |
| 2001 - 02 | 15,13,282.00 |
| 2002 - 03 | 16,56,167.00 |
| 2003 - 04 | 16,62,316.00 |
| 2004 - 05 | 16,62,316.00 |
| 2005 - 06 | 12,35,465.00 |
| 2006 - 07 | 16,95,424.00 |
| 2007 - 08 | 15,99,610.00 |
| 2008 - 09 | 17,53,277.00 |
| 2009 - 10 | 32,68,057.00 |
| 2010 - 11 | 21,46,542.00 |
| 2011 - 12 | 29,40,058.00 |
| 2012 - 13 | 11,19,166.00 |

**நிருவாகம் (ம) பராமரிப்பு அலுவலர் பணியமைவு**

*உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் கிளை விதிகளின்படி நிருவாகம் மற்றும் பராமரிப்புத் தொகுப்பில் ஒப்பளிக்கப் பெற்ற மற்றும் பின்னாளில் தோற்றுவிக்கப் பெற்ற பணியிடங்கள் வருமாறு: (கிளை விதி அமைவுப்படி)*

| | |
|---|---|
| *கண்காணிப்பாளர்* | *- 1* |
| *கணக்கர்* | *- 1* |
| *நூலகர்* | *- 1* |
| *இளநிலை உதவியாளர்* | *- 2* |

சிற்றெழுத்தர் - 1

தட்டச்சர் - 1

அலுவலக உதவியாளர் - 3

காவலர் - 1

பின்னாளில் தகுதியுடைய அதிகார வரம்பு படைத்த ஆளுகைக் குழுவால் தோற்றுவிக்கப்பட்ட / உயர்த்தப்பட்ட பணியிடங்கள்

சுருக்கெழுத்தர் (ம) தட்டச்சர் - 1

நூலக உதவியாளர் - 1 27.10.1978

காவலர் - 1

இளநிலை உதவியாளர் 1, உதவியாளர் பணியிடமாக உயர்த்தப்பட்டது (10.08.1979). இளநிலை உதவியாளர் - 1 (28.04.1981) அன்று தோற்றுவிக்கப் பட்டது.

04.01.1993 அன்று பிறிதோர் இளநிலை உதவியாளர் பணியிடம் உதவியாளர் பணியிடமாக உயர்த்தப்பட்டது (நிதித்துறை அரசாணை எண் 595, நாள் 01.08.1992இன்படி) இதே நாளில், இதே அரசாணையின் படி கண்காணிப்பாளர் பணியிடம் 'அலுவலக மேலாளர்' பணியிடமாக உயர்த்தப் பெற்றது (Upgraded). இதற்காக அலுவலக மேலாளர் பணியிடம் தோற்றுவிக்கப்பட்டது.

முழு நேரத் துப்புரவுப் பணியாளர் - 1 (10.08.1995).

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தில் தொகுப்பூதியத்தில் ஒப்பந்த அடிப்படையில் 1996, 1997ஆம் ஆண்டு முதல் பணியிலிருந்த தற்காலிகப் பணியாளர்கள் தமிழ்நாடு அரசின் அரசாணை வழி 05.01.2007 முதல் ஊதிய நிரக்குப் பணியிடத்தில் பணி அமர்த்தம் பெற்றார்கள்.

இளநிலை உதவியாளர் (ம) தட்டச்சர் - 4

நூலக உதவியாளர் - நிலை 3 - 1

ஓட்டுநர் - 1

தோட்டப் பணியாளர் - 1

தொடர்ந்து 11.06.2008 அன்று கூடிய 43ஆவது ஆளுகைக் குழுவில் "துணை இயக்குநர்" (நிருவாகம்) என்ற புதிய பணியிடம் தோற்றுவிக்கப் பெற்று 'அலுவலக மேலாளர்' என்ற பணியிடத்தில் இருந்தவர் இப்பணியிடத்திற்குப் பணியுயர்த்தம் பெற்றார்.

அலுவலக மேலாளர் பணியிடத்தின் நிலைபேறுள்ள பணியிடமான கண்காணிப்பாளர் பணியிடத்திற்கு ஊட்டுப் பணியில் இருந்த கணக்காளர் பணியுயர்த்தம் பெற்றுள்ளார். இப்போது நிருவாகத் தொகுப்பில் உள்ள பணியிடங்களாவன:

1. துணை இயக்குநர் (நிருவாகம்) - 1
2. கண்காணிப்பாளர் - 1
3. கணக்கர் - 1
4. உதவியாளர் - 2
5. இ.நி. உதவியாளர் (ம) தட்டச்சர் - 6
6. சுருக்கெழுத்தர் - 1
7. நூலகர் நிலை - II - 2
8. நூலக உதவியாளர் - 1
9. நூலகர் நிலை - 3 - 1
10. சிற்றெழுத்தர் - 1
11. அலுவலக உதவியாளர்கள் - 4
12. முழு நேர நீர்க் கொணர்பவர் - 1
13. துப்புரவுப் பணியாளர் - 1
14. தோட்டப் பணியாளர் - 1
15. ஓட்டுநர் - 1

## இயக்குநர் முழுக் கூடுதல் பொறுப்பில்

முனைவர் ம. இராசேந்திரன், தமிழ் வளர்ச்சி இயக்குநர் அவர்கள் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநராக 01.02.2006 முதல் முழுக் கூடுதல் பொறுப்பினை ஏற்று நிருவகித்து வந்தார். தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் மாண்பமை துணைவேந்தராகப் பொறுப்பேற்கும் வரை 17.06.2008 முடிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநராக இருந்த காலத்தில் பகுதி இரண்டு திட்டத்தின்கீழ் இந்நிறுவனத்திற்கு ரூ. 5.35/- இலட்சம் (2007-08), ரூ. 15.55/- இலட்சம் (2008-09) பெற்றுத் தந்துள்ளார்.

தற்காலிகப் பணியிடத்தில் இருந்த ஏழு நிருவாகப் பணியாளர்கள் பணி நிரந்தரம் பெற்றது, நிறுவனப் பணியாளர்களின் நீண்ட நாள் கனவான “ஓய்வூதியம்” நனவானது. ஆண்டு வாலாய நல்கை உயர்த்தப்பட்டது, ஆராய்ச்சி உதவியாளர்கள், முதுநிலை

ஆராய்ச்சியாளர்களாகப் பதவி உயர்த்தப்பட்டது. ஒரு பேராசிரியர் மற்றும் இரண்டு இணைப்பேராசிரியர் பணியிட நிரப்பலுக்கு ஒப்புதல் பெறப்பட்டது.

தொடர்ந்து 17.06.2008 முதல் இந்நிறுவனத்தின் மூத்த பேராசிரியர் முனைவர் செ. ஜீன்லாறன்ஸ் அவர்கள் இயக்குநர் பொறுப்பேற்றார்கள். தொடர்ந்து 31.12.2008 முடிய பணி நீட்டிப்பு பெற்றார்கள். 17.08.2008 வரை இப்பொறுப்பில் இருந்தார்.

**இயக்குநராக...**

பாண்டிச்சேரி பல்கலைக்கழகத்தின் நிகழ்கலைப் புலத்தலைவர் பேரா. முனைவர் கரு.அழ. குணசேகரன் அவர்கள் மாண்புமிகு முதலமைச்சர் அவர்களால் தெரிவு செய்யப் பெற்று உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநராக 20.08.2008 முதல் பணியில் சேர்ந்தார்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தை மேல் நிலைப்படுத்தும் வகையில் இதனை ஆய்வுக்கான நிகர்நிலைப் பல்கலைக்கழகமாகத் தரம் உயர்த்தும் முனைப்பில் செயற்பாடுகள் அமைக்கப் பெற்று நடவடிக்கைகள் தொடர்கின்றன.

ரூ. 180/- இலட்சம் செலவில் ஆய்வறிஞர் விடுதி கட்டப் பரிந்துரை, ரூ. 117.82 இலட்சம் வாலாய நல்கைக்குப் பரிந்துரை, இரண்டு இணைப் பேராசிரியர், மூன்று முதுநிலை ஆராய்ச்சி யாளர்கள் பணியிடங்களை நிரப்பிட பரிந்துரை ஆகியன சிறப்புச் செய்திகளாகும்.

முனைவர் கோ. விசயராகவன் 23.11.2012ஆம் நாள் முதல் இயக்குநராகப் பொறுப்பேற்ற பிறகு கட்டடப் பணிக்காக ரூ. 3 கோடியே 40 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது. தற்போது பணி செவ்வனே நடைபெற்று வருகின்றது.

தமிழ்நாடு அரசின் நிதிநல்கையின் மூலம் ரூ. 50 இலட்சம் செலவில் தொல்காப்பியர் ஆய்விருக்கை, ரூ. 10 இலட்சம் செலவில் திருக்குறள் காட்சிக் கூடம் மற்றும் ரூ. 10 இலட்சம் செலவில் உலகத் தமிழர் பண்பாட்டு வரவேற்பு மற்றும் தகவல் மையம் நிறுவப்பட்டு சிறப்புற நடைபெற்று வருகிறது.

ஃஃஃஃஃஃஃ

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை - 600 113.

## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை |
|---|---|
| சுவடிப்பதிப்புகளில் உரைவேறுபாடுகள் (தொகுதி-2) | 140.00 |
| சுவடிப்பதிப்புகளில் உரைவேறுபாடுகள் (தொகுதி-1) | 135.00 |
| திராவிட மொழிகளும் திராவிட மொழி ஆய்வுகளும் | 135.00 |
| பாணர் இனவரைவியல் | 110.00 |
| சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழிநடை | 70.00 |
| உதயணகுமாரகாவியம் உணர்த்தும் வாழ்வியல் | 50.00 |
| அயல்நாட்டுத் தமிழ் இலக்கியங்கள் (தொகுதி-2) | 200.00 |
| அயல்நாட்டுத் தமிழ் இலக்கியங்கள் (தொகுதி-2) | 200.00 |
| விடுதலைச் சிந்தனையாளர் வ.உ.சிதம்பரனார் தமிழியல் பண்புகள் | 80.00 |
| சுவடிப்பதிப்பு முன்னோடிகள் | 60.00 |
| திருமுறைகளில் அகப்பொருள் மரபுகளும் தொண்டு நெறிகளும் | 75.00 |
| பெரியாரிய நோக்கில் மு.வ. | 55.00 |
| திணை வரலாறு | 70.00 |
| நரம்புக் கருவிகள் | 70.00 |
| மொழிஞாயிறு தேவநேயப்பாவணரின் பன்முக ஆளுமை | 50.00 |
| சிந்தனைச் சிற்பி ம. சிங்காரவேலரும் தந்தை பெரியாரும் | 105.00 |
| பெ.நா. அப்புசாமியின் அறிவியல் கட்டுரைகள் (தொகுதி-3) | 235.00 |
| கவிஞர் புதுவைச் சிவத்தின் சீர்திருத்த நாடகங்கள் | 120.00 |
| சித்தர்களின் நெறியில் வேதாத்திரிய யோகம் ஓர் ஒப்பாய்வு | 105.00 |
| சேக்கிழாரும் இசைத்தமிழும் | 50.00 |
| தமிழில் இதழியல் | 270.00 |
| பொதுவுடைமை இயக்க இதழ்கள் | 115.00 |
| உலகச் செம்மொழிகள் | 90.00 |
| தலித் அறம் | 45.00 |
| தமிழ் இசுலாம் உருவாக்கமும் திருக்குர்ஆன் தமிழ் வாசிப்பும் | |
| ஆயவியல் சிந்தனை | 45.00 |
| சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல் | 80.00 |
| பெயரியல் | 55.00 |
| மதங்களும் மனிதநேயமும் | 90.00 |
| உலக மொழிகளில் தமிழ்ச் சொற்களும் இலக்கணக் கூறுகளும் | 85.00 |
| சிலப்பதிகார இலக்கியக் கட்டமைப்பு | 160.00 |
| பேரறிஞர் அண்ணாவின் சமூக, பொருளாதார சிந்தனைகள் | 65.00 |
| தமிழ்ச் செவ்வியல் நூல்களில் அறம், அறிவியல், சமூகம் | 70.00 |
| கிறித்துவக் காப்பியங்கள் | 225.00 |
| சுயமரியாதை இயக்க வீராங்கனைகள் | 50.00 |
| குலோத்துங்கனின் கவிதை வளம் | 60.00 |
| வளர்ச்சிப் பாதையில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் | 200.00 |